உ

சிவமயம்.

# சேக்கிழார் சுவாமிகள்

அருளிச்செய்த

# திருத்தொண்டர் புராணம்

என்னும்

# பெரிய புராணம்.

திருத்தொண்டர்புராணவரலாறு
திருத்தொண்டர்புராணசாரம்
திருமுறைகண்ட புராணம்.
திருப்பதிக்கோவை - திருப்பதிகக்கோவை.
திருநாமக்கோவை - திருநட்சத்திரங்கள்
நம்பியாண்டார்நம்பி திருவந்தாதி
என்னுமிவ்வங்கங்களுடன்

யாவரும் எளிதின் வாசிப்பதற்கு
உபயோகமாகும்பொருட்டு
ம-௱-௱-ஸ்ரீ
**கா-பச்சையப்பமுதலியாரவர்கள்**
கல்விச்சாலையில்தமிழ்த்தலைமைப்புலமைநடாத்திய
வித்துவான்
**காஞ்சீபுரம் - சபாபதிமுதலியாரால்**
ஆராய்ச்சிசெய்வித்து
வையாவூர்-மயிலப்பமுதலியார்-குமாரர்
**அருணாசலமுதலியாரால்**

**புங்கத்தூர்-ம-சபாபதிமுதலியாரது**
கல்விவிளக்கஅச்சுக்கூடத்திற்பதிப்பிக்கப்பட்டது.

சித்தாத்திரி ௵ ஆனி ௴ - சென்னைமாநகரம்.

☞ இது முதற்புத்தகம்.

௳

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# புராண அட்டவணை.





புராண அட்டவணை-முற்றிற்று.





உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பிழைதிருத்தம்.

| பக்கம். | பாட்டு | வரி | பிழை | திருத்தம் | சேர்க்கை | தள்ளல் |
|---|---|---|---|---|---|---|
| **நம்பியாண்டார்நம்பிதிருவந்தாதி.** | | | | | | |
| ௯ | ௯ | ௨ | வு | பு | ” | ” |
| ௭ | ௩௰௪ | ௨ | ன | ந் | ” | ” |
| ௮ | ௪௰௫ | ௪ | ன்று | ண்டு | ” | ” |
| **பெரியபுராணம்.** | | | | | | |
| ௨௩ | ௨௰ | ௩ | யிர் | பா | ” | ” |
| ௩௩ | ம்தேவாரம் | ௨ | ணை | ணை | ” | ” |
| ௨௨௪ | ௱௮௯ | ௪ | கு | கொ | ” | ” |
| ௨௭௰ | ௪௱௩ | ௧ | ணை | ணை | ” | ” |
| ௨௭௪ | ம்தேவாரம் | ௩ | ங் | ந் | ” | ” |
| ௨௭௯ | ௪௨௨ | ௩ | ” | ” | யீ | ” |
| ௨௮௯ | ” | ௰௯ | ” | ” | ” | என்கிற |
| ௨௯௧ | ” | ௰ | ஞு | ஓ | ” | ” |
| ௱௭ | ” | ௨௯ | ளாய் | ரால் | ” | ” |

பிழைதிருத்தம்-முற்றிற்று.



உ

சிவமயம்.

# சாத்துக்கவிகள்.

கைலாசபரம்பரையில்

விளங்கிவருகின்ற

திருவாவடுதுறை ஆதீனவித்துவான்

**தாண்டவராயசுவாமிகள்**

செய்தருளியது.

(எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.)

சேக்கிழார்குரிசின்முனமருளிச்செய்த................*
திருத்தொண்டர்புராணமெனுந்தெய்வநூலைப் ...*
பாக்கியமீதென்றுலகோரெளிதிற்கற்றுப்...., ......*
பயன்பெறுவான்கருதியச்சிற்பதிப்பித்தானால் .. *
வாக்கிலிற்கூரரும்புகழ்சேர்காஞ்சிவைப்பின்.........*
வளர்சபாபதிப்புலவன்வரிக்குற்றத்தைப்... ......*
போக்கியளித்திடவையாவூரிலின்பாற்............ ...*
பொருந்துமருணாசலப்பேர்ப்புனிதன்றானே......*

சென்னைக்கல்விச்சங்கத்தில்

தமிழ்த்தலைமைப்புலமைநடாத்தும் இயற்றமிழாசிரியர்

**திரு-விசாகப்பெருமாளையரவர்கள்**

செய்தது.

(ஷை. விருத்தம்.)

நிலமதனிற்சைவசிகாமணியாம்வையாவூர்......... ...*
நிருபன்மயிலப்பவேள்செய்தவத்திலுதித்தோன் .. *
பலகலைகடெரியருணாசலநிபுணன்காஞ்சிப் . ... ...*
பதியமர்சபாபதிநாவலர்பெருமானைக்கொண் ... *
டலகிறவத்திருத்தொண்டர்சரித்திரங்கள்கூறும்... ...*
அருட்புராணந்தனையறிஞருளம்வியப்ப ... ...*
நிலவியபுராணவரலாறுமுதலியவு .......... ... ...*
நேருறவேதிருத்துவித்தச்சுப்பதித்தான்மன்றே. *

சென்னைக்கல்விச்சங்கத்தில்

தமிழ்ப்புலமைநடாத்தும் இயற்றமிழாசிரியர்

## அ-வீராசாமி செட்டியாரவர்கள்

செய்தது.

(ஷ விருத்தம்.)

செந்தமிழ்வாரிதிகடந்தநாவாய்சைவ......... ... ...*
சிரோமணிகாஞ்சிப்பதிவாழ்சிவஞானன் ... ... *
கொந்தவிழ்தார்ச்சபாபதியெங்கோமான்றொண்டர் *
குழாம்வியப்பவழுவறவாய்ந்தாசில்லுரை... ... *
தந்தமிழுமேற்புழிப்பெய்தமைத்தளிட்டத்... ... ...*
தயாளன்மயிலப்பவள்ளறவத்திற்றோன்றி... ......*
வந்தருணசலவேளச்சியற்றவித்து........ ... ......*
மகாபெரியபுராணத்தைவழங்கினனே............ *

இயற்றமிழாசிரியர்

அ-வீராசாமிசெட்டியாரவர்கள்

மாணாக்கரும் நார்மல்காலீஜ் தமிழ்ப்புலவரும் ஆகிய

கோமளபுரம்

## இராசகோபால பிள்ளையவர்கள்

செய்தது.

(ஷ விருத்தம்.)

தண்மலர்ப்பைங்காப்புடைகொள்வையாவூரான் ... .. *
றகையருணசலவேளன்பருதுஞானம் ..... ......*
உண்மலியேமொழான்பதின்பாபுராணஞ்சைவ . .. ... *
வோங்குநெறிவழாதுசெல்லுமுத்தமர்க்குக்... ... *
கண்மணியாய்ப்புரைதீர்நற்புலமைசான்ற... ......*
கற்றவர்க்குவிண்மணியாய்க்கவினக்காஞ்சி... ... *
அண்மிகுசபாபதிநங்கோவாலாய்வித்............. ...*
தல்லலலவச்சுநன்குபதிப்பித்தானல்...... .........*

நரசிங்கபுரம்

## வீராசாமிமுதலியார்

செய்தது.

(அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.)

அறுபான்மூன்றுநாயன்மாரரன்றாட்கமலப்போதிணையைப் ... *
பெறுசீரன்பைவிளக்கிவரும்பெரியபுராணங்கச்சிநகர்க்... .....*
குறுமாதவனேர்சபாபதிநற்கோமான்றிருத்தவையாலூ ...... ...*
ருறும்பாருணாசலவள்ளலுனூற்றியச்சிலியற்றினனால...... ... *

கா-பச்சையப்பமுதலியாரது

சென்னைக்கல்விச்சாலையில்தமிழ்ப்புலமைநடாத்தும்

ஆ-வித்துவான்

## சுப்பராயபிள்ளையவர்கள்

செய்தது.

(எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.)

தெண்டிரைவளாகத்தறங்களைநாவார்.... ......... ...*
தில்லைவாழந்தணர்முதலாந்............. ...*
தொண்டரோரறுபான்மூவர்சீர்ப்புராணந்............*
தொல்லுலகோரெளிதுணரத்........ ...... ...*
தண்டமிழ்ப்பெருமானெனப்புகல்காஞ்சிச்.... ... ...*
சபாபதிக்கவிஞனாலாய்வித் ....................... *
தெண்டவலவையாலூரருணாச ................ ... *
மேலந்திரனச்சியற்றினனால்.......................*

கா-பச்சையப்பமுதலியாரது

ஷை-கல்விச்சாலையில் தமிழ்ப்புலமைநடாத்தும்

## கா-செல்வப்பெருமாள் கவிராஜபண்டித

திலகர் செய்தது.

(அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.)

நன்கமரும்வையாலூராருணாசலேந்திரன்சொன்னயமிக்கோராப்...*
புன்கவிஞர்தமக்கன்றிப் பொருவில்பெருங்கவிஞருக்குப்பெருமா
ன்பூமேல, பொன்பொலியுந்திருக்கச்சிசபாபதி வள்ளலைக்கொண்
டுபுரைதீர்த்தோங்கு, மன்பெரியபுராணமச்சுப்பதிப்பித்தானுலகினை
னிமகிழ்ப்பித்தானே................................... ... ... ...*

சாத்துக்கவிகள்-முற்றிற்று.



உ

சிவமயம்.

வித்துவான்- காஞ்சீபுரம்

# சபாபதிமுதலியாரவர்கள்

மாணாக்கர்

## பாடி-மாசிலாமணிமுதலியார்செய்த

(நிலைமண்டிலவாசிரியப்பா)

பூமலிதுணர்கள் - பொதுளியகாவகம்.................*
நேமிமால்வானளாய் - நின்றமைகடுக்குங்...............*
குன்றத்தூர்வாழ் - குணக்குன்றனையன்..............*
மன்றத்தவனடி - மறவாப்பெருந்தவன்...............*
சேக்கிழார்குரிசில் - சிவனருள்கொடுதிரு..............*
வாக்கினலருள - வயங்குமாரமிர்தாய்ப்...............*
பற்பல்சுவைப்பொருள் - பாருளோருணுமா...........*
றற்பொடுமீதலி - னன்னையாகியு.......................*
மருவினோர்ச்செறிந்த - மாசறக்களைந்து..............*
திருவடிசேர்த்தலிற் - றேசிகனாகியும்..............*
பவக்கடற்படுவோர் - பற்றினங்கவனா.................*
யவக்கடல்கடத்தலி - னம்பியாகியு....................*
மிருள்படுமனத்தோர்க் - கிருமெய்ப்பொருடனை ... *
மருளறத்தெரித்தலின் - மணிவிளக்காகியுஞ்......... *
சமயக்குழியிற் - சாராதுநல்வழிக்.....................*
கமையச்செய்தலி - னருங்கண்ணாகியு...............*
மின்னும்பலவா - மன்னுவதாகி........................*
யென்னலளத்தற் - கியையாதாகு..................... *
மரியபுராண - மனைத்தினுஞ்சிறந்து................*
பெரியபுராணப் - பெயர்பெற்றோங்கு............*
நிறையருட்டொண்டரா - நின்மலராவோ...........*
ரறுபத்துமூவ - ரருட்சரிதக்கண்.....................*

வளாவோர்வளையா - வழுக்களும்போதகா...... ... *
சிரியர்மருண்டனர் - திருத்துபல்பிழையுஞ்... ...... *
சிற்சிலவாகச் - செறிந்துதன்கொழுநனைக்............ *
கற்புடைமனையவள் - காணுதலடரட்... .. .. ...... *
பாவப்பரத்தையர் - பாற்படுத்தாங்குத்... . ......... *
தாவிலடியவர் - சரித்திரத்துண்மையைக்...... ...... *
கற்றோரல்லா - மற்றோரியாவரு .................. *
மிற்றென்றுணரா - திரங்கப்புரியும்.................. *
பழுதறவாய்ந்தருஞ் - சொற்பொருள்பகர்ந்து...... *
கழுமணிகாட்டுங் - கழிபெரும்பொருள்போற்... .. *
றொண்டர்சரிதஞ் - சுருக்கமாயாங்காங்... ... ... *
கெண்டகுவாசக - நடைபெறவியற்றி............ .. *
வளையாவரியின் - மாநிலவளைப்பிற் . ............... *
றெரிதரவைத்தசீ - ரின்னயார்க்குந்... ..... ... .... *
களிதரூஉங்கல்விக் - கடலுறட்பருகி........ ......... *
வெளிற்றோரீஇக்கருநிற - மேமவிக்குணமெனுங்...... *
குன்றிடைக்குலாப்புகழ் - மின்றிசைவிளக்கி..... . *
புன்கவிப்பேய்த்தேர் - புறங்கொடுத்தொளிப்ப...... *
வளம்பெறுங்கவிமழை - சொரிந்துவேத்தவையெனுங்
குளம்பலநிரப்பித்தன் - குற்றேவல்புரிந்... .... .. *
தியாக்கையின்பயன்பெறு - மெம்புலக்கண்ணுந்... *
தேக்கிடத்திருவருள் - செய்திடும்புயலோ ........ ... *
னெண்ணுன்கரமிங் - கியற்றுறுமனையொடு .. ... .. *
மண்ணோர்தொழுதுய - மாவடியமர்ந்தோன்........ *
கச்சிப்பதியன் - கனகசபேசனை.................... *
நிச்சலுமறவா - நியமன்சபாபதிப்......... .. ...... *
பெரியோனென்னகம் - பிரியானவனடி...... ...... *
சிரமேற்பெறுதுமாற் - சீர்பெறற்பொருட்டே...... *

முற்றிற்று.





உ

சிவமயம்.

வித்துவான் காஞ்சீபுரம்

# சபாபதிமுதலியாரவர்கள்

மாணாக்கர்-புரசை அஷ்டாவதானம்

சபாபதிமுதலியார்செய்த

# சிறப்புப்பாயிரம்.

( நேரிசைஆசிரியப்பா. )



மணிகெழுதிரைநீர்- மாநிலவரைப்பிற்.......... ......*
பணிதருமுடையினும் பாட்டினுமிசைநீஇ... ...*
வேந்தியன்முறைமை- விழுத்தகநிறுவிய... ... *
தேந்திகழ்தாதகித்- தெரியலந்திணிந்தோள்..... ......*
வளவனத்தாணி- மந்திரக்கிழமை................*
விளைபொருட்டலைமை- மேற்கொளீஇயிருமைக்... *
குறுந்துணையாக- வரவோற்கியன்று......... ... ...*
வெறும்பொருள்கேளா- விரவுளம்விடுக்குபு.........*
பெறும்பொருளிஃதெனப்- பேணுமாவிடுத்தாங்... *
கணுத்திறன்புலங்கொளூஉ- மறிஞர்க்கிடையற... ... *
நுணுக்குறுமிராகிய- நோன்மைசால்பரம...... ...*
சிற்சபைத்திருமுணர்ச் - சீர்சால்கடவுட்... .........*
பொற்பமைதில்லைமூ - வாயிரப்புனிதர்தாங்.........*
களிதலைசிறப்பக் - கருவிவாளெழுந்த...... ........*
வொளியினுமொளிவள - ருலகெலாமெனுந்தனி ...*
நெடிமொழிமுதற்றொடை - நிரம்பநீள்குன்றை ...*
வடிவில்வண்பதிக்கண் - மன்னுசேவையர்கோன் ... *
செய்வினையூக்கிச் - செறித்தம்பலனுயி...............*
ருய்குவான்கேளா - வுளைக்குபுநவின்று...... ... ... *

நாவலூர்நம்பி - நன்னு மம்பலவர்............ ..... *
தேவியற்றொண்டர்தஞ் - சீர்மையாளரோர்முதல்... ... *
முன்னடியெடுத்தருண் - முறைப்படியிசைத்தது... *
பின்னர்நன்னறையூர்ப் - பிள்ளையார்புலந்தர... ...*
நம்பியாண்டார் - நம்பிநல்கியதாம்.......... ......*
பம்புந்தொகைவகைப் - பகுதிபிறழா......... ....*
திணங்கும்விரியிஃ - தெனவுளம்பற்றிய...... ...*
வுணங்கவிலெவர்க்கு - மொண்மைபயக்குப்... ......*
பெரியபுராண - மெனும்பெருநூலிற்...............*
றெரிவருஞ்சீர்த்திருத் - தொண்டத்தொகையுஞ்......*
சிவபூணர்நம்பி - திருவந்தாதியுந்......... .........*
தவநெறிமுற்றுசந் - தானவாசிரியருட்... ... ...*
பராவருமுநியுமா - பதிசிவாசாரியர்......... ......*
புராணவரலாறும் - புராணசாரமும்... ...... ......*
பண்டுதிருமுறை - கண்டபுராணமுஞ்.............. *
சிவபிரான்கொண்டருள் - திருப்பதிக்கோவையும்...*
பவமகற்றிடுதிருப் - பதிகக்கோவையும் ........ *
ஞயமாதவ - வெழுபானிரண்டு... ...... ......*
நாயன்மார்திரு - நாமக்கோவையும்............ ......*
இத்தகையோர்க - ளிருங்கதியெய்திய........ ......*
நற்றவத்திருநட் - சத்திரக்கோவை ... ... ...... *
மொருபரம்பரையி- னுற்றுளாரொருங்கு... ......*
மருவுதல்போன்மென- வரிசையிற்பொதித்தே......*
யாங்காங்கருங்கவி - யாவுளவவற்றி ..... ...... .. ...*
னீங்காவிழுப்பொரு - ணெறிப்படவரைந்தன் .....*
றெவ்வுழியவ்வவ - ரிசைத்ததேவாரச்...... . ......*
செவ்வியதிருமுறை - சேக்கிழாரவற்றி..............*
னேற்பனமுன்மொழி - யெடுத்துநொடித்தவை.. ...*
பாற்படக்கிடந்த - படிமுதலிறுதி......... .........*
யுளதிருநெறித்தமி - ழோங்கியபதிகம்... ..........*
வளனுறவவ்வவ் - வயிற்புலப்படுத்து... ...... ......*
நிரைத்தசீர்ப்புராண - நிறைவினக்காதைச்..........*
சுருக்கமுமவணவ - ணியற்றித்தொகுத்துக்....... .. *
கிளந்தங்காட்புடை நூற் - செழுமியசொற்பொரு...*
ளளந்துமுன்வீற்றுவீற் - றுயுளபிரதியிற்... ... ...*
பாடபேதத்திற் - பணித்தமெய்ப்பொரு........ ...*
ளாடியோதலு - நனியவையுணர்த்தலுஞ்...... ......*

சில்லோர்க்கன்றிப் - பல்லோர்க்கெய்தொணாப்... ...*
பரிசினுட்கூர்ந்து - பயன்றாக்குநரிஃ.................*
தொருசம்மதமெனு - வுள்ளினர்நயந்து ..... ......*
சொன்னலம்பொருணலஞ் - சோர்வறக்கூட்டுணாப் *
புன்மைதீர்தத்தம் - புந்தியுள்வியப்ப........ ......*
வலித்தைக்கான்புக் - கலைந்திவ்வதர்செலத் . ...... *
தவிப்பகல்வுறுமெனத் - தானறிகல்லா.. ............*
விழுதையேன்செந்நெறி - யியங்குபுநிலைபெற......*
விழுமியோர்காட்சியின் - விரவுவித்திங்வ... ... ...*
ணிதனிற்பெயர்கிலா - திருந்தினிதுணர்திமற்.........*
றதனி யத்தாவ - மறவெறிந்திடுவலன்... ... ... ..... *
பெறுதியென்றுறுதி - பிணக்கறவுணர்த்தித்... .... . *
தத்துவந்தெளித்த - சைவசிகாமணி........... ........*
வித்துவக்குழாத்துள் - விளங்குமேதகை...... ......*
சொல்லொருபாலச் - சொற்பொருளொருபாற் ...*
புல்லநூல்பயிலுநர்ப் - போதங்கொளுத்துங் ...*
கவிஞர்தன்கற்பினைக் - கண்டுளமகிழ... ...........*
நவையறுதெளிதமிழ் - நளிகடற்கிடந்து...... ... ... *
நலஞ்செறியியலிசை - நாடகக்கனியுட் . ............*
குலம்பெறுபன்னூற் - குவிதருமினமணி ..........*
யனைதியனைத்துங் - கமையுறக்கவர்வான்...... ......*
எந்நூற்கருத்த - ரெவ்வளனைத்திசை......... ......*
றான்றுறக்குயிற்றிச் - சொற்றனர்றுகலினர்.........*
சிற்றணுநுதிவரை - யத்திறந்திறப்பா...... ... ...*
மற்றனமாணவர் - வாயறிவுறுத்துப்........ ......*
பாருரைக்கும் - பன்மாண்புலமையோன் . .........*
கோதில்வான்யாற்றி - னெழுக்கங்குன்றுன் ... ... ...*
எழுகடல்சுலவிய - வெழுநிலவலயத்.................*
தெழுபெரும்புரியுண்மே - லெழுபுகழ்கதுவியீ ...*
ரொழுபால்விச்சைய - ரெவற்றானுமேற்றெனத்......*
தழுவுபல்விறம்பூது - தனில்வனாயாத......... ......*
தொளியானுலக - முயிர்த்தருளம்மை...... .........*
யப்பனைத்தழுவுசீர்த் - தரும்பெறற்நம்பையென் ...*
றெப்பரிணிதரு - மியம்புநீர்வளத்த............... ...*
நிகராவிருவகை - நிதிவளர்காஞ்சிமா...... ......*
நகர்வாழ்சபாபதி - நற்றமிழ்வள்ளல்...... ..........*
உளமுதன்மூவகை - யுரிமையோர்க்கிணங்கப்... ...*

புணையறவாய்ந்து - புனைந்தினிது நல்கக்...... ... ...*
கேகயமொருசார் - கிளர்நடங்குயிற்றக்... ... ......*
கோகிலமற்றொருபாற் - கொளையிசைநவிற்றத்..... ...*
தண்ணெனிமிழ்திரைத் - தரங்கக்கயந்தலை...... ......*
வெண்ணணித்துலக்குவால் - விரிநிலாக்காலக்............*
குடம்புரைநாகிளங் - கோடியமியப்பக்... ... ......*
கடம்புரைகமுகுபூங் - கவரிகாலசைப்பப்.........*
பானலம்பாதொரு - பாங்கர்கண்மலரத்...... ...... *
தேனிமிர்பாணிச் - செவ்வியறெரியா...... .........*
வண்டலயர்மகளிர் - மணியிழைவெயிலுறீஇ... ...*
யொண்டளிர்பொதுளிய - வுலவாநளின... ..... ...*
மேடவிழ்த்துமிழ்தே - னிலைகயினுதவப்........... *
பாடியைவாளைப் - பகடுதார்க்கொண்மூத்............*
தாவடிபோகிரீர் - சாலமுதுகுப்பப்..... ............*
பூவுறுமரம்பை - பொற்கனிபெயந்த........... .......*
வமரருங்கண்டங் - கதிசயங்கைமிகப்...... ...... ...*
பமரமுரல்மலர்ப் - பைம்பொழிலுடுத்த... .........*
வையாஞூர்வரு - மயிலப்பவேள்செய்........... ...*
மெய்யார்மாதவ - மேன்மைகூர்தோன்றல் .. ... .. *
பரமனடியர் - பணித்தபணிதலை................... *
யிரவுறாஉமன்புள - மேவுவாய்மையோன்...........*
றமிழ்வளர்தேருந் - தகைமைநீடினிமை......... ...*
யமைவுமதியு - மறனும்வாய்ந்த......... .......... *
குணநீளொழிலரு - ளுசலக்குரிசில்......... ...... ...*
தணவாமுயற்சி - தகுதியினுற்றி.. ...... .. ... .. *
வியனெடும்புவியுளோர் - விழைந்து ... ... ... ...*
பயனுறவச்சிற் - பதித்தளித்தனனே......... ... ...*

சிறப்புப்பாயிரம்

முற்றிற்று.



உ

சிவமயம்.

விருத்தாசலம்-கவிராஜர்

# தியாகராய பிள்ளையவர்கள்

இயற்றியது.

(நிலைமண்டிலஆசிரியப்பா.)

திருவளர்மார்பந் - திகழ்கருமாயோன் ......... *
மருமலர்க்கமலா - தனம்வளர் தூயன் ...... *
பொன்னிலமருவும் - போகசுந்தர ........ *
னன்மறைவேள்வி - நடாத்தும்இந்திரன் ...... *
ஆதியர்ந்தேவ - ரனைவருமதித்து ...... *
நீதியாத்தருத்த - நெஞ்சிடைத்துதித்து ...... *
மித்தையாமிருளை - விலக்குமாறுலட்பில் ...... *
சித்தியதென்னுந் - தீபமேவி ...... *
ஒழிபாப்பேரிட - ரொருங்குநீங்கி ...... *
யழிபாப்பதத்தி - லன்புடனோங்கி ...... *
இற்றெனவெவரு - மியப்பர்கரிதாஞ் ...... *
சுத்தவில்பத்தை - யுற்றிடப்பெரிதாங் ...... *
கருணையுலாவுங் - கண்ணுதற்பெருமான் ...... *
அருணவானத்து - ளழகியபெருமான் ...... *
மலைமகள்குலவு - வாமப்பெருமான் ...... *
சலமதிவதிசெஞ் - சடிலப்பெருமான் ...... *
சிவகைலாயச் - செல்வப்பெருமான் ...... *
தவநெறியளிக்குஞ் - சத்தியப்பெருமான் ...... *
ஒருங்கண்டர்மாதர்த - மொளிர்நாண்காப்பான் ...... *
கருங்கண்டமேவுங் - காரணப்பெருமான் ...... *
முத்தமிழ்ப்பெருமான் - மோனப்பெருமான் ...... *
சம்புசதாசிவ - சங்கரப்பெருமான் ...... *
எம்பெருமானுய - ரீசப்பெருமான் ...... *
அருணிலையமரும் - பொருணிலையாளன் ...... *
அருணைநகரத் - தெருளுறுமிதயன் ...... *
பூவிரிபொழில்சூழ் - காவிரிதீரன் ...... *
தேவர்கள்புகழுஞ் - சீரனபாயன் ...... *

மந்திரியாகும் - வள்ளல்மெய்ஞ்ஞானச்............ *
சிந்திடைத்திளைக்குஞ் - சந்திரவதனன்............ *
ஆலவாயமுதஞ் - சோலைவாய்ப்பெருகுங்......... *
கோலமலிந்துள - குன்றத்தூர்வாழ்............ *
சேக்கிழாரொன்னுந் - தெய்வப்பைந்தரு............ *
வாக்கிடைப்பயந்த - மாதுரியங்கொளுஞ்............ *
விரிசடைப்பரமன் - மெய்யருள்தெரிக்கும்......... *
பெரியபுராணப் - பெருங்கனியதனுண்............ *
மறுபற்றிலாத - வண்மைமேயாமொன்னும்......... *
அறுபத்துமூவ - ராகியதொண்டர்............ *
காதையாமதுவைக் - கமழ்தரத்தேக்கி............ *
நீதியாலெவர்க்கு - நிலவுறவளிப்பான்............ *
கும்பமாமுலை - யம்பிகைதழுவக்............ *
கம்பையாற்றிற் - கலந்தினிதருளிச்............ *
சேவடிதொழுவார்க் - காவலினுதவ............ *
மாவடிநீழல் - வதிந்தநம்பெருமான்............ *
உச்சிப்பதியெழி - லோங்கியதொல்சீர்க்............ *
கச்சிப்பதிவளர் - காதல்மிகுந்தோன்............ *
அட்டதிக்கெங்கு - மளாவியமணப்ப............ *
மட்டிலாந்தமிழ்ப்பா - மாலையைப்புனைவோன்......... *
அலையமுதருந்து - மம்மேகம்போற்............ *
கலையமுதருந்திக் - கவிமழைபொழிவோன்......... *
பொறைதருமங்கள் - பொலிந்தசற்பாத்திரன்......... *
இறையேனுமுள்ளத் - திடைமறவாது............ *
பெருமான்மியஞ்சொற் - பெரியோரணையுந்......... *
திருவான்மியூர்வாழ் - சிவகுருமருந்தின்......... *
பொற்பதம்பாற்றும் - புண்ணியதேகன்......... *
கற்பவர்க்கினிய - கலைநலமுணர்த்திப்............ *
புல்லறிவகற்றிப் - போதமதளிக்கு............ *
நல்லியன்மாண்புயர் - நற்றவசீலன்............ *
தக்கவர்வாழ்த்துஞ் - சபாபதிப்புலவன்............ *
மிக்கபன்னூல்கொடு - விளங்கவாய்ந்து............ *
கைத்தலம்வைத்த - முத்தெனத்தெருட்டி......... *
உத்தமவச்சி - றுறப்பதித்தனனே............ *

முற்றிற்று.





சிவமயம்.

குருவணக்கம்.

வித்துவான் - காஞ்சீபுரம்.

## சபாபதி முதலியாரியற்றியது.

( நேரிசையாசிரியப்பா. )

உலகெலாம்போற்று றூஉ- மொளிர்பூங்கோயிலுள்... ※
அலகிலாமறைக- ளாமணிப்புற்றின்............... ※
இடங்கொண்டெம்மா - னினிதுவீற்றிருக்குந்... ...※
தடங்கொள்சோலைகள் - சார்திருவாரூர்.......... ...※
என்னும்பதியி - லிருமையுந்தருவதாய்......... ... ※
மன்னுஞ்சைவ - மார்க்கமெங்கணும்............. ...※
விளக்குறவந்த - விழுமியோராகும்.......... .. . ...※
அளக்கொணாமிகுபுக - ழமைந்தநற்குணத்துத் .....※
திருக்கூட்டத்தா - ரிற்றிகழ்மேலோன்... ......... ...※
கருக்கடொழிபான் - கருதினர்க்குண்மை... ... ...※
தெரிக்குஞ்சைவ - தீக்கைபுரிவோன் ........ ... ...※
விரிக்குமுப்ப - கவியுணர்வித்தகன் ..................※
தொகுசிவபுராணத் - தொகுதியனைத்துந் ........ ...※
தகுமுருவங்கொடு . சார்ந்தனதன்மையன்..... ......※
முத்தமிழ்க்கடலெலா - முகந்துண்டன்பர்க்.........※
கத்தகுமரபி - னளிக்குங்கொண்மூ............ ......※
விடலருந்திருநெறித் . தமிழ்வேதங்கள்... ... ......※
நடனவிறைவன - னன்மைசேர்பூதி..................※
சாதனம்போற்றுஞ் - சைவசிகாமணி......... ......※
நாதன்பூசை - நாடொறும்புரிவோன்...... ...... ...※
தூய்மைசேர்சேக்கிழார் - சுவாமிகளருளிய... ...※
வாய்மைசேர்புராண - மறைப்பொருடன்னொடு ... ※
உற்றதிருவா - சகத்தினுண்மையுஞ்...... ... ... ...※
சிற்றறிவுடையேன் - றெளியவுணர்த்திய...... ... ...※
தியாகராச - தேசிகன்மிக்க....................... ... ..※
தயாவுளபுநிதன் - சரணம்புயமலர்......... ... ......※
கரவிலாவன்பாற் - கனிவுடன்வாழ்த்த............ ...※
வருமிப்பிறவியே - வாலிதாம்பிறப்பென...... ......※
உள்ளத்துட்சேருவகைப் ......... ... ...... . ※
பள்ளப்புனலிற் - படிந்தாடுதுமே............... .. ※

குருவணக்கம். முற்றிற்று.





சிவமயம்.

# உமாபதிசிவாசாரியார்

அருளிச்செய்த

# திருத்தொண்டர்புராணவரலாறு.



## பாயிரம்.

காப்பு.

வெண்பா.

திருமருவுங் குன்றத்தூர்ச் சேக்கிழார் செல்வ
வருண்மொழித்தே வன்புரா ணஞ்சீர்—வருவதற்கு
மைம்மா மழைபோன் மதத்தான் றிரண்டபுழைக்
கைம்மா வதனத்தான் காப்பு.

(விநாயகர் துதி- விருத்தம்.)

வானுலகுமண்ணுலகும்வாழமறைவாழப்
பான்மைதருசெய்யதமிழ்பார்மிசைவிளங்க
ஞானமதலைவந்துகரமூன்றுவிழிநால்வா
யானைமுகனைப்பரவியஞ்சலிசெய்கிற்பாம். (௧)

(சபாநாதர் துதி-வேறு.)

சீராருஞ்சதுர்மறையுந்தில்லைவாழந்தணரும்
பாராரும்புலிமுனியும்பதஞ்சலியுந்தொழுதேத்த
வாராருங்கடல்புடைசூழ்வையமெலாமீடேற
வேராருமணிமன்றுளெடுத்ததிருவடிபோற்றி. (௨)

(சிவகாமசுந்தரி துதி.)

பரந்தெழுந்தசமண்முதலாம்பரசமயவிருணீங்கச்
சிரந்தழுவுசைவநெறித்திருநீற்றினொளிவிளங்க
வரந்தைகெடப்புகலியர்கோனமுதுசெயத்திருமுலைப்பால்
சுரந்தளித்தசிவகாமசுந்தரிபூங்கழல்போற்றி. (ரு)

(கற்பகவிநாயகர் துதி.)

மலாயனுந்திருமாலுங்காணமைமதிமயங்கப்
புலிமுனியும்பதஞ்சலியுங்கண்டு தொழப்புரிசடையார்
குலவுநடந்தருந்தில்லைக்குடதிசைக்கோபுரவாயி
னிலவியகற்பகக்கன்றினிணமலர்த்தாளிணைபோற்றி. (சா)

(சுப்பிரமணியசுவாமிகள் துதி.)

யாறுமுகமும்பொருந்தப்பருந்துவிருந்துணக்கழுகு
நூறுமுகமாயணைந்துநூழில்படுகளம்புகுத
மாறுமுகத்தருநிருதர்மடிபவடிவேலெடுத்த
ஆறுமுகன்றிருவடித்தாமரையிணைகாவைபோற்றி. (ஙு)

(சைவசமயாசாரிகள் துதி.)

பூழியர்கோன்வெப்பொழித்த புகலியர்கோன்கழல்போற்றி
யாழிமிசைக்கன்மிதப்பிலணைந்தபிரானடிபோற்றி
வாழிதிருநாவலூர்வன்றொண்டர்பதம்போற்றி
யூழிமலிதிருவாதவூரர்திருத்தாள்போற்றி. (கா)

{ திருத்தொண்டர்கள் / சேக்கிழார்சுவாமிகள் } துதி.

தில்லைவாழந்தணரோமுதலாகச்சீர்படைத்த
தொல்லையதாந்திருத்தொண்டத்தொகையடியார்பதம்போற்றி
யொல்லையவர்புராணகதையுலகறியவிரித்துரைத்த
செல்வமலிகுன்றத்தூர்ச்சேக்கிழாரடிபோற்றி. (எ)

(நூற்பெயர்.)

தாய்மலர்ந்தமுகத்தினளாய்த்தழுவிமுலைதரவந்த
நோய்மலர்ந்தபிறவிதொறுநுழையாமனுலகுய்யத்
தீமலர்ந்தசடைக்கூத்தர்திருவருளாற்சேக்கிழார்
வாய்மலர்ந்தபுராணத்தின்வரலாறுவிரித்துரைப்பாம். (அ)

(அவையடக்கம்.)

ஊர்க்கடலையிவனெனவந் துதித்தநாளோன்றுதமிழ்
* நூற்கடலைக்கலாகண்டுநுவலநினைக்குமது திருப்
பாற்கடலைச்சிற்றெறும்புபருகநினைப்பதுபோலு
நீர்க்கடல்சூழ் மண்ணுலகை நிறுக்க நினைக்குமதொக்கும். (௧௧)

தேவுடனே கூடியசொற்செழுந்தமிழோர்தெரிந்துரைத்த
பாவுடனே கூடியவென்பருப்பொருளும்விழுப்பொருளாந்
கோவுடனே கூடிவருங்குருட்டாவுமூர்புகுதும்
பூவுடனே கூடியநார்புனிதர்முடிக்கணியாமால். (௧௨)

பாயிரமுற்றியது.

# நூல்.

விருத்தம்.

பாலாறு வளஞ்சுரந்து நல்கமல்கும்
பாளைவிரி மணங்கமழ்பூஞ் சோலைதோறுங்
காலாறு கோலியிசை பாடநீடு
களிமயிலின் றுடுமியற் றொண்டைநாட்டு
ளாலாறு கோட்டத்துப் புலியூர்க்கோட்ட
நன் றிபுனை குன்றைவள நாட்டுமிக்க
சேலாறு கிற்றவயற் குன்றத்தூரிற்
சேக்கிழார் திருமாபு சிறந்ததன்றே. (௧)

நாடெங்குஞ் சோழன்முனைந் தெரிந்தேயேற்று
நற்குடிநாற்பத்தெண்ணாயிரத்துவந்த
கூடல்கிழான் புரிசைகிழான் குலவுசீர்வெண்
குளப்பாக்கி ழான்வரிசைக் குளத்துழான்முன்
றேடுபுக ழாரிவருஞ் சிறந்துவாழச்
சேக்கிழார் குடியிலிந்தத் தேசமுய்யப்
பாடல்புரி யருண்மொழித்தே வரும்பினந்தம்
பாலரு வாயருமவந் துதித்துவாழ்ந்தார். (௨)

*ஈண்டுத்தமிழ்நூலென்றது பெரியபுராணமெனக்கொள்க.

இமயமலையரையன்மகடழுவக்கச்சி
யேகம்பர்திருமேனிகுழைந்தஞான்று
சமயமவையாறினுக்குந்தலைவிக்கிசர்
தந்தபடியெட்டுழக்கிராழிநெல்லு
முமைதிருச்சூடகக்கையாற்கொடுக்கவாங்கி
யுழவுதொழிலாற்பெருக்கியுலகமெல்லாந்
தமதுகொழுமிகுதிகொடுவளர்க்கும்வேளாண்
டலைவர்பெரும்புகழுலகிற்றழைத்ததன்றே. (௩)

விளைகழனிபூலோகமுழுதுமேரி
விரிதிரைநீர்க்கடல்வருணன்கம்புகட்டி
இளர்கலப்பைதருசுமையாள்சுவேதராமன்
கிடாமறலி வசத்திசன் வசத்தாவென்றிங்
களவறிந்தாண்டாண்டுதொறும்விதைதப்பாம
லளக்குமவள்சச்சியறம்வளர்த்தமாதா
வொளிபெருகுகொழுமிகுதியெறும்பீறான
வுயிரனைத்துந்தேவருமுண்டுவப்பதன்றே. (௪)

மாறுகொடுபழையனூர்நீலிசெய்த
வஞ்சனையால்வணிகனுயிரிழப்பத்தாங்கள்
கூறியசொல்பிழையாதுதுணிந்துசெந்தீக்
குழியிலெழுபதுபேருமுழுகிக்கங்கை
யாறணிசெஞ்சடைத்திருவாலங்காட்டப்ப
ரண்டமுறநிமிர்ந்தாடுமடியின்கீழ்மெய்ப்
பேறுபெறும்வேளாளர்பெருமையெம்மாற்
பிரித்தளவிட்டிவளவெனப்பேசலாமோ. (௫)

காராளரணிவயலிலுழுதுதங்கள்
கையாரநட்டமுடிதிருந்திலிந்தப்
பாராளுந்திறலரசர்கவித்தவெற்றிப்
பசும்பொன்மணிமுடிதிருந்துங்கலப்பைபூண்ட
வேராலெண்டிசைவளர்க்கும்புகழ்வேளாள
ரோரடிக்குஞ்சிறுகோலாற்றரணியாளச்
சீராருமுடியரசரிருந்துசெங்கோல்
செலுத்துவர்வேளாளர்புகழ்செப்பலாமோ (௬)

வாயிலார் சத்தியார் விறல்சேர் பிண்டர்
வாக்கரையர் சாக்கியர்கோட் புலிகஞ்சாறர்
எயர்கோன் கலிக்காமர் முனைவித்தாக்கு
மிளையான்றன் குடிமாறர் மூர்க்கர்செங்கைத்
தாயனார் செருத்துணையார் செருவில்வெம்போர்
சாதித்த முனையடுவா ராகநம்பி
பாயிரஞ்சே ரறுபதுபேர் தனிப்பேர்தம்மிற்
பதின்மூவர் வேளாளர்பகருங்காலே. (௭)

அத்தகையபுகழ்வேளாண் மரபிற்சேக்கி
ழார்குடியில்வந்த வருண்மொழித்தேவர்க்குத்
தத்துபரி வளவனுந்தன் செங்கோலோச்சுந்
தலைமையளித்தவர் தமக்குத் தனதுபேரு
முத்தமச்சோழப்பல்ல வன்றானென்று
முயர்பட்டங் கொடுத்திடவாங்கவர்நீர்நாட்டு
நித்தனுறைதிருநாகே சுரத்திலன்பு
நிறைதலினான் மறவாத நிலைமைமிக்கார். (அ)

தம்பதிகுன் றத்தூரின் மடவளாகந்
தானாக்கித் திருக்கோயி லமைத்தங்கண்
செம்பியர்கோன் திருநாகே சுரம்போலீதுந்
திருநாகே சுரமெனவே திருப்பேர்சாத்தி
யம்புவியி லங்காங்க வைபவங்கட்
கானபரி கலந்திருநாள் பூசைகற்பித்
திம்பர்புகழ் வளவனர சுரிமைச்செங்கோ
லிமசேது பரியந்த மியற்றுநாளில். (௯)

கலைகயிறு மமண்முருட்டுக் கையர்பொய்யே
கட்டிநடத் தியசிந்தா மணியைமெய்யென்
றுலகினுளோர் சிலர்கற்று நெறிக்குத்துன்று
துயிகுத்திக் கைவருத்திக் கறவைநிற்க
மலகெறந் துளந்தளர்ந்து குளிர்பூஞ்சோலை
வழியிருக்கக் குழியில்விழுந் தளறுபாய்ந்து
விலைதருமென் கரும்பிருக்க விரும்பைமென்று
விளக்கிருக்க மின்மினித்தீக் காய்ந்துநொந்தார். (௰)

வளவனுங்குண் டமண்புரட்டுத் திருட்டுச்சிந்தா
மணிக்கதையை மெய்யென்று வரிசைகூர
வுளமகிழ்ந்து பலபடப்பா ராட்டிக்கேட்க
வுபயகுல மணிவிளக்காஞ் சேக்கிழார்கண்
டிளவரசன் றனைநோக்கிச் சமணர்பொய்ந்நூ
லிதுமறுமைக் காகாதிம் மைக்குமற்றே
வளமருவு கிஃறசிவ கதையிம்மைக்கு
மறுமைக்கு முறுதியென வளவன்கேட்டு. (௰௧)

அவகதையாய்ப் பயனற்ற கதையீதாகி
லம்மையுமிம் மையுமுறுதி பயக்கத்தக்க
சிவகதையே தருகற்ற திறமைப்பேரார்
சீவகசிந் தாமணிபோ லிடையில்வந்த
நவகதையோ புராதனமோ முன்னூலுண்டோ
நானிலத்துச் சொன்னவரார் கேட்டபேரார்
தவகதையோ தவம்பண்ணிப் பேறுபெற்ற
தனிக்கதையோ வடைவுபடச் சாற்றுமென்றான். (௰௨)

செம்பியர்பூ பதிமகிழ்ந்து வினவிக்கேட்கச்
சேக்கிழார் குரிசிலுரை செய்வார்ஞாலத்
தம்பலவர் திருத்தொண்டர் பெருமையாரு
ரடிகண்முத லடியெடுத்துக் கொடுக்கநாவ
னம்பிபதி னொருதிருப்பாட் டாகச்செய்த
நலமலிதொண் டத்தொகைக்கு நாரையூரிற்
றம்பிமுகன் பொருளுரைக்க நம்பியாண்டார்
சுருதிமொழிக் கலித்துறையந் தாதிசெய்தார். (௰௩)

ஆயுமறை மொழிநம்பி யாண்டார்நம்பி
யருள்செய்த கலித்துறை யந்தாதிதன்னைச்
சேயதிரு முறைகண்ட ராசராச
தேவர்சிவா லயதேவர் முதலாயுள்ள
வெயகருங் கடல்புடைசூ ழுலகமெல்லா
மெடுத்தினிது பாராட்டிற் றென்னவந்தத்
தூயகதை யடைவுபடச் சொல்வீரென்று
சோழனுரை செயக்கேட்டுக் குன்றைவேந்தர். (௰௪)

தில்லைவா ழந்தணரே முதற்பண்பாடு
திருநீல கண்டத்துப் பாணரீறுச்
சொல்லியதொண் டத்தொகைநூல் வகையந்தாதித்
தொடர்ச்சியினை விரித்துரைக்க வளவன்கேட்டு
மெல்லியலாள் பங்கர்திரு வருளைநோக்கி
வியந்தடிமைத் தொண்டுசெய்து பேறுபெற்ற
செல்கதியை நினைந்துருகி வளவர்கோமான்
சேவையர்கா வலனைமுக நோக்கிச்சொல்வான். (௰௫)

அவரவர்க ளுடவர்க ளிருந்தவூர்வந்
தவதரித்த திருமரபு திருப்பேர்செய்த
சிவசமயத் திருத்தொண்டு முற்றிற்பாடு
சிவனடிக்கீ ழுயர்பரம முத்திபெற்றோர்
எவருமறி யச்சீவன் முத்தராயிங்
கிருப்பவர்க ளினிமேலும் பிறப்போர்மண்மேல்
அவர்களைச்சேர்ந் தருள்பெற்றோர் பகைத்துப்பெற்றோ
ரவர்கள்பகை யாய்நரகி லடைந்தபேர்கள். (௰௬)

இல்லறத்தி லிருந்துநனி முத்திபெற்றோ
ரில்லறத்திற் சிற்றின்ப வியல்பைநீக்கி
நல்லறமாந் துறவறத்தி னின்றுபெற்றோர்
நற்பிரம சாரிகளா யருள்பெற்றுய்ந்தோர்
செல்கதிசற் குருவருளாற் சென்றுசேர்ந்தோர்
சிவபூசை செய்துபர முத்திபெற்றோர்
புல்லறிவு தவிர்ந்துதிரு வேடமேமெய்ப் ....
பொருளெனக்கொண் டரனடிக்கீழ்ப்பொருந்தப்புக்கோர்()

இப்படியே யடைவுபடப் பிரித்துக்கேட்டால்
யாவருக்கு மேதரிக்கச் செவிராநீட்ட
வொப்பரிய பொருடெரிந்து விளங்கித்தோன்ற
வுவமையுடைத் தாயகதை கற்கநிற்கத்
தப்பில்பெருங் காவியமா விரித்துச்செய்து
தருவீரென் றவர்க்குவிடை கொடுத்துவேண்டு
செப்பரிய திரவியமுங் கொடுக்கவாங்கிச்
சேக்கிழார் குரிசிறிருத் தில்லைசேர்ந்தார் (௰௮)

வேறு.

தில்லையெல்லையி னவந்துவந்தெதிர் தெண்டனாக விழுந்தெழுந்
தல்லினீர்கமலத்தடத்தினின் மூழ்கியம்பல வாணர்முன்
னல்லைசென்று பணிந்துகைத்தல முச்சிவைத்துளமுருகிறை
தெல்லைகாணரி தாயபேரொளி யின்பவாரியின் மூழ்கியே. (௰௯)

அடையலார்புர நீறெழத்திரு நகைசெய்தன்றொரு மூவரைப்
படியின்மேலடி மைக்கொளும்பத பங்கயங்கள் பணிந்துநின்
றடிகளேயுன தடியர்சீரடி யேனுரைத்திட வடியெடுத்
திடர்கெடுத்தரு வாயெனத்திரு வருளையெண்ணி யிறைஞ்சினர். ()

அலைபுனற்பகி ரதிநதிச்சடை யாடவாடர வாடநின்
றிலகுமன்றினி லாடுவார்திரு வருளினாலசரீரிவாக்
குலகெலாமென வடியெடுத்துரை செய்தபேரொலியோசை மிக்
கிலகுசீரடி யார்செவிப்புலத் தெங்குமாகி நிறைந்ததால். (உக)

தில்லைமாநகர் வாழவாழ்தவ சிந்தையந்தண ராறைஞ்ஞூ
றல்லதும்பல மடபதித்தவ ராசரிக்கையி லுள்ளபேர்
எல்லையில்லவ ரியாவருங்களி கொளவிளங்க சரீரிவாக்
கொல்லைவந்தெழ வனைவருங்கர முச்சிவைத்துளமுருகினர் (உஉ)

உள்ளலார்புர நீறெழக்கணை யொன்றுதொட்டுயர் மன்றில்வாழ்
வள்ளலார்திரு மாலையுந்திரு நீறுமெய்ப்பரி வட்டமும்
எள்ளலாரல றன்றுசேவையர் காவலர்க்கிவை யினிதளித்
தள்ளலார்வய னீடுதில்லையி லனைவருங்களி கொண்டபின். (உரு)

சேவைகாவலர் தொண்டர்சீருரை செய்வதற்குயர் செய்யுண்முன்
மூவரோதிய திருநெறித்தமி ழாதலால்வரன் முறைமையால்
யாவரும்புகழ் திருநெறித்தலை வனைவணங்கியிணங்கிமெய்த்
தாவருஞ்சிவ சாதனங்க டரித்துநீறு பரித்தரோ. (உச)

வந்துசூழ நிரைத்தவையிரு நூறுகான்மணி மண்டபத்
தெந்தையார்திரு வருளையுன்னி யிருந்துசேவையர்காவலர்
செந்தமிழ்த்தொடை யால்விளங்கிய திருவிருத்தநிருத்தனார்
தந்தசொன்முத லாவெடுத்தனர் தானுவான புராணநூல். (உரு)

வேறு.

திருமறையோர் புராணமவை பதின்மூன்று சிவவே
 தியரானை வழிபட்ட புராண[illegible]மிரண்டு
குறைகழன்மா மாத்திரரொன் றரவர்முடி மன்னர்
 குறுநிலமன் னவரைவர் வணிகர்குலத் தைவ
ரிருமைநெறி வேளாளர் பதின்மூவ ரிடைய
 ரிருவர்சா லியர்குயவர் தயிலவினை யாளர்
பரதவர்சான் றூர்வண்ணார் சிலைமறவர் நீசர்
 பாணரிவ ரோரொருவ ராம்பகருங் காலே. (உசு)

அறுதிபெறத் திருமரபு குறித் துரையாப் புராண
 மவைகளொரு பதின்மூன் று திருக்கூட்டந் தன்னின்
மறுவிலவர் பதியறிந்த கதையிரண்டுவந்த
 மரபறிந்த கதையிரண்டு பேரறிந்த கதையொன்
றுறுமரபு தெரியாப்பு ராணமவை யோரே
 ழூரறியாக் கதையேழு பேரறியாக் கதையெட்
டிற்றியிலக் கங்கண்டதிருக்கூட்ட மொன்றெண்
 ணித்தனையென் றறியாத திருக்கூட்ட மெட்டே. (உ௭)

தில்லைமறை யோர்கலயர் முருகர்பசு பதியார்
 சிறப்புலியார் கணநாதர் பூசலைசண் டேசர்
கல்விநிறை சோமாசி மாறர்நமி நந்தி
 சவுணியஞா னப்பூதி நீலநக்க ராகச்
செல்வமறை யோர்காதை பதின்மூன்று சிவவே
 தியர்காதை யிரண்டுபுகழ்த் துணையார்முப் போதும்
வல்லபடி சிவனையருச் சிப்பார்கண் மாமாத்
 திரர்மரபிற் சிறுத்தொண்ட[illegible]வர்முடி மன்னர். (உ௮)

அறுவரெவ ரவர்செங்கட் சோழர்புகழ்ச் சோழ
 ரருண்மானி யிடங்கழியார் நெடுமாறர் சேரர்
குறுநிலமன் னவரைவர் நரசிங்க முனையர்
 கூற்றுவனார் கழற்சிங்கர் மெய்ப்பொருளை யடிகண்
முறைமைவணி கரிலவர் காரைக்கா லம்மை
 மூர்த்திகலிக் கம்பரமர் நீதியியற் பகையார்
திறமைபுரி வேளாளர் பதின்மூவர் மூர்க்கர்
 செருத்துணையார் வாயிலார் கோட்புலியார் சத்தி. (உ௯)

தாயனா ரிளையான்றன் குடிமாற ரரசு
சாக்கியர்கஞ் சாறர்விறன் மிண்டர்முனை யடுவா
ரெயர்கோன் கலிக்காமர் கோபாலர் மரபி
லிருவர்திரு மூலனா ரானாயர் குயவர்
சேயபுகழ்த் திருநீல கண்டனார் பாணர்
திருமரபிற் றிருநீல கண்டத்துப் பாணர்
மேயதிற லதிபத்தர் பரதவர் கண்ணப்பர்
வேடர்மர பினிற்சான்றா ரேனாதிநாதர். (௫௰)

நேசனார் சாலியரிற் றிருநாளைப்போவார்
நீசர்மர பினிலங்கு டிருக்குறிப்புத்தொண்டர்
தூசொலிக்கு மேகாலி மரபுதில தயிலத்
தொழில்மர பிற்கலியனார் மரபுகுறித் துரையாக்
காசில்கலை பதின்மூன்று குலச்சிறையார் தண்டி
கணம்புல்ல ரெறிபத்தர் காரியார் குறும்பர்
தேசுடைய பத்தர்பர மனைப்பாடு வார்கள்
சித்தத்தைச் சிவன்பால்வைத் தாராரூர்ப்பிறந்தார். (௫௧)

செப்பரிய பொய்யடிமை யில்லாதார் மெய்யிற்
றிருநீறு பூசுமுனி வர்களுலகு தன்னி
லப்பாலு மடிச்சார்ந்தா ரிவர்கடமிற் சிலபே
ராய்ந்ததமிழ்ப் பேர்சிலபேர் மலையாளர்சிலபேர்
தப்பாத தெலுங்கர்சிலர் மற்றுளதேசத்தோர்
தவஞ்செய்து பரகதியை யடைந்தவர்கள்சிலபே
ரிப்போது மிருந்தரனை வழிபடுவோர் சிலபே
ரினிமேலுந் திருமேனி கொடுவருவோர் சிலரே. (௫௨)

திருஞான சம்பந்தர் திருநாவுக் கரையர்
திருமூலர் நெடுமாறர் மங்கையருக் கரசி
கணைசேருங் குலச்சிறையார் யாழ்ப்பாணர் குறும்பர்
கணநாத ரப்பூதி சோமாசி மாற
ருனாசேரு மிவர்கள்பதி னொருவர் குருவருளா
லுயர்முத்தி யடைந்தவர்க ளெறிபத்தர் கலயர்
முருகனார் கண்ணப்ப ரானாயர் தாயர்
மூர்த்தியார் சண்டேசர் திருநாளைப் போவார். (௫௩)

சேரனார் சாக்கியனார் கூற்றுவனார் தண்டி
சிறப்புலியார் பசுபதியார் கலிக்காமர் கலியர்
காரியா ரதிபத்தர் நீலநக்கர் பூசல்
கணம்புல்லர் கோட்புலியார் நமிநந்தி யடிகள்
சீருடைய கழற்சிங்கர் வாயிலார் தூய
செருத்துணையார் புகழ்த்துணையார் காடவனாயடிகளை
மூரிநெடு வேற்செங்கட் சோழனு ராக
முப்பதுபேர் சிவலிங்கத் தான்முத்தி யடைந்தோர். (௬௪)

திருநீல கண்டனா ரியற்பகையார் மூர்க்கர்
சிறுத்தொண்டர் திருக்குறிப்புத் தொண்டர்விறன் மிண்ட
ரருள்சேரு மிடங்கழியார் முனையடுவார்சத்தி
யமர்நீதி மெய்ப்பொருளா ரேனாதி நாதர்
கலைசேரும் புகழ்ச்சோழர் கஞ்சாறர் மாறர்
காரைக்கா லம்மைநர சிங்கர்கலிக் கம்பர்
வருநேச ராகவொரு பத்தொன்ப தடியார்
மணிவேடத் தாரைவழி பட்டரனை யடைந்தோர். (௬௫)

கவுணியர்நா வுக்கரசர் பேயா ரிம்மூவர்
கற்குடிமிய விசைவல்லோ ரிசைத்தமிழ்நூல் வல்லோர்
பவமணுகாத் திருநாளைப் போவாரா னயர்
பாணர்பர மனைப்பாடு வாராக நால்வர்
புவனிபுக ழடிகளெ டிருமூலர் காரி
பொய்யடிமை யில்லாத தமிழ்ப்புலவர் சேரர்
தவமுடைய விவரைவ ரியல்வல்லோர் நின்ற
நாயன்மார் தவம்புரிந்து நற்கதியை யடைந்தோர். (௬௬)

இல்லறத்தி னின்றவர்க டிருநீல கண்ட
ரியற்பகையா ருள்ளிட்டார் மூர்த்தியாரப்பர்
நல்லதுற வறம்பிரம சாரிகள்சண் டேசர்
நானிலத்தி லரனடியார் தங்களுடன் சேர்ந்து
செல்கதிபெற் றவர்ஞான சம்பந்த ருடனே
திருமணத்தி லொருமணமாய்ச் சேர்ந்தவர்களனேகர்
பல்வளஞ்சே ராரூர ருடன்சேரர் கையிற்
பரியுகைக்க வுடன்சென்ற பரிசனமென் னிறந்தோர். (௬௭)

சிவனடியா ருடன்பகையாய் முத்தியடைந் தவர்கள்
சேய்ஞலூர்ச் சண்டேசர் பிதாவெச்ச தத்தன்
கவர்புகழ்சேர் கோட்புலியா ருரைத்ததிரு வினையாக்
கலிபிழைத்த கிளைபகைத்து நரகினைச்சென் றடைந்தோர்
தவரான மூர்த்தியா ரிறைவனுக்குச் சாத்துஞ்
சந்தனக்காப் பினைவிலக்கி யமண்சமயச் சார்வாய்ப்
புவிபுரந்த கருநடமன் னவன்முத லனேகர்
புராணகதை யினைப்பிரித்துப் புகலவெளி தலவே. (௩௮)

ஆரூரர் திருத்தொண்டத் தொகையுரைத்தநாளி
லடித்தொண்டு செய்தொண்டர் சிலரவர்க்கு முன்னே
பேரூர்மெய்த் தொண்டுசெய்த பேர்சிலபே ரவர்க்குப்
பிறகுதிருத் தொண்டுசெயும் பேர்சிலபே ராகச்
சீரூருந் திருத்தொண்டர் புராணத்திற் சேர்த்துச்
சேவையர்கோன் சேர்வைசெயுந் தொண்டரளவிறந்தோர்
காரூரு மணிகண்டர்க் கவரவர்கள் செய்த
கைத்தொண்டி னிலகரைகண் டுரைக்கவெளி தலவே. (௩௯)

ஒருலகோ வொருதிசையோ வொருபதியோ தம்மி
லொருமரபோ வொருபெயரோ வொருகாலந் தானோ
பேருலகி லொருவனம்நெறி தருங்கதையோ பன்மைப்
பெருங்கதையோ பேரொன்றோ வல்லவே யிதனை
யேருலகெ லாமுணர்ந்தோ தற்கரிய வன்னென்
றிறைவன்முத லடியெடுத்துக் கொடுத்தருளக் கொண்டு
பாருலகி னுமகனின் றெடுத்துக்கை நீட்டப்
பாடிமுடித் தனர்தொண்டர் சீர்பரவ வல்லார் (௪0)

கருங்கடலைக் கைநீத்துக் கொளவெளிது முந்நீர்க்
கடற்கரையி னுெய்மணலை யெண்ணியள விடலாம்
பெருங்கடன்மேல் வருந்திரையை யொன்றிரண்டென் றெண்ணிப்
பிரித்தெழுதிக் கடையிலக்கம் பிரித்துவிடலாகுந்
தருங்கடலின் மீனையள விடலாகும் வானத்
தாரகையை யளவிடலாஞ் சங்கரன்று டமரு
சிரங்கொடிருத் தொண்டர்புரா ணத்தையள விடநஞ்
சேக்கிழார்க் கெளிதலது தேவர்க்கு மரிதே. (௪௧)

அறுபதுபேர் தனித்திருப்பேர் திருக்கூட்ட மொன்ப
தாகவறு பத்தொன்ப தரனடியார் கதையை
மறுவிறிரு நாவலூர்ச் சிவமறையோர் குலத்து
வருசடைய னார்மனைவி யிசைஞானி வயிற்றி
னுறுதிபெற வவதரித்த வாரூரர் மூன்று
னுரைசெய்த திருத்தொண்டத் தொகைப்பதிகத் தடைவே
நறைமலிபூம் பொழில்புடைசூழ் திருநாரை யூரி
னம்பியாண் டார்திருவந் தாதிகடைப் பிடித்து. (௪௨)

காண்டமிரண் டாவகுத்துக் கதைப்பரப்பைத் தொகுத்துக்
கருதரிய சருக்கங்கள் பதின்மூன்று நிலையிட்
டீண்டுரைத்த புராணத்திற் றிருவிருத்த நாலா
யிரத்திருநூற் றைம்பத்து மூன்றாக வமைத்துச்
சேண்டகைய திருத்தொண்டர் புராணமெனப் புராணத்
திருமுறைக்குத் திருநாமஞ் சீர்மைபெற வமைத்திட்
டாண்டகைமை பெறவெழுதி மைக்காப்புச் சாத்தி
யழகுபெறக் கவளிகையு மமைத்ததில்வைத் ததன்பின். (௪௩)

வேறு.

சேவைகாவலர்புராணகாதைதொகை செயநினைந்தெமை யகன்ற
பின்;இயாவர்தாமருகிருந்தபேர்கள்கதை சென்றதெவ்வள விருந்த
தெங்ஙனவதென்னிலவைக ளறியவேண்டுமதறிந்துவாருமென வளவர்
கோ,னவிளுனுரிய தூதர்தூதரறி யாமலொற்றரையு மேவினான்.(

வென்றிவேல்வளவ னளவறிந்துவர விட்டகாளையர் புராணநா
லொன்றுபாதிகதை சென்றதென்றுசில ரோடினார்சில ருவந்துசெ
ன்,றின்றுநாளைமுடி யும்புராணமினி யென்றுரைத்திட விரைந்தி
னான்,சென்றுநற்கதை முடிந்ததென்றுசிலர் செம்பியற்குறுதி செ
ப்பினார். (௪௫)

வந்துசொன்னவர்களனைவருக்குநவமணிகளுந் துகிலுமம்பொனு
ஞ்சிந்தியள்ளியு முவந்துவீசியுயர் செம்பொனம்பல மருங்கில்வா
ழந்திவண்ணர்நட மும்பணிந்துபாத லடியெடுத்தவர்கொடுத்திடப்
புந்திசெய்துமகிழ் சேவைகாவலர் புராணமுற்றொழுவனென்று.)

வீதிவீதிகடொறுந்தொறும்பயணமென்று வென்றிமணி முரச
றைந்,தோதிவேதியர்க ளெண்ணியிட்டவுயர் நாளுமோரையுமுகூர்
த்தமும்,போதநாடிவரை புரைகடக்களிறு புரவி தேர்கருவி யாட
ரச்,சாதுரங்கமுட னேசெலப்பிளிறு தந்திமேல்கொடுநடந்தனன்.

தேர்முழக்கொலி மழைக்கடக்கரட சிந்துரக்களிறு பிளிறுசீ
ரார்முழக்கொலி பரிச்செருக்கொலி பதாதிவந்தெதி ரடர்ந்தெழும்
போர்முழக்கொலி சழக்கிலாதுயர் படைக்கலன்புணரு மோசை
யேழ்,கார்முழக்கொலியி னெட்டிரட்டிநிறை கடன்முழக்கெனமு
ழக்கெழ. (௪௮)

வளவர்கோன்வர வறிந்துதில்லைமறையோரும்வண்மைமடபதிக
ளும்,பிளவுகொண்டமதி நுதன்மடந்தையரு மற்றுமுள்ள பெரி
யோர்களுங்,களவிலாதமொழி கொடுபுராணகதை செய்தகங்கை கு
லதிலகருந், தளவமாலையப யனையெதிர்ந்தினிய சாரவாசிபலசாற்றி
னர். (௪௯)

முண்டமானதிரு முடியுமிட்டதிரு மூண்டமுங்கவசமுந்துணைக்
குண்டலங்களு மிரண்டுகாதினும் வடிந்தலைந்தகுழை யுந்திருக்
கண்டமாலைகர மாலையுஞ்சிரசு மாலையுங்கவின் விளங்கவே
தொண்டர்சீர்பரவுவானணைந்தசுபசரிதைசோழனெதிர்கண்டனன்

கண்டபோதுள மகிழ்ந்துதன்னையறி யாதுகைகடலைமீதுறக்
கொண்டவேடமா னடியர்வேடமிது குறைவிலாததவவேடமென்
றண்டவாணர்திரு வருளை யுன்னியவ ரடிமைகொண்ட பெருமை
யைநினைந்,தெண்டயங்கரச ரேறுசேவையர் குலாதிபாதுகை யி
றைஞ்சினன். (௫௧)

இறைஞ்சியம்பலவர் பாததாமரை யிறைஞ்சவெண்ணி வரன்மு
றைமையா,லறஞ்சிறந்தமுனி சேவைகாவலரு மாறைஞ்ஞூறு ம
றையோர்களுந், துறஞ்சிறந்தமட பதிகளுந்தொடரவந்து மன்ன
னரிபிரமர்பான், மறைஞ்சுநின்றபொருள் வெளிப்படக்கனக மன்
றினின்றபடி கண்டனன். (௫௨)

கண்டகண்ணருவி தாரைகொள்ளவிருகைகளஞ்சலி கொளக்கசிந்
தெண்டரும்புளக ரோமகூபமெழ வின்பவாரிகரை புரளவாய்
விண்டதூமொழிகள் குழறவன்பினொடு விம்மிவிம்மியருண்மேவி
டத், தெண்டனுகமுன் விழுந்தெழுந்துநனி செம்பியன் பரவ வெ
ம்பிரான். (௫௩)

சேக்கிழானமது தொண்டர்சீர்பரவநாமகிழ்ந்துலக மென்றநம்
வாக்கினலடி யெடுத்துரைத்திட வரைந்துநூல்செய்து முடித்தன
ன், காக்கும்வேல்வளவ நீபிதைக்கடிது கேளெனக்கனக வெளியி
லே, யூக்கமானதிரு வாக்கெழுந்தது திருச்சிலம்பொலியு முட
னெழ. (௫௪)

மன்றுளாடிதிரு வாய்மலர்ந்தமொழி யுஞ்சிலம்பொலியு மன்றிலே
நின்றமானிடர் செவிப்புலன்புக நிறைந்ததன்றியு நிலத்தின்மே
லொன்றிநின்றுயர் சராசரங்களடை யக்கசிந்துருகி யோலிடக்
குன்றிலங்குதிரடோணரேந்திரபதி குதூகலத்துளமகிழ்ந்தனன்()

தொண்டர்தொண்டுசெய் புராணகாதைமறி சூடுநாதர்திருவருளினா
ல், விண்டநீதிபுனை சேக்கிழார்முனி விரித்துரைத்தகதை கேட்பது
ம், கண்டவாணரடி யாரெலாங்கடிக வருகவென்று திசை திசைதொ
று, மெண்டயங்கரசு னெடெடுத்தெழுதி யாருமோலைகளு மேவி
னான். (௫௬)

வேறு.

கவச மணிந்த சனங்களு மிங்கித முங்கம்பித்
தவச முறுஞ்சிவ சிந்தையு மன்பக லாமென்மைத்
தவச ரிதத்தொழி லுஞ்சிவ சாதன முஞ்சாரச்
சிவச மபத்தவர் யாவரும் வந்து திரண்டார்கள். (௫௭)

வேதியர் வேத முழக்கொலி வேதத் தைத்தமிழா
லோதிய மூவர் திருப்பதி கத்தொலி யோவாமற்
பூதி யணிந்தர கரவென வன்பர் புகழ்ந்தோதுங்
காதியல் பேரொலி காலொலி பேரொலி தைத்தேற. (௫௮)

பூசிப் பவர்சிலர் பூசித் தன்பொடு புனிதன்ற
னேசிப் பவர்சிலர் பிறவா வரமரு ணிமலாவென்
றியாசிப் பவர்சிலர் திருமுறை யெழுதிக் களிகூர
வாசிப் பவர்சில ராக விருந்து மகிழ்ந்தார்கள். (௫௯)

தெள்ளு திரைக்கடன் மீது மிதந்த திருத்தோணி
வள்ளலை யன்புசெ யன்பர் மடங்க டொறும்பாலர்
மெள்ள விருந்து மிழற்று புராண விருத்தத்தைக்
கிள்ளைகள் பாடியுரைப்பன கேட்பன மெய்ப்பூவை. (௬௰)

மற்றது கண்டு களித்த நலத்த மனத்தோடு
சுற்றிய மந்திரி மாரொடு தந்திரி மார்சூழத்
தெற்றென வந்து திரண்டு முரண்டரு சீர்நாடு
பெற்றது செல்வ மெனத்தனி யோகை பெருத்தார்கள். (௬௧)

பாடினர் தும்புரு நாரதர் நீடிசை பாடாநின்
றாடினர் வானி லரம்பைய ரஞ்சலி யெஞ்சாமற்
சூடினர் மண்ணின் மடந்தைய ரெந்தை துணைப்பாதந்
தேடினர் மாலய னன்பர் நடந்தரி சித்தார்கள். (௬௨)

சங்கொடு பேரி கறங்கிசை வீணை தனித்தாளம்
வங்கிய காள மிடக்கை கடக்கை மணிக்காளம்
பொங்கிய பம்பை வலம்புரி கண்டை முதற்பொற்பார்
மங்கல தூரிய மெங்கு முழங்கி வனப்பெய்த. (௬௩)

வேதியர் வேள்வி நெடும்புகை யாலய மெங்கெங்குங்
காதிய குங்கிலி யப்புகை நீடு கருப்பாலைச்
சோதி நெடும்புகை தோரண வீதி தொறுந்தோறு
மாதர் புகைக்கு மகிற்புகை யெங்கும் வனப்பெய்த. (௬௪)

ஆடக நாடக சாலைகண் முத்தணி யத்தாணி
மேடை யரங்கு களங்க மிலாத வெளிக்கூட
மாட மதிட்கண மாளிகை சூளிகை யெங்கெங்குந்
தோடவிழ் மாலைகள் பொன்னணி மாலைகள் சூழ்வித்தார். (௬௫)

பழுதகல த்திரு வலகு விருப்பொடு பணிமாறிக்
குழைவு பெறத்திகழ் கோமய நீர்குளி ரச்செய்து
தழைபொதி தோரண முங்கொடி யுந்துகி லுஞ்சார்வித்
தழகு பெறத்திரு வீதி புதுக்கி யதன்பின்பு. (சுசு)

வேறு.

திருநெறித்தமிழ் வல்லபேர்கள் சிவாகமங்கள் படித்தபேர்
கருநெறிப்பகை ஞானநூல்பல கற்றபேர்மறை கற்றபேர்
குருநெறிக்குரி யோரிலக்கண லக்கியங்கள் குறித்தபேர்
பெருநெறிப்பல காவியங்கதை பேசவல்லவ ரனைவரும். (சுஎ)

வேறு.

வள்ளலார் திருநடஞ்செய் மன்றின் முன்றின்
மறையவர்கோ மயசலத்தான் மெழுகித் தாபித்
தெள்ளரும்வெண் சுதையொழுக்கி யறுகாற்பீட
மிட்டதன்மேற் பசும்பட்டு விரித்து மீதே
வெள்ளைமடித் திட்டுமது மலருந் தூவி
விரைதருந்தூ பங்கொடுத்தா தனங்கற் பித்துத்
தெள்ளுதமிழ்ச் சேக்கிழார் புராணஞ் செய்த
திருமுறையை யதன்மேல்வைத் திறைஞ்சிப் போற்றி. (சுஅ)

வாழிதிருத் தொண்டர்புரா ணத்தை நீரே
வாசித்துப் பொருளருளிச் செய்வீ ரென்று
சோழர்பெரு மான்முதலா மடிய ரெல்லாஞ்
சொலக்கேட்டுக் குன்றைமுனி மன்று ளாடுந்
தாழ்சடையா னடியெடுத்துத் தரத்தாஞ் செய்த
சைவகதை யினைவிளங்க விரித்துச் சொலச்
சூழவிருந் தப்பலவ ரடியா ரெல்லாஞ்
சுருதிமொழி யிதுவெனக்கை தொழுது கேட்டார். (சுகூ)

தாளுடைய திருச்சிலம்பு புலம்பநடம் புரியுந்
தன்மையர னுக்கினிசந்த பேர்வழியி னாளு
மாளுடைய பிள்ளையா ரவதரித்த நாளு
மவரமுது திருஞான மமுதுசெய்த நாளுஞ்
சூளுடையா திரைநாளாஞ் சித்திரை யாதிரைநாட்
டொடங்கியெதி ராமாண்டு சித்திரையா திரையி
னாளுடைய கதைமுடிப்ப மெனக்குன்றை வேந்தர்
நடத்தவனை வருமிருந்து கேட்டனர் நாடோறும் (எ0)

சிறப்புடைய மூவர்முத லிகடிருவாய் மலர்ந்த
திருநெறிய தமிழ்மூலர் திருமந்திர மாலை
யறப்பயனுங் காரைக்காற் பேயிரட்டை மாலை
யந்தாதி மூத்தபதி கங்கழறிற்றறிவார்
மறப்பரிய பொன்வண்ணத் தந்தாதி திருமும்
மணிக்கோவை தெய்வவுலா வையடிகள் வெண்பா
வுறுப்டாகத் திருவிருத்த முடலாகப் பொருட்கோ
ளுயிராக நாலடியா னடத்ததுல கெல்லாம். (எக)

அன்றமுத னாடோறு நாடோறு மன்ன
லடியாரை விறந்தபெயர் வந்தவர்க ளெல்லாஞ்
சென்றுறையத் திருமடங்க ளிருமடங்க டோறுந்
திருவிளக்கங் கவர்சாத்த வுள்ளுடைமேற் போர்வை
துன்றியசெந் நெலினடிசில் கன்னனறுங் கனிக
ளேவறு சுவைக்கறிநெய் தயிர்திரண்ட பாறே
னென்றுதிருப் பண்ணியந்தண் ணீரமுத மடைக்காய்
நரபதியே வினைமைச்சர் நாடோறு நடத்த. (எஉ)

நலமலியுந் திருத்தில்லை மன்றினினின் றாடு
நடராசற் கன்றமுதன் மகபூசை நடத்தி
யலகில்புகழ்த் தில்லைவா ழந்தணர்க்கும் வெவ்வே
றமுதுபடி கறியமுது முதலான வெல்லா
நலமலிசெங் கோல்வளவன் றப்பாமே நாளு
நடத்திவர வரனடியார் நிறைந்துபதஞ் சலியும்
புலிமுனியுந் தவஞ்செய்த பெரும்பற்றப் புலியூர்
பூலோக சிவலோக மெனப்பொலிந்து தோன்ற. (எங)

மருவுதிரு முறைசேர்ப்பா ரெழுதுவா ரிருந்து
வாசிப்பார் பொருளுரைப்பார் கேட்டிருப்பார் மகிழ்ந்து
சிரமசைத்துக் கொண்டாடிக் குதிகுதிப்பார் சிரிப்பார்
தேனிப்பார் குன்றைமுனிச் சேக்கிழார் செய்த
வரியதவத் தினை நினைப்பா ரம்பலவர் முன்னு
ளடியெடுத்துக் கொடுக்கவிவர் பாடினரென் றுரைப்பார்
பெரியபுரா ணங்கேட்ட வளவர்பிரான் செவிக்குப்
பிடிக்குமோ விளிச்சிந்தா மணிப்புரட்டென் றுரைப்பார் ()

இத்தகைய சிறப்புடனே திருத்தொண்டர் புராண
மிருந்தன்பர் பாராட்ட நடந்தெதிரா மாண்டு
சித்திரையா திரைநாளின்முடியவதுகண்டு
திருத்தொண்டராரவெனும்பே ரொலியெழுந்துபொங்கக்
கத்துதிரைக்கடலொலியை விழுங்கிமுழங்கோரொழ்
கடலொலியைக்கீழ்ப்படுத்திப்பிரமாண்டவெளியைப்
பொத்தியிமையவர்செவியைநிறைத்துயரப்பொங்கிப்
பொன்னுலகுக்கப்பாலும்புகப்பொலிந்ததன்றே. (எ௫)

திருத்தொண்டர்புராணமெழுதியமுறையைமறையோர்
சிவமூலமந்திரத்தா லருச்சனைசெய்திறைஞ்சி
யிருக்குமுதன்மறைநான்கினின்றுமுதலாக
விதுவுமொருதமிழ்வேதமைந்தாவதென்று
கருத்திருத்தி யமுதடைக் காய்நறுந் தூப தீபங்
கவரிகுடை கண்ணாடி யாலத்தி நீறு
பரித்தளவு செயக்கண்டு வளவர்பிரான் முறையைப்
பசும்பட்டி னாற்சூழ்ந்து பொற்கலத்தி லிருத்தி. (எ௬)

செறிமதயானைச்சிரத்திற் பொற்கலத்தோ டெடுத்துத்
திருமுறையை யிருத்தியபின் சேவையர்கா வலனை
முறைமைபெற வேற்றியர சனுங்கூட வேறி
முறைமையினு லிணைக்கவரி துணைக்கரத்தால் வீச
மறைமுழங்க விண்ணவர்கள் கற்பகப்பூ மாரி
மழைபொழியத் திருவீதி வலமாக வரும்போ
திறைவர்திரு வருளைநினைந் தடலரசர் கோமா
னிதுவன்றோ நான்செய்த தவப்பயனென் றிசைத்தான்.(எஎ)

வாரணத்தி லிவரைவரக்கண்டதிரு வீதி
மறுகுதொறுந் தூய்மைசெய்து வாழைகளுநாட்டிப்
பூரணகும் பமுமமைத்துப் பொரியுமிகத் தூவிப்
பொன்னரிமாலையுநறும்பூ மாலைகளுந் தூக்கித்
தோரணங்க ணிரைத்துவிரை நறுந்தூப மேந்திச்
சுடர்விளக்கு மேற்றியணி மணிவிளக்கு மேந்தி
யாரணங்கள் விரித்தோதி மாமறையோ ரெதிர்கொண்
டாறுகெடுப்ப வாழ்த்தெடுத்தா ரரம்பையர்களெல்லாம்(எ௮)

வேறு.

காவலனூரிவர் தவரிவர்காவலர் கவரியிடத்தகு மோவென்பார் சேவையர் காவலனூர்சிவ மானசிறப்பிது நல்லசிறப்பென்பார் தேவரு மெழுதவொ ணுமறையைத்தமிழ் செய்துதிருப்பதிகம் பாடு,மூவரு மொருமுத லாயுலகத்து முளைத்தமுதற் பொருடானென்பார். (எகூ)

மின்மழை பெய்ததுமேக வொழுங்குகள் விண்ணவர்கற்பகவிளைசேர்பூ, நன்மழை பெய்தனர் சேவையர் காவலர் நாவலரின்புற நாவாரச்,சொன்மழை பெய்தனரிரவலர் மிடிகெடவள்ளி முகந்தெதிர் சோளேசன்,பொன்மழை பெய்தனனுருகிய நெஞ்சொடுகண்மழை யன்பர்பொழிந்தார்கள். (அ௰)

மதுரவிராமாயணகதையுரைசெய்தவான்மிக பகவனுமொப்பல்ல, விதிவழி பாரத முரைசெய்து கரை செய்தவேத வியாதனுமொப்பல்ல- சிதைவற வாயிர நாவுடனறிவுளசேட விசேடனுமொப்பல்ல,பொதிய மலைக்குறு முனிவனுமொப்பல புகழ்புனைகுன்றை முனிக்கென்பார். (அக)

மெய்யுள சிவசா தனமும் வெளிப்பட வெண்ணீ றெழுதியகண்ணேறுங், கையுந் திகழ்மணி கண்டமு மொளிதரு கவளிகையுப்புத் தகவேடு, மையுந் திருவுளமழியுந் தொறுமர கரவெனுநாமமு நாமெல்லா, முய்யும் படியருள் கருணையுமழகி தெனத்தொழு தனருல கவரெல்லாம். (அஉ)

பூவை மறந்தனள் வெண்டா மரைமயில் புகல்தரு சங்கப்புலவோர்சொற், பாவை மறந்தனள் தேச சுபாடித பயனைமறந்தனள்பதுமத்தோ, ளாவை மறந்தனள் பொதியமலைத்தலை நண்ணியபுண்ணிய முனிவனெனுங், கோவை மறந்தனள்சேவையர்காவலனூர்திரு நாவிற் குடிகொண்டாள். (அந)

இப்படி யிப்படி தன்னில்விதிப்படி யிம்பரு மும்பருமேனோரு, மப்படி சூழ வாத்திருவீதி வலஞ்செய் தணைந்தம்பலமுன்றிற்- றப்பற யானையி னின்று மிழிந்தர சனுமுறைசெறிசேவையர்கோவு, முப்புரி நூன்மறை யோரொ டணைந்தெழு திய முறை யைத்திரு முன்வைத்தார். (அச)

வேறு,

அண்ட வாணரெதிர்தெண்டனாகவனே வரும் விழுந்துபி னெழு
ந்துசீர், கொண்ட சேவைகுல திலக ருக்கவை ருங்குறித் தெதிர்
கொடுத்தபேர், தொண்டர்சீர் பரவு வாரெனப் பெயர் சுமத்தி
ஞானமுடி சூட்டிமுன், மண்ட பத்தினி லிருத்தி மற்றவரை வள
வர்பூபதி வணங்கினான் (அரு)

மூவரோதுதிருமுறைகளேழுதிருவாதவூரர்முறை யொன்றிசை
ப், பாவ லார்ந்தமுறை யொன்று மூலர்முறை யொன்றுபாசுரம
தாதியாக், கோலவ செய்தமுறை யொன்று சேவையர் குலாதி
நீதிமுறை யொன்றுடன், பாவை பாகர்திரு வருள்சிறந்தமுறை
பன்னி ரண்டென வகுத்தபின். (அசு)

தோடுசெய்ததிரு நெறியசெந்தமிழொ டொக்குமென்றுரை
தொடர்ந்துசெப், பீடுசெய்துநட ராசர்சந்நிதியி லேற்றினார்க
ளிது பாலிசூழ், நாடுசெய்ததவ நீடுகுன்றைவள நகரி செய்ததவ
நிகரிலாப், பீடு செய்தபகி ரதிகுலத்திலகர் சேக்கி ழார் செய்த
பெருந்தவம். (அஎ)

ஆய வேலையன பாயனிந்நிலைமை யாதலாலனுசர் பாலரு
வாயரெங்குளரெ னப்பணிந்திரு மருங்குநின்றவர் விளம்புவார்
தூயகுன்றைநகர் மீதுதம்பெயர் துலங்கவோர் குளமமைத்தபி
னேயநாகையரனார்திருப்பணியியற்றியவ்விடையிருந்தனர் (அஅ)

என்றுசொல்லவவர்தமைய ழைத்தரச னிவரமைச்சரிவர் பட்ட
மூ, மன்றன்மாலைபுனை தொண்டை மானென வகுத்தபின்றமது
மண்டல, மன்றுவற்பம்வர வந்த டைந்தவரை யாற்றல் செய்து
தொண்டை மண்டல, நின்று காத்தபெரு மானெனத்தமதுபெ
யரை யெங்கணு நிறுத்தினார். (அகூ)

தொண்டர் சீர்பரவு சேக்கிழார்குரிசி றூய தில்லைநகர் தன்னி
லே. பண்டு மூவர்பதி கத்து வந்தவறு பத்து மூவர்கதை தலை
புணர்ந், தண்ட வாணரடி யார்க டம்மொட னருந்தவந்தனி லிருந்
துபி, னீண்டை வைத்தசடை யம்பலத்தவ ரெடுத்த பாத நீழ லெ
ய்தினார் (கூய)

வாழி தில்லைமணிமன்று ளென்றுநட மாடுமங்கணர்மலர்ப்பதம்
வாழிகாழிநகர் வாழ வந்ததிருநெறிய ராதிபதிவள்ளருள்
வாழியன்பர்திருநீறுமிட்டதிருமுண்டமுந் துவயகவசமும்
வாழிகுன்றைமுனிசேவையாதிதிருவாய்மலர்ந்தருள் புராணமே()

தேசிலங்குமுகில்குன்றையாதிபதிதொண்டர்சீர்பரவுசேக்கிழார்
வாசலன்றுமுதலின்றுகாறுமினிமேலும்வாழையடிவாழையா,வீசு
தென்றன்மணிமண்டபத்தரசுவீற்றிருக்குமுடிமன்னருக். கீசனன்
பர்கள்புராணமுஞ்சொலியமைச்சுமாகிநலமெய்துமால். (௯௨)

அண்டவாணர்தொழுதில்லையம்பலவரடியெடுத்துலகெலாமெனத்
தொண்டர்சீர்பரவுசேக்கிழான்வரிசைதுன்றுகுன்றைநகராதிபன்-
றண்டகாதிபதிதிருநெறித்தலைமைதங்குசெங்கைமுகில்பைங்கழற்-
புண்டரீகமலர்தெண்டனிட்டுவினைபோக்குவார்பிறவிநீக்குவார். ௯௩

திருக்கிளருங்கயிலைமலைக்காவல்பூண்ட
செல்வமலிதிருநந்திமரபில்வந்து
கருக்குழியிலெமைவிழாதெடுத்தாட்கொள்ளுங்
கருணைமிகுமெய்கண்டதேவர்தூய
மருக்கிளர்தாள்பரவுமருணந்திதேவர்
மகிழுமறைஞானதேவருக்கன்பாகி
யிருக்குமுமாபதிதேவர்சேக்கிழார்த
மிசைப்புராணமுரைத்தாரொன்பமாதோ.

—※—

சந்தானாசாரியர் நால்வரிலொருவராகிய உமாபதிசிவாசாரியார்
அருளிச்செய்த
சேக்கிழார்புராணமென்கின்ற
திருத்தொண்டர்புராணவரலாறு
முற்றிற்றுமுற்றும்
ஆக திருவிருத்தம்—௱௪.







உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருமுறைகண்டபுராணம்.

காப்பு.

விருத்தம்.

ஒருமறை விண்டடி யவருயு மாறருள் கவுணியர் குலதீபந்
திருமிறை நாவுக் கரசா ரூரர் தாஞ்சே மித்திடுமத்
திருமுறை கண்ட புராண முரைக்கச் சித்திர முகனற்ருள்
ஒருமுறையிருமுறைமும்முறைவாழ்த்தியுவந்தன்பொடுபேணிவாம்.

வேறு.

உலகமகிழ் தருசைய மீதுதோன்றி யோவாது வருபொன்னிசூ ழ்சோணாட்டின், திலகமென விளங்குமணி மாடவாரூர்த்தியாகேச ர் பதம்பணிந்து செங்கோலோச்சி, யலகில்புகழ் பெறுராச ராசம ன்ன னபயகுல சேகரன்பா லெய்துமன்பர். இலகுமொரு மூவர ருள்பதிகமொன்றொன் றேயினிதிணைசெய்யவன்பாற்கேட்டு. (க)

கையிரண்டுமுச்சிமே லேறக்கண்ணீர் கரைந்தோடமெய்ம்முழு தும் புளகம்போர்ப்ப, ஐபன்மலர்ப் பதமுளத்தே கொண்டுபோ ற்றி யரியமுறை தேடவெங்கு மிலாமை யாலே, தையுமனத் தினனா கி யிருக்குங்காலை நாரையூ ரினிலாதி சைவமறையோன்பால், வைய மெலா மீடேறச் சைவம்வாழ மாமணிபோ லொருசிறுவன் வந்து தோன்றி. (உ)

வளமொடுப நயனவிதிச் சடங்கும்பூண்டு மறைமுதலாங்கலைபயி ன்று வருநாளின்ற, இளமறையோனூர்க்குச் செல்லமைந்தன் கேடில்பிதா வுரைத்தமொழிப் படியேயந்த, இளமதிச்செஞ் சடை ப்பொல்லாப் பிள்ளையாரை யேத்திபாராதிப்பானினைந்தேகி, உள மகிழன் பொடுதிருமஞ்சனமுன்னாகு முரியவெலாஞ்செய்துநிவே தனமுன்வைத்து. (ங)

எம்பெருமா னமுதுசெய வேண்டுமென்ன விறைஞ்சிடவு மமு
துசெயா திருப்பக்கண்டு, வெம்பியுளமேதே னுந்தவறிங்குண்டோ
வேழமுக னேயடியே னிவேதித்திட்ட, ப்பமுத முண்ணாத தெ
ன்னை யென்னப்பரிந்துதலை தனைமோதப் புகுங்காலெம்மா, னம்பி
பொறு வெனத்தடுத்தவ் வமுதமெல்லா நன்கருந்த வுவந்துநம்பி
நவில்வதானான். (௪)

எந்தையே யினியடியேன் பள்ளிக்கேகிலெங்கடே சிகனடிப்பா
னாதலாலே, சந்தமறைமுதற்கலைக ணீயேயோதித்தரல்வேண்டுமெ
னவேழ முகத்தோன்றானு, மந்தமற வோதுவிக்க வோதிநம்பி
மகிழ்ந்தனனன் றதுபோல மற்றைநாளும், விந்தையொடு நிகழ
நம்பியாண்டார்நம்பிமேவியிருந்திடுஞ்செய்திவேந்தன்கேளா (௫)

செல்வமிகுதிருநாரையூரின்மேவுஞ் சிவனளித்தமதகரிக்குச்சிந்
தைகூர்ந்து, நல்லபுகழுடையநம்பியாண்டார் நம்பி நண்பினொடு
நிவேதிப்பான் மதுரமிக்க, வெல்லையில்வா ழைக்கனிதேனவலோ
டப்ப மென்றுண்டை யிவ்வுலகோரொடுக்கவென்றே, மல்லல்மி
குசேனையுட னிராசராசமன்னவனுமந்நகரில் வந்து சேர்ந்தான்;

ஆங்கதனுக் கந்நகரி லிடம்போதாமலயல்குழப்பதின்காத வக
லவெல்லை. மாங்கனிவா ழைக்கனிகள் வருக்கையாவும் வந்தனவவ்
வெல்லையெல்லா மருவவைத்துப், பாங்கினுட னம்பிதாள் பணிந்
துமன்னன் டலகனிகள் கொணர்ந்தவெலாம் பகர்ந்து போற்றி,
யிங்கிதனைப் பொல்லாத பிள்ளையாருக் கிப்பொழுதே நிவேதிக்
கவென்றுசொன்னான். (௭)

நம்பியரசன்சொன்ன வார்த்தைகேளா நன்றனது பணியெ
ன்ன வருளாலுன்னித், தும்பிமுக னடிபணிந்து மன்னனிங்குத்
தொகுத்தனை நீ யமுதுசெய வேண்டுமென்னக்- கம்பமதக்களிற்
றுமுகத் தானுமங்குக் கருத்தினுட னம்பியுரைக் கிசைந்துகாட்
ட, விம்பரினில் வந்தனநாற் சுத்திசெய்தே யிருந்தவெலாம்படை
க்கவவ னேற்றல்செய்தான். (௮)

புகர்முகக்கைபுறப்படவே படைத்தவெல்லாம் புகுந்தவிடமறி யாமற் போனபின்னே, யகநெகிழ மெய்யரும்பிக் கண்ணீர்வார நம்பிகழ லன்பினு லரசன்போற்றி, மிகவுமொரு விண்ணப்பமடி யேற்குண்டு வேதியனே கேளென்று விளம்புவான்மெய்ப், புகழு முசேர் மூவர்தமிழ் தொண்டர்செய்தி பூதலத்தில் விளங்கவெனப் போற்றிநின்றான். (௯)

அந்தவுரை கேட்டலுமங்கரசன்றன்னை நம்பிமகிழ்ந் தருள்புரி வா னருள்சேர்மூவர். செந்தமிழ்க ளிருந்தவிட மன்பருள்ளோர் செய்திக்கவ் விநாயகன்றாள் சிந்தித்தெந்தா, யந்தவகையேதென் று கேட்டாலெந்தை மகிழ்ந்தருளு மந்நெறியை வழாதுரைக்குந், தந்திடுவன் மன்னபொறு வென்றுசொல்லித் தந்தி முகன் சந் நிதியிற் ருழ்ந்துசென்றான். (௰)

சென்றுபணிந் திபமுகத்தோன் பாதப்போதைச் சென்னியில் வைத் தவனருளிற் றிளைத்துச்சிந்தை, யொன்றுமற வுருகிவிழி தாரைகொள்ள வுண்மையினால் வந்தித்தங் குவாவோன்றன்னை, யி ன்றமிழ்சேர்மூவர்தமி ழிருந்தவெல்லை யெல்லையில்சீர்த்திருத்தொ ண்ட ரியல்புமூர்த்தி, நன்றுமருள் செய்தருளவேண்டுமென்ன நாகமுக னம்பிக்கு நவிலலுற்றான். (௰௧)

வார்ந்தருட்க ணீர்சொரிய நம்பிகேட்ப வண்டமிழ்க ளிருந்தவி ட மன்றுளாடுங்- கூர்ந்தவிருட் கண்டர்புறக் கடையின்பாங்கர்த் தோலமலர்க் கைகளடை யாளமாகச். சார்ந்தனவென் றருள்செய் து தொண்டர்பேறுஞ் சாற்றுதலாற் சகதலத்தோ ருரூவேச்சார, வார்ந்ததமி ழிருந்தவிட மன்பர்செய்தி யத்தனையு நம்பிமனத் த ருளிற்கொண்டார். (௰௨)

கொண்டுகுல சேகரனுங் கோன்பால்வந்து குஞ்சரத்தோனரு ள்செய்த கொள்கையெல்லா, மண்டுபெருங் காதலுடன் சொல்லி யந்தவண்டமிழின்பெருமைதனைவகுத்துச்சொல்வார், கண்டபெரு மந்திரமே மூவர்பாடல் கைகாணு மந்திரங்கண் ணுதலோன்கூற, லெண்டிசையுஞ் சிவனருளைப் பெறுதற்காக விம்மொழியின்பெ ருமையையா னியம்பக் கேளீ. (௰௩)

சேடர்மலி காழிநகர் வேந்தர்தாமுந் தேவர்புகழ் திருத்தோணிச் சிவனார்பங்கிற், பீடுடைய வுமைமுலைப்பா லருளாலுண்டு பிஞ்ஞகனைச் சிலைவிடைமேற் பெருகக்கண்டு, தோடுடையசெவியன்முதற்கல்லாவொன்றுந் தொடைமுடிவாப்பரசமயத்தொகைகண்மாளப், பாடினார்பதிகங்கள் பாவிலொன்றாம் பதினாறாயிரமுளதாப்பகருமன்றே. (௰௪)

திருநாவுக்கரையரெனுஞ்செம்மையாளர் தீயமணர் சிறைநீங்கலதிகைமேவுங், குருநாமப்பரஞ்சுடரைப்பரவிச்சூலைக்கொடுங்கூற்றாயினவென்னவெடுத்துக்கோதி, லொருமானைத்தரிக்குமொருவனையுங்காறுமொருநாற்பத்தொன்பதினாயிரமதாகப், பெருநாமப்புகலூரிற்பதிகங்கூறிப்பிஞ்ஞகனாடியிணைகள்பெற்றுளாரே (௰௫)

பின்புசிலநாளின்கணாரூர்நம்பிபிறங்குதிருவெண்ணெய்நல்லூர்ப்பித்தாவென்று, மின்பமுதற்றிருப்பதிகமுழுதோறுமீரமுப்பத்தெண்ணாயிரமதாக,முன்புபுகன்றவர்நொடித்தான்மலையிற்சேர்ந்தார்முறைகளெல்லாந்திருத்தில்லைமூதூர்தன்னி, லன்றவர்கையிலச்சினையால்வைத்தார்மன்னவராயிந்துதருகவெனவருளிச்செய்தார்.

அருமறையைச்சிச்சிலிபண் டருந்தத்தேடு மதுபோலன் றிது வென்றுமுளதாமுண்மைப்,பாபதமுந்தற்பரமும் பரனேயன்றிப் பலரில்லையென்றெழுதும்பனுவல்பாரி, னெரியினிடை வேவாதாற் றெதிரேயோடுமென்புக்குமுயிர்கொடுக்குமிடநஞ்சாற்றுங், கரியைவளைவிக்குங்கன்மிதக்கப்பண்ணுங்காமதல்லைகளையிலுறக் காற்றுங் காணே. (௰௭)

என்றென்றுநம்பிக்குப்பரிவாலுண்மையின்றமிழின்பெருமை நனியியம்பக்கேட்டுக்,குன்றென்றுபெருருவங் கொண்டாற்போலுங்குஞ்சரத்தானருளிணையுட்கொண்டுமன்னன்,மன்றினிடஞ்சென்றுமறையோர்கடொண்டர் வார்சடையோர்காவலுடைமாயோர்க்கெல்லா, நன்றெங்கள்கணபதிதன்சொல்லிதென்றுநன்மையுடன் முன்னவருர்நவிலுங்காலை. (௰௮)

அத்தகையோர் தமிழ்வைத்த மூவர்வந்தா லறைதிறக்கு மென
வுரைக்க வரசன்றானு, மெய்த்தகுசீ ரம்பலவர்க்குற்றசெல்வவிழா
வெடுத்து விளம்புதமிழ் மூவர்தம்மை, யுய்த்தணிவீதியினி னுலா
வருவித்தும்பர் நாயகன்றன் கோயில்வலமாக்கியுள்ளே, சித்தமெ
லா முருக்குதமி ழிருக்கைசேரச் சேர்த்தியவர் சேர்ந்ததெனச்
செப்பிநின்றான்! (௰௯)

ஐயர்நடமாடு மம்பலத்தின்மேல்பா லருள்பெற்ற மூவர்தமதரு
ள்சேர்செய்ய, கையதுவே யிலச்சனையா யிருந்தகாப்பைக்கண்ட
வர்க ளதிசயிப்பக் கடைவாய்நீக்கிப், பொய்யுடையோ ரறிவுதனை
ப்புலன்கண்மூடும், பொற்பதுபோற் போதமிகும் பாடறன்னை,
நொய்யசிறு வன்மீக மூடக்கண்டு நொடிப்பளவினிற்சிந்தை நொ
ந்தவேந்தன். (௨௰)

பார்த்ததனைப் புறத்துய்ப்ப வுலாத்துமேலேபடிந்திருந்தமண்
மலையைச்சேரத்தள்ளிச்,சீர்த்ததில தயிலமலி கும்பங்கொண்டு செ
ல்லுநனையச்சொரிந்து திருவேடெல்லா, மார்த்தவருளதனாலெயெ
டுத்துநோக்க வலகிலாவேடுபழு தாகக்கண்டு,தீர்த்தருடிக் கணியா
னேபரனேயென்னச் சிந்தைதளர்ந்திருகணீர்சோர நின்றான்.(௨௧)

எந்துபுகழ் வளவனிவ்வா றன்பினாலே யிடர்க்கடலின்கரைகாணா
தினையுங்காலைச், சார்ந்தமலை மகள்கொழுந னருளால்வேதச் சைவ
நெறித் தலைவரொரு மூவர்பாடல், வேய்ந்தனபோன் மண்மூடச்
செய்தேயீண்டு வேண்டுவன வைத்தோமென் றுலகினுள்ள, மாந்த
ரொடு மன்னவனுங் கேட்குமாற்றால் வானகத்தி லோரோசை யெ
ழுந்ததன்றே. (௨௨)

அந்தமொழி கேட்டலுமே மன்னன்றானு மாடினான் பாடினா
னலக்கண்யாவுஞ், சிந்தினா னமுதமுண்டான் போலநெஞ்சந்தே
றினானம்பிதிரு வடியிற்றாழ்ந்தான், பந்தமறு சிவனடியார்கொள்
கலவன்றாப் பண்டாரந் திறந்துவிட்டான் பரிவுகூர்ந்தான், இந்தவ
கைப் பெருங்களிகொண் மன்னன்றானு மெழின்முறையை முன்
போல வகுக்கவெண்ணி. (௨௩)

மன்னுதமிழ் விரகரெங்கள் காழிவேந்தர் வகுத்தருளா லமைத்த திருமுறையோர்மூன்றும், அன்னவகை வாகீசர் முறையோர்மூன் றுமாரூரருரைத்ததிருமுறையதொன்றும், அன்னவகை யேழாகத் தொகுத்துச்செய்தான் றாயமனுவெழுகோடி யென்ப துன்னித் தன்னிகரிறிருவருளான் மன்னன்றனுந் தாரணியோர்வீடுபெறு ந்தன்மைசூழ்ந்தே. (உ௪)

வேறு.

பண்புற்ற திருஞானசம்பந்தர் பதிகமுந்நூற்
றெண்பத்தினான்கினாலிலங்குதிருமுறைமூன்று
நண்புற்றநாவரசர்மூந்நூற்றேழ்மூன்றினால்
வண்பெற்றமுறையொன்றுநூற்றினால்வன்றொண்டர். (உ௫)

ஆகவளர்திருமுறையேழருட்டிருவாசகமொன்று
மோகமெறிதிருவிசைப்பாமாலைமுறையொன்றுசிவ
போகமிகுமந்திரமாமுறையொன்றுபுகழ்பெறவே
யாகமிகுந்திருமுறைகள்பத்தாகவைத்தார்கள். (உ௬)

வைத்ததற்பினட்பிகழன்மன்னர்பிரான்மகிழ்ந்திறைஞ்சிச்
சித்திதருமிறைமொழிந்ததிருமுகப்பாசுரமுதலா
வுய்த்தபதிகங்களையுமொருமுறையாச்செய்கவெனப்
பத்திதருந்திருமுறைகள்பதினொன்றாப்பண்ணினார். (உ௭)

மந்திரங்களேழுகோடியாதலினான்மன்னுமவ
ரிந்தவகைதிருமுறைகளேழாகவெடுத்தமைத்துப்
பந்தமுறுமந்திரங்கள்பதினொன்றுமாதலினா
லந்தமுறைநான்கினொடுமுறைபதினொன்றாக்கினார். (உ௮)

ஆக்கியபின்றிருத்தொண்டத்தொகையடைவையருளாலே
நோக்கியபின்னாயன்மார்ருடங்கடைவுந்தொழிற்பேறும்
பாக்கியத்தாலிபமுகத்தோனருள்செய்தபகுதியினால்
வாக்கியல்சேரந்தாதிநம்பியடைவேவகுத்தார். (உ௯)

சீரருள்சே ரறுபத்து மூவர்தனி திருக்கூட்டஞ்
சாருமவ ரோன்பானுந் தண்டமிழா னுரைசெய்து
பேரிசையாம் வகையடைவு புவியினிடைப் பெருமையினாற்
சீருலவு திருவெருக்கத் தம்புலியூர் சென்றடைந்தார்; (௯௰)

சென்னியரு ணம்பியிவ ரந்நகரைச் சேர்ந்துசிவன்
மன்னுதிருக் கோயிலினை வலங்கொண்டு பணிந்தரனை
யின்னிசைதந் தருளென்ன விரக்கமுடன் குறைந்திரப்பக்
கன்னியொரு பங்குடையோ னருள்செய்த கட னுளாட்பாம். (௯௧)

நல்லிசையாழ்ப் பாணனார் நன்மரபின் வழிவந்த
வல்லியொருத் திக்கிசைகள் வாய்ப்பளித் தோமென்று
சொலலவவ டனையழைத்துச் சுருதிவழிப் பண்டருவு
நல்லிசையின் வழிகேட்டு நம்பியிறையுண்மகிழ்ந்தார். (௯௨)

ஆங்கவளை யம்பலத்து ளாடுவார் திருமுன்பே
பாங்கினுடன் கொடுவந்து பண்ணடைவு பயில்பாட
லோங்கருளான் முன்றபணித்தற் கொக்குமென வோரோசை
நீங்கரிய வாணிங்க ணிகழவர சன்கேட்டான். (௯௩)

மன்னனுக்கு நம்பிக்கு மறையவர்மூ வாயிரவர்
பன்னரிய திருத்தொண்டர் பலதுறையோர்க் குங்கேட்க
வின்னருண்மன் வியந்துரைத்த வியன்முதலா விசைத்தவிசை
தென்னிலமேன் மிகத்தோன்றத் திருவருளாற் றோன்றியதாம். ( )

சொன்னட்ட பாடைக்குத் தொகையெட்டுக் கட்டளையா
மின்னிசையாற் றருந்தக்க ராகத்தேழ் கட்டளையாம்
பன்னுபழந் தக்கராகப் பண்ணின் மூன்றுளதா
முன்னரிய தக்கேசிக் கோரிரண்டு வருவித்தார் (௯௫)

மேவுகுறிஞ் சிக்கஞ்சு வியாழகுறிஞ் சிக்காறு
பாவுபுகழ் மேகரா கக்குறிஞ்சி பாலிரண்டு
தேவுவந்த விந்தளத்தின் செய்திக்கு நான்கினிய
தாவில்புகழ்க் காமரத்தின் றன்மைதனக் கிரண்டமைத்தார்- (௯௬)

காந்தார மாகிய பியந்தையாங் கட்டளைக்கு
வாய்ந்தவகை மூன்றாக வண்ணட்ட ராகத்தி
லேய்ந்தவகை யிரண்டாகச் செவ்வழியான் றக்கியிசைக்
காந்தார பஞ்சமத்தின் கட்டளைமூன் றாக்கினார். (௯௭)

கொல்லிக்கு நாலாகுங் கவுசிகத்துக் கூறும்வகை
சொல்லிரண் டாக்கியிரு தூங்கிசைநேர் பஞ்சமத்திற்
கொல்லையினி லொன்றாக்கிச் சாதாரிக் கொன்பதாம்
புல்லுமிசைப் புறநீர்மைக் கொன்றாகப் போற்றினார். (௩௮)

அந்தாளிக் கொன்றாக்கி வாகீச ரருந்தமிழின்
முந்தாய பலதமிழுக் கொன்றொன்று மொழிவித்து
நந்தாத நேரிசையாங் கொல்லிசகு நாட்டிவிரன்
டுந்தாடுங் குறுந்தொகைக்கோர் கட்டளையா விரித்துரைத்தார். ( )

தாண்டகமாம் பாவுக்கோர் கட்டளையாத் தாபித்தங்
காண்டகையார் தடுத்தாண்ட வையரருடைய முறைக்
கிண்டிசைசே ரிந்தளத்துக் கிரண்டாக வெடுத்துரைத்து
நீண்டதக்க ராகத்துக் கிரண்டாக நிகழ்வித்தார் (௪௰)

கூறரிய நட்டராகத் திரண்டு கொல்லிக்கு
வேறுவகை மூன்றாக மிகுத்தபழம் பஞ்சுரத்துக்
கேறும்வகை யிரண்டாக்கி யின்னிசைசேர் தக்கேசிப்
பேறிசையா றாக்கியதிற் காந்தாரம் பிரித்திரண்டாம். (௪௧)

ஒன்றாகுங் காந்தார பஞ்சமத்துக் கோரிரண்டா
நன்றான சீர்நட்ட பாடைக்கு நவின்றுரைக்கிற்
குன்றாத புறநீர்மைக் கிரண்டாகுங் கூறுமிசை
யொன்றாகக் காமரத்துக் கொன்றாகப் போற்றினார் (௪௨)

உற்றவிசைக் குறிஞ்சிக்கோ ரிரண்டாக வகுத்தமைத்துப்
பற்றரிய செந்திருதிக் கொன்றாக்கிக் கவுசிகப்பாற்
றுற்றவிசை யிரண்டாக்கித் தூயவிசைப் பஞ்சமத்துக்
கற்றவிசை யொன்றாக்கி யரனருளால் விரித்தமைத்தார் (௪௩)

இந்தவகைச் சிவன்செவிப்பா லெக்கணனுந் தழைத்தோங்க
வந்தமிலா வறுபத்து மூவரரு ளப்புவிமே
ணந்தியிட மும்மலமு நல்லுலகோர் நீங்கியிடச்
சிந்தையருட் சிவமாகத் தெளிவித்தா னருட்சென்னி. (௪௪)

சீராருந் திருமுறைகள் கண்டதிறற் பார்த்திபனு
மோராரு மிறைவனையு மெழிலாரு நம்பியையு
மாராத வன்பினுட னடிபணிந்தங் கருள்விரவச்
சோராத காதன்மிகுந் திருத்தொண்டர் பதந்துதிப்பாம். (௪௫)

திருமுறைகண்டபுராணம் - முற்றிற்று.

ஆக திருவிருத்தம் — ௪௫.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

—*—

# திருத்தொண்டர்புராணசாரம்.

விருத்தம்.

மல்குபுகழ்வன்றொண்டராருளாலீந்த
வளமருவுதிருத்தொண்டத்தொகையின்வாய்மை
நல்கும்வகைபுல்கும்வகைநம்பியாண்டார்
நம்பிதிருவந்தாதிநவின்றவாற்றாற்
பல்குநெறித்தொண்டர்சீர்பரவவல்ல
பான்மையாலொருமையாளும்பரிவால்வைத்த
செல்வமிகுந்திருத்தொண்டர்புராணமேவுந்
திருந்துபயனடியேனுஞ்செப்பலுற்றேன்.

[சுந்தரமூர்த்திசுவாமிகள்.]

தண்கயிலையதுநீங்கிநாவலூர்வாழ்
சைவனார்சடையனார்தநயனாராய்
மண்புகழவருட்டுறையானோலைகாட்டி
மணம்விலக்கவன்றொண்டாயதிகைசேர்ந்து
நண்பினுடனருள்புரியவாரூர்மேவி
நலங்கிளரும்பரவைதோணயந்துவைகித்
திண்குலவும்விறன்மிண்டர்திறல்கண்டேத்துந்
திருத்தொண்டத்தொகையருளாற்செப்பினாரே. (௧)

செப்பலருங்குண்டையூர்நெல்லழைத்துத்
திருப்புகலூர்ச்செங்கல்செழும்பொன்னாச்செய்து
தப்பின்முதுகுன்றர்தரும்பொருளாற்றிட்டுத்
தடத்தெடுத்துச்சங்கிலிதோள்சார்ந்துநாத
னொப்பிறனித்தூதுவந்தாறூடுகேறி
யுறுமுதலைசிறுமதலையுமிழநல்கி
மெய்ப்பெரியகளிற்றேறியருளாற்சேர
வேந்தருடன்வடகயிலைமேவினாரே. (௨)

[தில்லைவாழந்தணர்.]

நல்லவானவர்போற்றுந்தில்லைமன்று
ளாடகஞ்செய்பெருமானுக்கணியார்நற்பொற்
றொல்லைவான்பணியெடுத்தற்குரியார்வீழ்ந்
துறந்தநெறிபார்தொண்டத்தொகைமுன்பாடத்
தில்லைவாழந்தணரென்றெடுத்துநாதன்
செப்புமருளுடையார்முத்தீயார்ப்பத்திக்
கெல்லையாம்பரியாரொப்புலகிற்றாமே
யேய்ந்துளாரமையாளவாய்ந்துளாரே. (௧)

[திருநீலகண்டநாயனார்.]

தில்லைநகர்வேட்கோவர்தூர்த்தராகித்
தீண்டிலெமைத்திருநீலகண்டமென்று
சொல்லுமனையாடனையேயன்றிமற்றுந்
துடியிடையாரிடையின்பந்துறந்துமூத்தங்
கெல்லையிலோடிறைவைத்துமாற்றிநாங்க
ளெடுத்திலமென்றியம்புமெனவிழிந்துபொய்கை
மெல்லியலாளுடன்மூழ்கியிளமையெய்தி
விளங்குபுலீச்சரத்தரனைமேவினாரே. (௨)

[இயற்பகைநாயனார்]

எழிலாருங்காவிரிப்பூம்பட்டினத்து
ளியல்வணிகரியற்பகையாரிருவர்தேட
வழலாயபிரான்றூர்த்தமறையோனாகி
யாயிழையைத்தரவேண்டிடனையவையன்
கழலாரப்பணிந்துமனைக்கற்பின்மேன்மைக்
காதலியைக்கொடுத்தமர்செய்கருத்தால்வந்த
பிழையாருஞ்சுற்றமெலாந்துணித்துமீளப்
பிஞ்ஞகனாரழைத்தருளப்பெற்றுளாரே. (௩)

[இளையான்குடிமாறநாயனார்]

மன்னியவேளாண்டொன்மையிளசைமாறர்
வறுமைபாலுணவுமிகமறந்துவைகி
புன்னருநள்ளிருண்மழையிலுண்டிவேண்டி
யும்பர்பிரானணையவயலுழுதுவித்துஞ்
செந்நென்முளைபழுதுமனையலக்காலாக்கிச்
சிறுபயிரின்கறியமுதுதிருந்தச்செய்து
பன்னலருருவனருந்தற்கெழுந்தம்சோதிப்
பரலோகமுழுதாண்டபான்மையாரே. (௪)

[மெய்ப்பொருணாயனார்]

சேதியர்தங்கோவலூர்மலாடமன்னர்
 திருவேடமெய்ப்பொருளாத்தெளிந்தசிந்தை
நீதியினருடன்பொருதுதோற்றமாற்ற
 னெடுஞ்சினமுங்கொடும்படையுநிகழாவண்ண
மாதவர்போலொருமுறைகொண்டணுகிவாளால்
 வன்மைபுரிந்திடமருண்டுவந்ததத்தன்
காதலுறநமர்தத்தாவென்றுநோக்கிக்
 கழிதகல்வித்திறைவனடிக்கீழ்க்கொண்டாரே. (எ)

[விறன்மிண்டநாயனார்]

விளங்குதிருச்செங்குன்றூர்வேளாண்டொன்மை
 விறன்மிண்டர்திருவாரூர்மேவுநாளில்
வளங்குலவுதொண்டரடிவணங்காதேகும்
 வன்றொண்டன்புறகவனைவலியவாண்ட
துளங்குசடைமுடியோனும்புறகென்றன்பாற்
 சொல்லுதலுமவர்தொண்டத்தொகைமுன்பாட
வுளங்குளிரவுளதென்றாரதனாலண்ண
 லுவகைதரவுயர்கணத்துளோங்கினாரே. (அ)

[அமர்நீதிநாயனார்]

பழையாறைவணிகரமர்நீதியார்பாற்
 பரவுசிறுமுதிவடிவாய்ப்பயிலுநல்லூர்க்
குழைநாதர்வந்தொருகோவணத்தைவைத்துக்
 கொடுத்ததனையெடுத்தொளித்துக்குளித்துவந்து
தொழிலாருமதும்வெண்டிவெதுண்டுநீரித்
 துலையிலிடுங்கோவணநேர்தூக்குமென்ன
வெழிலாரும்பொன்மனைவிபிளஞ்சேயேறி
 யேறினர்வானுலகுதொழவேறினாரே. (கூ)

[எறிபத்தநாயனார்]

திருமருவுகருவூரானிலையார்சாத்துஞ்
 சிவகாமியார்மலர்ச்சிந்தயானை
பரனெறியாமெறிபத்தர்பாகரோடு
 மறவெறியவென்றுயிருமகற்றியொன்று
புரவலனர்கொடுத்தபடையன்பால்வாங்கிப்
 புரிந்தரிவான்புகவெழுந்தபுநிதவாக்காற்
களிறுடன்விழுந்தாருமெழுந்தார்தாமுங்
 கணநாதராகரவல்லைக்கொண்டாரே. (ய)

[ஏனாதிநாயனார்]

ஈழக்குலச்சான்றோரெயினனூர்வா
 ழேனாதிநாதனாரிறைவனீற்றைத்
தாழத்தொழுமரபார்படைகளாற்றுந்
 தன்மைபெறுவதிசூரன்சமரிற்றோற்று
வாழத்திருநீறுசாத்தக்கண்டு
 மருண்டார்தெருண்டார்கைவாள்விடார்நேர்
வீழக்களிப்பார்போனின்றேயாக்கை
 விடுவித்தார்சிவனருளேமேவினாரே. (௰௧)

[கண்ணப்பநாயனார்.]

வேடாதிபதியுடுப்பூர்வந்தனாகன்
 விளங்கியசேய்திண்ணனார்கன்னிவேட்டைக்
காடதில்வாய்மஞ்சனமூங்குஞ்சிதருமலருங்
 காய்ச்சினமென்றிடுதசையுங்காளத்தியார்க்குத்
தேடருமன்பினிலாறுதினத்தளவுமளிப்பச்
 சிறுசிவகோசரியுந்தெளியவிழிப்புண்ணீ
ரோடவொருகண்ணைப்பியொருகண்ணப்ப
 வொழிகவெனுமருள்கொடருகுறநின்றாரே. (௰௨)

[குங்கிலியக்கலயநாயனார்]

சீலமலிதிருக்கடவூர்க்கலயனாரந்
 திகழ்மறையோர்பணிவறுமைசிறையாமுன்னே
தாலியைநெற்கொளவென்றுவாங்கிக்கொண்டு
 சங்கையில்குங்கிலியத்தாற்சார்ந்தசெல்வர்
ஞாலநிகழ்திருப்பனந்தாணுதர்நேரோ
 நரபதியுந்தொழக்கச்சாயந்துபோதப்
பாலமுதமுண்டாருமாகமெய்திப்
 பரிந்தமுதுசெயவருள்சேர்பான்மையாரே. (௰௩)

[மானக்கஞ்சாறநாயனார்]

கஞ்சநகர்மானக்கஞ்சாறனார்சீர்க்
 காதன்மகள்வதுவைமணங்காணநாதன்
வஞ்சமலிமாவிரதத்தலைவனாகி
 வந்துபுகுந்தவளளகமகிழ்ந்துநோக்கிப்
பஞ்சவடிக்காமென்னவரிந்துநீட்டும்
 பத்தரெதிர்மறைந்திறைவன்பணித்தவாக்கா
லெஞ்சலில்வண்குழல்பெற்றபேதைமாதை
 யேயர்கோற்குதவியருளெய்தினாரே. (௰௪)

[அரிவாட்டாயநாயனார்]

தாவில்கணமங்கலத்துள்வேளாண்டொன்மைத்
　　தாயனார்நாயனார்தமக்கேசெந்நெற்
றூவரிசியெனவிளைவதனையேயாகத்
　　துறந்துணவுவடுவரிசிதுளங்குகீரை
யாவினிளைந்துடன்கொணர்வோர்கமரிற்சிந்த
　　வழிந்தரிவாள்கொண்டூட்டியரியாமுன்னே
மாவடுவிடெலியுமான்கரமுந்தோன்றி
　　வாள்விலக்கியமார்தொழவைத்தவன்றே. (௰௫)

[ஆனாயநாயனார்]

மங்கலமாமழநாட்டுமங்கலமாநகருண்
　　மருவுபுகழானயர்வளராமேய்ப்பார்
கொங்கலர்பூந்திருக்கொன்றைமருங்குசார்ந்து
　　குழலிசையினைந்தெழுத்துங்குழையவைத்துத்
தங்குசராசரங்களெல்லாமுருகாநிற்பத்
　　தம்பிரானணைந்துசெவிதாழ்ந்துவாழ்ந்து
பொங்கியவான்கருணைபுரிந்தென்றுமூதப்
　　போதுகவென்றருளவுடன்போயினாரே. (௰௬)

[மூர்த்திநாயனார்]

வழங்குபுகழ்மதுராநகர்மூர்த்தியாராம்
　　வணிகர்திருவாலவாய்மன்னர்சாத்தத்
தழங்குதிரமுழங்கைதரத்தேய்த்தவூறுந்
　　தவிர்ந்தமணர்வஞ்சனையுந்தவிரமன்ன
னிழந்தவுயிரினருகனாலநல்க
　　வெழில்வேணிமுடியாகவிலங்குவேட
முழங்குபுகழணியாகவிளாநீறாக
　　மும்மையுலகாண்டருளின்முன்னினாரே. (௰௭)

[முருகநாயனார்]

மன்னுதிருப்புகலூர்வாழ்முருகனார
　　மறையவர்கோவர்த்தமானீச்சரத்தார்
சென்னியினுக்கழகமருமலர்கள்கொய்து
　　திருமாலைபுகழ்மாலைதிகழச்சாத்திக்
கன்னிமதிற்கழுமலநாடுடையநாதன்
　　காதன்மிகுமணங்காணுங்களிப்பினாலே
யின்னல்கெடவுடன்சேவித்தருளான்மீளா
　　திலங்குபெருமணத்தரனையெய்தினாரே. (௰௮)

[உருத்திரபசுபதிநாயனார்]

பங்கமில்வண்புகழ்நிலவுதலையூர்வாழும்
பசுபதியாமொருமறையோர்பணிந்துசெந்தே
னங்கமலமடுவினிடையல்லுமெல்லு
மகலாதேயாகளமாயமர்ந்துநின்று
திங்கள்வளர்சடைமுடியானடிகள்போற்றித்
திருவெழுத்துமுருத்திரமுந்திகழவோதி
மங்கையிடமுடையபிரானருளான்மேலை
வானவர்கடொழுமுலகின்மன்னினாரே. (௰௯)

[திருநாளைப்போவார்நாயனார்]

நன்மைதிகழ்மேற்காநாட்டாதனூர்வாழ்
நந்தனார்புறத்தொண்டர்நாளைப்போக
பொன்மலிதென்புலியூர்க்கென்றுனாட்பார்புன்கூர்ப்
பொய்கையமைத்தடலேறுபிரியநோக்கி
வன்மதில்சூழ்தில்லையினையருளால்வாய்ந்த
வண்டழலினிடைமூழ்கிமறையோர்போற்ற
மின்மலிசெஞ்சடைமுநியாயெழுந்துநாதன்
விளங்குநடந்தொழமன்றணைமேவினாரே. (உ௰)

[திருக்குறிப்புத்தொண்டநாயனார்]

கொந்தலர்பூம்பொழிற்கச்சிநகரேகாலிக்
குலத்தலைவர்தவர்குறிப்புக்குறித்துளார்பால்
வந்திறைவர்தமக்கின்றுதாரீராகின்
வருந்துமுடலெனவாங்கிமாசுநீத்த
கந்தைபுலராதொழியமனழியுமாலைக்
கடும்பொழுதும்வரக்கண்டுகலங்கிக்கன்மேற்
சிந்தமுடிபுடைப்பளவிற்றிருவேகம்பர்
திருக்கைகொடுபிடித்துயர்வான்சேர்த்தினாரே. (உ௧)

[தண்டீசநாயனார்]

வேதமலிசேய்ஞலூரெச்சதத்தன்
விளங்கியசெய்மறைபயிலும்விசாரசன்மர்
கோதனமேய்ப்பவன்கொடுமைபொறாதுதாமே
கொண்டுநிரைமண்ணியின்றென்கரையினீழற்
றுதகியின்மணலிலிங்கத்தான்பாலாட்டத்
தாதைபொறாதவையிடறுந்தாள்கண்மாளக்
காதிமலர்த்தாமமுயர்நாமமுண்ட
கலமதனும்பதமருளாற்கைக்கொண்டாரே. (உ௨)

[திருநாவுக்கரசுசுவாமிகள்.]

போற்றுதிருவாமூரில்வேளாண்டொன்மைப்
பொருவில்கொறுக்கையரதிபர்புகழனார்பால்
மாற்றருமன்பிணிற்றிலதவதியாமாது
வத்துதித்தபின்புமருணீக்கியாருந்
தோற்றியமண்சமயமுறாதுயாநீங்கத்
துணைவரருடாவந்தசூலைநோயாற்
பாற்றருநீளிடரெய்திப்பாடலிபுத்திரத்திற்
பாழியொழித்தரனதிகைப்பதியில்வந்தார். (உரு)

வந்துதமக்கையாருளாணீறுசாத்தி
வண்டமிழாலோய்தீர்ந்துவாக்கின்மன்னாய்
வெந்தபொடிவிடம்வேழம்வேலைநீந்தி
வியன்சூலங்கொடியிடபம்விளங்கச்சாத்தி
யந்தமிலப்பூதிமகனரவுமாற்றி
யருட்காசுபெற்றுமறையடைப்புநீக்கிப்
புந்திமகிழ்ந்தையாற்றிற்கயிலைகண்டு
பூம்புகலூரரன்பாதம்பொருந்தினாரே. (உசா)

[குலச்சிறைநாயனார்.]

கோதில்புகழ்தருமணமேற்குடியார்கோவண்
குலச்சிறையார்தென்னர்குலவமைச்சர்குன்றா
மாதவர்களடிபரவுமரபார்பாண்டி
மாதேவியாரருள்வான்பயிர்க்குவேலி
காதன்மிகுகவுணியர் கோன்வாதிற்றோற்ற
கையரைவையைக்கரைசேர்கழுவிலேற்றா
நீதியினாலவாய்நிமலர்ச்சேர்ந்த
நின்மலனாரொன்மலங்கணீக்கினாரே. (உஎ)

[பெருமிழலைக்குறும்பநாயனார்.]

கொண்டல்பணிவளர்சோலை மிழலைநாட்டுக்
கோதில்புகழ்ப்பெருமிழலைக்குறும்பனார்சி
ரண்டர்பிரானடியவருக்கடியாராகு
மாதரவாலணுக்கவன்றொண்டர்க்காளாய்
மண்டொழுமெண்டருசித்திவாய்ந்துளார்தாம்
வன்றொண்டர்வடகயிலைமருவுநாண்மு
னெண்டிகழுமறைமூலநெறியூடெகி
யிலங்கொளிசேர் வடகயிலையெய்தினாரே. (உஅ)

[காரைக்காலம்மையார்.]

தங்குபுகழ்க்காரைக்கால்வணிகன் மிக்க
  தனதத்தன்றரும்புநிதவதியார்மாவின்
செங்கனிகடிருவருளாலழைப்பக்கண்டு
  திகழ்கணவனதிசயித்துத்தேசநீங்க
வங்கவுடலிழந்துமுடிநடையாலேறி
  யம்மையேயெனநாதனப்பாவென்று
பொங்குவடகயிலைபணிந்தாலங்காட்டிற்
  புரிதனடமநவரதம்போற்றினரே. (உஎ)

[அப்பூதிநாயனார்.]

அந்தமினற்றிங்களூர்வருமப்பூதி
  யருமறையோர்திருநாவுக்கரசினாமம்
பந்தரிடையெழுதக்கண்டரசுமெய்தப்
  பணிந்துபரிகலநேடிப்படப்பைசேர்ந்த
மைந்தனுயிருயர்கதலியிலைமேற்றுஞ்சும்
  வாளரவுகவரவுடன்மறைத்தல்கேட்டுச்
சிந்தைமகிழ்ந்துபர்பதிகமருந்தாற்றீர்த்துத்
  திருவமுதுசெயவருளைச்சேர்ந்துளாரே. (உஅ)

[நீலநக்கநாயனார்.]

நீதிதருமறையோர்வாழ்சாத்தமங்கை
  நீலநக்கனாவந்திதிமலர்மேனி
பூதிவிழுஞ்சிலம்பிகடிந்தவளைநீத்தார்க்
  குமியாதவிடநாதனுறாம்நாய்காட்டக்
காதன்மிகுமனைவியையுமகிழ்ந்துமேவிக்
  காழியர்கோனமுதுசெயக்களித்துவாழ்ந்து
வேதிகையிற்பாணனார்க்கிடமுநல்கி
  விளங்குபெருமணத்தரனைமேவினாரே. (உகூ)

[நமிநந்தியடிகணாயனார்.]

நண்ணுபுகழ்மறையோர்வாழேமப்பேறூர்
  நமிநந்தியடிகடிருவிளக்குநல்க
வெண்ணெயமணர்கள்விலக்கநீராலாரூ
  ரிலங்குமரநெறியாருக்கேற்றநாளிற்
கண்ணமணர்கெடக்கண்பெற்றடிகள்வாழக்
  காவலனுமிந்தங்கள்கட்டுவித்தே
யண்ணலருள்கண்டாரூரமர்ந்துதொண்டர்க்
  காணியெனுமரசினருளடைந்துளாரே (௩௰)

[திருஞானசம்பந்தசுவாமிகள்.]

காழிநகர்ச்சிவபாத விதயர்தந்த
கவுணியர்கோனழுதுமையாள்கருதியூட்டு
மேழிசையினமுதுண்டுதாளம்வாங்கி
யிலங்கிபதித்திலச்சிவிகையிசையவேறி
வாழுமுயலகனைகற்றிப் பந்தரேய்ந்து
வளர்கிழிபெற்றரவின்விடமருகற்றீர்த்து
வீழிநகர்க்காசெய்திமறைக்கதவம்பிணித்து
மீனவன்மேனியின்வெப்புவிடுவித்தாரே. (௧௧)

ஆறெரியிட்டெடுத்தவேடவைமுன்னேற்றி
யாற்றிலேட்டெதிர்போயணைபவேற்றி
யோரமணரொழியாமே கழுவிலேற்றி
யோதுதிருப்பதிகத்தாலோடமேற்றிக்
காருதவுமிடிபுத்தன்றலையிலேற்றிக்
காயாதபனையின்முதுகனிகளேற்றி
யீரமிலாவங்கமுயிரெய்தவேற்றி
யிலங்குபெருமணத்தரனையெய்தினரே. (௧௨)

[ஏயர்கோன் கலிக்காமநாயனார்]

ஏதமில்வேளாளர்பெருமங்கலத்து
ளேயர்கோன்கலிக்காமரிறையைதேரோ
தூதுகொளுமவனனுகிலென்றுமென்னுந்
துணிவினர்பாலிறைவனருஞ்சூலையேவி
வேதனைவன்றொண்டன்வரினீங்குமென்ன
வெகுண்டுடல்வாள்கொடுதுறந்துமேயநாவற்
போதகமுமுடலிகழவெழுந்துதாழ்ந்து
போற்றியதுவிலக்கியருள்பொருந்தினரே (௧௩)

[திருமூலநாயனார்.]

கயிலாயத்தொருசித்தர்பொதியிற்சேர்வார்
காவிரிசூழ்சாத்தனூர்கருதுமூலன்
பயிலாநோயுடன்வீயத்துயரநீடும்
பசுக்களைக்கண்டவனுடலிற்பாய்ந்துபோத
வயலாகப்பண்டையுடலருளான்மேவி
யாவடுதண்டுறைபாண்டுக்கொருபாவாகக்
குயிலாருமரசடியிலிருந்துகூறிக்
கோதிலாவடகயிலைகுறுகினரே. (௧௪)

[தண்டியடிகணாயனார்,]

திருவாரூர்வருந்தண்டியடிகள்காட்சி
　　சேராதார்குளந்தொட்டற்கமணர்சீறிக்
குருடாநீமுன்செவியிங்கூடிற்றென்று
　　குறித்தறியைப்பறித்தெறியக்கொதித்துத்தங்க
ணருளாலேவிழித்தெவருமந்தராக
　　வமணர்கலக்கம்பலகண்டவர்கள்பாழிப்
பருவானகற்பறித்தாவிக்கரையுங்கட்டிப்
　　பரனருளாலமருலகம்பற்றினாரே.　　(௬௫)

[மூர்க்கநாயனார்.]

தொண்டவளநாட்டுவளர்வேற்காட்டூர்வாழ்
　　தொல்லுழவர்நற்சூதர்சூதுவென்று
கொண்டபொருள்கொண்டன்பர்க்கமுதளிக்குங்
　　கொள்கையினார்திருக்குடந்தைகுறுகியுள்ளார்
விண்டிசைவுகுழறுமொழிவீணர்யாள
　　வெகுண்டிடலான்மூர்க்கரெனவிளம்புநாம
மெண்டிசையுமிகவுடையாரண்டர்போற்று
　　மேழுலகுமுடனாளுமியல்பினாரே.　　(௬௬)

[சோமாசிமாறநாயனார்]

அம்பர்நகரந்தணர்சோமாசிமாற
　　ரன்பர்களாம்யாவர்க்குமன்பினமுதளிப்பா
ரும்பர்திகழ்வகையாகம்பலவுஞ்செய்பு
　　முண்மையினனைந்தெழுத்துமோவாநாவார்
நம்பர்திகழ்திருவாரூர்நயந்துபோற்று
　　நாவலர்சேனடிபரவுதன்மையாலே
யிம்பர்தொழவும்பர்பணிந்தேத்தமேலை
　　யேழுலகுமுடனாளுமியல்பினாரே.　　(௬௭)

[சாக்கியநாயனார்,]

சங்கமங்கைவரும்வேளாண்டலைவர்காஞ்சிச்
　　சாக்கியரோடியைந்தவர்தந்தவறுஞ்சைவத்
துங்கமலிபொருளுமுணர்ந்தந்தவேடந்
　　துறவாதேசிவலிங்கந்தொழுவோர்கன்லோ
ரங்கன்மலர்திருமேனியமுந்தச்சாத்தி
　　யமருநாண்மறந்தொருநாளருந்தாரோடிச்
செங்கலெறிந்திடுமளவின்மகிழ்ந்தநாதன்
　　திருவருளாலமருலகஞ்சேர்ந்துளாரே.　　(௬௮)

[சிறப்புலிநாயனார்.]

திருவாக்கூரருமறையோருலகமேத்துஞ்
சிறப்புலியார்மறப்புலியாருரிமேற்செங்க
ணரவார்த்தார்தருமேற்றூர்க்கன்பாரனார்க்
கமுதளிப்பாரொளிவெண்ணீறணிந்தமார்பர்
பெருவாக்கான்மறைபரவியாகம்போற்றும்
பெற்றியினுரைந்தெழுத்தும்பிறழாதோதிக்
கருவாக்காவிறைவன்றாளிணைகள்சேர்ந்த
கருத்தினொனையாவுந்திருத்தினாரே. (௩௯)

[சிறுத்தொண்டநாயனார்.]

பல்குமருத்துவரதிபர்செங்காட்டங்குடிவாழ்
படைத்தலைவரமுதளிக்கும்பரஞ்சோதியார்மெய்ச்
செல்வமிகுசிறுத்தொண்டர்காழிநாடன்
திருவருள்சேர்ந்தவர்வளருஞ்சீராளன்றன்னை
நல்குதிருவெண்காட்டுநங்கைசமைத்திடப்பின்
னன்மதிச்சந்தனத்தாதிதலைக்கறியிட்டுதவப்
புல்கவரும்வயிரவர்தாமகிழ்ந்துமகவருளப்
போற்றியவர்சிவனருளேபொருந்தினாரே (௪௰)

[கழறிற்றறிவார்நாயனார்]

காவலர்மகோதையார்கொடுங்கோளூர்க்கோக்
கழறியவையறிந்தகோச்சிலம்போசைக்கருத்தார்
நாவலர்கோனண்பரடிச்சேரனென்றே
நவின்றுவருவண்ணானைநயந்தகோநற்
பாவலர்கோப்பாணபத்திரனல்வாய்ந்த
பரமர்திருமுகம்வாங்கிப்பணிகோவெற்பின்
மேவியகோவானைக்குக்குதிரைவைத்த
வீரர்கோவெனையாளுஞ்சேரர்கோவே (௪௧)

[கணநாதநாயனார்]

கந்தமலிவயற்காழிமறையோரேத்துங்
கணநாதர்திருத்தோணிக்கடவுளார்க்கு
நந்தவனம்பலவமைத்துமலருங்கொய்து
நற்றமஞ்சொற்றமறயந்துசாத்தி
வந்தவரைத்தொண்டாக்கிப்பணிகள்பூட்டி
வாதுசெய்தவாரணத்தைமகிழ்ந்துவாழ்த்திப்
புந்திமகிழ்ந்தரனருளாற்கயிலைமேவிப்
பொருவில்கணத்தவர்காவல்பொருந்தினாரே. (௪௨)

[கூற்றுவநாயனார்]

குன்றாதபுகழாளர்களந்தைவேந்தர்
கூற்றுவனார்மாற்றலர்மண்கொண்டுகுடைப்
பொன்றாழுமுடிவேண்டப்புலியூர்வாழும்
பூசுரர்கள்கொடாதகலப்புநிதனீந்த
மன்றாடுந்திருவடியேமுடியாச்சூடி
மாநிலங்காத்திறைவனுறை யாட்கோயிற்
சென்றாசையுடன்வணங்கிப்பணிகள்செய்து
திருவருளாலமருலகஞ்சேர்ந்துளாரே. (௬௩)

[பொய்யடிமையில்லாதபுலவர்]

பொய்ப்பறியாக்கபிலரொடு பரணராதிப்
புலவோர்பொற்பார்கலைகள்பொருந்தவோதிச்
செய்யுளிடைவளராசுமதுரநல்ல
சித்திரவித்தாரமெனத்தெரிக்குஞ்செம்மை
மெய்யுடையதொடைகளெல்லாமன்றுளாடன்
மேவியகோனிருதாளில்விரவச்சாத்திக்
கையுடையஞ்சலியினராயருளான்மேலைக்
கருதரியவமருலகங்கைக்கொண்டாரே (௬௪)

[புகழ்ச்சோழநாயனார்]

பொழின்மருவுங்கருவூர்வாழ்புகழார்சோழர்
போதகம்போமலனுயிரும்போக்குமென்றே
யழலவிர்வாள்கொடுத்தபிரானதிகைமான்மே
லடர்ந்தபெரும்படையேயவவர்கொண்டேய்ந்த
சுழல்விழிகொடலைகொண்பார்கண்டதோர்புன்
சடைத்தலையைமுடித்தலையாற்றாழ்ந்துவாங்கிக்
கழல்பரவியதுசிரத்திலேனந்திவாய்ந்த
கனன்மூழ்கியிறைவனடிகைக்கொண்டாரே. (௬௫)

[நரசிங்கமுனையரைய நாயனார்]

நாடுபுகழ் முனைப்பாடி நாடுமேய
நரசிங்கமுனையர்புவிநயத்துமன்று
ளாடுமவராதிரைநாளடியார்க்கம்பொ
னமுதளிப்பாரொளிவெண்ணீறணிந்துதூர்த்த
வேடமுடையவர்க்கிரட்டிச்செம்பொனீந்து
விடுத்தழகாராலயங்கள்விளங்கச்செய்து
தோடலர்தாருடையபிரானருளையாளத்
தோன்றிருநெறியருளினான்றிருதே. (௬௬)

[அதிபத்தநாயனார்.]

அலையாருங்கடனாகைநகருள்வாழு
மதிபத்தர்பரதவர்களதிபர்மேவலை
வலைவாரிவருமீனிற்றலைமீனீசன்
வார்கழற்கேயென்றுவிடுமரபார்பன்னாட்
டலையானதொருமீனேசாரநாளுந்
தந்தொழிலால்விடுத்துமிடிசாரச்செம்பொ
னிலையாருமணிநயந்தமீனொன்றெய்த
நீத்தருளாலிறைவனடிநேர்ந்துளாரே. (௪௭)

[கலிக்கம்பநாயனார்.]

கடவுளருட்கண்ணூர்கள்பயிலுந்தொல்லைக்
கடந்தைநகர்வணிகர்கலிக்கம்பனார்க்
கடிமையுறவமுதளிப்பாரடியாரிங்கி
யருளுருவாயன்பருடனணையவேத்தி
யிடையிலவரடியிணையும்விளக்காநிற்ப
விகழ்மனைவிகரகமலிரண்டுகையும்
படியில்விழவறிந்தவள்செய்பணியுந்தாமே
பரிந்துபுரிந்தரனருளேபற்றினாரே. (௪௮)

[கலியநாயனார்]

தடமதில்சூழொற்றியூர்நகருள்வாழுஞ்
சக்கரப்பாடியர்குலமெய்த்தவமாயுள்ளார்
படர்புகழார்கலியனார்நலியுங்கூற்றைப்
பாய்ந்தவர்க்குவிளக்கெரிக்கும்பரிவான்மற்றோ
ருடலிலாப்செக்குழல்வார்க்கதுவுநேரா
துயர்மனைவியைக்கொள்வாருளருமின்றி
மிடறரிமசணிறையவரியநாதன்
வியன்கைகொடுபிடிப்பவருண்மேவினாரே. (௪௯)

[சத்திநாயனார்.]

விரிதருகாவிரிநாட்டுவரிஞ்சியூர்வாழ்
வேளாளர்சத்தியார்விமலர்பாதத்
துரியவர்களடிபரவுமொருமையார்நா
வோவாமையைந்தெழுத்துமுணாக்குநீரா
ரிருளின்மிடறுடையபிரானடியார்தம்மை
யிகழ்வார்நாத்தண்டாயத்திடுக்கிவாங்கி
யரியுமதுதிருத்தொழிலாவுடையார்மன்று
ளாடியசேவடிநீழலடைந்துளாரே. (௫௰)

[ஐயடிகள் காடவர்கோ னாயனார்]

வையநிகழ்பல்லவர்தங்குலத்துவந்த
மாமணிமாநிலமுழுதுமகிழ்ந்துகாக்கு
மையடிகள்காடவர்கோனருளானூல்க
ளறிந்தரசுபுரிந்திடுதலமையுமென்றே
பொய்யணையவுடல்வாழ்வுகழியுமாறு
பொருந்தியிடும்புகழ்வெண்பாபுலியூர்மேவுஞ்
செய்யதிருவடிமுதலாப்பதிகடோறுஞ்
செப்பிநன்னெறிவினைகடப்பினாரோ. (௬௧)

[கணம்புல்லநாயனார்]

இலகுவடவெள்ளாற்றுத்தென்பால்வாழு
மிருக்குவேளூரதிபரொழிலார்சென்னிக்
கலைநிலவாரடிபரவுங்கணம்புல்லர்தில்லைக்
கருதுபுலீச்சரத்தாற்குக்காதற்றீப
நிலைதரத்தாமிடவிடியாலொருநாட்புல்லா
னீடுவிளக்கிடவதுவுநேராதாகத்
தலைமயிரினெரிகொளுவுமளவினூதன்
றுவாதவாழ்வருளுந்தன்மையாரோ. (௬௨)

[காரிநாயனார்]

திருக்கடவூர்வருமுரவோர்காரியாராந்
திகழ்தொண்டர்வண்டமிழ்நூறிருந்தவேரீதி
விருப்பொடுதம்பெயராற்பாவிளம்பிமும்மை
வேந்தரையுமுறைமுறையேமேவியங்க
ணுரைத்தவுரைநயமாக்கியவர்பாலேய்ந்த
வொண்பொருளாலாலயங்களோங்கச்செய்து
நரைக்குளருந்தவர்க்கேவறகமுன்போற்றுந்
தன்மையாலருள்சேர்ந்ததன்மையாரோ. (௬௩)

[நின்றசீர்நெடுமாறநாயனார்]

கன்னன்மலிநெல்வேலிக்கவினார்மாறர்
கவுரியர்கோனமணருறுகலக்கமெல்லாம்
பொன்னெயில்சூழ்சிரபுரக்கோனணையமாற்றிப்
புநிதமிகுநீறணிந்துபோற்றிசெய்து
மன்னுபுகழ்மங்கையருக்கரசியாரா
மலர்மாதுமணிமார்பமகிழ்ந்துமாற்றார்
வெற்றிடுதல்கண்டரசுபுரிந்துகாழி
வேந்தருள்சேர்ந்தபெருவிறலினாரோ. (௬௪)

[வாயிலார் நாயனார்]

ஞாயிலார்மதிற்றொண்டைநாட்டுமேன்மை
நண்ணுமயிலாபுரியின்வேளாண்டொன்மை
வாயிலார்மலைவில்லானடியேபோற்றி
மறவாமைதலைநின்றமநமேசெம்பொற்
கோயிலாவுயர்ஞாநம்விளக்காநீராக்
குலவியவாநந்தமன்பேயமுதாக்கொண்டு
தாயிலானிருசரணநிகழவேத்துந்
தன்மையாரருள்சேர்ந்தநன்மையாரே. (௫௫)

[முனையடுவார் நாயனார்]

பொன்னிவளந்தருநாட்டிற்புகழுநீடூர்ப்
பொருவிறிருமலிவேளாண்டொன்மைமிக்கார்
முன்னியவர்முனையடுவாரிகலார்போரின்
முரணழிவார்தமக்காகமொழிந்தகூலி
மன்னுநிதிகொண்டுசென்றுகொடுத்துவந்த
வளர்பொருளாலிறைவனடிவழுவாவன்பர்க்
கன்னமலர்நசையின் மிகமிசையநல்கு
மன்பர்துன்பமவையாவுமகன்றுளாரே. (௫௬)

[கழற்சிங்கநாயனார்]

காடவர்தங்குலமுவந்தகழலார்சிங்கர்
காதன்மிகுதேவியுடன்காவலாரு
ராடவலபெருமானைப்பணிவாரங்கோ
ரகன்றமலர்தனைமோந்தவரிவைமூக்கைச்
சேடுடையசெருத்துணையாரரியக்கேட்டுத்
திறலரசர்மலரெடுத்தசெங்கையென்றே
சூடகமுன் கைதடிந்துஞாலங்காத்த
தூய்மையாரருள்சேர்ந்தவாய்மையாரே. (௫௭)

[இடங்கழிநாயனார்]

கோனாட்டுக்கொடும்பாளூரிருக்கும்வேளிர்
குலத்தலைவரிடங்கழியார்கொங்கிற்செம்பொ
னேனைத்தார்மன்றின்முகடம்பொன்மேய்ந்த
வாதித்தன்மரபோர்நெற்கவர்ந்தோரன்பர்
போநாட்பணிருளின்கட்காவலாளர்
புரவலர்முன்கொணரவவர்புகலக்கேட்டு
மானேற்றாரடியாரேகொள்கவென்று
வழங்கியரசாண்டருளின்மன்னினாரே. (௫௮)

[செருத்துணைநாயனார்.]

இரைத்தலைபார்புனற்பொன்னிமருதநன்னாட்
டெழிலாருந்தஞ்சைநகருழவரோங்குஞ்
செருத்துணையார்திருவாரூர்ச்சேர்ந்துவாழ்வார்
செல்வமிகும்பல்லவர்கோன்றேவிவீழ்ந்த
மருத்துணைபார்மலரெடுத்துமோப்பக்கண்டு
வளமலிபூங்கத்தியாலவண்மூக்கீர்ந்த
கருத்துணைபார்விறற்றிருத்தொண்டிணையேசெய்து
கருதலருமமருலகங்கைக்கொண்டாரே (௫௯)

[புகழ்த்துணைநாயனார்.]

புண்ணியர்கள்புகழழகார்திருப்புத்தூர்வாழ்
புகழ்த்துணையாரகத்தடிமைப்புரிதாகின்றன்
மண்ணிசைமழைபொழியாவற்காலத்தால்
வருந்துடலநடுங்கிடவுமணிநீரார்த்தி
யண்ணன்முடிபொழிகலசமுடிமேல்வீழ
வயர்ந்தொருநாட்புலம்பவரனருளாலீந்த
நண்ணலருமொருகாசுப்படியால்வாழ்ந்து
நலமலிசீரமருலகநண்ணினாரே. (௬௰)

[கோட்புலிநாயனார்.]

குலவுபுகழ்நாட்டியத்தான்குடிவேளாளர்
கோட்புலியார்குவித்துயர்த்தசெந்நெற்கூடு
நிலவணிவார்க்கமைத்தாணைநிறுத்திபொன்றார்
நேர்மிலவார்திருவாணைநினையாதேநெற்
சிலமிடியாலழித்தபடியறிந்துவாளாற்
சேர்ந்தபெருக்கிளைஞருடல்சிதறவீசி
யிலகுமொருசழவியையுமெறிந்துநாத
னெண்ணரியகருணைநிழலெய்தினாரே. (௬௧)

[பத்தராய்ப்பணிவார்]

தொண்டரடித்தொழல்பூசைத்தொழின்மகிழ்ந்தலழகார்
துளங்கியவர்ச்சனைபுரிதனெருகுநியமங்கள்
கொண்டபணிதிருவடிக்கேகொடுத்தலீசன்
குணமருவமருங்கதையைக்குலவிக்கேட்டு
மண்டிவிழிதுளும்பன்மயிர்சிலும்பவுள்ளன்
மருவுகருப்பணிகாட்டிவருபவாங்கி
யுண்டிகொளாதொழிதலெனவிவைவேயொட்டு
முடையாரவர்பத்தரெனவுணாத்துளாரே. (௬௨)

[பரமனையேபாடுவார்.]

அருந்தமிழால்வடகலையாலருளாலொன்று
    லறிவுநெறிமருவுமருங்கவிகள்யாவுந்
திருந்தியவானவர்பணியமன்றுளாடுந்
    தேவர்பிரான்கழலிணையேசாரவோதி
விருந்திடுநாவுடையயுமேவினோர்தா
    மேலாமென்றெனமகிழ்ந்துவிழிநீர்சோரப்
பரிந்தருளாற்பரமனையேபாடவல்ல
    பான்மையாரொருமையாளும்பண்மையாரே. (௬௩)

[சித்தத்தைச்சிவன்பாலேவைத்தார்.]

பாரணவும்புலனைந்தக்கரணமொன்றும்
    படராமேநடுநாடியயிலுநாதங்
காரணபங்கயன்முதலாமைவர்வாழ்வுங்
    கழியுநெறிகழிடவுங்கருதிமேலைப்
பூரணமெய்ப்பரஞ்சோதிப்பொலிவுசேர்நாக்கிப்
    புணர்ந்தணைந்தசிவானுபவபோகமேவுஞ்
சீரணவுமவரன்றேவெம்மையாளுஞ்
    சித்தத்தைச்சிவன்பாலேவைத்துளாரே (௬௪)

[திருவாரூர்ப்பிறந்தார்.]

பொங்கியமாதவமுடையார்வருணநான்கிற்
    பொருந்தியோர்களல்லாதபுகழினுள்ளார்
சங்கையிலாவருந்தவமுன்புரிந்தாரிங்குச்
    சார்விலாரிறைவனருள்சார்தலாலே
கங்கைவாழ்சடைமுடியானருளேநீங்காக்
    கணநாதரெனவாழுங்கருத்தர்கன்னிச்
செங்கணவரால்வளர்வாவிதிகழுமாரூர்ச்
    சிறந்துளாரெமையாளப்பிறந்துளாரே. (௬௫)

[முப்பொழுதுந்திருமேனிதீண்டுவார்.]

செப்பலருந்தவமுடையசெம்மையாளர்
    சிறுகாலைமலர்வாவிதிகழமூழ்கி
யொப்பிறிருநீறணிந்துநியதியாற்றி
    யோவாமையைந்தெழுத்துமுணர்ந்துமேன்மை
தப்பில்சிவாகமவிதியாலின்பாலன்பாந்
    தன்மையானன்மையாந்தகையாரொன்று
முப்பொழுதுந்திருமேனிதீண்டவல்ல
    முறைமையார்பிறவிதெறுந்திறமையாரே (௬௬)

[முழுநீறுபூசியமுநிவர்]

கற்பம்அனுகற்பமுபகற்பமென்றிக்
கடனணைந்ததிருநீறுங்கைநற்கணீறும்
பொற்புடையவராஞ்சானங்கியாறு
பொல்லாதபூமியெதிர்புணைதலாகா
வற்புதமாத்திரிபுண்டமதியின்பாதி
யகிலாங்கநத்தியமிருமஞ்ஞகார்வட்ட
முற்பொலியவுடலணியுமுறையாரன்றே
முழுநீறுபூசவல்லமுநிவர்தாமே. (௬எ)

[அப்பாலுமடிச்சார்ந்தார்]

தாராருமூவேந்தர்பயிலுந்தொல்லைத்
தமிழ்நாட்டப்புறத்திறைவன்சரணஞ்சார்ந்த
சீராருந்தொண்டர்களுமண்டரோத்துந்
திருத்தொண்டத்தொகையருளாற்செப்புங்காலத்
தேராருந்தொடையினுறுதிப்பாலப்பா
லெந்தைபிரானடியடைந்தவியல்பினோரு
மாராதகாதலுடையவர்களன்றே
வப்பாலுமடிச்சார்ந்தவடியார்தாமே. (௬அ)

[பூசல் நாயனார்]

பொருவருந்தண்டைநாட்டுநின்றவூர்வாழ்
பூசுரர்கோப் பூசலார் புந்தியாலே
யிருநிதியந்தேடியாலயமுமாக்கி
யெழுந்தருளப்பண்ணுவதாவென்னுங்காலை
பரனதனைக் காடவர்கோற்கருளமன்ன
னந்நகரமணைந்தவ்வாறறிந்துதாழ
விரவுமதக்கோயிலுறவிருத்தியங்கண்
வேண்டிவகொண்டிறைஞ்சியருண்மேவினாரே. (௬௯)

[மங்கையர்க்கரசியார்]

மங்கையர்க்குத்தனியரசிவளவர்குலக்கொழுந்து
மன்னவர்சூழ்தென்னவர்க்குமாதேவியார்மண்
சங்கைகெடவமண்சமயஞ்சாடவல்ல
சைவசிகாமணிஞானத்தமிழிற்கோத்த
பொங்குதிருவருளுடையபோதவல்லி
பொருவிலெனடுமாறனார்புயமேல்வாழுஞ்
செங்கலசமுலையாடனருளாலின்பஞ்
சேர்ந்தவளைப்புகழ்ந்தடியேன்வாழ்ந்தவாறே. (எ0)

[நேசநாயனார்]
சாலியர்கோக்காம்பீலித்தலைவர்மேன்மை
தாவாதபுகழ்நேசர்தஞ்சொலென்றுங்
கோலியவைந்தெழுத்தோதிச்சிந்தையுன்னிக்
கொண்டபொருளன்பர்கொளக்கொடுத்துவாழ்வார்
சீலமிகுந்திருத்தொண்டர்க்குடையுங்கீளுந்
திருந்தியவெண்கோவணமுஞ்சேரவீந்து
பாலனையவொளிநீற்றான்பாதமேத்திப்
பரலோகமுழுதாண்டபான்மையாரே. (எக)

[கோச்செங்கட்சோழநாயனார்]
வெண்ணாவலிறைக்கொளிநூற்பந்தர்செய்த
வியன்சிலம்பியதுவழித்தவெள்ளானைக்கை
புண்ணாடிக்கடித்தவுடலொழியச்சோழ
னுயர்குலத்துச்சுபதேவன்கமலத்தோங்கும்
பெண்ணாகியவள்வயிற்றில்வைகிச்செங்கட்
பெருமானாய்த்தென்னவராய்ப்பெருங்கோவில்பலவுங்
கண்ணார்வித்துயர்தில்லைமறையவர்க்குமுறையுள்
கநகமயமாக்கியருள்கைக்கொண்டாரே. (எஉ)

[திருநீலகண்டயாழ்ப்பாணநாயனார்]
பிறங்கெருக்கத்தம்புலியூர்வாழும்பேரியாழ்
பேணுதிருநீலகண்டப்பெரும்பாணனார்சீர்
நிறந்தருசெம்பொற்பலகையாலவாயி
னிமலன்பாற்பெற்றாரூர்நேர்ந்துசிவன்வாயி
திறந்தருளும்வடதிசையேசேர்ந்துபோற்றித்
திருஞானசம்பந்தர்திருத்தாள்வாழ்த்தி
யறந்திகழுந்திருப்பதிகம்யாழிலேற்றி
யாசிறுப்பெருமணஞ்சேர்ந்தருள்பெற்றாரே. (எஙு)

[சடையநாயனார்]
சங்கையிலாவரன்மறையோர்நாவலூர்வாழ்
தவரதிபர்தம்பிரான்றோழராய
வெங்கள்பிரான்றவநெறிக்கோரிலக்குவாய்த்த
விசைஞானியார்தயரொண்ணார்சிங்க

மங்கையர்கடொழும்பரவைமணவாளநம்பி
வந்துதிக்கமாதவங்கள்வருந்திச்செய்தார்
வெங்கணராவிளக்குமிளம்பிறைசேர்சென்னி
விடையிறைராருள்சேர்ந்தசடையனுரே. (எச)

[இசைஞாநியார்.]

நாவற்றிருப்பதிக்கோர்செல்வச்சைவ
நாயகமாஞ்சடையனார்நயந்தவின்பப்
பூவைக்குலம்மடந்தைபொற்பார்கொம்பு
புதியதிருநீறணிந்துபோற்றிசெய்தே
யாவிற்றிகழுந்தலைவன்வலியவாண்ட
வாரூரரவதரிக்கவருந்தவங்கள்புரிந்தார்
யாவர்க்குமெட்டாதவிசைந்தவின்ப
விசைஞாநியெனஞாநமெளிதாமன்றே. (எரு)

முற்றிற்று.

---

அத்தரடியவர்கூட்டத்தில்லைவாழு
மந்தணர்பொய்யடிமையிலாப்புலவராகில்
பத்தர்முதலெழுவரோடொன்பதின்மரோடொன்
பதின்மர்தனிப்பேரொண்ணென்பதின்மராய
வித்தொகையிற்றொண்டர்சீருரைத்தார்வைத்த
விரண்டாயிரத்திருநூற்றைம்பத்துமூன்று
முத்தமநல்விருத்தத்திற்பயனுஞ்செய்யு
ளுலகெழுபத்தைந்தென நின்றுரைக்குமன்றே.

செல்வமிகுதிருத்தொண்டத்தொகையிலுள்ளார்
சிறந்ததனிப்பெயராகவறுபதின்மேன்மூவர்
மல்லன்மிகுகூட்டப்பேரருள்சேர்ந்தார்கண்
மாதவத்தோர்மும்மூன்றுவகைபெற்றார்க
ளில்லறத்துந்துறவறத்துமிருந்துவாழ்ந்தே
யியல்பாகச் சிவபதநான் கிசைந்தார்தம்மை
யல்லலறுத்தென்னையாண்டசைவசிகாமணியா
ரருட்புலியூருமாபதியாரருள்செய்தா. கா.

---





சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.



திருத்தொண்டர்

# திருநாமக்கோவை.

மெய்யன்பர்நாமமெல்லாம்வெவ்வேறுபோற்றிடவைங்
கையன்றிருவடியேகாப்பு.

தில்லைவாழந்தணர்கள்சீர்நீலகண்டனு
ரில்லையளித்தவியற்பகையார் தொல்லை
யிளையான்குடிமாறர் மெய்ப்பொருளாரொன்று
மிளையாவிறன்மிண்டரின்ப மளவுமமர்
நீதிநெறிபத்தர்நீண்டபுகழேனாதி
நாதர்திருக்கண்ணப்பர்நற்கலயர் மேதகுசீர்
மானக்கஞ்சாறரரிவாட்டாயரானாயர்
ஞானத்திருமூர்த்திநாயனார் மேன்மை
முருகர்பசுபதியார்முன்னாளைப்போவார்
துரிசிறிநக்குறிப்புத்தொண்டர் மருவுமறைத்
தண்டீசர்வாகீசர்தக்ககுலச்சிறையார்
கொண்டமிழலைக்குறும்பனார் தொண்டுசெய்
நீள்காரைக்காலம்மையப்பூதிநீலநக்கர்
மூனாநமிநந்திமுத்தமிழை யானாந்
திருஞானசம்பந்தர்செய்யகலிக்காம
ரருண்மூலர்தண்டியடிகள் வருமூர்க்கர்
சோமாசிமாறனார்சாக்கியனார்சூழாக்கூர்
நாமார்சிறப்புலியார்நற்செருண்டி னேமச்
சிறுத்தொண்டர்சேரமான்செய்யகணநாதர்

விறற்களந்தைக்கூற்றுவனார்விஞ்சைத் திறத்துமிகும்
பொய்யடிமையில்லாப்புலவர்புகழ்ச்சோழர்
மொய்கொணரசிங்கமுனையரைய னாயரதி
பத்தர்கலிக்கம்பர்கலியர்பகர்சத்தி
கைத்தபுலன் ஐயடிகள்காடவர்கோன் மெய்த்தகணம்
புல்லனார்காரிநெடுமாறர்புகழ்வாயிலார்
நல்லமுனையடுவார்நாயனார் மல்குகழற்
சிங்கரிடங்கழியார்தஞ்சைச்செருத்துணையார்
கொங்கார்புகழ்த்துணையார்கோட்புலியா ரங்கணர்க்கு
பத்தராய்த்தாழ்வார்பரமனையேபாடுவார் [ப்
சித்தத்தைச்சிவன்பாலேசேர்த்துள்ளார் நித்தமு
முத்திநெறிகாட்டுமுதல்வர்முழுதுணர்ந்தோர்
பித்தனுறைபாரூர்ப்பிறந்தார்க ளத்தனையே
முப்பொழுதுந்தீண்டுவார்முழுநீறுபூசுவா
ரப்பாலுமீசனடிச்சார்ந்தார் மெய்ப்பூசல்
மானியார்நேசனார்வாழ்செங்கட்சோழனார்
பான்மையார்நீலகண்டப்பாணனார் மேன்மைச்
சடையரிசைஞானியிவர்தம்மையெல்லாஞ்சேர்த்துத்
தொடையாகப்பாடியவன்றொண்ட ரடியிணைகள்
சிந்தனைசெய்திந்தத்திருநாமக்கோவைதனை
மந்திரமாக்கொண்டுமயிர்சிலிர்த்து நைந்துருகி
மெய்யன்பாலென்றும்விளம்பப்பெறுவார்கள்
கைதவமும்புல்லறிவுங்கற்பனையு மையலுந்தீர்ந்
தத்துவிதாநந்தவகண்டபரிபூரணத்தி
னித்தியமாவாழ்வார்நிசம். *

முற்றிற்று.









சிவமயம்

திருச்சிற்றம்பலம்.



| மாதம். | நட்சத்திரம். |
| --- | --- |
|  |  |
| மேடம், தகர், மை — சித்திரை | மூன்னாள் - அச்சுவினி |
| இடபம், காளை, விடை, சே — வைகாசி | ஆரல், அங்கி - கார்த்திகை |
| கடகம், குளிர் — ஆடி | பார் - - உரோகணி |
| கோளரி, சிங்கம் — ஆவணி | மான்றலை - மிருகசீரிடம் |
| கன்னி - புரட்டாசி | அரவு - - ஆயிலியம் |
| துலாம் - ஐப்பசி | விளக்கு - சோதி |
| தேள் - கார்த்திகை | இந்திரனாள் - கேட்டை |
| வில், தனு — மார்கழி | குன்று - - சதயம் |
| மகரம் - தை | |
| மீன் - பங்குனி | |





உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அறுபத்துமூன்றுநாயன்மார்

## திருநக்ஷத்திரம்.



காப்பு.

நேரிசைவெண்பா.

ஒன்றகலவெட்டெட்டாமோதுமடியாரன்பாற்
றன்றமதிநாளினிதுசொல்லவே - வென்றிதரும்
பொன்னிதிவிநாயகனார் பூமுடிமேலாடுதிருச்
சன்னிதிவிநாயகனார்தாள்.

நிலமண்டில - ஆசிரியப்பா.

தில்லைவாழந்தணர்திருவருளாலவர்
மல்குசீர்ப்பதத்தைமகிழ்வொடுவணங்கிக்
கடிதிருநீலகண்டர்தைவிசாகம்
வடிவியற்பகையார்மார்கழியுத்திரம்
வருமிளையான்குடிமாறராவணிமகங்
கருதுமெய்ப்பொருளார்கார்த்திகையுத்திரம்
விறன்மிண்டகண்டர்மேடமாதிரைநா
ளமர்நீதியானிப்பூரம்
மாணெறிபத்தர்மாசியிலத்தந்
காணுமேனாதியார்கன்னியுத்திராட
மலர்கண்ணப்பர்மகரமான்றலையிற்
குலவுகுங்கிலியர் கோளரிமூலந்
தருமானக்கஞ்சாறர்விற்சுவாதி
யரிவாட்டாயர்தையாதிரைநாளி
லானாயர்கார்த்திகையத்தநாளிற்
கானமூர்த்தியார்கடகத்தாரன்
முருகரிடபமூலமதனி
லுருத்திரபசுபதியுயர்கன்னிமுன்னாள்
பொருந்திருநாளைப்போவார்கன்னியிற்பார்
திருக்குறிப்படியார்சித்திரைச்சுவாதி
தண்டீசராமவர்தையுத்திரத்திற்

றுண்டமிழப்பர்தகரிற்சதயங்
குலச்சிறைநாயனார்கோளரியனுட
மலகில்குறும்பராடியிற்சித்திரை
யருள்காரைக்காலம்மைமீன்விளக்கா
மருகிலப்பூதிதையதிற்சதயத்திற்
கமைநீலநக்கர்காளைமூலத்தி
னமிநந்தியடிகளுள்விடைப்பூச
ஞானசம்பந்தர்நாள்விடைமூல
மாணகலிக்காமரானிரேவதியி
லருட்டிருமூலரைப்பசிமுன்னாள்
வருதண்டியடிகள்வளர்மீன்சதயஞ்
சேமமாமூர்க்கர்தேண்மதிமூலஞ்
சோமாசிமாறர்தொழுவிடையரவிற்
சாக்கியநாயனார்தனுப்பூராடந்
தேக்கியசிறப்புலிதேட்பூராடஞ்
சேர்சிறுத்தொண்டர்சித்திரைப்பரணி
சேரமான்கடகஞ்சேர்ந்தசோதியினிற்
கணநாதர்மீனங்கலந்தவாதிரையிற்
குணமாங்கூற்றுவர்குளிர்மதியாதிரை
பொய்யடிமையில்லாப்புலவர்தாள்போற்றி
மெய்ப்புகழ்ச்சோழர்மிளிர்குளிரார
னரசிங்கமுனையார்நற்கன்னிசதயந்
திரவதிபத்தர்சிங்கவாயிலியங்
கலிக்கம்பர்மகரக்கடைநாளதனிற்
கலியராடியினிற்கலந்தவிந்திரனு
டேயசிற்சத்தியார்துலாப்பூசத்தி
லையர்காடவர்கோனைப்பசிமூலங்
கணம்புல்லநாயனார்கார்த்திகையங்கி
கணஞ்சேர்காரியார்கடம்பூராடந்
தூய்நெடுமாறர்துலாமதிப்பரணியில்
வாயிலார்நாயனார்மார்கழியிரேவதி
வெம்முனையடுவார்மீனப்பூசஞ்
செம்மையாநங்கழற்சிங்கர்சேப்பரணி

மருவிடங்கழியார்மதி துலாவாரல்
செருத்துணைநாயனார்சிங்கப்பூசஞ்
சேட்புகழ்த்துணையார்சிங்கவாயிலியங்
கோட்புலிநாயனார்குளிர்மதிகேட்டை
பத்தராய்த்தாழ்வார்பரமனைப்பாடுவார்
சித்தத்தைச்சிவன்பாலேசேர்த்துளா
ரப்புறுசெய்த்திருவாரூர்ப்பிறந்தார்
முப்பொழுதுந்திருமேனிதீண்டுவார்
முப்புவிதொழுமுழுநீறுபூசுவா
ரப்பாலுமடிச்சார்ந்தாரைவணங்கிப்
பூசலாரைப்பசிபுகுமனுடத்தின்
மாசிலாமாணியார்மைம்மதியுரோகணி
மிகுசிவநேசர்மீனரோகணியிற்
பெருகுபுகழ்ச்செங்கட்சோழர்குடக்குன்
றநீலகண்டயாழ்ப்பாணர்சேமூலஞ்
சடையனார்மார்கழிசார்ந்தவாதிரையி
லிசைஞானிமேடத்திசைந்தசித்திரையில்
வசையிலாவிம்மதிமருவுமிந்நாளிற்
பரகதியடைந்தபத்தரைப்பாடிக்
கருதுவன்றொண்டர்கடகச்சுவாதி
குருபூசைநாளிற்குறைவிலாதிவர்க்கு
வருபூசைதந்தோர்மாதிலத்தோங்கித்
தவப்பயனெய்திச்சதுர்மறைக்கிரியிற்
சிவகதியடைதறிண்ணமுண்மையதே.

முற்றிற்று.



சித்திரைச்சதயமப்பர்சிறந்தவைகாசிமூல
மத்தரைப்பணிசம்பந்தராணிமாமகத்திலந்த
முத்தமிழ்வாதவூரர்மூதியநல்லாடிதன்னிற்
சுத்தமாஞ்சோதிநாளிற்சுந்தரர்கயிலைசேர்ந்தார்





உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருப்பதிக்கோவை.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கோயிறிருவேட்களநெல்வாயில்கழிப்பாலை
 குலவுபெருமணமயேந்திரப்பள்ளிமுல்லை
வாயில்கலிக்காமூர்சாய்க்காடுதிருப்பல்ல
 வனீச்சரம்வெண்காடுவளர்திருக்காட்டுப்பள்ளி
தாயிலான்குருகாவூர்காழிகோலக்கா
 தருக்கிளர்புள்ளிருக்கும்வேளூர்கண்ணார்கோயின்
ஞாயிலியற்கடைமுடியேநின்றியூர்புன்கூர்
 நாடியநீடூரன்னியூர்வேள்விக்குடியே. (௧)

கருதெதிர்கொள்பாடிமணஞ்சேரிதிருக்கொறுக்கை
 கருப்பறியலூர்கஞியேகாட்டுகுரக்குக்கா
மருவும்வாழ்கொளிபுத்தூர்மண்ணிபடிக்கரையே
 வளருமோமாம்புலியூர்கானாட்டுமுள்ளூர்
திருநாரையூர்கடம்பூர்பந்தணநல்லூர்பொன்
 திகழ்கஞ்சனூர்கோடிகாமங்கலக்குடியே
திருப்பனந்தாளாப்பாடிசேய்ஞலூர்திருந்து
 தேவன்குடிதிருவியலூர்திருக்கொட்டையூரே. (௨)

இன்னம்பர்திருப்புறம்பயம்விசயமங்கை
 யியல்வைகாவூர்நல்வடகுரங்காடுதுறையே
பின்னமறுபழனமையாறுநெய்த்தானம்
 பெரும்புலியூர்மழபாடிதிருப்பழுவூர்கானூ
ரன்னவன்பிலாலந்துறைமாந்துறைபாற்றுறையே
 யானைக்காபைஞ்ஞீலி பாச்சிலாச்சிராம
மன்னுமீங்கோய் மலையினொ டறுபான்மூன்றே
 வடகரையிற்பதிதென்பால் வாட்போக்கியாமே (௩)

---

* புள்ளிருக்கும்வேளூர்-என்பது - வைத்தீச்சுவரன்கோவில். வாட்போக்கி- என்பது - ரத்தினகிரி.

கடம்பந்துறைதிருப்பராய்த்துறைகற்குடி மூக்கீச்சரங்
 கருதுதிருச்சிராப்பள்ளி திருவெறும்பியூரே
நெடுங்களமேலைக்காட்டுப்பள்ளியாலம்பொழிலசீர்
 நிகழ்திருப்பூந்துருத்திகண்டியூர்சோற்றுத்துறைமா
லடிம்வேதிகுடிதென்குடித்திட்டைபுள்ளமங்கை
 யணியார்சக்கரப்பள்ளியருங்கருகாவூரே
படர்பாலைத்துறைநல்லூர்திருவாவூரதனிற்
 பசுபதீச்சரஞ்சத்திமுற்றம்பட்டீச்சரமே. (ச)

ஆறைவடதளிதிருவலஞ்சுழியேகுடமூக்
 கதனிற்கீழ்க்கோட்டங்காரோணநாகேச்சரங்
கூறுமிடைமருதுகுரங்காடுதுறைநீலக்
 குடிவைகன்மாடக்கோயினல்லங்கோழம்பஞ்
சாறமராவடுதுறைதண்டுருத்திதிருவழுந்தூர்
 சகம்புகழ் மாயூரம்விளனகர்பறியலூரே
வீறுசெம்பொன்பள்ளிநனிபள்ளிவலம்புரமே
 வியன்றலைச்சங்காடாக்கூர்விளங்குகடவூரே. (ரு)

திருக்கடவூர்மயானமொடுதிருவேட்டக்குடியே
 தெளிச்சேரிதருமபுரநள்ளாறுகோட்டா
றுணைக்குமம்பர்ப்பெருந்திருக்கோயின்மாகாள
 முயர்மீயச்சூரிளங்கோயிற்றிலதைப்பதிபூ
மருக்கமழ்பாம்புரநற்சிறுகுடிவீழிமிழலை
 வன்னியூர்கருவிலிமன்பேணுபெருந்துறையன்
கருத்துடைக்குநறையூர்ச்சித்தீச்சரத்தொடரிசொற்
 கரைப்புத்தூர்சிவபுரமுங்கலையநல்லூர்காணே. (சா

கருக்குடிவாஞ்சியந்திருநன்னிலத்துப்பெருங்கோயில்
 கவின்கொண்டீச்சரம்பனையூர்விற்குடிதென்புகலூ
ரிருக்கும்வர்த்தமானேச்சரமிராமனதீச்சரமே
 யியல்பயற்றூர்செங்காட்டங்குடிமருகலிருளே
முருக்குதிருச்சாத்தமங்கைநாகைக்காரோண
 மூன்றிருச்சிக்கற்றிருக்கீழ்வேளூர்தேவூரே
யரிக்கரியான்பள்ளியின்முக்கூடதிருவாரூ
 ரரனெறிமூலட்டானம் பரவையுண்மண்டளியே. (எ)

---

* மூக்கீச்சரம்-என்பது-உறையூர். குடமூக்கு-என்பது-கும்ப கோணம்.

மேலாருக்விளமர்கரவீரம்பெருவேளூர்
    மிளிர்தலையாலங்காடுகுடவாயில்சேறை
நீடூர்மேபாணங்கடுவாய்க்கரைப்புத்தூர்
    நவிலுமிருப்பூளைதிருவரதைப்பெரும்பாழி
மாலூரமலிவணல்லூர்பருதிநியமம்
    வாழ்வெண்ணிபூவணூர்பாதாளேச்சரநீர்ச்
சேலூருந்திருக்களர்சிற்றேமமுசாத்தானந்
    திருவிடும்பாவனத்தோடுசேர்ந்தகடிக்குளமே. (அ)

தண்டலைநீணெறிகோட்டூர்வெண்டுறையோடமிகே
    தருகொள்ளம்பூதூர்பேரெயில்கொள்ளிக்காடு
கண்டருதெங்கூர்நெல்விக்காநாட்டியத்தான்குடியே
    காறையில்கன்றாப்பூர்வலிவலங்கச்சினத்தோ
டண்டர்பிரான்கோளிலிதென் திருவாய்மூர்மறைக்கா
    டகத்தியான்பள்ளிகோடிக்குழகருந்தென்கரையி
லெண்டருநூற்றிருபத்தேழிப்பாலீழத்தி
    லிசைகோணமாமலைகேதீச்சரமென்றிரண்டே. (கூ)

ஆலவாயாப்பனூர்பரங்குன்றேடகத்தோ
    டருங்கொடுங்குன்றந்திருப்புத்தூர்புனவாயிலிரா
டேனுமிராமேச்சரமாடானைகானப்பே
    ரெழிற்றிருப்பூவணஞ்சுழியலின்புறுகுற்றாலம்
பாலலோசனன்றிருநெல்வேலியொடுபாண்டி
    பதினான்குமலைநாட்டிலஞ்சைக்களமொன்றே
சீலமிகுமவிநாசிதிருமுருகன்பூண்டி
    திருநணாகொடிமாடச்செங்குன்றூர்தானே. (ய)

வெஞ்சமாக்கூடல்கொடுமுடிகருவூர்கொங்கின்
    மேவுமேழரத்துறைவண்டுேங்காணமாட
மெஞ்சலில்கூடலையார்றூரொருக்கத்தம்புலியூ
    ரிணையகலுந்திணைநகர்சோபுரமதிகைபுகழே
விஞ்சுதிருநாவலூர்முதுகுன்றந்திருநெல்
    வெண்ணெய்திருக்கோவலூரறையணிநல்லூரோ
மஞ்சுதிகழிடையாறுவெண்ணெய்நல்லூர்துறையூர்
    வடுகூர்வீட்டேயருளுந்திருமாணிகுழியே. (யக)

* மறைக்காடு-என்பது-வேதாரணியம். கானப்பேர்-என்பது காளையார்கோவில். கொடிமாடச் செங்குன்றூர் - என்பது- திருச்செங்கோடு. முதுகுன்றம்- என்பது- விருத்தாசலம்.

நண்ணார்தண்டலைப்பாதிரிப்புலியூர்முண்டீச்
சரம்புறவார்பனங்காட்டூர்திருவாமாத்தூரே
யெண்ணாரண்ணாமலையுநடுநாட்டிலிருபத்
திரண்டாகுமிப்பாலேகம்பமேற்றளிவிண்
கண்ணோங்குமதிலோணகாந்தன்றளியனேக
தங்காவதங்கச்சிநெறிக்காரைக்காடே
யுண்ணாடுகுரங்கணின்முட்டந் திருமாகறலோத்
தூர்வன்பார்த்தான்பனங்காட்டூர்வல்லமாற்பேறே, (௧௨)

ஊறலிலம்பையங்கோட்டூர்விற்கோலமாலங்கா
டுபர்பாசூர்வெண்பாக்கங்கள்ளில்காளத்தி
மாறிருவொற்றியூர்வலிதாயம்பாலி
வடமுல்லைவாயில்வேற்காடுதிருமயிலை
யீறிருவான்மியூர்கச்சூராலக்கோயி
லிடைச்சுரங்கழுக்குன்றமச்சிறுபாக்கம்மே
மாறிருவக்கரையேயரசிலிதொல்லிரும்பை
மாகாளந்தொண்டைநன்னாட்டெண்ணின்முப்பாணிரண்டே()

கோகரணந்துளுவதேயத்திலொன்றேயிப்பாற்
குலவுபருப்பதநீலப்பருப்பதமம்பிகைதன்
பாகருறையனேகதங்காவதந்திருக்கேதாரம்
பகர்நொடித்தான்மலைவடக்கிற்பதியைந்தேயிவற்றோ
டாகவிருநூற்றெழுபானுன்கென்பர்மூவ
ரருட்பதிகமிருக்குமூரதிகமாம்வைப்பு
தாகமுடனினைப்போர்க்குந்துதிப்போர்க்கும்வினைகள்
சாராவாம்பிறப்பகலுஞ்சத்தியமுத்தியுமே. (௧௪)

---

* ஊறல்-என்பது-தக்கோலம். விற்கோலம்-என்பது-கூவம். வலிதாயம் என்பது-பாடி. நொடித்தானமலை-என்பது-கயிலை.

முற்றிற்று.









சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருப்பதிகக்கோவை.



ஒன்றுதியோரெழுபத்தொன் றீருய்மூவர்தமிழ் நின்று
சென்றார்சிவதலங்கள்செப்புதற்கு
கடக்குஞ்சரமுகனேர்காய்விழியானீன்ற
கடக்குஞ்சரமுகனேகாப்பு.

பண்ணுசிவதலமொருநூற்றைம்பதிற்றுமூன்று
பதிகமொன்றுநாற்பத்தொன்பதுபதிகமிரண்டா
முன்னுமிருபதிற்றெட்டுநகர்பதிகமூன்று
மொருபதினோர்தலம்பதிகமொருநான்கென்றுணர்க
மன்னுமிருநான்குதலமோரைந்தேபதிக
மற்றுமைந்துதலங்களுக்குவருபதிகமாறும்
பின்னுமைந்துவளநகர்க்குப்பெறும்பதிகமேழாம்
பேசுமொருநான்குதலம்பெறும்பதிகமெட்டே. (௧)

பரவுமொருநான்குதலம்பதினொன்றும்பதிகம்
பன்னுமிருதலம்பதிகம்பன்னிரண்டாப்பகரு
முரைசெயிருதலம்பதிகம்பதினெட்டாமிப்பா
லொருமூன்றுதலங்களுக்கிங்குறுபதிகமுரைக்கி
னிரவிவருமறுநான்குமுப்பதிற்றுநான்கு
நீடெழுபத்தொன்றுமெனநிரனிரையாமாகக்
கருதுசிவதலமிருநூற்றெழுபதிற்றுநான்கு
கடைகாப்போரெழுநூற்றுநாற்பதிற்றொன்பானே. (௨)

திருப்பழுவூர்சேய்ஞலூர்திருமுல்லைவாச
றிருவைகாகொடிமாடச்செங்குன்றூர்வியலூர்
கருக்குடிதெங்கூர்பனந்தாள்கலிக்காமூர்தலைச்சங்
காடுமயேந்திரப்பள்ளிகச்சினங்கன்றாப்பூர்
குரக்குக்காபெரும்புலியூர்திருக்காட்டுப்பள்ளி
† குடந்தைக்கீழ்க்கோட்டமொடுகுடந்தைக்காரோண

† குடந்தை-என்பது-கும்பகோணம்.

மெருக்கத்தம்புலியூர்வெண்டுறைகண்ணார்கோயி
    லிலம்பையங்கோட்டூர்சிக்கலிராமனதீச்சரமே. (௯)

பள்ளியின்முக்கூடறிருவிரும்பூளையாலூர்ப்
    பசுபதீச்சரம்பாலைத்துறைபருதிநியமங்
கள்ளில்குரங்கணின்முட்டந்திருமுருகன்பூண்டி
    கஞ்சனூர்கச்சிநெறிக்காரைக்காடோத்தூர்
புள்ளமங்கைநாட்டியத்தான்குடிசலையநல்லூர்
    புக்கொளியூரவிநாசிபூவனூர்துறையூர்
கொள்ளிக்காடிடைச்சுரமச்சிறுபாக்கம்விளமர்
    கொட்டையூர்கொடுங்குன்றங்கூடலையாற்றூரே. (௰)

நெல்வேலிதிருவழுந்தூர்தருமபுரம்பயற்றூர்
    நெடுங்களம்வக்கரையிரும்பைமாகாளம்வடுகூர்
நெல்வெண்ணெய்வடகரைமாந்துறைதிருவிற்கோல
    நீடூர்சக்கரப்பள்ளியகத்தியான்பள்ளி
நெல்வாயில்பேணுபெருந்துறைநாலூர்மயான
    நெல்லிக்காவிற்குடிவீரட்டமதிமுற்றம்
வல்லமறையணிநல்லூர்தலையாலங்காடு
    வாட்போக்கிதிருநாவலூர்மயிலாப்பூரே. (௧௧)

திருவாரூர்ப்பரவையுண்மண்டளிசாத்தமங்கை
    சிற்றேமந்தெளிச்சேரிதிருவுசாத்தானங்
கரவீரந்திருவாலம்பொழில்வெண்ணெய்நல்லூர்
    கச்சியனேகதங்காவதங்கோடிக்குழக
ரரசிலிதென்குடித்திட்டைவடமுல்லைவாயி
    லம்பர்ப்பெருந்திருக்கோயில்வெண்பாக்கஞ்சுழியல்
பெருமணமிந்திரநீலப்பருப்பதம்வேற்காடு
    பேரெயில்பாற்றுறைமூக்கீச்சரமுண்டீச்சரமே. (௧௨)

பறியலூர்வீரட்டங்கானாட்டுமுள்ளூர்
    பாதாளேச்சரமெதிர்கொள்பாடிவலிதாயஞ்
சிறுகுடிகச்சூராலக்கோயில்கொள்ளம்பூதூர்
    திருப்புறவார்பனங்காட்டூர்வீணகர்தண்டலைநீ
ணெறியரசைப்பெரும்பாழியுறல்கருவூரா
    னிலையிடும்பாவனங்கழிவாய்க்கலாப்புத்தூர்கடம்பந்

துறைதிருவேடகந்திருவஞ்ஞைக்களமாடானை
சோபுரங்கற்குடிவடகுரங்காடுதுறையே. (எ)

திருமாணிக்குழிவேட்டக்குடிதிருவாப்பாடி
திருத்துதேவன்குடிமாகறல்சத்திமுற்றந்
திருவாப்பனூர்மீயச்சூரவ்வூர்தன்னிற்
திகழுந்திருவிளங்கோயில்வெஞ்சமாக்கூடல்
பெருநீலக்குடிமண்ணிபடிக்கரைநன்னிலத்துப்
பெருங்கோயிதிருநனுதிருப்பட்டீச்சரமே
திருவீங்கோய்மலைவன்பார்த்தான்பனங்காட்டூரா
திருப்புகலூர்வர்த்தமானேச்சரம்பாம்புரமே. (அ)

கடைமுடியேயோணகாந்தன்றளிகோட்டூர்வை
கன்மாடக்கோயிலிடையாறுபழையாறை
வடதளிநற்றினைநகரங் † கோணமாமலைசீர்
வன்னியூர்கருவிலியனேகதங்காவதநல்
விடமேவுகடிக்குளநற்றிருக்களரொன்றிவைகட்
திரும்பதிகமொவ்வொவான்றென்றிசைத்திடுகேவிப்பாற்
குடவாயில்புனவாயிறாங்கானைமாடங்
கோழம்பமவளிவணல்லூர்கோலக்காவே. (கூ)

குருகாவூர்திருவேள்விக்குடி விசயமங்கை
குற்றாலங்குடமூக்குகோட்டாறுபனையூர்
கருகாவூர்குரங்காடுதுறையோமாம்புலியூர்
கண்டியூர்வேதிகுடிகானூர்கோகரணந்
திருவாரூரரமனைபந்தணநல்லூர்நல்லந்
திருக்கண்டீச்சரந்தேவூர்திருச்சிராப்பள்ளி
பெருவேளூர்இஞ்ஞேரொறும்பியூர்கானப்
பேர்திருமங்கலக்குடியாக்கூர்கோவலூரே. (ய)

திருப்பரங்குன்றந்திருப்பாதிரிப்புலியூர்கொறுக்கை
திருப்புத்தூர்மணஞ்சேரிபாச்சிலாச்சிராமங்
கருப்பறியலூர்கேதீச்சரந்திருக்கேதாரங்
கச்சிமேற்றளிமேலைத்திருக்காட்டுப்பள்ளி
யருத்தியுறுபட்டினத்துப்பல்லவனீச்சரம்பே
ரன்பிலாலந்துறைபராய்த்துறைவேட்களமிங்
குரைத்தசிரன்னியூரிவ்விரண்டாம்பதிக
முள்ளசலங்கடவூர் மயானம்வாஞ்சியமே. (யக)

---

† கோணமாமலை-என்பது - திருக்கணமலையெனவழங்குகின்றது.

துருத்திதிருநனிபள்ளிதிருமருகறிருப்பூந்
துருத்திபுறம்பயங்கடவூர்புள்ளிருக்கும்வேளூ
ராத்துறைவாழ்கொளிபுத்தூர்வான்மியூர்பாசூ
ரம்பர்மாகாளமயிலாடுதுறைவாய்மூர்
திருக்கழுக்குன்றம்பாண்டிக் கொடுமுடிராமேச்சரஞ்
செங்காட்டங்குடிவெண்ணிதிருச்செம்பொன்பள்ளி
† பருப்பதம்புன்கூரரிசொற்கரைப்புத்தூர்சேறை
யைஞ்ஞீலிகற்குடிமாமலைபதிகமூன்றே. (௰௨)

வலம்புரமாலங்காடுசிவபுரங்காளத்தி
வலிவலஞ்சாய்க்காடுதிருக்கோடிகாநகரம்
நலந்திகழும்பூவணங்கோளிலிநின்றியூரு
நறையூர்ச்சித்தீச்சரமுநான்காகும்பதிகம்
வலஞ்சுழிநல்லூர்பழனமாமாத்தூரண்ணா
மலைகடம்பூரின்னம்பர்நாரையூரைந்தா
நிலந்திகழ்நாகேச்சரமாற்பேறுமழபாடி
நெய்த்தானம்வெண்காடு நீள்பதிகமாறே. (௰௩)

கயிலாயமானைக்காநள்ளாறுநாகைக்
காரோணந்திருச்சோற்றுத்துறையேழுபுகலூர்
வயலாருங்கழிப்பாலையொற்றியூர்திருவா
வடுதுறையெட்டாந்தில்லைமறைக்காடுமதுரா
யியலாருமுதுகுன்றம்பதினொன்றுகச்சி
யேகம்பமிடைமருதீராறையாறதிகை
யயலீரொன்பான்வீழி யாரூர்சீகாழி
யறுநான்குமுட்பாஞன்கெழுபத்தொன்றாமே. (௰௪)

---

† பருப்பதம்- என்பது- ஸ்ரீசைலம். இதுவே மல்லிகார்ச்சுனம். அரிசொல்- என்பது- ஒருநதி. விஷ்ணுசொல்லி வந்தகாரணத்தினால் அப்பெயர்பெற்றது. கும்பகோணப் புராணத்திற்காண்க.

திருப்பதிகக்கோவை

முற்றிற்று.





உ

சிவமயம்.

# திருச்சிற்றம்பலம்.



# நம்பியாண்டார் நம்பி

## கலித்துறைத்திருவந்தாதி



### அதிகவி.

பொன்னிவடகரைசேர்நாரையூரிற்புழைக்கைமுக
மன்னறுபத்துமூவர்பதிதேமரவுசெயல்
பன்னத்தொண்டத்தொகைவகைபல்குமந்தாதிதனைச்
சொன்னமறைக்குலநம்பிபொற்பாதத்துணை துணையே.

### தில்லைவாழந்தணர்.

செப்பத்தகுபுகழ்த்தில்லைப்பதியிற்செழுமறையோ
ரொப்பப்புவனங்கண்மூன்றினுமும்பரினாமொரித்த
அப்பர்க்கமுதத்திருநடர்க்கந்திப்பிறையணிந்த
துப்பர்க்குரிமைத்தொழில்புரிவோர்தமைச்சொல்லுதுமே. (க)

### திருநீலகண்டக்குயவநாயனார்.

சொல்லச்சிவன்றிருவாணைதன்றாமொழிதோணகையா
லொல்லைத்துறந்துருமூத்ததற்பின்னுமைகோனருளால்
வில்லைப்புரைநுதலாளொடிளமைபெற்றின்பமிக்கான்
றில்லைத்திருநீலகண்டக்குயவனுஞ்செய்தவனே. (உ)

### இயற்பகைநாயனார்.

செய்தவர்வேண்டியதியாதுங்கொடுப்பச்சிவன்றவனுக்
கைதவம்பேசிநின்காதலியைத்தருகென்றலுமே
மைதிகழ்கண்ணியையீந்தவன்வாய்ந்தபெரும்புகழ்வந்
தெய்தியகாவிரிப்பூம்பட்டினத்துளியற்பகையே. (௩)

### இளையான்குடிமாறநாயனார்.

இயலாவிடைச்சென்றமாதவர்க்கின்னமுதாவிதைத்த
வயலார்முளைவித்துவாரிமனையலக்கால்வறுத்துச்
செயலார்பயிர்விழுத்தீங்கறியாக்குமவன்செழுநீர்க்
கயலாரிளையான்குடியுடைமாறனெங்கற்பகமே. (௪)

### மெய்ப்பொருணாயனார்.

கற்றநன்மெய்த்தவன்போலொருபொய்த்தவன்காய்சினத்தாற்
செற்றவன்றன்னையவனைச்செறப்புகலுந்திருவாய்
மற்றவன்றத்தாநமரேயெனச்சொல்லிவானுலகம்
பெற்றவன்சேதியன்மெய்ப்பொருளாமென்றுபேசுவரே. (௫)

### விறன்மிண்டநாயனார்.

பேசும்பெருமையவ்வாரூரனையும்பிரானவனு
மீசன்றனையும்புறகுதட்டென்றவனீசனுக்கே
நேசனெனக்கும்பிரான்மனைக்கேபுகநீடுதென்றல்
வீசும்பொழிற்றிருச்செங்குன்றமேயவிறன்மிண்டனே. (௬)

### அமர்நீதிநாயனார்.

மிண்டும்பொழிற்பழையாறையமர்நீதிவெண்பொடியின்
முண்டந்தரித்தபிராற்குநல்லூரின்முன்கோவணநேர்
கொண்டிங்கருளென்றுதன்பெருஞ்செல்வமுந்தன்னையுந்தன்
றுண்டமதிநுதலாளையுமீந்ததொழிலினனே. (௭)

---

### சுந்தரமூர்த்திசுவாமிகள்துதி.

தொழுதும்வணங்கியுமாலயன்றேடருஞ்சோதிசென்றாங்
கெழுதுந்தமிழ்ப்பழவாவணங்காட்டியெனக்குன்குடி
முழுதுமடிமைவந்தாட்செயெனப்பெற்றவன்முரன்
றெழுகுமலரினற்றாரெம்பிரானம்பியாரூரனே. (௮)

---

### எறிபத்தநாயனார்.

ஊர்மதின்மூன்றட்டவுத்தமர்க்கென்றொருவர்தவத்தோன்
றார்மலர்கொய்ப்பவருபவன்றண்டின்மலர்பறித்த
* ஊர்மலைமேற்கொளும்பாகருடன்றுணியாக்குமவ
னேர்மலிமாமதில்சூழ்கருவூரிலெறிபத்தனே. (௯)

---

*ஊர்மலை-என்பது-யானை.

ஏனாதிநாதநாயனார்.

பத்தனையேனாதிநாதனைப்பார்நீ*டெயினிதன்னு
ளத்தனைத்தன்னொடுமார்மலைந்தானெற்றிநீறுகண்டு
கைத்தனிவாள்வீடொழிந்தவன்கண்டிடப்படநின்றருளு
தித்தனையீழக்குலதீபனென்பரிந்நீணிலத்தே. (௰)

* எயினி - என்பது - எயினனூர்.

கைத்தனிவாள்வீடொழிந்து - என்பது - தமது திருக்கரத்திலிருந்த ஒப்பற்ற வாளாயுதத்தை விட்டு விடாமல் சும்மா பிடித்துக் கொண்டிருந்து எனக்கொள்க. விடுதல் - வீடென விகாரமாயிற்று.

கண்ணப்பநாயனார்.

நிலத்திற்றிகழ்திருக்காளத்தியார்திரு*நெற்றியின்மே
னலத்திற்பொழிதருகண்ணிற்குருதிகண்டுண்ணடுங்கி
வலத்திற்கடுங்கணைபாற்றன்மலர்க்கண்ணிடந்தப்பினான்
குலத்திற்கிராதனங்கண்ணப்பனாமென்றுகூறுவமே (௰௧)

* நெற்றி - என்பதற்குத் - திருமுகமெனப் பொருள்கொள்க.

குங்கிலியக்கலயநாயனார்.

ஏய்ந்தகயிறுதன்கண்டத்திற்பூட்டியெழிற்பனந்தாட்
சாய்ந்த*சிவனிலைத்தானென்பர்காதலிதாலிகொடுத்
தாய்ந்தநற்குங்கிலியங்கொண்டனற்புகைகாலனைமுன்
காய்ந்தவர்க்கிட்டதென்கடவூரிற்கலயனையே. (௰௨)

* சிவனிலைத்தான் - என்பதற்குச் - சிவன் நேராக நிற்கச் செய்தானெனப் பொருள்கொள்க.

மானக்கஞ்சாறநாயனார்.

கலசமுலைக்கன்னிகாதற்புதல்விகமழ்குழலை
நலசெய்தவத்தவன்*பஞ்சவடிக்கிவைநல்கெனலும்
அலசுமெனக்கருதாதவள்கூந்தலரிந்தளித்தான்
மலைசெய்மதிற்கஞ்சைமானக்கஞ்சாறனெனும்வள்ளலே (௰௩)

---

*பஞ்சவடி - என்பது - மயிராற்பின்னப்பட்ட பூணூல்.

அரிவாட்டாயநாயனார்

வள்ளாற்பிராற்கமுதேந்திவருவோனுகலுமிங்கே
வெள்ளச்சடையாயமுதுசெய்யாவிடிலென்றலையைத்
தள்ளத்தகுமென்றுவாட்பூட்டியதடங்கையினன்கா
ணள்ளற்பழனக்கணமங்கலத்தரிவாட்டாயனே. (௰௪)

### ஆனாயநாயனார்.

தாயவன்யாவுக்குந்தாழ்சடைமேற்றனித்திங்கள்வைத்த
தூயவன்பாதந்தொடர்ந்துதொல்சீர்துளையாற்பரவும்
வேயவன்மேன்மழநாட்டுவிரிபுனன்மங்கலக்கோன்
ஆயவனானையெனென்னையுவந்தாண்டருளினனே. (௰௫)

### சுந்தரமூர்த்திசுவாமிகள் துதி.

அருட்டுறையத்தர்க்கடிமைப்பட்டேனினியல்லனென்னும்
பொருட்டுறையாவதென்னேயென்னவல்லவன்பூங்குவளை
யிருட்டுறைநீர்வயனாவற்பதிக்கும்பிரானடைந்தோர்
மருட்டுறைநீக்கிநல்வானின்வழிகாட்டிடவல்லவனே. (௰௬)

### மூர்த்திநாயனார்.

அவந்திரிகுண்டமணவதின்மாள்வனென்றன்*றாலவாய்ச்
சிவன்திருமேனிக்குச்செஞ்சந்தனமாச்செழுமுழங்கை
யுவந்தொளிர்பாறையிற்றேய்த்தலகாண்டவொண்மூர்த்திதன்னூர்
நிவந்தபொன்மாடமதுராபுரியென்னுநீள்பதியே (௰௭)

*ஆலவாய்-என்பது-மதுரையிலிருக்குஞ் சிவாலயத்தின்பெயர்.

### முருகநாயனார்.

பதிகந்திகழ்தருபஞ்சாக்கரம்பயினாவினன்சீர்
மதியஞ்சடையார்க்கலர்தொட்டணிபவன்யான்மகிழ்ந்து
*துதியுங்கழற்சண்பைநாதற்குத்தோழன்வன்றொண்டரம்பொன்
னதிகம்பெறும்புகலூர்முருகன்னெனுமந்தணனே (௰௮)

* துதிக்கும்-எனற்பாலது-சணருக்குச்சாரியையின்றிநின்றது.

### உருத்திரபசுபதிநாயனார்.

அந்தாழ்புனறன்னில்லும்பகனுநின்றாதரத்தா
லுந்தாதவன்பொடுருத்திரஞ்சொல்லிக்கருத்தமைந்த
வைந்தாருருத்திரபசுபதிதன்னற்பதிவயற்கே
நந்தார்திருத்தலையூரொன்றுரைப்பரிந்நானிலத்தே (௰௯)

### திருநாளைப்போவார்நாயனார்.

நாவார்புகழ்த்தில்லையம்பலத்தானருள்பெற்றுநாளைப்
போவானவனும்புறத்திருத்தொண்டன்றன்புன்புலைபோய்
மூவாயிரவர்கைகூப்பமுனியாயவன்பதிதான்
மாவார்பொழிறிகழாதனூரொல்பரிம்மண்டலத்தே (௨௰)

### திருக்குறிப்புத்தொண்டநாயனார்

மண்டும்புனற்சடையான்றமர்தூசெற்றிவாட்டும்வகை
விண்டின்மழைமுகில்வீடாதொழிபின்யான்வீவனென்று
மிண்டிப்படர்பாறைமுட்டுமெழிலார்திருக்குறிப்புத்
தொண்டன்குலங்கச்சியேகாலியர்தங்கடொல்குலமே (௨௧)

### தண்டீசநாயனார்.

குலமேறியசெய்ஞ்ஞலூரிற்குரிசில்குளாகடல்சூழ்
நலமேறியவிறற்றண்டிகண்டூர்தந்தைதாளிரண்டும்
வலமேறியமழுவாலெறிந்தீசன்மணிமுடிமே
லலமேறியபால்சொரிந்தலர்சூட்டியநன்னிதியே. (௨௨)

---

### சுந்தரமூர்த்திசுவாமிகள்துதி.

நிதியார்துருத்திதென்வேள்விக்குடியாய்நினைமறந்த
மதியேற்கறிகுறிவைத்துப்புகர்பின்னைமாற்றிடென்று
துதிபாவருள்சொன்னவாறறிவாரிடைப்பெற்றவன்கா
ணுதியார்புனல்வயனாவலர்கோனென்னுநற்றவனே. (௨௩)

---

### திருநாவுக்கரசுசுவாமிகள்.

நற்றவனல்லூர்ச்சிவன்றிருப்பாதந்தன்சென்னிவைக்கப்
பெற்றவன்மற்றிப்பிறப்பறவீரட்டர்பெய்கழற்று
றுற்றவனுற்றவிடமடையாரிடவொள்ளமுதாத்
துற்றவனாமூரினாவுக்கரசெனுந்தூமணியே. (௨௪)

மணிபணைமாமறைக்காட்டுமருந்தினைவண்மொழியாற்
றிணிபனநீள்கதவந்திறப்பித்தனதெண்கடலிற்
பிணியனவன்கன்மிதப்பித்தசைவப்பெருநெறிக்கே
யணியனநாவுக்கரையர்பிரான்றனருந்தமிழே. (௨௫)

### குலச்சிறைநாயனார்.

அருந்தமிழாகரன்வாதிலமணைக்கழுநுதிமே
லிருந்தமிழ்நாட்டிடையேற்றுவித்தோனெழிற்சங்கம்வைத்த
பெருந்தமிழ்மீனவன்றன்னதிகாரிபிரசமல்கு
குருந்தவிழ்சாரன்மணமேற்குடிமன்குலச்சிறையே. (௨௬)

மிழலைக்குறும்பநாயனார்.

இறைநன்புனற்றிருநாவலூராளிசெழுங்கயிலைக்
கிறைநன்கழனுளையெய்துமிவனருள்போற்றவின்றே
பிறைநன்முடியனடியடைவேனென்றுடல்பிரிந்தா
னறைநன்மலர்த்தார்மிழலைக்குறும்பனெனுநம்பியே. (௨௭)

காரைக்காலம்மையார்.

நம்பன்றிருமலைநான்மிதியேனென்றுதாளிரண்டு
மம்பர்மிசைத்தலையானடந்தேறவுமைநகலுஞ்
செம்பொன்னுருவனென்னம்மையெனப்பெற்றவள்செழுந்தேன்
கொம்பினுகுகாரைக்காலினின்மேயகுலதனமே. (௨௮)

அப்பூதியடிகணாயனார்.

தனமாவதுதிருநாவுக்கரசின்சரணமென்னு
மனமார்புனற்பந்தர்வாழ்த்திவைத்தாங்கவன்வண்டமிழ்க்கே
யினமாத்தனதுபெயரிடப்பெற்றவனெங்கள்பிரா
னனமார்வயற்றிங்களூரினில்வேதியனப்பூதியே. (௨௯)

தனதுபெயரிடப்பெற்றவனென்றது- யாதெனில்
அப்பூதிகுஞ்சிப்பூவாய்நின்ற- என்னும்- தேவாரமெனக்கொள்க.

திருநீலநக்கநாயனார்.

பூதிப்புயத்தர்புயத்திற்சிலந்திபுகலுமஞ்சி
யூதித்துமிந்தமனைவியைநீப்பவுப்பாலவெல்லாம்
பேதித்தெழுந்தனகாணென்றுபின்ஞகன்காட்டுமவ
னீதித்திகழ்சாத்தநீலநக்கனெனும்வேதியனே. (௩௰)

நமிநந்தியடிகணாயனார்,

வேதமறிக்கரத்தாரூரற்குவிளக்குநெய்யைத்
தீதுசெறியமண்கையரட்டாவிடத்தெண்புனலா
லேதமுறுகவருகவொன்றன்றுவிளக்கெரித்தா
ரூதனெழிலேமப்பேறூரதிபனமிநந்தியே. (௩௧)

சுந்தரமூர்த்திசுவாமிகள்துதி.

நந்திக்குநம்பெருமாற்குநல்லாரூரினுபகற்குப்
பந்திப்பரியனசெந்தமிழ்பாடப்படர்புனலிற்
சிந்திப்பரியனசேவடிபெற்றவன்சேவடியே
வந்திப்பவன்பெயர்வன்றொண்டனென்பரிவ்வையகத்தே. (௩௨)



## திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள்.

வையமகிழயாம்வாழவமணர்வலிதொலைய
வையன்பிரமபுரத்தரற்கம்மென்குதலைச்செவ்வாய்
பையமிழற்றும்பருவத்துப்பாடப்பருப்பதத்தின்
றையலருள்பெற்றனனென்பர்ஞானசம்பந்தனையே. (௬௩)

பந்தார்விரலியர்வேள்செங்கட்சோழன்முருகனல்ல
சந்தாரகலத்துநீலநக்கன்பெயர்தான்மொழிந்து
கொந்தார்சடையர்பதிகத்திலிட்டடியேன்கொடுத்த
வந்தாதிகொண்டபிரானருட்காழியர்கொற்றவனே. (௬௪)

ஏயர்கோன்கலிக்காமநாயனார்

கொற்றத்திறலெந்தைதந்தைதன்றந்தையெங்கூட்டமெல்லாந்
தெற்றச்சடையாய்நினதடியேதிகழ்வன்றொண்டனே
மற்றிப்பிணிதவிர்ப்பானென்றுடைவாளுருவியந்நோய்
செற்றுத்தவிர்கலிக்காமன்குடியேயர்சீர்க்குடியே. (௬௫)

திருமூலநாயனார்.

குடிமன்னுசாத்தனூர்க்கோக்குலமேய்ப்போன்குரம்பைபுக்கு
முடிமன்னுகூனற்பிறையாளன்றன்னைமுழுத்தமிழின்
படிமன்னுவேதத்தின்சொற்படியேபரவிட்டெனுச்சி
யடிமன்னவைத்தபிரான்மூலனாகின்றவங்கணனே. (௬௬)

தண்டியடிகணாயனார்.

கண்ணார்மணியொன்றுமின்றிக்கயிறுபிடித்தரற்குத்
தண்ணார்புனற்றடந்தொட்டலுந்தன்னைநகுமமணர்
கண்ணாங்கிழப்பவமணர்கலக்கங்கண்டம்மலர்க்கண்
விண்ணாயகனிடைப்பெற்றவனாரூர்விறற்றண்டியே. (௬௭)

மூர்க்கநாயனார்.

தண்டலைசூழ்திருவேற்காட்டூர்மன்னன்றகுகவற்றாற்
கொண்டவல்லாயம்வன்சூதனாய்வென்றுமுன்கொண்டபொருண்
டுண்டனன்னீற்றனடியவர்க்கீபவன்மூர்க்கனென்பர்
றண்டலைநீணொண்குடந்தையின்மேவுநற்சூதனையே. (௬௮)

சோமாசிமாறநாயனார்.

சூதப்பொழிலம்பரந்தணன்சோமாசிமாறனென்பான்
வேதப்பொருளஞ்செழுத்தும்விளம்பியல்லான்மொழியா
னீதிப்பரன்மன்னுநித்தநியமன்பரவையென்னு
மாதுக்குக்காந்தன்வன்றொண்டன்றனக்குமகிழ்துணையே. (௬௯)

சுந்தரமூர்த்திசுவாமிகள் துதி.

துணையுமளவுமில்லாதவன்றன்னருளேதுணையாக்
கணையுங்கதிர்நெடுவேலுங்கறுத்தகயலிணையும்
பிணையுநிகர்த்தகட்சங்கிலிபேரமைத்தோளிரண்டு
மணையுமவன்றிருவாரூரனாகின்றவற்புதனே, (௬௰)

---

சாக்கிய நாயனார்.

தகடனவாடையன்சாக்கியன்மாக்கற்றடவனையின்
மகன்றனைச்சாக்கக்குழைந்ததிண்டோளர்வண்கம்பர்செம்பொன்
றிகழ்தருமேனியிற்செங்கலெறிந்துசிவபுரத்துப்
புகழ்தரப்புக்கவனூர்சங்கமங்கைபுவனியிலே. (௬௧)

சிறப்புலி நாயனார்.

புவனியிற்பூதியுஞ்சாதனமும்பொலிவார்ந்துவந்த
தவநியமர்க்குச்சிறப்புச்செய்தத்துவகாரணனு
மவனியிற்கீர்த்தித்தென்னாக்கூரதிபனருமறையோன்
சிவனியமந்தலைநின்றதொல்சீர்நஞ்சிறப்புலியே. (௬௨)

சிறுத்தொண்ட நாயனார்.

புலியினதளுடைப்புண்ணியற்கின்னமுதாத்தனதோ
ரொலியின்சதங்கைக்குதலைப்புதல்வனுடறணித்துக்
கலியின்வலிகெடுத்தோங்கும்புகழ்ச்சிறுத்தொண்டன்கண்டீர்
மலியும்பொழிலொண்செங்காட்டங்குடியவர்மன்னவனே. (௬௩)

சேரமான்பெருமாணாயனார்.

மன்னர்பிரானெதிர்வண்ணானுடலுவருறியநீற்
றன்னபிரான்றமர்போலவருதலுந்தான்வணங்க
வென்னபிரானடிவண்ணானெனவடிச்சேரனென்னுந்
தென்னர்பிரான்கழறித்தறிவோனெனுஞ்சேரலனே. (௬௪)

சேரற்குத்தென்னாவலர்பெருமாற்குச்சிவனளித்த
பாரக்கடகரிமுன்புதன்பந்தியிவுளிவைத்த
வீரற்குவென்றிக்கருப்புவில்வீரனைவெற்றிகொண்ட
சூரற்கெனதுள்ளநன்றுசெய்தாயின்றுதொண்டுபட்டே. (௬௫)

கணநாத நாயனார்

தொண்டரையாக்கியவரவர்க்கேற்றதொழில்கள்செய்வித்
தண்டர்தங்கோனக்கணத்துக்குநாயகம்பெற்றவன்காண்
கொண்டல்கொண்டேறியமின்னுக்குக்கோலமடல்கடொறுங்
கண்டல்வெண்சோறளிக்குங்கடற்காழிக்கணநாதனே (௬௬)

கூற்றுவநாயனார்

நாதன்றிருவடியேமுடியாகக்கவித்துநல்ல
போதங்கருத்திற்பொறித்தமையாலதுகைகொடுப்ப
வேதந்தழுவியஞாலமெல்லாமொருகோலின்வைத்தான்
கோதைநெடுவேற்களப்பாளனாகியகூற்றுவனே (சஎ)

சுந்தரமூர்த்திசுவாமிகள்துதி

கூற்றுக்கெவனோபுகதிருவாரூரன்பொன்முடிமே
லேற்றுத்தொடையலுமின்னடைக்காயுமிடுதருமக்
கோற்றொத்துகூனனுங்கூன்போய்க்குருடனுங்கண்பெற்றமை
சாற்றித்திரியும்பழமொழியாமித்தரணியிலே (சஅ)



பொய்யடிமையில்லாதபுலவர்

தரணியிற்பொய்மையிலாத்தமிழ்ச்சங்கமதிற்கபிலர்
பரணர்நக்கீரர்முதனாற்பத்தொன்பதுபல்புலவோ
ரருணமக்கியுந்திருவாலவாயரன்சேவடிக்கே
பொருளமைத்தின்பக்கவிபலபாடும்புலவர்களே. (சகூ)

புகழ்ச்சோழநாயனார்

புலமன்னியமன்னைச்சிங்களநாடுபொடிபடுத்த
குலமன்னியபுகழ்*கோகனநாதன்குலமுதலோ
னலமன்னியபுகழ்ச்சோழனதென்பர்நகுசுடர்வாள்
வலமன்னியவெறிபத்தனுக்கீந்ததொர்வண்புகழே. (ருய)

* கோகனநாதன்குலம்-என்பது-சூரியகுலம்
கோகனகம் கோகன என விகாரமாயிற்று.

நரசிங்கமுனையரையர்நாயனார்

புகழும்படியெம்பரமேதவர்க்குநற்பொன்னிடுவோ
னிகழும்படியோர்தவன்மடவார்புனைகோலமெங்கு
நிகழும்படிகண்டவற்கன்றிரட்டிபொன்னிட்டவனி
திகழுமுடிநரசிங்கமுனையரசன்றிறமே (ருக)

### அதிபத்தநாயனார்.

திறமமர்மீன்படுக்கும்பொழுதாங்கொருமீன்சிவற்கென்
றுறவமர்மாகடற்கேவிடுவோனொருநாட்கனக
திறமமர்மீன்படநின்மலற்கென்றுவிட்டோன்கமலம்
புறமமர்நாகையதிபத்தனாகியபொய்யிலியே. (ருஉ)

### கலிக்கம்பநாயனார்.

பொய்யைக்கடிந்துநம்புண்ணியர்க்காட்பட்டுத்தன்னடியான்
சைவத்திருவுருவாய்வரத்தானவன்றாள்கழுவ
வையத்தவர்முன்புவெள்கிநீர்வாராவிடபனைவி
கையைத்தடிந்தவன்பெண்ணாகடத்துக்கலிக்கம்பனே. (ருந)

### கலியநாயனார்.

கம்பக்கரிக்குஞ்சிலந்திக்குநல்கியகண்ணுதலோ
னும்பர்க்குநாதற்கொளிவிளக்கேற்றற் * குடலிலனாய்க்
கும்பத்தயிலம்விற்றுஞ்செக்குழன்றுங்கொள்கூலியினு
னம்பற்கெரித்தகலியொற்றிமாநகர்ச்சக்கிரியே. (ருச)

*உடல் - என்பது - பொருள்.

### சத்திநாயனார்.

கிரிவில்லவர்தம்மடியரைத்தன்முன்புகீழ்மைசொன்ன
திருவில்லவரையந்நாவரிவோன்றிருந்தாரைவெல்லும்
வரிவில்லவன்வயற்செங்கழுநீரின்மருவுதென்ற
றெருவில்வினைகமழுந்தென்வரிஞ்சைத்திகழ்சத்தியே. (ருரு)

### ஐயடிகள்காடவர்கோனாயனார்.

சத்தித்தடக்கைக்குமரன்றன்றாதைதன்றாளையெல்லா
முத்திப்பதமொரோர்வெண்பாமொழிந்தருமுடியரசா
மத்திற்குழும்மைநன்றாலரற்காளையமேற்றவலென்னும்
பத்திக்கடலையடிகளாகின்றநம்பல்லவனே. (ருசு)

---

### சுந்தரமூர்த்திசுவாமிகள் துதி.

பல்லவைசெங்கதிரோனைப்பறித்தவன்பாகம்புகழ்
சொல்லவன்றென்புகலூரரன்பாற்றுய்யசெம்பொன்கொள்ள
வல்லவனட்டியத்தான்குடிமாணிக்கவண்ணனுக்கு
நல்லவன்றன்பதிநாவலூராகின்றநன்னகரே. (ருஎ)

---

கணம்புல்லநாயனார்.

தன்னகராயவிருக்குவேளூர்தனினல்குரவாய்ப்
பொன்னகராயநற்றில்லைபுகுந்து*புலீச்சரத்து
மன்னவராயவரற்குநற்புல்லால்விளக்கெரித்தான்
கன்னவின்றோளெந்தைதந்தைபிரானெங்கணம்புல்லனே. (௫அ)

காரிநாயனார்.

புல்லனவாகாவகையுலகத்துப்புணர்ந்தனவுஞ்
சொல்லினவுந்நயமாக்கிச்சுடர்பொற்குவடுதனி
வில்லனைவாழ்த்திவிளங்குங்கயிலைபுக்கானென்பராற்
கல்லினமாமதில்சூழ்கடவூரினிற்காரியையே. (௫௯)

நின்றசீர்நெடுமாறநாயனார்.

கார்த்தண்முகிற்கைக்கடற்காழிபர்பெருமாற்கெதிரா
யார்த்தவமணரழிந்ததுகண்டுமற்றங்கவரைக்
கூர்த்தகழுவினுதிவைத்தபஞ்சவனென்றுரைக்கும்
வார்த்தையதுபண்டுநெல்வேலியில்வென்றமாறனுக்கே. (௬௰)

வாயிலார்நாயனார்.

மாறுவருளரன்றன்னைமனவாலயத்திருத்தி
யாறுவறிவாமொளிவிளக்கேற்றியகமலராம்
வீறுமலரளித்தன்பெனுமெய்யமிர்தங்கொடுத்தான்
வீறார்மயிலையுள்வாயிலானென்றுவிளம்புவமே. (௬௧)

முனையடுவார்நாயனார்.

என்றுவிளம்புவர்நீடூரதிபன்முனையடுவோ
னென்றுமமருளழிந்தவர்க்காக்கூலியேற்றெறிந்து
வென்றபெருஞ்செல்வமெல்லாங்கனகநன்மேருவென்னுங்
குன்றம்வளைத்தசிலையான்றமர்க்குக்கொடுத்தனனே. (௬௨)

---

சுந்தரமூர்த்திசுவாமிகள்துதி.

கொடுத்தான்முதலைகொள்பிள்ளைக்குயிரன்றுபுக்கொளியூர்த்
தொடுத்தான்மதுரகவியவிநாசியைவேடர்சுற்றம்
படுத்தான்றிருமுருகன்பூண்டியினிற்பராபரத்தேன்
மடுத்தானவனென்பர்வன்றொண்டனின்றமாதவனே. (௬௩)

---

* புலீச்சரம் - வியாக்கிரபாதமுனிவர்-
ஆத்துமார்த்தமாகப்பூசித்தது- அது சிதம்பரத்தில் வேறேஆலயம்.

கழற்சிங்கநாயனார்.

மாதவத்தோர்தங்கள்வைப்பினுக்காரூர்மணிக்குவைத்த
போதினைத்தான்மோந்ததேவிதன்மூக்கையரியப்பொற்கை
காதிவைத்தன்றேவரிவதென்றாங்கவள்கைதடிந்தா
னோதமொய்த்தார்வண்டுகிண்டுபைங்கோதைக்கழற்சிங்கனே (௮௪)

இடங்கழிநாயனார்

சிங்கத்துருவனைச்செற்றவன்சிற்றம்பலமுகடு
கொங்கிற்கனகமணிந்தவாதித்தன்குலமுதலோன்
றிங்கட்சடையர்தமரதென்செல்வமெனப்பறைபோக்
கெங்கட்கிறைவனிருக்குவேளூர்மன்னிடங்கழியே (௮௫)

செருத்துணைநாயனார்

கழிநீள்கடனஞ்சயின்றார்க்கிருந்தகடிமலரை
மொழிநீள்புகழ்க்கழற்சிங்கன்றன்றேவிமுன்மோத்தலுமே
யெழினீள்குமிழ்மலர்மூக்கரிந்தானென்றியம்புவராற்
செழுநீர்மருகனன்னாட்டமர்தஞ்சைச்செருத்துணையே (௮௬)

புகழ்த்துணைநாயனார்

செருவிலிபுத்தூர்ப்புகழ்த்துணைவையஞ்சிறுவிலைத்தா
யுருவலிகெட்டுணவின்றியுமைகோனைமஞ்சனஞ்செய்
தருவதோர்போதுகைசோர்ந்துகலசம்விழத்தரியா
தருவனாவில்லியருளினிதியதுபெற்றனனே. (௮௭)

கோட்புலிநாயனார்.

பெற்றமுயர்த்தோன்விளையாக்கலிபிழைத்தோர்தமது
சுற்றமறுக்குந்தொழிற்றிருநாட்டியத்தான்குடிக்கோன்
குற்றமறுக்குநங்கோட்புலிநாவற்குரிசிலருள்
பெற்றவருட்கடலென்றுலகேத்தும்பெருந்தகையே. (௮௮)

சுந்தரமூர்த்திசுவாமிகள்துதி.

தருமகட்பேசினேன்வீயவேநூல்போனசங்கிலிபாற்
பருமணக்காதலினாலொற்றியூருறைபுண்ணியன்றன்
மிகுமலர்ப்பாதம்பணிந்தருளாலிவ்வியனுலக
நகும்வழக்கேநன்மையாப்புணர்ந்தானாவலூரரசே. (௮௯)



பத்தராய்ப்பணிவார்கள்

அரசினையாரூரமரர்பிரானையடிபணிந்திட்
டுரைசெய்தவாய்தடுமாறியுரோமபுளகம்வந்து
கரசரணாதியவயவங்கம்பித்துக்கண்ணருவி
சொரிதருமங்கத்தினோர்பத்தரொன்றுதொகுத்தவரே (௭௰)

பரமனையேபாடுவார்

தொகுத்தவடமொழிதென்மொழிபாதொன்றுதோன்றியதே
மிகுத்தவியலிசையவ்வகையாலவ்விண்டோயுநெற்றி
வகுத்தமதிற்றில்லைபம்பலத்தான்மலர்ப்பாதங்கண்மே
லுகுத்தமனத்தொடும்பாடவல்லோரென்பருத்தமரே (௭௧)

சித்தத்தைச்சிவன்பாலேவைத்தார்

உத்தமத்தானத்தறம்பொருளின்பமொடியெறிந்து
வித்தகத்தானத்தொருவழிக்கொண்டுவிளங்கச்சென்னி
மத்தம்வைத்தான்றிருப்பாதகமலமலரடிக்கீழ்ச்
சித்தம்வைத்தாரென்பர்வீடுபேறெய்தியசெல்வர்களே (௭௨)

திருவாரூர்ப்பிறந்தார்

செல்வந்திகழ்திருவாரூர்மதில்வட்டத்துட்பிறந்தார்
செல்வன்றிருக்கணத்துள்ளவரோயதனாற்றிகழச்
செல்வம்பெருகுதென்னாரூர்ப்பிறந்தவர்சேவடியே
செல்வநெறியுறுவார்க்கணித்தாயசெழுநெறியே (௭௩)

முப்பொழுதுந்திருமேனிதீண்டுவார்

நெறிவார்சடையனைத்தீண்டிமுப்போதுநீடாகமத்தி
னறிவால்வணங்கியர்ச்சிப்பவர்நம்மையுமாண்டமரர்க்
கிறைபாய்முக்கண்ணனெண்டோளுந்தரித்தீறில்செல்வத்தொடு
முறைவார்சிவபெருமாற்குறைவாயவுலகினிலே (௭௪)

முழுநீறுபூசியமுனிவர்

உலகங்கலங்கினுமூழிதிரியினுமுன்னொருகால்
விலகுதலில்லாவிதியதுபெற்றநல்வித்தகர்கா
ணலகிற்பெருந்தணத்தாரூரமர்ந்தவரனடிக்கீ
ழிலகுவெண்ணீறுதம்மேனிக்கணியுமிறைவர்களே (௭௫)

அப்பாலுமடிச்சார்ந்தார்

வருக்கமடைத்துநன்றாவலூர்மன்னவன்வண்டமிழாற்
பெருக்குமதுரத்தொகைபிறைசூடிதன்பெய்கழற்கே
பொருக்குமனத்தொடப்பாலடிச்சார்ந்தவரொன்றுலகிற்
றெரிக்குமவர்சிவன்பல்கணத்தார்நஞ்செழுந்தவமே (௭௬)

சுந்தரமூர்த்திசுவாமிகள் துதி

செழுநீர்வயன்முதுகுன்றினிற்செந்தமிழ்பாடிவெய்ய
மழுநீள்தடக்கையனீந்தபொன்றங்குக்கொள்ளாதுவந்தப்
பொழினீடருதிருவாரூரில்வாசியும்பொன்னுங்கொண்டோன்
கெழுநீள்புகழ்த்திருவாரூரனென்றுநாங்கேட்பதுவே (௭௭)

பூசலார்நாயனார்

பதுமநற்போதன்னபாதத்தரற்கொருகோயிலையான்
கதுமெனச்செய்குவதென்றுகொலாமென்றுகண்டுயிலா
ததுமனத்தேயெல்லிதோறுநினைந்தருள்பெற்றதென்பர்
புதுமணத்தென்றலுலா*நின்றவூர்தனிற்பூசலையே (௭௮)

* நின்றவூர் - திருநின்றவூர் - இது இக்காலத்துத் தின்னனூரென வழங்குகின்றது.

மங்கையர்க்கரசியார்

பூசலபிற்றென்னனார்க்கனலாகப்பொறாமையினால்
வாசமலர்க்குழற்பாண்டிமாதேவியாமாணிகண்டர்
தேசம்விளங்கத்தமிழாகரர்க்கறிவித்தவரா
னேசம்விளைத்தாளருகந்தருக்குத்தென்னாட்டகத்தே (௭௯)

நேசநாயனார்

நாட்டமிட்டன்றரிவந்திப்பவெல்படைநல்கினர்தந்
தாட்டரிக்கப்பெற்றவனென்பர்சைவத்தவரணையிற்
*கூட்டுமகப்படக்கோவணநெய்துகொடுத்துநன்மை
யீட்டுமக்காம்பீலிச்சாலியநேசனையிம்மையிலே (௮௰)

கோச்செங்கட்சோழநாயனார்

மைவைத்தகண்டனெறியன்றிமற்றோர்நெறிகருதாத்
தெய்வக்குடிச்சோழன்முன்புசிலந்தியாய்ப்பந்தர்செய்து
சைவத்துருவெய்திவந்துதரணிநீடாலயங்கள்
செய்வித்தவன்றிருக்கோச்செங்கணானெனுஞ்செம்பியனே (௮௧)

*கூட்டு - என்பது - கீள்.

செம்பொனணிந்துசிற்றம்பலத்தைச்சிவலோகமெய்தி
நம்பன்கழற்கீழிருந்தோன்குலமுதலென்பர்நல்ல
வம்புமலர்த்தில்லையீசனைச்சூழ*மறைவளர்த்தா
னிம்பர்நறுந்தொங்கற்கோச்செங்கணனெனுநித்தனையே. (௮௨)

* மறைவளர்த்தான்- என்பதற்கு- தில்லைமூவாயிரவருக்குத் திருமாளிகைகள் கட்டுவித்தான் எனப் பொருள்கொள்க.

நிம்பநறுந்தொங்கல் - என்பது - வேப்பமாலை- சோழர்களுக்கு- ஆத்திமாலையேயன்றி வேப்பமாலையில்லை- ஆதலால்- மறைவளர்த்தான் இம்பர்- எனப் பாடமோதலாமென்று தோன்றுகின்றது- இம்பர்-இவ்வுலகம்.

## திருநீலகண்டயாழ்ப்பாணநாயனார்.

தனையொப்பருமெருக்கத்தம்புலியூர்த்தரும்புகழோ
னினையொப்பருந்திருநீலகண்டப்பெரும்பாணனைநீள்
சினையொப்பலர்பொழிற்சண்பையர்கோன்செந்தமிழொடிசை
புனையப்பரனருள்பெற்றவனென்பரிப்பூதலத்தே. (௮௩)

## சடையநாயனார்.

தலம்விளங்குந்திருநாவலூர்தன்னிற்சடையனென்னுங்
குலம்விளங்கும்புகழோனையுரைப்பர்குவலயத்தி
னலம்விளங்கும்படிநாம்விளங்கும்படிநற்றவத்தின்
பலன்விளங்கும்படியாரூரனைமுன்பயந்தமையே. (௮௪)

## இசைஞானியார்.

பயந்தாள்கறவுடைச்செங்கண்வெள்ளைட்*பொள்ளனீள்பனைக்கைக்
கயந்தானுகைத்தநற்காளையையென்றுங்கபாலங்கைக்கொண்
*டயந்தான்புகும்அரனூரர்ப்புனிதவரன்றிருத்தா
ணயந்தாடனதுள்ளத்தென்றுமுணாட்பதுஞானியையே. (௮௫)

---

* ஐயம்- அயமெனப் போலியாயிற்று.

* பொள்ளல்- என்பது- துவாரம்-

வெள்ளையானை யுகைத்தகாளை - சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஸ்ரீகயிலாயத்துக்கெழுந்தருளியபோதென்க - கயம் - யானை.

## சுந்தரமூர்த்திசுவாமிகள்துதி.

ஞானவவ்வாரூரரசனாயல்லதுநாமறியோ
மானவவ்வாக்கையொடும்புக்கவனாவளரொளிப்பூண்
வானவராலுமறிதற்கரியவடகயிலைக்
கோனவன்கோயிற்பெருந்தவத்தோர்தங்கள்கூட்டத்திலே. (௮௬)



## திருத்தொண்டத்தொகையினுள்ள கூட்டவடியார்கள்தனியடியார்கள்.

கூட்டமொன்பானொடறுபத்துமூன்றுதனிப்பெயரா
வீட்டும்பெருந்தவத்தோரெழுபத்திரண்டாம்வினையை
வாட்டுந்தவத்திருத்தொண்டத்தொகைபதினொன்றின்வகைப்
பாட்டுந்திகழ்திருநாவலூராளிபணித்தனனே. (௮௭)

## திருத்தொண்டத்தொகைப்பதிகத் தேவாரங் கவிகளின்முதனினைப்பு.

பணித்தநற்றொண்டத்தொகைமுதற்றில்லையிலைமலிந்த
வணித்திகழ்மும்மைத்திருநின்றவம்பறுவார்கொண்டதோ
ரிணைத்திகழ்பொய்யடிமைக்கறைக்கண்டன்கடல்சூழ்ந்தபின்
மணித்திகழ்சொற்பத்தர்மன்னியசீர்மறைநாவனொடே. (௮௮)

## பலனருள்கவி.

ஓடும்பஞ்சேந்திரியமொடுக்கியென்னுள்வினைகள்
வாடும்வண்ணநின்றெத்தவஞ்செய்தனன்வானினுள்ளோர்
சூடுஞ்சீர்த்திருப்பாதத்தர்தொண்டத்தொகையினுள்ள
சேடர்தஞ்செல்வப்பெரும்புகழந்தாதிசெப்பிடவே. (௮௯)

திருச்சிற்றம்பலம்.

நம்பியாண்டார்நம்பியருளிச்செய்த
கலித்துறைத்திருவந்தாதி.

முற்றிற்று;





சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருத்தொண்டர்புராணமென்னும்

# பெரியபுராணம்.

## பாயிரம்.

### நடேசர் துதி—விருத்தம்.

உலகெலாமுணர்ந்தோதற்கரியவ
னிலவுலாவியநீர்மலிவேணியன்
அலகில்சோதியனம்பலத்தாடுவான்
மலர்சிலம்படிவாழ்த்திவணங்குவாம். (க)

ஊனடைந்தவுடம்பின்பிறவியே
தானடைந்தவுறுதியைச்சாருமாற்
றேனடைந்தமலர்ப்பொழிற்றில்லையுண்
மாநடஞ்செய் வரதர்பொற்றாடொழ. (உ)

### விநாயகர் துதி.

எடுக்குமாக்கதையின்றமிழ்ச்செய்யுளாய்
நடக்குமேன்மைநமக்கருள்செய்திடத்
தடக்கையைந்துடைத்தாழ்செவிநீண்முடிக்
கடக்களிற்றைக்கருத்துளிருத்துவாம் (௩)

## திருக்கூட்டப்புகழ்ச்சி—வேறு.

மதிவளர்சடைமுடிமன்றுளாரைமுன்
றுதிசெயுநாயன்மார்தூயசொன்மலர்ப்
பொதிநலனுகர்தருபுனிதர்பேரவை
விதிமுறையுலகினில்விளங்கிவெல்கவே. (௪)

## அவையடக்கம்.

அளவிலாதபெருமையராகிய
அளவிலாவடியார்புகழ்கூறுகேன்
அளவுகூடவுரைப்பரிதாயினும்
அளவிலாசைதுரப்பவறைகுவன். (௫)

தெரிவரும்பெருமைத்திருத்தொண்டர்தம்
பொருவருஞ்சீர்புகலலுற்றேன்முற்றப்
பெருகுதண்கடலூற்றும்பெருநசை
யொருசுணங்கனையொக்குந்தகைமையேன். (௬)

செப்பலுற்றபொருளின்சிறப்பினால்
அப்பொருட்குரையாவருங்கொள்வரால்
இப்பொருட்கென்னுரைசிறிதாயினு
மெய்ப்பொருட்குரியார்கொள்வர்மேன்மையால். (௭)

மேயவிவ்வுரைகொண்டுவிரும்புமாஞ்
சேயவன்றிருப்பேரம்பலஞ்செய்ய
தூயபொன்னணிசோழனீடுழிபா
ராயசீரநபாயனரசவை. (௮)

அருளினீர்மைத்திருத்தொண்டறிவருந்
தெருளினீரிதுசெப்புதற்காமெனின்
வெருளின்மெய்ம்மொழிவானிழல்கூறிய
பொருளினாகுமெனப்புகல்வாமன்றே. (௯)

## நூற்பெயர்—வேறு.

இங்கிதனாமங்கூறினிவ்வுலகத்துமுன்னாட்
டங்கிருளிரண்டின்மாக்கள்சிந்தையுட்சார்ந்துநின்ற
பொங்கியவிருளையேனைப்புறவிருள்போக்குகின்ற
செங்கதிரவன்போனீக்குந்திருத்தொண்டர்புராணமென்பாம். (௰)

பாயிரமுற்றிற்று.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருமலைச்சிறப்பு.



விருத்தம்.

பொன்னின்வெண்டிருநீறுபுனைந்தெனப்
பன்னுநீள்பனிமால்வரைப்பாலது
தன்னையார்க்குமறிவரியானென்று
மன்னிவாழ்கயிலைத்திருமாமலை. (௧)

அண்ணல்வீற்றிருக்கப்பெற்றதாதலி
னண்ணுமூன்றுலகுந்நான்மறைகளும்
எண்ணில்மாதவஞ்செய்யவந்தெய்திய
புண்ணியந்திரண்டுள்ளதுபோல்வது. (௨)

நிலவுமெண்ணிறலங்களுநீடொளி
யிலகுதண்டளிராகவெழுந்ததோர்
உலகமென்னுமொளிமணிவல்லிமேன்
மலரும்வெண்மலர்போல்வதம்மால்வரை. (௩)

மேன்மைநான்மறைநாதமும்விஞ்சையர்
கானவீணையினோசையுங்காரெதிர்
தானமாக்கண்முழக்கமுந்தாவில்சீர்
வானதுந்துபியார்ப்புமருங்கெலாம். (௪)

பனிவிசும்பிலமரர்பணிந்துசூழ்
அனிதகோடியணிமுடிமாலையும்
புனிதகற்பகப்பொன்னரிமாலையு
முனிவரஞ்சலிமாலையுமுன்னெலாம். (௫)

நீடுதேவர்நிலைகளும்வேண்டிடி
னோடுமைம்பெரும்பூதமுநாட்டுவ
கோடிகோடிகுறட்சிறுபூதங்கள்
பாடியாடும்பரப்பதுபாங்கெலாம். (௬)

நாயகன்கழல்சேவிக்கநான்முகன்
மேயகாலமலாமையின்மீண்டவன்
றூயமால்வரைச்சோதியின்மூழ்கியொன்
றாயவன்னமுங்காணாதயர்க்குமால். (௭)

வேறு.

காதில்வெண்குழையோன் கழறொழநெடியோன் காலப்பார்த்
திருந்ததுமறியான்,சோதிவெண்கயிலைத் தாழ்வரைமுழையிற் றுதிக்
கையோ னூர்தியைக் கண்டு, மீதெழு பண்டைச் செஞ்சுடரின்று
வெண்சுடரானதென்றதன்கீ,ழாதியேனமதாயிடக்கலுற்றானென்றத
னைவந்தணைதருங்கலுழன். இதுவெள்ளி. (௮)

அரம்பையராடன்முழவுடன்மருங்கினருவிகளெதிரெதிர்முழங்க
வரம்பெறுங்காதன்மனத்துடன்றெய்வமதுமலரிருகையுமேந்தி
நிரந்தரமிடைந்தவிமானசோபானநீடுயர்வழியினலேறிப்
புரந்தரன்முதலாங்கடவுளர்போற்றப்பொலிவதத்திருமலைப்புறப்பு

வேதநான்முகன்மால்புரந்தரன்முதலாம் விண்ணவரெண்ணிலார்
மற்றுங், காதலான் மிடைந்த முதற்பெருந்தடையாங் கதிர்மணிக்
கோபுரத்துள்ளார்,பூதவேதாளப்பெருங்கணநாதர் போற்றிடப்பொ
துவினின்றாள், நாதனாராதித்தேவனார் கோயி னாயகனந்தி யெம்பெ
ருமான். (௯)

நெற்றியிற்கண்ணர்நாற்பெருந்தோளர்நீறணிமேனியரநேகர்,பெ
ற்றமேற்கொண்டதம்பிரானடியார் பிஞ்ஞகன்றன்னருள் பெறுவார்
மற்றவர்க்கெல்லாந்தலைமையாம்பணியுமலர்க்கையிற் சுரிகையுப்பிர
ம்பும்,கற்றைவார்சடையானருளினாற்பெற்றான் காப்பதக்கயிலைமால்
வரைதான். (௰௧)

கையின்மான்மழுவர் கங்கைசூழ்சடையிற் கதிரிளம்பிறை நறுங்
கண்ணி, யையர்வீற்றிருக்குந்தன்மையினாலு மளப்பரும்பெருமை
யினாலு,மெய்ப்பொருடழைக்குந் தூய்மையினாலும் வென்றிவெண்கு
டையநபாயன்,செய்யகோலபயன்றிருமனத்தோங்குந் திருக்கயிலா
யநீள்சிலம்பு. (௰௨)

வேறு.

அன்னதன்றிருத்தாழ்வரையினிடத்
தின்னதன்மையனென்றறியாச்சிவன்
றன்னையேயுணர்ந்தார்வந்தழைக்கின்றான்
உன்னருஞ்சீருபமன்னியமுனி. (௰௩)

யாதவன்றுவரைக்கிறையாகிய
மாதவன்முடிமேலடிவைத்தவன்
பூதநாதன்பொருவருந்தொண்டினுக்
காதியந்தமிலாமையடைந்தவன். (௰௪)

அத்தர்தந்தவருட்பாற்கடலுண்டு
சித்தமார்ந்துதெவிட்டிவளர்ந்தவன்
பத்தராயமுனிவர்பல்லாயிரர்
சுத்தயோகிகள்சூழவிருந்துழி. (௰௫)

அங்கணேயொளியாயிரஞாயிறு
பொங்குபேரொளிபோன்றுமுன்றோன்றிடத்
துங்கமாதவர்சூழ்ந்திருந்தாரெலாம்
இங்கிதென்கொலதிசயமென்றலும். (௰௬)

அந்திவான்மதிசூடியவண்ணருள்
சிந்தியாவுணர்ந்தம்முனிதென்றிசை
வந்தநாவலர்கோன்புகழ்வன்றொண்டன்
எந்தையாரருளாலணைவானென. (௰௭)

கைகள்கூப்பித்தொழுதெழுந்தத்திசை
மெய்யிலாநந்தவாரிவிரவிடச்
செய்யநீள்சடைமாமுனிசெல்வுழி
ஐயநீங்கவினவுவோரந்தணர். (௰௮)

சம்புவின்னடித்தாமரைப்போதலால்
எம்பிரானிறைஞ்சாயிஃதென்னெனத்
தம்பிரானைத்தன்னுள்ளந்தழீஇயவ
னம்பியாரூரனுந்தொழுந்தன்மையான். (௰௯)

என்றுகூறவிறைஞ்சியியம்புவார்
வென்றபேரொளியார்செய்விழுத்தவம்
நன்றுகேட்கவிரும்புநசையினோம்
இன்றெமக்குரைசெய்தருளென்றலும். (௨௰)

உள்ளவண்ணமுனிவனுரைசெய்வான்
வெள்ளநீர்ச்சடைமெய்ப்பொருளாகிய
வள்ளல்சாத்துமதுமலர்மாலையும்
அள்ளுநீறுமெடுத்தணைவானுளன். (௨௧)

அன்னவன்பெயராலாலசுந்தரன்
முன்னமாங்கொருநாண்முதல்வன்றனக்
கின்னவாமெனுநாண்மலர்கொய்திடத்
துன்னினானந்தனவனச்சூழலில். (௨௨)

அங்குமுன்னரேயாளுடைநாயகி
கொங்குசேர்குழற்காமலர்கொய்திடத்
திங்கள்வாண்முகச்சேடியரெய்தினார்
பொங்குகின்றகவினுடைப்பூவைமார், (௨௩)

அந்தமில்சீரனிந்திதையாய்குழற்
கந்தமாலைக்கமலினியென்பவர்
கொந்துகொண்டதிருமலர்கொய்வுழி
வந்துவானவரீசரருளென, (௨௪)

மாதவஞ்செய்ததென்றிசைவாழ்ந்திடத்
தீதிலாத்திருத்தொண்டத்தொகைதரப்
போதுவாரவர்மேன்மனம்போக்கிடக்
காதன்மாதருங்காட்சியிற்கண்ணினார், (௨௫)

முன்னமாங்கவர்மொய்ம்முகைநாண் மலர்
என்னையாட்கொண்டவீசனுக்கேய்வன
பன்மலர்கொய்துசெல்லப்பனிமலர்
அன்னமன்னவருங்கொண்டகன்றபின். (௨௬)

ஆதிமூர்த்தியவன்றிறநோக்கியே
மாதர்மேன்மனம்வைத்தனைதென்புவி
மீதுதோன்றியம்மெல்லியலாருடன்
காதலின்பங்கலந்தணைவாயென, (௨௭)

கைகளஞ்சலிகூட்பிக்கலங்கினான்
செய்யசேவடிநீங்குஞ்சிறுமையேன்
மையன்மானிடமாய்மயங்கும்வழி
ஐயனேதடுத்தாண்டருள்செய்யென, (௨௮)

அங்கணாளனதற்கருள்செய்தபி
னங்கைமாருடனம்பிமற்றத்திசை
தங்குதோற்றத்திலின்புற்றுச்சாருமென்
றங்கவன்செயலெல்லாமறைந்தனன். (௨௯)

அந்தணாளருமாங்கதுகேட்டவர்
பத்தமானிடப்பாற்படுதென்றிசை
இந்தவான்றிசையெட்டினுமேற்பட
வந்தபுண்ணியமியாதெனமாதவன், (௩௰)

பொருவருந்தவத்தான்புலிக்காலனும்
அருமுனியெந்தையர்ச்சித்துமுள்ளது
பெருமைசேர்பெரும்பற்றப்புலியூரொன்
றொருமைபாளர்வைப்பாம்பதியோங்குமால், (௩௧)

அத்திருப்பதியின்னமையாளுடை
மெய்த்தவக்கொடிகாணவிருப்புட
னித்தனீடியவம்பலத்தாடுமற்
றித்திறம்பெறலாந்திசையெத்திசை, (௩௨)

† பூதமியாவையினுள்ளலர்போதென
வேதமூலம்வெளிப்படுமேதினிக்
காதன்மங்கையிதயகமலமா
மாதொர்பாகனாரூர்மலர்ந்ததால். (௩௩)

எம்பிராட்டியிவ்வேழுலகீன்றவ
டம்பிரானைத்தனித்தவத்தாலெய்திக்
கம்பையாற்றில்வழிபடுகாஞ்சியென்
றும்பர்போற்றும்பதியுமுடையது. (௩௪)

நங்கணாதனைநந்திதவஞ்செய்து
பொங்குநீடருளெய்தியபொற்பது
கங்கைவேணிமலரக்கனன்மலர்
செங்கையாளனையாறுந்திகழ்வது, (௩௫)

தேசமெல்லாம்விளக்கியதென்றிசை
யீசர்தோணிபுரத்துடனெங்கணும்
பூசனைக்குப்பொருந்துமிடம்பல
பேசிலத்திசையொவ்வாபிறதிசை, (௩௬)

என்றுமாமுனிவன்றொண்டர்செய்கையை
அன்றுசொன்னபடியாலடியவர்
துன்றுசீர்த்திருத்தொண்டத்தொகைவிரி
யின்றெனதுரைவாலிங்கியம்புகேன், (௩௭)

† பூதமியாவையுமுள்ளலர் எனவும், வேதமூலம்வெளி
ப்படுமேதினி எனவும், பாடபேதம்.

மற்றிதற்குப்பதிகம்வன்றொண்டர்தாம்
புற்றிடத்தெம்புராணரருளினாற்
சொற்றமெய்த்திருத்தொண்டத்தொகையெனப்
பெற்றநற்பதிகந்தொழப்பெற்றதால், (௫௮)

அந்தமெய்ப்பதிகத்தடியார்களை
நந்தநாதனைநம்பியாண்டார்நம்பி
புந்தியாரப்புகன்றவகையினால்
வந்தவாறுவழாமலியம்புவாம், (௫௯)

உலகமுய்யவுஞ்சைவநின்றோங்கவும்
அலகில்சீர்நம்பியாரூரர்பாடிய
திலவுதொண்டர்தங்கூட்டநிறைந்துறை
குலவுதண்புனனாட்டணிகூறுவாம், (௬௦)

திருமலைச்சிறப்பு- முற்றிற்று.

ஆ- திருவிருத்தம்-௬௰.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருநாட்டுச்சிறப்பு.



பாட்டியற்றமிழுரைபயின்றவெல்லையுட்
கோட்டியர்பனிவரைக்குன்றினுச்சியிற்
சூட்டியவளர்புலிச்சோழர்காவிரி
நாட்டியல்பதனையானவிலலுற்றனன். (௧)

ஆதிமாதவமுனியகத்தியன்றரும்
பூதநீர்க்கமண்டலம்பொழிந்தகாவிரி
மாதர்மண்மடந்தைபொன்மார்பிற்றாழ்ந்ததோர்
ஓதநீர்நித்திலத்தாமமொக்குமால், (௨)

மைப்படால்வளாப்பயிறலைமைசான்றது
செய்யபூமகட்குநற்செவிபோன்றது
வையகம்பல்லுயிர்வளர்த்துநாடொறும்
உய்யும்வகைநந்தளித்தூட்டுநீரது. (௩)

மாவினுந்திச்சுழிமலர்தகமேல்வருஞ்
சால்பினற்பல்லுயிர்தருதன்மாண்பினற்
கோலநற்குண்டிடைதாங்குங்கொள்கையாற்
போலுநான்முகனையும்பொன்னிமாநதி. (௪)

திங்கள்சூடியமுடிச்சிகரத்துச்சியிற்
பொங்குவெண்டலைநுரைபொருதுபோதலால்
எங்களையன்முடிமிசைநின்றேய்ந்திழி
கங்கையாம்பொன்னியாங்கன்னிநீத்தமே. (௫)

வண்ணநீள்வரைதரவந்தமேன்மையால்
எண்ணில்பேரறங்களும்வளர்க்குமீகையால்
அண்ணல்பாகத்தையாளுடையநாயகி
உண்ணெகிழ்கருணையினொழுக்கம்போன்றது. (௬)

வேறு

வம்புலாமலர்நீரால்வழிபட்டுச்
செம்பொன்வார்கரையெண்ணில்சிவாலயத்
தெம்பிரானையிறைஞ்சலினீர்ப்பொன்னி
உம்பர்நாயகற்கன்பருமொக்குமால். (௭)

வாசநீர்குடைமங்கையர்கொங்கையிற்
பூசுகுங்குமமும்புனைசாந்தமும்
வீசுதெண்டிரைமீதழித்தோடுநீர்
தேசுடைத்தெனினுந்தெளிவில்லதே (௮)

மாவினைத்தெழுந்தார்ப்பவரைதரு
பூவிரித்தபுதுமதுப்பொங்கிட
வாவியிற்பொலிநாடுவளந்தரக்
காவிரிப்புனல்கால்பரந்தோங்குமால் (௯)

ஒண்டுறைத்தலைமாமதகூடுபோய்
மண்டுநீர்வயலுட்புகவந்தெதிர்
கொண்டமள்ளர்குரைத்தகையோசைபோய்
அண்டர்வானத்தினப்புறஞ்சாருமால் (௰)

மாதர்நாறுபறிப்பவர்மாட்சியுஞ்
சீதநீர்முடிசேர்ப்பவர்செய்கையும்
ஓதையார்செய்யுழுநரொழுக்கமுங்
காதல்செய்வதோர்காட்சிமலிந்தவே (௰௩)

உழுதசான்மிகவூறித்தெளிந்தசே
றிழுதுசெய்யினுளிந்திரதெய்வதந்
தொழுதுநாறுநடுவார்தொகுதியே
பழுதில்காவிரிநாட்டின்பரப்பெலாம் (௰௨)

வேறு.

மன்னுபுனல்பரந்தவயல்வளர்முதலின்சுருள்விரியக்
கன்னிழவர்பதங்காட்டக்களைகளையுங்கடைசியர்கள்
தன்னடரளஞ்சொரிபணிலமிடறியிடைதளர்ந்தசைவார்
வன்னலைபுங்குழலலைபமடநடையின்வரம்பணைவார் (௰௩)

செங்குவளைபறித்தணிவார்கருங்குழன்மேற்சிறைவண்டை
யங்கைமலர்களைக்கொடுகைத்தயல்வண்டும்வரவழைப்பார்
திங்கணுதல்வெயர்வரும்பச்சிறுமுறுவறளவரும்பப்
பொங்குமலர்க்கமலத்தின்புதுமதுவாய்மடுத்தயில்வார் (௰௪)

கரும்பல்லநெல்லென்னக்கமுகல்லகரும்பென்னச்
சுரும்பல்லிகுடைநீலத்துகளல்லபகலெல்லாம்
அரும்பல்லமுலையென்னவமுதல்லமொழியென்ன
வரும்பல்லாயிரங்கடைசிமடந்தையர்கள்வயலெல்லாம் (௰௫)

காலல்பாய்படைந்தடநந்தூன்கழிந்தபெருங்கருங்குழிசி
வியல்வாய்வெள்வளைத்தரளமலர்வேரியுலைப்பெய்தங்
கயலாமையடுப்பேற்றியரக்காம்பனெருப்பூதும்
வயன்மாதர்சிறுமகளிர்விளையாட்டுவரம்பெல்லாம் (௰௬)

காடெல்லாங்கழைக்கரும்புகாவெல்லாங்குழைக்கரும்பு
மாடெல்லாங்கருங்குவளைவயலெல்லாநெருங்குவளை
கோடெல்லாமடவன்னங்குளமெல்லாங்கடலன்ன
நாடெல்லாநீர்நாடுதனையொவ்வாநலமெல்லாம் (௰௭)

வேறு

ஆலைபாய்பவரார்ப்புறமோலமுஞ்
சோலைவாய்வண்டினாத்தெழுசும்மையு
ஞாலமோங்கியநான்மறையோதையும்
வேலையோசையின்மிக்குவிரவுமால் (௰௮)

அன்னமாடுமகன்றுறைப்பொய்கையிற்
றுன்னுமேதிபடியத்துதைந்தெழு

கன்னிவாளைகமுகின்மேற்பாய்வன
மன்னும்வான்மிசைவானவிற்போலுமால் (௧௯)

காவினிற்பயிலுங்களிவண்டினம்
வாவியிற்படிந்துண்ணுமலர்மது
மேவியத்தடமீதெழப்பாய்கயல்
தாவியப்பொழிலின்கனிசாடுமால் (௨௰)

வேறு

சாலிநீள்வயலினோங்கித்தன்னிகரின்றிமிக்கு
வாலிதாம்வெண்மையுண்மைக்கருவினும்வளத்தவாகிச்
சூன்முதிர்பசலைகொண்டுசுருள்விரித்தரனுக்கன்பர்
ஆலினசிந்தைபோலவலர்ந்தனகதிர்களெல்லாம் (௨௧)

பத்தியின்பாலராகிப்பரமனுக்காளாமன்பர்
தத்தமிற்கூடினார்கடலையினால்வணங்குமாபோல்
மொய்த்தநீள்பத்தியின்பான்முதிர்தலைவணங்கிமற்றை
வித்தகர்தன்மைபோலவிளைந்தனசாலியெல்லாம் (௨௨)

அரிதருசெந்நெற்சூட்டினடுக்கியவடுக்கல்சேர்ப்பார்
பரிவுறத்தடிந்தபன்மீன்படர்நெடுங்குன்றுசெய்வார்
சுரிவளைசொரிந்தமுத்தின்சுடர்ப்பெரும்பொருப்புயர்ப்பார்
விரிமலர்க்கற்றைவேரிபொழிந்திழிவெற்புவைப்பார் (௨௩)

சாலியின்கற்றைதுற்றதடவரைமுகடுசாய்த்துக்
காலிரும்பகடுபோக்குங்கரும்பெரும்பாண்டிலீட்டம்
ஆலியமுகிலின்கூட்டமருவரைச்சிமயச்சாரல்
மேல்வலங்கொண்டுசூழுங்காட்சியின்மிக்கவன்றே (௨௪)

வைதெரிந்தகற்றியாற்றிமழைபெயன்மானத்தூற்றிச்
செய்பொற்குன்றும்வேறுநவமணிச்சிலம்புமென்னக்
கைவினைமள்ளர்வானங்கரக்கவாக்கியநெற்குன்றால்
மொய்வரையுலகம்போலுமுளரிநீர்மருதவைப்பு (௨௫)

அரசுகொள்கடன்களாற்றிமிகுதிகொண்டறங்கள்பேணிப்
பரவருங்கடவுட்போற்றிக்குரவரும்விருந்தும்பண்பின்
விரவியகிளையுந்தாங்கிவிளங்கியகுடிகளோங்கி
வரைபுரைமாடநீடி மலர்ந்துளபதிகளெங்கும் (௨௬)

கரும்படுகளமராலைக்கமழ்நறும்புகையோமாதர்
சுரும்பெழவகிலாலிட்டதூபமோயூபவேள்விப்
பெரும்பெயர்ச்சாலைதோறும்பிறங்கியபுகையோவானின்
வருங்கருமுகிலோசூழ்வ மாடமுங்காவுமெங்கும் (௨௭)

நாளிகேரஞ்செருந்திநறுமலர்நரந்தமெங்குங்
கோளிசாலந்தமாலங்குளிர்மலர்க்குரவமெங்குந்
தாளிரும்போந்துசந்துதண்மலர்நாகமெங்கு
நீளிலைவஞ்சிகாஞ்சிநிறைமலர்க்கோங்கமெங்கும் (௨௮)

சூதபாடலங்களெங்குஞ்சூழ்வழைஞாழலெங்குஞ்
சாதிமாலதிகளெங்குந்தண்டளிர்நறவமெங்கு
மாதவிச்சரளமெங்கும்வகுளசண்பகங்களெங்கும்
போதவிழ்கைதையெங்கும்பூகபுன்னாகமெங்கும் (௨௯)

மங்கலவினைகளெங்குமணஞ்செய்கம்பலைகளெங்கும்
பங்கயவதனமெங்கும்பண்களின்மழலையெங்குந்
பொங்கொளிக்கலன்களெங்கும்புதுமலர்ப்பந்தரெங்குஞ்
செங்கயல்பழனமெங்குந்திருமகளுறையுளெங்கும் (௩௰)

மேகமுங்களிறுமெங்கும்வேதமுங்கிடையுமெங்கும்
யாகமுஞ்சடங்குமெங்குமின்பமுமகிழ்வுமெங்கும்
யோகமுந்தவமுமெங்குமூசலுமறுகுமெங்கும்
போகமும்பொலிவுமெங்கும்புண்ணியமுனிவரெங்கும் (௩௧)

பண்டருவிபஞ்சியெங்கும்பாதசெம்பஞ்சியெங்கும்
வண்டறைகுழல்களெங்கும்வளரிசைக்குழல்களெங்குந்
தொண்டர்தமிருக்கையெங்குஞ் சொல்லுவதிருக்கையெங்குந்
தண்டலைப்பலவுமெங்குந்தாதகிபலவுமெங்கும் (௩௨)

மாடுபோதகங்களெங்கும்வண்டுபோதகங்களெங்கும்
பாடுமம்மனைகளெங்கும்பயிலுமம்மனைகளெங்கும்
நீடுகேதனங்களெங்குநிதிநிகேதனங்களெங்குந்
தோடுசூழ்மாலையெங்குந்துணைவர்சூழ்மாலையெங்கும் (௩௩)

வீதிகள்விழவினார்ப்பும்விரும்பினர்விருந்தினார்ப்புஞ்
சாதிகணெறியிற்றப்பாதநயருமனையிற்றப்பா
நீதியபுள்ளுமாவு நிலத்திருப்புள்ளுமாவு
மோதியவெழுத்தாமஞ்சுமுறுபிணிவரத்தாமஞ்சும் (௩௪)

நற்றமிழ்வரைப்பினோங்குநாம்புகழ்திருநாடென்றும்
பொற்றடந்தோளால்வையம்பொதுக்கடிந்தினிதுகாக்குங்
கொற்றவனநபாயன்பொற் குடைநிழற்குளிர்வதென்றால்
மற்றதன்பெருமைநம்மால் வரம்புறவிளம்பலாமோ. (௩௫)

திருநாட்டுச்சிறப்பு- முற்றிற்று. ஆகத்திருவிருத்தம்- ௮௰௫.







சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவாரூர்ச்சிறப்பு.

வேறு.

சொன்னநாட்டிடைத்தொன்மையின்மிக்கது
மன்னுமாமலராள்வழிபட்டது
வன்னியாறுமதிபொதிசெஞ்சடைச்
சென்னியார்திருவாரூர்த்திருநகர் (௧)

வேதவோசையும்வீணையினோசையுஞ்
சோதிவானவர்தோத்திரவோசையு
மாதராடன்மணிமுழவோசையுங்
கீதவோசையுமாய்க்கிளர்வுற்றதே. (௨)

பல்லியங்கள்பரந்தவொலியுடன்
செல்வவீதிச்செழுமணித்தேரொலி
மல்லலியானையொலியுடன்மாவொலி
எல்லையின்றியெழுந்துளவெங்கணும். (௩)

மாடமாளிகைசூளிகைமண்டபங்
கூடசாலைகள்கோபுரந்தெற்றிகள்
நீடுசாளரநீடரங்கெங்கணும்
ஆடன்மாதரணிசிலம்பார்ப்பன. (௪)

அங்குணாக்கென்னளவப்பதியிலார்
தங்கண்மாளிகையின்ஞென்றுசப்புவின்
பங்கினுடிருச்சேடிபரவையா
மங்கையாரவதாரஞ்செய்மாளிகை. (௫)

படர்ந்தபேரொளிப்பன்மணிவீதிதான்
இடந்தவேனமுமன்னமுந்தேடுவார்
தொடர்ந்துகொண்டவன்றொண்டர்க்குத்தூதுபோய்
நடந்தசெந்தாமரையடிநாறுமால். (௬)

செங்கண்மாதர்தெருவிற்றெளித்தசெங்
குங்குமத்தின்குழம்பையவர்குழற்
பொங்குகோதையிற்பூந்துகள்வீழ்ந்துடன்
அங்கண்மேவியளறுபுலர்த்துமால். (௭)

உள்ளமாருருகாதவரூர்விடை
வள்ளலார்திருவாரூர்மருங்கெலாந்
தெள்ளுமோசைத்திருப்பதிகங்கள்பைங்
கிள்ளைபாடுவகேட்பனபூவைகள், (௮)

விளக்கமிக்ககலன்கள்விரவலாற்
றுளக்கில்பேரொலியாற்றுன்னுபண்டங்கள்
வளத்தொடும்பலவாறுமடுத்தலால்
அளக்கர்போன்றனவாவணவீதிகள். (௯)

ஆரணங்களேயல்லமறுகிடை
வாரணங்களுமாறிமுழங்குமால்
சீரணங்கியதேவர்களேயலாற்
றோரணங்களிற்றூமமுஞ்சூழுமால். (௰)

தாழ்ந்தவேணியர்சைவர்தபோதனர்
வாழ்ந்தசிந்தைமுனிவர்மறையவர்
வீழ்ந்தவின்பத்துறையில்விரவுவார்
சூழ்ந்தபல்வேறிடத்ததத்தொன்னகர். (௰௧)

நிலமகட்கழகார்தருநீணுதற்
திலகமொப்பதுசெம்பியர்வாழ்பதி
மலர்மகட்குவண்டாமரைபோன்மலர்ந்
தலகில்சீர்த்திருவாரூர்விளங்குமால். (௰௨)

அன்னதொன்னகருக்கரசாயினன்
றுன்னும்வெங்கதிரோன்வழித்தோன்றினன்
மன்னுசீரநபாயன்வழிமுதன்
மின்னுமாமணிப்பூண்மனுவேந்தனே. (௰௩)

மண்ணில்வாழ்தருமன்னுயிர்கட்கெலாங்
கண்ணுமாவியுமாம்பெருங்காவலான்
விண்ணுளோர்மகிழ்வெய்திடவேள்விகள்
எண்ணிலாதனமாணவியற்றினன். (௰௪)

கொற்றவாழி நுவலயஞ் சூழ்ந்திடச்
சுற்றுமன்னர் திறைகடை சூழ்ந்திடச்
செற்றநீக்கிய செம்மையின் மெய்ம்மனு
பெற்றநீதியுந் தன்பெயராக்கினான். (௰௫)

பொங்குமாமறைப் புற்றிடங்கொண்டவர்
எங்குமாகியிருந்தவர் பூசனைக்
கங்கண்வேண்டு நிமந்தமாராய்ந்துளான்
றுங்கவாகமஞ் சொன்னமுறைமையால். (௰௬)

வேறு.

அறம்பொருளின்பமான வறநெறிவழாமற் புல்லி
மறங்கடிந்தரசர் போற்றவையகங் காக்குநாளிற்
சிறந்தநற்றவத்தாற் றேவிதிருமணி வயிற்றுமைந்தன்
பிறந்தனனுலகம் போற்றப் பேரரிக் குருளையன்னான். (௰௭)

கலைமுயன்றறிதிற் பெற்றதனியிளங் குமரனுஞ்
சிவமுயன்றடையுந் தெய்வக் கலைபலதிருந்த வோதிக்
கவனவாம்புரவியானைதேர் படைத்தொழில்கள் கற்றுப்
பவமுயன்றதுவும் பேறேயெனவரும் பண்பின்மிக்கான். (௰௮)

அளவின்றுகலைகண் முற்றியரும்பெறற்றந்தைமிக்க
வுளமகிழ் காதல்கூர வோங்கியகுணத்தானீடு
இளவரசென்னுந் தன்மையெய்துதற் கணியனாகி
வளரிளம்பரிதி போன்றுவாழுநாளொருநாண் மைந்தன். (௰௯)

திங்கள்வெண்கவிகை மன்னன் றிருவளர் கோயினின்று
மங்குமேருய்ம்மாட வீதிமன்னிளங் குமரர்சூழக்
கொங்கலர்மாலைதாழ்ந்து துசுங்குமங் குலவுந்தோளான்
பொங்கியதானை சூழத் தேர்மிசைப் பொலிந்துபோந்தான். (௨௰)

பரசு * வந்தியர்முன் சூதர் மாகதரொருபார் பாங்கர்
விரைநறுங் குழலார் சிந்தும் வெள்வளையொருபான் மிக்க
முரசொலி சங்கமார்ப்ப முழங்கொலியொருபால் வென்றி
அரசிளங்குமரன் போதுமணிமணிமாட வீதி (௨௧)

தனிப்பெருந் தருமந்தானோர் தயாவின்றித் தானைமன்னன்
பனிப்பில் சிந்தையினினுண்மைப் பான்மைசோதித்தாலென்ன
மனித்தர் தன்வரவு காணுமண்ணமோர் வண்ணநல்லான்
புனிற்றிளங்கன்று துள்ளிப் போர்ச்சகம் மறுகினூடு (௨௨)

* வந்தியர் - மங்கலப்பாடகர். சூதர் - பாணர் - மாகதர் ஒருவர்
வீரமுதலியவற்றைப் புகழ்வோர்.

அம்புனிற்றாவின்கன்றோரபாயத்தி னூடுபோகிச்
செம்பொனின்றேர்க்கான்மீதுவிசையினாற்செல்லப்பட்டே
யும்பரினடையக்கண்டங்குருகுதாயலமந்தோடி
வெம்பிடுமல்றுஞ்சோருமெய்ந்நடுக்குற்றுவீழும். (௨௩)

மற்றதுகண்டுமைந்தன்வந்ததிங்கபாயமென்று
சொற்றடுமாறிநெஞ்சிற்றுயருழந்தறிவழிந்து
பெற்றமுங்கன்றுமின்றெனுணர்வெனும்பெருமைமாளச்
செற்றவென்செய்கேனென்றுதேரினின்றிழிந்துவீழ்ந்தான். (௨௪)

அலறுபேராவைநோக்கியாருயிர்பதைத்துச்சோரு
நிலமிசைக்கன்றைநோக்கிநெடிதுயிர்த்திரங்கிநிற்கு
மலர்தலையுலகங்காக்குமனுவெனுமென்கோமானுக்
குலகிலிப்பழிவந்தெய்தப்பிறந்தவாவொருவனென்பான். (௨௫)

வந்தவிப்பழியைமாற்றும்வகையினைமறைநூல்வாய்மை
அந்தணர்விதித்தவாற்றாலாற்றுவதறமேயாகில்
எந்தைமீதறியாமுன்னமியற்றுவனென்றுமைந்தன்
சிந்தைவெந்துயரந்தீர்ப்பான்றிருமறையவர்முன்சென்றான். (௨௬)

தன்னுயிர்க்கன்றுவீயத்தளர்ந்தவாத்தரியாதாகி
முன்னெருப்புயிர்த்துவிம்மிமுகத்தினிற்கண்ணீர்வார
மன்னுயிர்காக்குஞ்செங்கோன்மனுவின்பொற்கோயில்வாயிற்
பொன்னணிமணியைச்சென்றுகோட்டினாற்புடைத்ததன்றே. (௨௭)

பழிப்பறைமுழக்கோவார்க்கும்பாவத்தினொலியோவேந்தன்
வழித்திருமைந்தனாவிகொளவருமறலியூர்திக்
கழுத்தணிமணியினார்ப்போவென்னத்தன்கடைமுன்கேளாத்
தெழித்தெழுமோசைமன்னன்செவிப்புலம்புக்கபோது. (௨௮)

ஆங்கதுகேட்டவேந்தனரியணையிழிந்துபோந்து
பூங்கொடிவாயினண்ணக்காவலரெதிரேபோற்றி
ஈங்கிதோர்பசுவந்தெய்தியிறைவநின்கொற்றவாயிற்
றூங்கியமணியைக்கோட்டாற்றுளக்கியதென்றுசொன்னார். (௨௯)

மன்னவனதனைக்கேளாவருந்தியபசுவைநோக்கி
என்னிதற்குற்றதென்பானமைச்சனையிகழ்ந்துநோக்க
முன்னுறநிகழ்ந்ததெல்லாமறிந்துளான்முதிர்ந்தகேள்வித்
தொன்னெறியமைச்சன்மன்னன்றாளிணைதொழுதுசொல்வான் (௩௰)

வளவநின்புதல்வனுங்கோர்மணிநெடுந்தேர்மேலேறி
அளவிறேர்த்தானைசூழவரசுலாந்தெருவிற்போங்கால்
இளையவான்கன்றுதேர்க்காலிடைப்புகுந்திறந்ததாகத்
தளர்வுறுமித்தாய்வந்துவிளைத்ததித்தன்மையென்றான். (௩௧)

அவ்வுரைகேட்டவேந்தனுவுறுதுயரமெய்தி
வெவ்விடந்தலைக்கொண்டாற்போல்வேதனையகத்துமிக்கிங்
கிவ்வினைவிளைந்தவாவென்றிடருறுமிரங்குமேங்குஞ்
செவ்விதென்செங்கோலென்னுந்தெருமருந்தெளியுந்தேறான் (௩௨)

மன்னுயிர்புரந்துவையம்பொதுக்கடிந்தறத்தினீடு
மென்னெறிநன்றாலென்னுமென்செய்தாற்றீருமென்னுந்
தன்னிளங்கன்றுகாணுத்தாய்முகங்கண்டுசோரும்
அந்நிலையரசனுற்றதுயரமோரளவிற்றன்றால். (௩௩)

வேறு

மந்திரிகளதுகண்டுமன்னவனையடிவணங்கிச்
சிந்தைதளர்ந்தருளுவதுமற்றிதற்குத்தீர்வன்றால்
கொந்தலர்த்தார்மைந்தனைமுன்கோவதைசெய்தார்க்குமறை
யந்தணர்கள்விதித்தமுறைவழிநிறுத்தலறமென்றார். (௩௪)

வழக்கென்றுநீர்மொழிந்தால்மற்றதுதான்வலிப்பட்டுக்
குழக்கன்றையிழந்தலறுங்கோவுறுநோய்மருந்தாமோ
இழக்கின்றேன்மைந்தனையென்றெல்லீருஞ்சொல்லியவிச்
சழக்கின்றுநானியைந்தாற்றருமந்தான்சலியாதோ. (௩௫)

மாநிலங்காவலனுவான்மன்னுயிர்காக்குங்காலைத்
தானதனுக்கிடையூறுதன்னாற்றன்பரிசனத்தால்
ஊனமிகுபகைத்திறத்தாற்கள்வராலுயிர்தம்மால்
ஆனபயமைந்துந்தீர்த்தறங்காட்பானல்லனோ (௩௬)

என்மகன்செய்பாதகத்துக்கிருந்தவங்கள்செயவிசைந்தேன்
அன்னியமோருயிர்கொன்றாலவனைக்கொல்வேனானாற்
றொன்மனுநூற்றொடைமனுவாற்றுடைப்புண்டதெனும்வார்த்தை
மன்னுலகிற்பெறமொழிந்தீர்மந்திரிகள்வழக்கென்றான் (௩௭)

என்றரசனிகழ்ந்துரைப்பவெதிர்நின்றமதியமைச்சர்
நின்றநெறியுலகின்கணிதுபோன்முனிகழ்ந்ததாற்
பொன்றுவித்தன்மரபன்றுமறைமொழிந்தவறம்புரித
லொன்றுதொடுநெறியன்றேதொன்னிலங்காவலவென்றார் (௩௮

அவ்வண்ணந்தொழுதுரைத்தவமைச்சர்களை முகநோக்கி
மெய்வ்வண்ணந்தெரிந்துணர்ந்தமனுவென்னுந்திறல்வேந்தன்
இவ்வண்ணம்பழுதுரைத்தீரென்றெரியினிடைத்தோய்ந்த
செவ்வண்ணக்கமலம்போன்முகம்புலர்ந்துசெயிர்த்துரைப்பான் ()

அவ்வுரையில்வருநெறிகளவைநிற்கவறநெறியின்
செவ்வியவுண்மைத்திறநீர்சிந்தைசெயாதுரைக்கின்றீர்
எவ்வுலகிலெப்பெற்றமிப்பெற்றித்தாமிடரால்
வெவ்வுயிர்த்துக்கதறிமணியெறிந்துவிழுந்ததுவிளம்பீர் (௪௰)

போற்றிசைத்துப்புரந்தரன்மாலயன்முதலோர்புகழ்ந்திறைஞ்ச
வீற்றிருந்தபெருமானார்மேவியுறைதிருவாரூர்த்
தோற்றமுடையுயிர்கொன்றானாதலினாற்றுணிபொருடான்
ஆற்றவுமற்றவற்கொல்லுமதுவேயாமெனநினைமின் (௪௧)

எனமொழிந்துமற்றிதனுக்கினியிதுவேசெயலிவ்வான்
மனமழியுந்துயரகற்றமாட்டாதேன்வருந்துமிது
தனதுறுபேரிடர்யானுந்தாங்குவதேகருமமென
அனகனரும்பொருடுணிந்தானமைச்சருமஞ்சினரகன்றார் (௪௨)

மன்னவன்றன்மைந்தனையங்கழைத்தொருமந்திரிதன்னை
முன்னிவனையவ்வீதிமுரண்டேர்க்காலூர்கவென
அன்னவனுமதுசெய்யாதகன்றுதன்னாருயிர்துறப்பத்
தன்னுடையகுலமைந்தனைத்தான்கொண்டுமறுகணைந்தான் (௪௩)

ஒருமைந்தன்றன்குலத்துக்குள்ளானென்பதுமுணரான்
றருமந்தன்வழிச்செல்கைகடனென்றுதன்மைந்தன்
மருமந்தன்றேராழியுறவூர்ந்தான்மனுவேந்தன்
அருமந்தவரசாட்சியரிதோமற்றெளிதோதான் ( )

தண்ணளிவெண்குடைவேந்தன்செயல்கண்டுதரியாது
மண்ணவர்கண்மழைபொழிந்தார் வானவர்பூமழைபொழிந்தார்
அண்ணலவன்கண்ணெதிரேயணிவீதிமழவிடைமேல்
விண்ணவர்கடொழநின்றான்வீதிவிடங்கப்பெருமான் (௪௫)

சடைமருங்கிலிளம்பிறையுந்தனிவிழிக்குந்திருநுதலும்
இடமருங்கிலுமையாளுமெம்மருங்கும்பூதகணம்
புடைநெருங்கும்பெருமையுமுன்கண்டரசன்போற்றிசைப்ப
விடைமருவும்பெருமானும் விறல்வேந்தற்கருள்கொடுத்தான் ( )

அந்நிலையேயுயிர்பிரிந்தவான்கன்றுமவ்வரசன்
மன்னுரிமைத்தனிக்கன்றுமந்திரியுமுடனெழவும்
இன்னபரிசானென்றறிந்திலன்வேந்தனும்யார்க்கு
முன்னவனைமுன்னின்றுன்முடியாதபொருளுளதோ. (௪௭)

அடிபணிந்ததிருமகனையாகமுறவெடுத்தணைத்து
நெடிதுமகிழ்ந்தருந்துயரநீங்கினனிலவேந்தன்
மடிசுரந்துபொழிதீம்பால்வருங்கன்றுமகிழ்ந்துண்டு
படிநனையவரும்பசுவும்பருவரனீங்கியதன்றே. (௪௮)

பொன்றயங்குமதிலாரூர்ப்பூங்கோயிலமர்ந்தபிரான்
வென்றிமனுவேந்தனுக்குவீதியிலேயருள்கொடுத்துச்
சென்றருளும்பெருங்கருணைத்திறங்கண்டுதன்னடியார்க்
கென்றுமெளிவரும்பெருமையேயுலகுமெடுத்தேத்தும் (௪௯)

இனையவகையறநெறியிலெண்ணிறந்தோர்க்கருள்புரிந்து
முனைவரவர்மகிழ்ந்தருளப்பெற்றுடையமூதூர்மேற்
புனைபுமுனாநம்மளவிற்புகலலாந்தகைமையதோ
அனையதனுக்ககமலரா மறவனூர்பூங்கோயில். (௫௰)

திருவாரூர்ச்சிறப்புமுற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௱௪௫



திருச்சிற்றம்பலம்.

# திருக்கூட்டச்சிறப்பு.

பூதநாயகர்புற்றிடங்கொண்டவர்
ஆதிதேவரமர்ந்தபூங்கோயிலிற்
சோதிமாமணிநீள்சுடர்முன்றில்சூழ்
மூதெயிற்றிருவாயின்முன்னது. 

பூவார்திசைமுகனிந்திரன்பூமிசை
மாவாழகலத்துமான்முதல்வானவர்
ஓவாதெவருநிறைந்துறைந்துள்ளது
தேவாசிரியனெனுந்திருக்காவணம். (௨)

அரந்தைதீர்க்குமடியவர்மேனிமேல்
நிரந்தநீற்றொளியானிறைதூய்மையாற்

புரந்தவஞ்செழுத்தோசைபொலிதலாற்
பரந்தவாயிரம் பாற்கடல்போல்வது (௩)

அகிலகாரணர்தாள்பணிவார்கடாம்
அகிலலோகமுமாடற்குரியரொன்
றகிலலோகத்துளார்களடைதலின்
அகிலலோகமும்போல்வதன்மை (௪)

அத்தர்வேண்டிமுன்னாண்டவரன்பினுன்
மெய்த்தழைத்து விருப்புறுசிந்தையார்
மைத்திருத்தொண்டுசெய்கடப்பாட்டினர்
இத்திறத்தவரன்றியுமெண்ணிலார் (௫)

மாசிலாதமணிதிகழ்மேனிமேற்
பூசுநீறுபோலுள்ளும்புனிதர்கள்
தேசினாலெத்திசையும்விளக்கினர்
பேசவொண்ணாப்பெருமைபிறங்கினர் (௬)

பூதமைந்துநிலையிற்கலங்கினும்
மாதோர்பாகர்மலர்த்தாண்மறப்பிலார்
ஓதுகாத லுறைப்பினெறிநின்றார்
கோதிலாதகுணப்பெருங்குன்றினர் (௭)

கேடுமாக்கமுங்கெட்டதிருவினர்
ஓடுஞ்செம்பொனுமொக்கவேநோக்குவார்
கூடுமன்பினிற்கும்பிடலேயன்றி
வீடும்வேண்டாவிறலின்விளங்கினர் (௮)

ஆரங்கண்டிகையாடையுங்கந்தையே
பாரமீசன்பணியலதொன்றிலார்
ஈரவன்பினர்யாதுங்குறைவிலார்
வீரமென்னால்விளம்புந்தகையதோ (௯)

வேண்டுமாறுவிருப்புறும்வேடத்தர்
தாண்டவப்பெருமான்றனித்தொண்டர்க
ணீண்டதொல்புகழார்தந்நிலைமையை
ஈண்டுவாழ்த்துகென்னறிந்தேத்துகேன் (௰)

இந்தமாதவர்கூட்டத்தையெம்பிரான்
அந்தமில்புகழாலாலசுந்தரன்
சுந்தரத்திருத்தொண்டத்தொகைத்தமிழ்
வந்துபாடியவண்ணமுரைசெய்வாம். (௰க)

திருக்கூட்டச்சிறப்புமுற்றிற்று. ஆக திருவிருத்தம், ௱௫௬

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# தடுத்தாட்கொண்ட புராணம்.

வேறு.

கங்கையுமதியும்பாம்புங்கடுக்கையுமுடிமேல்வைத்த
அங்கணரோலைகாட்டியாண்டவர்தமக்குநாடு
மங்கையர்வதனசீதமதியிருமருங்குமோடிச்
செங்கயல்குழைகளுடுந்திருமுனைப்பாடிநாடு. (௧)

பெருகியவளத்தான்மிக்கபெருந்திருநாடுதன்னில்
அருமறைச்சைவமோங்கவருளினாலவதரித்த
மருவியதவத்தான்மிக்கவளம்பதிவாய்மைகுன்றாத்
திருமறையவர்கணீடுந்திருநாவலூராமன்றே. (௨)

மாதொருபாகனுர்க்குவழிவழியடிமைசெய்யும்
வேதியர்குலத்துட்டோன்றிமேம்படுசடையனருக்
கேதமில்கற்பின்வாழ்க்கைமனையிசைஞானியார்பாற்
றீதகன்றுலகமுய்யத்திருவவதாரஞ்செய்தார். (௩)

தம்பிரானருளினலேதவத்தினன்மிக்கார்பெற்று
நம்பியாரூரரென்றேநாமமுஞ்சாற்றிமிக்க
படைச் சதங்கைசாத்தி யணிமணிச்சுட்டிசாத்திச்
ம்பொனுணாயின்மின்னத்தெருவிற்றேருருட்டுநாளில் ()

ங் கமுனையரொன்னுநாடுவாழரசர்கண்டு
பருங்காதல்கூரப்பயந்தவர்தம்பாற்சென்று
விய நண்பினலேவேண்டினர்பெற்றுத்தங்கள்
சிளங்குமரற்கேற்பவன்பினன் *மகன்மைகொண்டார் (௫)

ருமைசாலரசர்காதற்பிள்ளையாய்ப்பின்னுந்தங்கள்
முறைமரபின்வைகிவளர்ந்துமங்கலஞ்செய்கோலத்
மறைமுந்நூல்சாத்தியளவிறுல்கலைகளாய்ந்து
டமலிசிறப்பினேங்கிச்சீர்மணப்பருவஞ்சேர்ந்தார். (௬)

---

* மகன்மை - மக்கட்டன்மை.

தந்தையார்சடையனார்தந்தனித்திருமகற்குச்சைவ
அந்தணர்குலத்துட்டங்களரும்பெருமரபுக்கேற்ப
வந்ததோர்சிறப்பிற்புத்தூர்ச்சடங்கவிமறையோன்றன்பாற்
செந்திருவனையகன்னிமணத்திறஞ்செப்பிவிட்டார். (எ)

குலமுதலறிவுமிக்ககோத்திரமுறையுந்தேர்ந்தார்
நலமிகுமுதியோர்சொல்லச்சடங்கவிநன்மையேற்று
மலர்தருமுகத்தனாகிமணம்புரிசெயலின்வாய்மை
பலவுடன்பேசியொத்தபண்பினாலன்புநேர்ந்தான். (அ)

மற்றவனிசைந்தவார்த்தைகேட்டவர்வள்ளறன்னைப்
பெற்றவர்தம்பாற்சென்றுசொன்னபின்பெருகுசிந்தை
யுற்றதோர்மகிழ்ச்சியெய்திமணவினையுவந்துசாற்றிக்
கொற்றவர்திருவுக்கேற்பக்குறித்தநாளோலைவிட்டார். (கூ)

மங்கலம்பொலியச்செய்தமணவினையோலையேந்தி
யங்கயற்கண்ணினாருமாடவர்பலருமீண்டிக்
கொங்கலர்ச்சோலைமூதூர்குறுகினாரெதிரேவந்து
பங்கயவதனிமாருமைந்தரும்பணிந்துகொண்டார். (௰)

மகிழ்ச்சியான்மணமீக்கூறிமங்கலவினைகளெல்லாம்
புகழ்ச்சியாற்பொலிந்துதோன்றப்போற்றியதொழிலராகி
யிகழ்ச்சியொன்றானுமின்றியேந்துபூமாலைப்பந்தர்
நிகழ்ச்சியின்மைந்தரீண்டிநீண்முளைசாத்தினார்கள். (௰க)

மணவினைக்கமைந்தசெய்கைமாதினைப்பயந்தார்செய்யத்
துணர்மலர்க்கோதைத்தாமச்சுரும்பணைதோளினானைப்
புணர்மணத்திருநாண்முன்னாட்பொருந்தியவிதியினாலே
பணைமுரசியம்பவாழ்த்திப்பைம்பொனாண்காப்புச்சேர்த்தார்.)

மாமறைவிதிவழாமன்மணத்துறைக்கடன்களாற்றித்
தூமறைமூதூர்க்கங்குன்மங்கலந்துவன்றியார்ப்பத்
தேமருதொடையன்மார்பன்றிருமணக்கோலங்காணக்
காமுறுமனத்தான்போலக்கதிரவனுதயஞ்செய்தான். (௰உ)

காலைசெய்வினைகண்முற்றிக்கணிதநூற்புலவர்சொன்ன
வேலைவந்தணையாமுன்னர்விதிமணக்கோலங்கொள்வா
னாலசைந்திலங்குமார்பினணங்கியகேள்விமேலோன்
மாலையுந்தாரும்பொங்கமஞ்சனச்சாலைபுக்கான். (௰௩)

வாசநெய்யூட்டிமிக்கமலர்விரையடுத்ததூநீர்ப்
பாசனத்தமைந்தபாங்கர்பருமணிப்பைம்பொற்றிண்கால்
ஆசனத்தணிநீராட்டியரிசனஞ்சாத்தியன்பால்
ஈசனுக்கினியான்மேனியெழில்பெறவிளக்கினர்கள். (௰௫)

அகில்விரைத்தூபமேய்ந்தவணிகொள்பட்டாடைசாத்தி
முகிலுழைமதியம்போலக்கைவலான்முன்கைசூழ்ந்த
துகில்கொடுகுஞ்சியீரம்புலர்த்தித்தன்றூயசெங்கை
யுகிர்நுதிமுறையிற்போக்கியொளிர்நறுஞ்சிகழியார்த்தான்௰௬

தூநறும்பசுங்கர்ப்பூரச்சுண்ணத்தால்வண்ணப்போதில்
ஆனதண்பனிநீர்கூடவமைந்தசந்தனச்சேறுட்டி
மான்மதச்சாந்துதோய்ந்தமங்கலக்கலவைசாத்திப்
பான்முறைமுந்நூன்மின்னப்பவித்திரஞ்சிறந்தகையான் (௰௭)

தூமலர்ப்பிணைபன்மாலைதுணரிணர்க்கண்ணிக்கோதை
தாமமென்றிணையவேறுதகுதியாலமையச்சாத்தி
மாமணிபணிந்ததூயவளரொளியிருள்கால்சீக்கு
நாமநீள்கலன்கள்சாத்திநன்மணக்கோலங்கொண்டான். (௰௮)

மன்னவர்திருவுந்தங்கள்வைதிகத்திருவும்பொங்க
நன்னகர்விழவுகொள்ளநம்பியாரூரர்நாதன்
றன்னடிமனத்துட்கொண்டுதகுந்திருநீறுசாத்திப்
பொன்னணிமணிபார்யோகப்புரவிமேற்கொண்டுபோந்தார்.(

இயம்பலதுவைப்பவெங்குமேத்தொலியெடுப்பமாதர்
நயந்துபல்லாண்டுபோற்றநான்மறையொலியின்றோங்க
வியந்துயிர்விரும்பவந்துவிரவினர்க்கின்பஞ்செய்த
வுயர்ந்தவாகனயானங்களமிசைக்கொண்டாருழையரானார். ()

மங்கலகீதநாதமறையவர்குழாங்களோடும்
தொங்கலும்விரையுஞ்சூழ்ந்தமைந்தருந்துவன்றிச்சூதும்
பங்கயமுகையுஞ்சாய்த்துப்பணைத்தெழுந்தணியின்மிக்க
குங்குமமுலையினாரும்பரந்தெழுகொள்கைத்தாகி. (உக)

அருங்கடியெழுந்தபோதினார்த்தவெள்வளைகளாலும்
இருந்துழைமகரத்தாலுமிலங்கொளிமணிகளாலு
நெருங்கியபீலிச்சோலைநீணிறத்தரங்கத்தாலுங்
கருங்கடல்கிளர்ந்ததென்னக்காட்சியிற்பொலிந்ததன்றே (உஉ)

நெருங்குதூரியங்களெங்கநிரைத்தசாமரைகளோங்கப்
பெருங்குடைமிடைந்துசெல்லப்பிறங்குபூங்கொடிகளாட
அருங்கடிமணம்வந்தெய்தவன்றுதொட்டென்றுமன்பில்
வருங்குலமறையோர்புத்தூர்மணம்வந்தபுத்தூராமால் (உரு)

நிறைகுடந்தூபதீபநெருங்குபாலிகைகளேந்தி
நறைமலர்அறுதசுண்ணநறும்பொரி பலவும்வீசி
யுறைமலிகலவைச்சாந்தினுறுபுனறெளித்துவீதி
மறையவர்மடவார்வள்ளன்மணமெதிர்கொள்ளவந்தார் (உச)

கண்களெண்ணிலாதவேண்டுங்காளையைக்காணவென்பார்
பெண்களிலுயரநோற்றாள்சடங்கவிபேதையென்பார்
மண்களிகூரவந்தமணங்கண்டுவாழ்ந்தோமென்பார்
பண்களினிறைந்தகீதம்பாடுவாராடுவார்கள் (உரு)

ஆண்டகையருளினோக்கின்வெள்ளத்துளலைந்தோமென்பார்
தாண்டியபரியுநம்பாற்றகுதியினடைந்ததென்பார்
பூண்டயங்கிவனேகாணும்புண்ணியமூர்த்தியென்பார்
ஈண்டியமடவார்கூட்டமின்னனவிசைப்பச்சென்றார் (உசா)

வருமணக்கோலத்தெங்கள்வள்ளலார்தெள்ளும்வாசத்
திருமணப்பந்தர்முன்புசென்றுவெண்சங்கமெங்கும்
பெருமழைக்குலத்தினார்ப்பப்பரிமிசையிழிந்துபேணும்
ஒருமணத்திறத்தினங்குநிகழ்ந்ததுமொழிவேனுய்ந்தேன் (உஎ

வேறு.

ஆலுமறைசூழ்கயிலையின்கணருள்செய்த
சாலுமொழிபால்வழிதடுத்தடிமைகொள்வான்
மேலுறவெழுந்துமிகுகீழுறவகழ்ந்து
மாலுமிருவர்க்குமரியாரொருவர்வந்தார். (உஅ)

கண்ணிடைகரந்தகதிர்வெண்படமெனச்சூழ்
புண்ணியநுதற்புனிதநீறுபொலிவெய்தத்
தண்மதிமுதிர்ந்துகதிர்சாய்வதெனமீதே
வெண்ணரைமுடித்திதுவிழுந்திடைசழங்க (உகூ)

காதிலணிகண்டிகைவடிந்தகுழைதாழச்
சோதிமணிமார்பின்மிசைநூலினொடுதோளின்
மீதுபுனையுத்தரியவெண்டுகிலுடங்க
ஆதபமறைக்குடையணிக்கரம்விளங்க, (௩௰)

பண்டிசரிகோவணவுடைப்பழமைகூரக்
கொண்டதொர்சழங்கலுடையார்ந்தழகுகொள்ள
வெண்டுகிலுடன்குசைமுடிந்துவிடுவேணுத்
தண்டொருகைகொண்டுகழறள்ளுநடைகொள்ள. (௩௧)

மொய்த்துவளர்பேரழகுமூத்தவடிவேயோ
அத்தகையமூப்பெனுமதன்படிவமேயோ
மெய்த்தநெறிவைதிகம்விளைத்தமுதலேயோ
இத்தகையவேடமெனவையமுறவெய்தி. (௩௨)

வந்துதிருமாமறைமணத்தொழிறொடங்கும்
பந்தரிடைநம்பியெதிர்பன்னுசபைமுன்னின்
றிந்தமொழிகேண்மினெதிர்யாவர்களுமென்றான்
முந்தைமறையாயிரமொழிந்ததிருவாயான். (௩௩)

என்றுரைசெயந்தணனையெண்ணின்மறையோரு
மன்றல்வினைமங்கலமடங்கலனையானு
நன்றுமதுநல்வரவுநங்கடவமென்றே
நின்றதிவணீர்மொழிமினீர்மொழிவதென்றார், (௩௪)

பிஞ்ஞகனுநாவலர்பெருந்தகையைநோக்கி
என்னிடையுநின்னிடையுநின்றவிசைவால்யான்
முன்னுடையதோர்பெருவழக்கினைமுடித்தே
நின்னுடையவேள்வியினைநீமுயறியென்றான் (௩௫)

நெற்றிவிழியான்மொழியநின்றதிகிரில்லா
னுற்றதோர்வழக்கெனிடைநீயுடையதுண்டேன்
மற்றதுமுடித்தலதுபான்வதுவைசெய்யேன்
முற்றவினிசொல்லுகெனவெல்லைமுடிவில்லான் (௩௬)

ஆவதிதுகேண்மின்மறையோரெனடியானிந்
நாவலனகரூரனிதுநான்மொழிவதென்றான்
றேவரையுமாலயன்முதற்றிருவின்மிக்கோர்
யாவரையும்வேறடிமையாவுடையவெம்மான். (௩௭)

வேறு.

என்றானிறையோனிதுகேட்டவரெம்மருங்கு
நின்றாரிருந்தாரிவனென்னினைந்தான்கொலென்று
சென்றார்வெகுண்டார்சிரித்தார்திருநாவலூர
னன்றூன்மறையோன்மொழியென்றெதிர்நோக்கிநக்கான்.

நக்கான்முகநோக்கிநடுங்கிநுடங்கியார்க்கு
மிக்கான்மிசையுத்தரியத்துகிருங்கிமேற்சென்
றக்காலமுன்றந்ததன்றந்தையாளோலையீதால்
இக்காரியத்தைநீயின்றுசிரித்ததென்னேடவென்றான் (௩௯)

வேறு.

மாசிலாமரபில்வந்தவள்ளல்வேதியனைநோக்கி
நேசமுன்கிடந்தசிந்தைநெகிழ்ச்சியாற்சிரிப்புநீங்கி
யாசிலந்தணர்கள்வேறோரந்தணர்க்கடிமையாதல்
பேசவின்றுன்னைக்கேட்டோம்பித்தனோமறையோனென்றார்.(

பித்தனுமாகப்பின்னும்பேயனுமாகநீயின்
றெத்தனைதீங்குசொன்னாயாதுமற்றவற்றானாணேன்
அத்தனைக்கென்னையொன்றுமறிந்திலையாகிநின்று
வித்தகம்பேசவேண்டாபணிசெயவேண்டுமென்றார் (௪௧)

கண்டதோர்வடிவாலுள்ளங்காதல்செய்துருகாநிற்குங்
கொண்டதோர்பித்தர்வார்த்தைகோபமுமுடனேயாக்க
மூண்டோராளோலையென்னுமதனுண்மையறிவேனென்று
தொண்டனாரோலைகாட்டுகென்றனர்துணைவனாரை (௪௨)

ஓலைகாட்டென்றுநம்பியுரைக்கநீயோலைகாணற்
பாலையோவவைமுன்காட்டப்பணிசெயற்பாலையென்ற
வேலையினாவலூரர்வெகுண்டுமேல்விரைந்துசென்று
மாலயன்றொடராதானைவலிந்துபின்றொடரலுற்றார் (௪௩)

ஆவணம்பறிக்கச்சென்றவளவினிலந்தணாளன்
காவணத்திடையேயோடக்கடிதுபின்றொடர்ந்துநம்பி
பூவணத்தவரையுற்றார்மேவலார்புரங்கள்செற்ற
ஏவணச்சிலையினாரைத்தொடர்ந்தெட்டவல்லார் (௪௪)

மறைகளாயினமுன்போற்றிமலர்ப்பதம்பற்றிநின்ற
இறைவனைத்தொடர்ந்துபற்றியெழுதுமாளோலைவாங்கி
அறைகழலண்ணலாளாயந்தணர்செய்தலென்ன
முறையெனக்கீறியிட்டான்முறையிட்டான்முடிவிலாதான். ()

அருமறைமுறையிட்டின்னமறிவதற்கரியான்பற்றி
யொருமுறைமுறையோவென்னவுழைநின்றார்விலக்கி யிந்தப்
பெருமுறையுலகிலில்லாநெறிகொண்டுபிணங்குகின்ற
திருமறைமுனிவரோநீரெங்குளீர்செப்புமென்றார் (௪௬)

என்றலுநின்றவையரிங்குளேனிருப்புஞ்செய்த
தன்றிந்தவெண்ணெய்நல்லூரதுநிற்கவறத்தாறின்றி
வன்றிறல்செய்தென்கையிலாவணம்வலியவாங்கி
நின்றிவன்கிழித்துத்தானேநிரப்பினனடிமையென்றான் (சஎ)

குழைமறைகாதினனைக்கோதிலாரூரர்நோக்கிப்
பழையமன்றாடிபோலுமிவனென்றுடண்பின்மிக்க
விழைவுறுமனமும்பொங்கவெண்ணெய்நல்லூராயேலுன்
பிழைநெறிவழக்கையாங்கேபேசநீபோதாயென்றார் (சஅ)

வேதியனதனைக்கேட்டுவெண்ணெய்நல்லூரிலேநீ
போதினுநன்றுமற்றைப்புனிதநான்மறையோர்முன்னர்
ஆதியின்மூலவோலைகாட்டிநீயடிமையாதல்
சாதிப்பனென்றுமுன்னேதண்டுமுன்றூங்கிச்சென்றான் (சகூ)

செல்லுநான்மறையோன்றன்பின்றிரிமுகக்காந்தஞ்சேர்ந்த
வல்லிரும்பணையுமாபோல்வள்ளலுங்கடிதுசென்றான்
எல்லையில்சுற்றத்தாருமிதுவென்னாமென்றுசெல்ல
நல்லவந்தணர்கள்வாழும்வெண்ணெய்நல்லூரையண்ணி (ருய)

வேதபாரகரின்மிக்கார்விளங்குபேரவைமுன்சென்று
நாதனுமறையோன்சொல்லுநாவலூராரூரன்றான்
காதலென்னடியானென்னக்காட்டியவோலைகிறி
மூதறிவீர்முன்போந்தானிதுமற்றென்முறைப்பாடென்றான்

அந்தணரவையின்மிக்கார்மறையவரடிமையாதல்
இந்தமாநிலத்திலில்லையென்சொன்னையையாவென்றார்
வந்தவாறிசைவேயன்றோவழக்கிவன்கிழித்தவோலை
தந்தைதன்றந்தைநேர்ந்ததென்றனல் றனியாய்நின்றான் (ருஉ

இசைவினலெழுதுமோலைகாட்டினனாகிலின்று
விசையினல்வலியவாங்கிக்கிழிப்பதுவெற்றியாமோ
தசையெலாமொடுங்கமூத்தான்வழக்கினைச்சாரச்சொன்னன்
அசைவிலாரூரனெண்ணமென்னென்றாரவையின்மிக்கார் (ருங

அனைத்துநூலுணர்ந்தீராதிசைவனென்றறிவீரென்னைத்
தனக்குவேறடிமையென்றிவ்வந்தணன்சாதித்தானேன்
மனத்தினலுணர்தற்கெட்டாமாயையென்சொல்லுகேன்யான்
எனக்கிதுதெளியவொண்ணாதென்றனனெண்ணமிக்கான் (ருச

அவ்வுரையவையின்முன்புநம்பியாரூரர்சொல்லச்
செவ்வியமறையோர்நின்றதிருமறைமுனியைநோக்கி
இவ்வுலகின்கணீரின்றிவரைநும்மடிமையென்ற
வெவ்வுரையெம்முன்பேற்றவேண்டுமென்றுரைத்துமீண்டும்

ஆட்சியிலாவணத்திலன்றிமற்றயலார்தங்கள்
காட்சியின்மூன்றிலொன்றுகாட்டுவாயென்னமுன்னே
மூட்சியிற்கிழித்தவோலைபடியோலைமூலவோலை
மாட்சியிற்காட்டவைத்தேனென்றனன்மாயைவல்லான் (ருசு)

வல்லையேற்காட்டிங்கென்னமறையவன்வலிசெய்யாமற்
சொல்லநீர்வல்லீராகிற்காட்டுவேனென்றுசொல்லச்
செல்வநான்மறையோர்நாங்கடீங்குறவொட்டோமென்றார்
அல்லதீர்த்தாளநின்றாராவணங்கொண்டுசென்றார் (ருஎ)

இருண்மறைமிடற்றோன்கையிலோலைகண்டவையோரேவ
அருள்பெறுகரணத்தானுமாவணந்தொழுதுவாங்கிச்
சுருள்பெறுமடியைநீக்கிவிரித்ததன்றொன்மைநோக்கித்
தெருள்பெறுசவையோர்கேட்பவாசகஞ்செப்புகின்றான் ()

அருமறைநாவலாதிசைவனாரூரன்செய்கை
பெருமுனிவெண்ணெய்நல்லூர்ப்பித்தனுக்கியானுமென்பால்
வருமுறைமரபுளோரும்வழித்தொண்டுசெய்தற்கோலை
இருமையாலெழுதிநேர்ந்தேனிதற்கிவையென்னெழுத்து. ()

வாசகங்கேட்டபின்னர்மற்றுமேலெழுத்திட்டார்கள்
ஆசிலாவெழுத்தைநோக்கியவையொக்குமென்றபின்னர்
மாசிலாமறையோராயாமற்றுங்கள்பேரனார்தந்
தேசுடையெழுத்தேயாகிற்றெளியப்பார்த்தறிதியென்றார். ()

அந்தணர்கூறவின்னுமாளோலையிவனேகாண்பான்
றந்தைதன்றந்தைதான்வேறெழுதுகைச்சாத்துண்டாகில்
இந்தவாவணத்தினோடுமெழுத்துநீரொப்புநோக்கி
வந்ததுமொழியினென்றான்வலியவாட்கொள்ளநம்வள்ளல் சுக

திரண்டமாமறையோர்தாமுந்திருநாவலூரர்கோமுன்
மருண்டதுதெளியமற்றமறையவனெழுத்தாலோலை
யரண்டருகாப்பில்வேறொன்றழைத்துடனொப்புநோக்கி
இரண்டுமொத்திருந்ததென்னேயினிச்செயலில்லையென்றார்()

நான்மறைமுனிவனார்க்குநம்பியாரூரர்நோற்றீர்
பான்மையினேவல்செய்தல்கடனென்றபண்பின்மிக்க
மேன்மையோர்விளம்பநம்பிவிதிமுறையிதுவேயாகில்
யானிதற்கிசையேனென்னவிசையுமோவென்றுநின்றார் (௬௩)

திருமிகுமறையோர்நின்றசெழுமறைமுனியைநோக்கி
அருமுனிநீர்முன்காட்டுமாவணமதனிலெங்கள்
பெருமைசேர்பதியேயாகப்பேசியதுமக்கிவ்வூரில்
வருமுறைமனையுநீடுவாழ்க்கையுங்காட்டுகென்றார் (௬௪)

பொருவருவழக்கால்வென்றபுண்ணியமுனிவனென்னை
யொருவருமறியீராகிற்போதுமென்றுரைத்துச்சூழ்ந்த
பெருமறையவர்குழாமுநம்பியும்பின்புசெல்லத்
* திருவருட்டுறையேபுக்கார்கண்டிலர்திகைத்துநின்றார் (௬௫)

எம்பிரான்கோயிலண்ணல்விலங்குநூன்மார்பனெங்க
ணம்பர்தங்கோயில்புக்கதென்கொலோவென்றுநம்பி
தம்பெருவிருப்பினோடு தனிதொடர்ந்தணையவப்பா
லும்பரின்விடைமேற்றோன்றியவர்தமக்குணர்த்தலுற்றார் (௬௬)

முன்புநீநமக்குத்தொண்டன்முன்னியவேட்கைகூரப்
பின்புநம்மேவலாலேபிறந்தனைமண்ணின்மீது
துன்புறுவாழ்க்கைநின்னைத்தொடர்வறத்தொடர்ந்துவந்து
நன்புலமறையோர்முன்னர்நாந்தடுத்தாண்டோமென்றார் ( )

என்றெழுமோசைகேளாவீன்றவான்கனைப்புக்கேட்ட
கன்றுபோற்கதறிநம்பிகரசரணாதியங்கந்
துன்றியபுளகமாகத் தொழுதகைதலைமேலாக
மன்றுளீர்செயலோவந்துவலியவாட்கொண்டதென்றார் (௬௮)

எண்ணியவோசையைந்தும்விசும்பிடைநிறையவெங்கும்
விண்ணவர்பொழிபூமாரிமேதினிநிறைந்துவிம்ம
மண்ணவர்மகிழ்ச்சிபொங்கமறைகளுமுழங்கியார்ப்ப
அண்ணலையோலைகாட்டியாண்டவரருளிச்செய்வார் (௬௯)

மற்றுநீவன்மைபேசிவன்றொண்டனென்னுநாமம்
பெற்றனைநமக்குமன்பிற்பெருகியசிறப்பின்மிக்க
அர்ச்சனைபாட்டேயாகுமாதலான்மண்மேனம்மைச்
சொற்றமிழ்பாடுகென்றார்தூய்மறைபாடும்வாயார் (௭௦)

---

* திருவருட்டுறையென்பது - அந்தத்தலத்திலிருக்கும்
ஆலயத்தின்பெயர்.

தேடியவயனுமாலுந்தெளிவுறாதைந்தெழுத்தும்
பாடியபொருளாயுள்ளான்பாடுவாய்நம்மையென்ன
நாடியமனத்தராகிநம்பியாரூரர்மன்றுள்
ஆடியசெய்யதாளை யஞ்சலிகூப்பிநின்று (௭௧)

வேதியனாகியென்னைவழக்கினால்வெல்லவந்த
ஊதியமறியாதேனுக்குணர்வுதந்துய்யக்கொண்ட
கோதிலாவமுதேயின்றுன்குணப்பெருங்கடலைநாயேன்
யாதினையறிந்தென்சொல்லிப்பாடுகேனெனமொழிந்தார் (௭௨)

அன்பனையருளினோக்கியங்கணரருளிச்செய்வார்
முன்பெனைப்பித்தனென்றேமொழிந்தனையாதலாலே
என்பெயர்பித்தனென்றேபாடுவாயென்றார்நின்ற
வன்பெருந்தொண்டராண்டவள்ளலைப்பாடலுற்றார் (௭௩)

வேறு

கொத்தார்மலர்க்குழலாளொருகூறாயடியவர்பால்
மெய்த்தாயினுமினியானையவ்வியனாவலர்பெருமான்
பித்தாபிறைசூடியெனப்பெரிதாந்திருப்பதிகம்
இத்தாரணிமுதலாவுலகெல்லாமுயவெடுத்தார் (௭௪)

முறையால்வரு மதுரத்துடன் மொழி யிந்தளமுதலிற்
குறையாநிலைமும்மைப்படிகூடுங்கிழமையின்
னிறைபாணியினிசைகோள்புணர்நீடும்புகல்வகையால்
இறையான்மகிழிசைபாடினனெல்லாநிகரில்லான் (௭௫)

---

[திருவெண்ணெய்நல்லூர்த்தேவாரம். பண்- இந்தளம்]

திருச்சிற்றம்பலம்.

பித்தாபிறைசூடி பெருமானேயருளாளா
வெத்தான்மறவாதேநினைக்கின்றேன்மனத்துன்னை
வைத்தாய்பெண்ணைத்தென்பால்வெண்ணெய்நல்லூரருட்டுறையு
ளத்தாவுனக்காளாயினியல்லேனெனலாமே.

காரூர்புனலெய்திக்கரைகல்லித்திரைக்கையாற்
பாரூர்புகழெய்தித்திகழ் பன்மாமணி யுந்திச்
சீரூர்பெண்ணைத்தென்பால் வெண்ணெய்நல்லூரருட்டுறையு
ளாரூரனெம்பெருமாற் காளல்லேனெனலாமே.

திருச்சிற்றம்பலம்

சொல்லார்தமிழிசைபாடியதொண்டன்றனையின்னும்
பல்லாறுலகினினம்புகழ்பாடென்றுறுபரிசி
னல்லார்வெண்ணெய்நல்லூரருட்டுறைமேவியநம்பன்
எல்லாவுலகுய்யப்புரமெய்தானருள்செய்தான் (எசு)

அயலோர்தவமுயல்வார்பிறரன்றேமணமழியுந்
செயலானிகழ்புத்தூர்வருசிவவேதியன்மகளும்
உயர்நாவலர்தனிநாதனையொழியாதுணர்வழியிற்
பெயராதுயர்சிவலோகமுமெளிதாம்வகைபெற்றாள் (எஎ)

வேறு

நாவலர்கோனாரூரன்றனைவெண்ணெய்நல்லூரின்
மேவுமருட்டுறையமர்ந்தவேதியராட்கொண்டதற்பின்
பூவலருந்தடம்பொய்கைத்திருநாவலூர்ப்புகுந்து
தேவர்பிரான்றனைப்பணிந்துதிருப்பதிகம்பாடினார் (எஅ)

திருவெண்ணெய்நல்லூரும்<br>திருநாவலூரும் } பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்

கோவலனான்முகன்வானவர்கோனுங்குற்றேவல்செய்ய
மேவலர்முப்புரந்தீயெழுவித்தவனோரம்பினா
லேவலனார்வெண்ணெய்நல்லூரில்வைத்தெனையாளுங்கொண்ட
நாவலனார்க்கிடமாவதுநந்திருநாவலூரே

நாதனுக்கூர்நமக்கூர்நரசிங்கமுனையரைய
னாதரித்தீசனுக்காட்செயுமூரணிநாவலூரென்
றேதநற்றக்கவன்றொண்டனாரூரனுரைத்ததமிழ்
காதலித்துங்கற்றுங்கேட்பவர்தம்வினைகட்டறுமே.

திருச்சிற்றம்பலம்

சிவனுறையுந்திருத்துறையூர்ச்சென்றணைந்துதீவினையால்
அவநெறியேசெல்லாமேதடுத்தாண்டாயடியேற்குத்
தவநெறிதந்தருளென்றுதம்பிரான்முன்னின்று
பவநெறிக்குவிலக்காகுந்திருப்பதிகம்பாடினார் (எகூ)

[திருத்துறையூர்த் தேவாரம். பண் - தக்கராகம்]

திருச்சிற்றம்பலம்

மலையாரருவித்திரண்மாமணியுந்திக்
குலையாரக்கொணர்ந்தெற்றியோர்பெண்ணைவடபாற்
கலையாரல்குற்கன்னியராடுந்துறையூர்த்
தலைவாவுனைவேண்டிக்கொள்வேன்றவநெறியே

செய்யார்கமலம்மலர் நாவலர்மன்னன்
கையாற்றொழுதேத்தப்படுந் துறையூர்மேற்
பொய்யாத்தமிழூரனுரைத்தனவல்லார்
மெய்யேபெறுவார்கள் தவநெறிதானே.

திருச்சிற்றம்பலம்

புலனொன்றும்படிதவத்திற்புரிந்தநெறிகொடுத்தருள
அலர்கொண்டநறுஞ்சோலைத்திருத்துறையூரமர்ந்தருளு
நிலவுந்தண்புனலுமொளிர்நீள்சடையோன்றிருப்பாத
மலர்கொண்டுபோற்றிசைத்துவந்தித்தார்வன்றொண்டர் (அ0)

திருத்துறையூர்தனைப்பணிந்துசிவபெருமானமர்ந்தருளும்
பொருத்தமாமிடம்பலவும்புக்கிறைஞ்சிப்பொற்புலியூர்
நிருத்தனார்திருக்கூத்துத்தொழுவதற்குநினைவுற்று
வருத்தமிகுகாதலினால்வழிக்கொள்வான்மனங்கொண்டார் (அக

மலைவளர்சந்தகில்பீலிமலர்பரப்பிமணிகொழிக்கும்
அலைதருதண்புனற்பெண்ணை யாறுகடந்தேறியபி
னிலவுபசும்புரவிநெடுந்தேரிரவிமேல்கடலிற்
செலவணையும்பொழுதணையத்திருவதிகைப்புறத்தணைந்தார் ()

உடையவரசுலகேத்துமுழவாரப்படையாளி
விடையவர்க்குக்கைத்தொண்டுவிரும்பு பெரும்பதியைமிதித்
தடையுமதற்கஞ்சுவனென்றந்நகரிற்புகுதாதே
மடைவளர்தண்புறம்பணையிற்சித்தவடமடம்புகுந்தார் (அங)

வரிவளர்பூஞ்சோலைசூழ்மடத்தின்கண்வன்றொண்டர்
விரிதிரைநீர்க்கெடிலவடவீரட்டானத்திறைதாள்
புரிவுடையமனத்தினராய்ப்புடையெங்குமிடைகின்ற
பரிசனமுந்துயில்கொள்ளப்பள்ளியமர்ந்தருளினார். (அச)

அதுகண்டுவீரட்டத்தமர்ந்தருளுமங்கணரு
முதுவடிவின்மறையவராய்முன்னொருவரறியாமே
பொதுமடத்தினுட்புகுந்துபூந்தாரான்றிருமுடிமேற்
பதுமமலர்த்தாள்வைத்துப்பள்ளிகொள்வார்போற்பயின்றார்

அந்நிலையாரூரனுணர்ந்தருமறையோயுன்னடியென்
சென்னியில்வைத்தனையென்னத்திசையறியாவகைசெய்த
தென்னுடையமூப்புக்காணென்றருளவதற்கிசைந்து
தன்முடியப்பால்வைத்தேதுயிலமர்ந்தான்றமிழ்நாதன் (அசு)

அங்ஙனமவன்றிருமுடிமேன்மீட்டு மவர்தாழ்விட்டச்
செங்கயல்பாய்தடம்புடைசூழ்திருநாவலூராளி
யிங்கெனைப்பலகாலுமிதித்தனீயாரென்னக்
கங்கைசடைக்கரந்தபிரானறிந்திலையோவெனக்கரந்தான் (அஎ)

செம்மாந்திங்கியானறியாதென்செய்தேனெனத்தெளிந்து
தம்மானையறியாதசாதியாருளரோவென்
றம்மானைத்திருவதிகைவீரட்டானத்தமர்ந்த
கைம்மாவினுரியானைக்கழல்பணிந்துபாடினார் (அஅ)

---

[திருவதிகைவீரட்டானம் தேவாரம். பண் - கொல்லிக்கௌவாணம்]

திருச்சிற்றம்பலம்

தம்மானையறியாதசாதியாருளரோ-சடைமேற்கொள்பிறையானை
விடைமேற்கொள்விகிர்தன்- கைம்மாவினுரியானைக்கரிகாட்டிலாட-
லுடையானைவிடையானைக் கறைகொண்டகண்டத் - தெம்மானறன
டிக்கொண்டென்முடிமேல்வைத்திடுமென்னு- மாசையால்வாழ்கின்
வறிவிலாநாயே- னெம்மானையெறிகெடிலவடவீரட்டானத்- துறை
வானையிறைபோதுமிகழ்வன்போலியானே.

என்பினையே கலனாக வணிந்தானையெங்க-ளெருதேறும் பெரு
மானை யிசைஞானிசிறுவன் - வன்பனையவளர்பொழில்சூழ் வயலுவ
லூர்க்கோன்-வன்றொண்ட னாரூரன்மதியாதுசொன்ன - வன்பனை
யவர்க்குமறிவரியவத்தப்-பெருமானையதிகைமாநகருள்வாழ்பவனை-
யென்பொன்னை யெறிகெடிலவடவீரட்டானத்- துறைவானை யிறை
போதுமிகழ்வன்போ லியானே. திருச்சிற்றம்பலம்

பான்றிரளுமணித்திரளும்பொருகரிவெண்கோடுகளு
மீன்றிரண்டவெண்முத்தும்விரைமலருநறுங்குறடும்
மன்றிரைகளாற்கொணர்ந்துதிருவதிகைவழிபடலாற்
றன்றிசையிற்கங்கையெனுந்திருக்கெடிலந்திளைத்தாடி (அகூ)

நிரணாயடிபோற்றியங்ககன்றுமற்றந்தப்
பாங்குநதித்தென்கரைபோய்ப்போர்வலித்தோண்மாவலிதன்
மகலவேள்வியிற்பண்டுவாமனனாய்மண்ணிரந்த
சங்கனவன்வழிபட்ட திருமாணி குழியடைந்தார் (கூ0)

பரம்பொருளைப்பணிந்துதாள்பரவிப்போய்ப்பணிந்தவர்க்கு
வரந்தருவான்றினைநகராவணங்கினர்வண்டமிழ்பாடி
நரம்புடையாழொலிமுழவினதவொலிவேதவொலி
யரம்பையர்தங்கீதவொலியறாத்தில்லைமருங்கணைந்தார் (௬௧)

[திருத்தினைநகர்த்தேவாரம் - பண் - தக்கேசி]

திருச்சிற்றம்பலம்

நீறுதாங்கியதிருநுதலானைநெற்றிக்கண்ணனைநிரைவளைமடந்தை கூறுதாங்கியகொள்கையினானைக் குற்றமில்லியைக் கற்றையஞ்சடைமே - லாறுதாங்கியவழகனையமரர்க்கரியசோதியைவரிவராலுகளுஞ் சேறு தாங்கிய திருத்தினை நகருட் சிவக்கொழுந்தினைச் சென்றடைமனனே.

நீடுபோக்கையிற்பிறவியைப்பழித்து நீங்கலாமென்றுமனத்தினைத்தெருட்டிச் - சேடுலாம்பொழிற்றிருத்தினைநகருட்சிவக்கொழுந்தினைத்திருவடியிணைத்தா- ளூடலாம்புகழ்நாவலூராளிநம்பிவன்றொண்டனூரனுரைத்த - பாடலாந்தமிழ்பத்திவைவல்லார்முத்தியாவதுபரகதிப்பயனே- திருச்சிற்றம்பலம்

வேறு.

தேமலங்கலணிமாமணிமார்பிற்செம்மலங்கயல்கள்செங்கமலத்தண்
பூமலங்கவெதிர்பாய்வனமாடேபுள்ளலம்புதிரைவெள்ளவாவித்
தாமலங்குகடம்பணைசூழ்ந்தன்மருங்குதொழுவார்கடமும்மை
மாமலந்தளறவீடருடில்லைமல்லலம்பதியினெல்லைவணங்கி (௬௨)

நாகசூதவகுளஞ்சரளஞ்சூழ்நாளிகேரமிலவங்கநரந்தம்
பூகஞாழல்தளிர்வாழைமதூகம்பொதுளும்வஞ்சிபலவெங்குநெருங்கி
மேகசாலமலிசோலைகளாகிமீதுகோகிலமிடைந்துமிழற்றப்
போகபூமியினுமிக்குவிளங்கும்பூம்புறம்பணைகடந்துபுகுந்தார் (௬௩)

வன்னிகொன்றைவழைசண்பகமாரமலர்ப்பலாசொடுசெருந்திமந்தாரங், கன்னிகாரங்குரவங்கமழ்புன்னைகற்டபாடலங்கூவிளமோங்கித், துன்னுசாதிமருமாலதிமௌவறுதைந்தநந்திகரவீரமிடைந்தபன்மலர்ப்புனிதநந்தவனங்கள்பணிந்துசென்றனன்மணங்கமழ்தாரான். (௬௪)

இடமருங்குதனிநாயகிகாண வேழ்பெரும்புவனமுய்ய வெடுத்து நடநவின்றருள்சிலம்பொலிபோற்று நான்மறைப்பதிகை நாளும்வணங்கக், கடல்வலங்கொள்வதுபோற்புடைசூழுங் காட்சிமேவிமிகு சேட்செலவோங்கு, தடமருங்குவளர்மஞ்சிவர்ஞ்சித் தண்கிடங்கையெதிர்கண்டுமகிழ்ந்தார். (௬௫)

மன்றுலாவுமதுவின்னசைபாலே மறைச்சுரும்பனறைபுறத்தின்மருங்கே, குன்றுபோலுமணிமாமதில்சூழுங் குண்டகழ்க்கமலவண்டலர்கைதை, துன்றுநீறுபுனைமேனியவாகித் தூயநீறுபுனைதொண்டர்களென்னச், சென்றுசென்றுமுரல்கின்றனகண்டு சிந்தையன்பொடுதிளைத்தெதிர்சென்றார். (௬௬)

பார்விளங்கவளர்நான்மறைநாதம் பயின்றபண்புமிகவெண்கொடியாடுஞ், சீர்விளங்குமணிநாவொலியாலுந் திசைகளுங்கெதிர்புறப்பட்டலாலுந், தார்விளங்குவரைமார்பினயன்பொற் சதுர்முகங்களெனலாயினதில்லை,ஊர்விளங்குதிருவாயில்களுங்கி னுத்தரத்திசையின்வாயின்முன்னெய்தி. (௬௭)

அன்பின்வந்தெதிர்கொண்டசீரடியாரவர்களோ நம்பியாரூரர்தாமோ, முன்பிறைஞ்சினரியாவரொன்றறியாமுறைமையாலெதிர் வணங்கிமகிழ்ந்து, பின்புகும்பிடும்விருப்பினிறைந்து பெருகுநாவணசரார்பெருமானும், பொன்பிறங்குமணிமாளிகைநீடும்பொருவிறந்த திருவீதிபுகுந்தார். (௬௮)

அங்கணமாமறைமுழங்குமருங்கேயாடரம்பையரரங்குமுழங்குமங்குல்வானின்மிசையைந்துமுழங்கும் வாசமாலைகளின்வண்டுமுழங்கும், பொங்குமஞ்சருவி கண்பொழிதொண்டர் போற்றிசைக்குமொலிபெங்குமுழங்குந், திங்கடங்குசடைகங்கைமுழங்குந்தேவதேவர்புரியுந்திருவீதி. (௬௯)

போகநீடுநிதிமன்னவன்மன்னும்புரங்களொப்பனவரம்பிலவோங்கி, மாகமுன்பருகுகின்றனபோலுமாளிகைக்குலமிடைந்தபதாகை, யோகசிந்தைமறையோர்கள்வளர்க்குமோமதூமமுடர் வானிலடுப்பமேகபந்திகளின்மீதிடையெங்குமின்னுடங்குவன வென்னவிளங்கு [ம். (௭0)

ஆடுதோரணைபுடைநாசிகடோறுமரணிதந்தசுடராகுதிதோறு-மாடுதாமமணிவாயில்கடோறுமங்கலக் கலசம்வேதிகைதோறுஞ் - சேடுகொண்டவொளிமுத்தநிரைதோறுஞ் செந்நெலன்னமலி சாலைகடோறு, நீடுதண்புனல்கள் பந்தர்கடோறு நிறைந்த தேவர்கணநீளிடைதோறும், (௭௧)

எண்ணில்பெருந்தவத்தினருமுள்ள வெல்லையில் லடங்கு சொல்லிய
வெல்லா, மண்ணிலிப்பதியில்வந்தனவென்னமங்கலம்பொலிவளத்த
னவாகிப், புண்ணியப்புனிதவன்பர்கண்முன்புபுகழ்ந்துபாடல் புரி
பொற்பின்விளங்கும், அண்ணலாடுதிருவம்பலஞ்சூழ்ந்தவம்பொன்
வீதியினை நம்பிவணங்கி. (௱௨)

மாலயன்சததமகன்பெருந்தேவர்மற்றுமுள்ளவர்கண்முற்று நெரு
ங்கிச், சீலமாமுனிவர்சென்றுமுன்றுன்னித்திருப் பிரம்பினடிகொ
ண்டொதுங்கித், காலமேர்படுதல்பார்த்தயனிற்பக்காதலன்பர்கணநா
தர்புகும்பொற் . கோலநீடுதிருவாயிலிறைஞ்சிக்குவித்தசெங்கைத
லைமேற்கொடுபுக்கார். (௱௩)

வேறு.

பெருமகிழ்சிறந்தசெம்பொன்மாளிகைமின் பிறங்கு பேரம்பல
மேரு, வருமுறைவலங்கொண்டிறைஞ்சிய பின்னர் வணங்கியமகிழ்
வொடும்புகுந்தார், அருமறைமுதலினடுவினிற்கடையிலன்பர்தஞ்சி
ந்தையிலலர்ந்த. திருவளரொளிசூழ்திருச்சிற்றம்பலமுன் திருவணுக்
கன்றிருவாயில். (௱௪)

வையகம்பொலியமறைச்சிலம்பார்ப்ப மன்றுளேமாலயன்றேட
ஐயர்தாம்வெளியேயாடுகின்றாரையஞ்சலிமலர்த்திமுன்குவித்த
கைகளோடிறைஞ்சித்தகண்களேயாவந்தக்கரணமேகலந்தவன்புந்தச்
செய்தவம்பெரியோன்சென்றுதாழ்ந்தெழுந்தான் திருக்களிற்றுப்ப
டிமருங்கு. (௱௫)

ஐந்துபேரறிவுங்கண்களேகொள்ளவளப்பருங்கரணங்களான்கு
ஞ், சிந்தையேயாகக்குணமொருமூன்றுந்திருந்துசாத்துவிதமேயா
க, இந்துவாழ்சடையானாடுமானந்தவெல்லையிறனிப்பெருங்கூத்தின்
வந்தபேரின்பவெள்ளத்துட்டிளைத்துமாறிலா மகிழ்ச்சியின்மலர்ந்தா
[ர். (௱௬)

தெண்ணிலாமலர்ந்தவேணியாயுன்றன்றிருநடங்கும்பிடப்பெற்று
மண்ணிலேவந்தபிறவியேயெனக்குவாலிதாமின்பமாமென்று
கண்ணிலானந்தவருவிநீர்சொரியக்கைம்மலருச்சிமேற்குவித்துப்
பண்ணினுனீடியதிருப்பதிகம்பாடினார்பரவினார்பணிந்தார் (௱௭)

[கோயிற்றேவாரம் - பண்- குறிஞ்சி]

திருச்சிற்றம்பலம்

மடித்தாடுமடிமைக்கணன்றியே மனனேநீவாழுநாளுந்
தடுத்தாட்டித்தருமனார்தமர்செக்கிலிடும்போதுதடுத்தாட்கொள்வான்
கடுத்தாடுங்கரதலத்திற்றமருகமுமெரியகலுங்கரியபாம்பும்
பிடித்தாடிபுலியூர்ச்சிற்றம்பலத்தெம்பெருமானைப்பெற்றாமன்றே

பாரூருமரவல்குலுமைநங்கையவள்பங்கன்பைங்கணேற்ற - னூரூர
ன்றருமனார்தமர்செக்கிலிடும்போதுதடுத்தாட்கொள்வா-னாரூரன்றம்
பிரானாரூரனமீகொங்கிலணிகாஞ்சிவாய்ப்-பேரூரர் பெருமானைப்பு
லியூர்ச்சிற்றம்பலத்தே பெற்றாமன்றே திருச்சிற்றம்பலம் (௱எ)

தடுத்துமுன்னாண்டதொண்டனார்முன்புதனிப்பெருந்தாண்டவம்
புரிய - எடுத்தசேவடியாரருளினாற்றரளமெறிபுனன்மறிதிரைநாட்பொ
ன்னிமருத்தநீள்வண்ணைப்பண்ணையாரூரில்வருக நம்பாலெனவானில்-
அடுத்தபோதினில்வந்தெழுந்ததோர்நாதங்கேட்டனுமதுவுணர்ந்தெ
ழுந்தார். (௱அ)

ஆடுகின்றவர்பேரருளினையிகழ்ந்தவட்பணிசென்னிமேற்கொண்டு
சூடுதங்கரங்களஞ்சலிகொண்டுதொழுந்தொறும்புறவிடைகொண்டு
மாடும்பொன்னொளியின் வளருமம்பலத்தை வலங்கொண்டு வணங்கினர்
போந்து - நீடுவான்பணியவுயர்ந்தபொன்வரைபோனிலையெழுகோ
புரங்கடந்து. (௱௯)

நின்றுகோபுரத்தைநிலமுறப்பணிந்துநெடுந்திருவீதியைவணங்
மன்றலார்செல்வமறுகினூடேகிமன்னியதிருப்பதியதனிற் (கி
றென்றிசைவாயில்கடந்துமுன்போந்து சேட்படுதிருவெல்லையிறை
ஞ்சிக் - கொன்றைவார்சடையானருளையேநினைவார்கொள்ளிடத்திரு
நதிகடந்தார். (௱௰)

வேறு-

புறந்தருவார்போற்றிசைப்பப்புரிமுந்நூலணிமார்பர்
அறம்பயந்தாடிருமுலைப்பாலமுதுண்டுவளர்ந்தவர்தாம்
பிறந்தருளும்பெரும்பேறுபெற்றதெனமுற்றுலகிற்
சிறந்தபுகழ்க்கழுமலமாந்திருப்பதியைச்சென்றணைந்தார். (௱௰க)

பிள்ளையார்திருவவதாரஞ்செய்தபெரும்புகலி
யுள்ளுநான்மிதியேனென்றூசொல்லைப்புறம்வணங்கி
வள்ளலார்வலமாகவரும்பொழுதுமங்கையிடங்
கொள்ளுமால்விடையானுமெதிர்காட்சிகொடுத்தருள (௱௰உ)

மண்டிப்பேரன்பினால்வன்றொண்டர்நின்றிறைஞ்சித்
தெண்டிரைவேலையின்மிதந்ததிருத்தோணிபுரத்தாரைக்
கண்டுகொண்டேன்கயிலையினில்வீற்றிருந்தபடியென்று
பண்டருமின்னிசைபயின்றதிருப்பதிகம்பாடினார் (௱௰௩)

[திருக்கழுமலத்தேவாரம் - பண் - தக்கேசி]

திருச்சிற்றம்பலம்

சாதலும்பிறத்தலுந்தவிர்த்தெனைவகுத்துத்தன்னருடந்தவெந்தலை
வனைமலையின் - மாதினைமதித்தங்கோர்பால்கொண்ட மணியைவருபு
னல்சடையிடைவைத்தவெம்மானை - யேதிலேன்மனத்துக்கோரிரும்பு
ண்டநீரையெண்வகையொருவனையெங்கள்பிரானைக்-காதில்வெண்கு
ழையனைக்கடல்கொளமிதந்தகழுமலவளநகர்க்கண்டுகொண்டேனே

செழுமலர்க்கொன்றையுங்கூவிளமலரும்விரவியசடைமுடியடி
களைநினைந்திட்- டழுமலர்க்கண்ணிணையடியவர்க்கல்லாலறிவரிதவன்
றிருவடியிணையிரண்டும் - கழுமலவளநகர்க்கண்டுகொண்டூரன்சடை
யன்றன்காதலன்பாடியபத்துந்- தொழுமலரொடுத்தகையடியவர்தம்
மைத்துன்பமு மிடும்பையுஞ்சூழகிலாவே-

திருச்சிற்றம்பலம்

இருக்கோலமிடும்பெருமானெதிர்நின்றெழுந்தருள
வெருக்கோளுற்றதுநீங்கியாரூர்மேற்செலவிரும்பிப்
பெருக்கோதஞ்சூழ்புறவப்பெரும்பதியைவணங்கிப்போய்த்
திருக்கோலக்காவணங்கிச்செந்தமிழ்மாலைகள்பாடி (௱௰௪)

தேனார்க்குமலர்ச்சோலைத்திருப்புன்கூர் நம்பர்பால்
ஆனாப்பேரன்புமிகவடிபணிந்துதமிழ்பாடி
மானார்க்குங்கரதலத்தார்மகிழ்ந்தவிடம்பலவணங்கிக்
கானார்க்குமலர்த்தடஞ்சூழ்காவிரியின்கரையணைந்தார் (௱௰௫)

வம்புலாமலரலையமணிகொழித்துவந்திழியும்
பைம்பொன்வார்கரைப்பொன்னிப்பயிறீர்த்தம்படிந்தாடித்
தம்பிரான்மயிலாடுதுறைவணங்கித்தாவில்சீ
ரம்பர்மாகாளத்தினமர்ந்தபிரானடிபணிந்தார் (௱௰௬)

மின்னார்செஞ்சடையண்ணல்விரும்புதிருப்புகலூரை
முன்னாகப்பணிந்தேத்திமுதல்வன்றனருணினைந்து
பொன்னாருமுத்தரியப்புரிமுந்நூலணிமார்பர்
தென்னாவலூராளிதிருவாரூர்சென்றணைந்தார் (௱௰௭)

தேராருநெடுவீதித்திருவாரூர்வாழ்வாருக்
காராதகாதலினம்மாரூரனுமழைக்க
வாராநின்றானவனைமகிழ்ந்தெதிர்கொள்வீரென்று
நீராருஞ்சடைமுடிமேனிலவணிந்தாரருள்செய்தார் (௱௰௮)

தம்பிரானருள்செய்யத்திருத்தொண்டரதுசாற்றி
யெம்பிரானாரருளாயிருந்தபரிசிதுவானா
னம்பிரானாராவாரவரன்றேயெனுநலத்தால்
உம்பர்நாடிழிந்ததெனவெதிர்கொள்ளவுடனெழுந்தார் (௱௰௯)

மாளிகைகண்மண்டபங்கண்மருங்குபெருங்கொடிநெருங்கத்
தாளினெடுந்தோரணமுந்தழைக்கமுகுங்குழைத்தொடையு
நீளிலையகதலிகளுநிறைந்தபசும்பொற்றசும்பும்
ஒளிநெடுமணிவிளக்குமுயர்வாயிறொறுநிரைத்தார் (௱௨௰)

சோதிமணிவேதிகைகடோறுஞ்சாந்தணிநீவிக்
கோதில்பொரிபொற்சுண்ணங்குளிர்தரளமணிபரப்பித்
தாதவிழ்பூந்தொடைமாலைத்தண்பந்தர்களுஞ்சமைத்து
வீதிகளுண்டுகளடங்கவிரைப்பனிநீர்மிகத்தெளித்தார் (௱௨௰௧)

மங்கலகீதம்பாடமழைநிகர்தூரியமுழங்கச்
செங்கயற்கண்முற்றிழையார்தெற்றிதொறுநடம்பயில
நங்கள்பிரான்றிருவாரூர்நகர்வாழ்வார்நம்பியைமுன்
பொங்கெயினீடுருவாயிற்புறமுறவந்தெதிர்கொண்டார் (௱௨௰௨)

வேறு

வந்தெதிர்கொண்டுவணங்குவார்முன்வன்றொண்டரஞ்சலிகூப்பி வந்து, சிந்தைகளிப்புறவீதியூடுசெல்வார்திருத்தொண்டர்தம்மை நோக்கி, யெந்தையிருப்பதுமாரூரவரெம்மையுமாள்வரோகேளீரென்னுஞ், சந்தவிசைப்பதிகங்கள்பாடித்தம்பெருமான்றிருவாயில்சார்ந்தார் (௱௨௰௩)

---

[திருவாரூர்த்தேவாரம் - பண் - காந்தாரம்]

திருச்சிற்றம்பலம்

கரையுங்கடலுமலையுங்காலையுமாலையுமெல்லா
முரையில்விரவிவருவாரொருவனுருத்திரலோகன்
வரையின்மடமகள்கேள்வன்வானவர்தானவர்க்கெல்லா
மரையனிருப்பதுமாரூரவரெம்மையுமாள்வரோகேளீர்

எந்தையிருப்பது மாரூரவரெம்மையுமாள்வரோவென்று
சிந்தைசெயுந்திறம்வல்லான்றிருமருவுந்திரடோளன்
மந்தமுழவமியம்பும்வளவயனாவலாரூரன்
சந்தமிசைபொடும்வல்லார்தாம்புகழெய்துவர்தாமே

திருச்சிற்றம்பலம்

வானுறநீடிருவாயிறோக்கிமண்ணுறவைந்துறுப்பால்வணங்கித்,தேனுறைநற்பகவாசமாலைத்தேவாசிரியன்றொழுதிறைஞ்சி - யூனுமுயிருமுருக்குமன்பா லுச்சிகுவித்தசெங்கைகளோடுந், தூநறுங்கொன்றையன்மூலட்டானஞ்சூழ்திருமாளிகைவாயில்புக்கார் (௱உச)

புற்றிடங்கொண்ட புராதனனைப்பூங்கோயின் மேயபிரானையார்க்கும்-பற்றிடமாயபரம்பொருளைப்பார்ப்பதிபாகனைப் பங்கயத்தாள் அர்ச்சனைசெய்யவருள்புரிந்த வண்ணலைமண்மிசைவீழ்ந்திறைஞ்சி-நற்றமிழ்நாவலர் கோனுடம்பானன்மையின்றன்மையைமெய்ம்மை பெற்றார் (௱உரு)

அன்புபெருகவுருகியுள்ளமலையவட்டாங்கபஞ்சாங்கமாக-முன்புமுறைமையினால்வணங்கிமுடிவிலாக்காதன்முதிரவோங்கி நன்புலனியைந்துமொன்றிநாயகன்சேவடியெய்தப்பெற்ற-இன்பவெள்ளத்திடைமூழ்கிநின்றேயின்னிசைவண்டமிழ்மாலைபாட (௱உசு)

வாழியமாமறைப்புற்றிடங்கொண்மன்னவனாரருளாலோர்வாக்குத் தோழமையாகவுனக்குநம்மைத்தந்தனநாமுன்பு தொண்டுகொண்ட வேள்வியிலன்றுநீகொண்டகோலமென்றும்புனைந்துநின் வேட்கை தீர - வாழிமண்மேல்விளையாடுவாயென்றாரூரர்கேட்கவெழுந்ததன்றே (௱உஎ)

கேட்கவிரும்பிவன்றொண்டரொன்றுங்கேடிலாதானையிறைஞ்சிநின்றே-யாட்கொளவந்தமறையவனேயாரூரமர்ந்தவருமணியே வாட்கயல்கொண்டகண்மங்கைபங்காமற்றுன்பெரிடகருணையன்றே- நாட்கமலப்பதந்தந்திதின்றுநாயினேனைப்பொருளாகவென்றார் (௱உஅ

என்றுபலமுறையால்வணங்கியெய்தியவுள்ளக்களிப்பினோடும் வென்றியடல்விடைபோனடந்துவீதி விடங்கப்பெருமான்முன்பு-சென்றுதொழுதுதுதித்துவாழ்ந்துதிருமாளிகைவலஞ்செய்துபோந்தார், அன்றுமுதலடியார்களெல்லாந்தம்பிரான்றோழனென்றேயறைந்தார். (௱உகு)

மைவளர்கண்டரருளினாலேவண்டமிழ்நாவலர்தம்பெருமான்- சைவவிடங்கினணிபுனைந்துசாந்தமுமாலையுந்தாருமாகி- மெய்வளர்கோலமெலாம்பொலியமிக்கவிழுத்தவம்வந்தமின்னத்- தெய்வமணிப்புற்றுளாரைப்பாடித்திளைத்துமகிழ்ந்தொழுஞ்செல்லாநிற்றார் (௱௩ய)

## வேறு.

இதற்குமுன்னெல்லையில்லாத்திருநகரிதனுள்வந்து
முதற்பெருங்கயிலையாதிமுதல்வர்தம்பங்கினட்குப்
பொதுக்கடிந்துரிமைசெய்யும்பூங்குழற்சேடிமாரிற்
கதித்தபூணேந்துகொங்கைக்கமலினியவதரித்தாள். (௩௯௧)

கதிர்மணிபிறந்ததென்னவுருத்திரகணிகைமாராம்
பதியிலார்குலத்திற்றோன்றிப்பரவையாரென்னுநாமம்
விதியுளிவிளக்கத்தாலேமேதகுசான்றோரான்ற
மதியணிபுனிதனன்றண்மங்கலவணியாற்சாற்ற. (௩௯௨)

பரவினர்காப்புப்போற்றிப்பயில்பெருஞ்சுற்றந்திங்கள்
விரவியபருவந்தோறும்விழாவணியெடுப்பமிக்கோர்
வரமலர்மங்கையிங்குவந்தனளென்றுசிந்தை
கரவருமகிழ்ச்சிபொங்கத்தளர்நடைப்பருவஞ்சேர்ந்தார். (௩௯௩)

மானிளம்பிணையோதெய்வவளரிளமுகையோவாசத்
தேனிளம்பதமோவேலைத்திரையிளம்பவளவல்லிக்
கானிளங்கொடியோதிங்கட்கதிரிளங்கொழுந்தோகாமன்
றனிளம்பருவங்கற்குந்தனியிளந்தனுவோவென்ன. (௩௯௪)

நாடுமின்பொற்புவாய்ப்புநாளுநாள்வளர்ந்துபொங்க
ஆடுமென்கழங்குப்பந்தும்மனையூசலின்ன
பாடுமின்னிசையுந்தங்கள்பனிமலைவல்லிபாதந்
கூடுமன்புருகப்பாடுங்கொள்கையோர்குறிப்புத்தோன்ற. (௩௯௫)

பிள்ளைமைப்பருவமீதாம்பேதைமைப்பருவநீங்கி
ள்ளூற்றமைந்தபொற்பாலனங்கன்மெய்த்தனங்களீட்டங்
கொள்ளமிக்குயர்வபோன்றுகொங்கைகோங்கரும்பைவீழ்ப்ப
ள்ளமெய்த்தன்மைமுன்னையுண்மையுந்தோன்றவுட்டார். (௩௯௬)

பாங்கியர்மருங்குசூழப்படரொளிமறுகுசூழத்
தேங்கமழ்குழலின்வாசந்திசையெலாஞ்சென்றுசூழ
ங்குபூங்கோயிலுள்ளாரொருவனையன்பினோடும்
தேங்கழல்வணங்கவென்றும்போதுவாரொருநாட்போந்தார். (௩௯௭)

அணிசிலம்படிகள்பார்வென்றடிப்படுத்தனமென்றார்ப்ப
மணிவளர்காஞ்சியல்குல்வரியரவுலகைவென்ற
துணிவுகொண்டார்ப்பமஞ்சுசுரிகுழற்கழியவிண்ணும்
பணிபுமென்றினவண்டார்ப்பப்பரவையார்போதும்போதில் (௩௯௮)

[ ௰ க ]

புற்றிடம்விரும்பினாரைப்போற்றினர்தொழுதுசெல்வார்
சுற்றியபரிசனங்கள்சூழவாரூருடையநம்பி
நற்பெரும்பான்மைகூட்டநகைபொதிந்திலங்குசெவ்வாய்
விற்புரைநுதலின்வேற்கண்விளங்கிழையவரைக்கண்டார். (௱௩௯)

வேறு.

கற்பகத்தின்பூங்கொம்போகாமன்றன்பெருவாழ்வோ
பொற்புடையபுண்ணியத்தின்புண்ணியமோபுயல்சுமந்து
விற்குவளைபவளமலர்மதிபூத்தவிரைக்கொடியோ
அற்புதமோசிவனருளோவறியேனென்றதிசயித்தார். (௱௪௰)

ஓவியநான்முகனெழுதவொண்ணாமையுள்ளத்தான்
மேவியதன்வருத்தமுறவிதித்ததொருமணிவிளக்கோ
மூவுலகின்பயனாகிமுன்னின்றதெனநினைந்து
நாவலர்காவலர்நின்றார்நடுநின்றார்படைமதனார். (௱௪௧)

தண்டரளமணித்தோடுந்தகைத்தோடுங்கடைபிறழுங்
கெண்டைநெடுங்கண்வியப்பக்கிளரொளிப்பூணுரவோனை
யண்டர்பிரான்றிருவருளாலயலறியாமனம்விருப்பிப்
பண்டைவிதிகடைகூட்டப்பரவையாருங்கண்டார். (௱௪௨)

கண்கொள்ளாக்கவின்பொழிந்ததிருமேனிகதிர்விரிப்ப
விண்கொள்ளாப்பேரொளியானெதிர்நோக்குமெல்லியலுக்
கெண்கொள்ளாக்காதலின்முன்பெய்தாததொருவேட்கை
மண்கொள்ளாநாண்மடமச்சம்பயிர்ப்பைவலிந்தெழலும். (௱௪௩)

முன்னேவந்தெதிர்தோன்றுமுருகனோபெருகொளியாற்
றன்னேரின்மாரனோதார்மார்பின்விஞ்சையனோ
மின்னேர்செஞ்சடையண்ணன்மெய்யருள்பெற்றுடையவனோ
என்னேயென்மனந்திரித்தவிவன்யாரோவெனநினைந்தார். (௱௪௪)

அண்ணலவன்றன்மருங்கேயளவிறந்தகாதலினால்
உண்ணிறையுங்குணநான்குமொருபுடைசாய்ந்தனவெனினும்
வண்ணமலர்க்கருங்கூந்தன்மடக்கொடியைவலிதாக்கிக்
கண்ணுதலைத்தொழுமன்பேகைக்கொண்டுசெலவுய்ப்ப. (௱௪௫)

பாங்கோடிச்சிலைவளைத்துப்படையனங்கன்விடுபாணந்
தாங்கோலியெம்மருங்குந்தடைசெய்யமடவரலுந்
தேங்கோதைமலர்க்குழன்மேற்சிறைவண்டுகலந்தார்ப்பப்
பூங்கோயிலமர்ந்தபிரான்பொற்கோயில்போய்ப்புக்காள். (௱௪௬)

வன்றொண்டராதுகண்டென்மனங்கொண்டமயிலியலின்
இன்றொண்டைச்செங்கனிவாயிளங்கொடிதான்யாரென்ன
அன்றங்குமுன்னின்றாரவர்தங்கைபரவையார்
சென்றும்பர்தரத்தார்க்குஞ்சேர்வரியாரெனச்செப்ப. (௱௪௭)

பேர்பரவைபெண்மையினிற்பெரும்பரவைவிரும்பல்கு
லார்பரவையணிதிகழுமணிமுறுவலரும்பரவை
சீர்பரவையாயினாடிருவுருவின்மென்சாயல்
ஏர்பரவையிடைப்பட்டவெள்ளுசையெழுபரவை.

(இதன்பொருள்.)

பெயர் பரவையென்றுசொல்லப்படுவது- அவளுடைய அழகு முதலியவைகளாற் குறிக்குமிடத்து - பெரிய தேவர்கூட்டம் விரும்புகின்ற திலோத்தமைமுதலிய ரம்பாஸ்திரிகள் - துதிசெய்ய த்தக்கதெய்வமாம். அழகு விளங்குகின்ற பற்கள் முல்லையரும்புகளை யொப்பானவை - சீருள்ள பரவையென்னுங் கூத்தினை யுடையவளாகிய இலக்குமியினுடைய சௌந்தரியம்பொருந்திய வடிவம் போன்ற மென்சாயலுள்ள - அந்தப் பரவையென்பவளுடைய- அழகாகிய சமுத்திரத்தினிடத்தில்பொருந்திய என்னுசையானது - ஏழுசமுத்திரங்களையு மொப்பாயிருக்கின்றது. சீர்பரவை - அடிதோக்கியிசாதுநின்றது. —என்றவாறு.

பரவை யென்னும் பெயருடையவள் பெண்தன்மையாலே குறிக்குமிடத்துப்பெரிய தேவர்களுக்கெல்லாந் தாய்போல்பவள் விரும்புகின்ற அல்குலினுடைய அழகினிறைவானது சர்ப்பங்களுக்கெல்லாம் இறையாகிய ஆதிசேஷனுடைய படத்தை யொப்பாயிருப்பது இலக்குமி துதிசெய்பத்தக்க அழகையுடையவளாகிய அந்தப் பரவையின் திருவுருவின் சௌந்தரிய மாகிய சமுத் திரத்தினிடத்திற்பொருந்திய என்னுசையானது ஏழுசமுத்திரங்களையுமொப்பானது - எனப்பொருள் கூறுவதுமொன்று; இவ்வாறுபொருள் கூறுங்கால் பெண்மையினிற்- பெரு - உம்பர் - அவை - என்றும், அல்குல் - ஆர்பு - அரவு - ஐ - - என்றும், சீர் - பரவு - ஐயாயினாள் - என்றும் பதம்பிரிக்க. முன் - ஐ - இறை - பின் - ஐ - அழகு - சீர் - இலக்குமி. அவ்வையென்பது - அவையென விகாரமாயிற்று. (௱௪௮)

என்றினைபலவுநினைந்தெம்பெருமானருள்வகையான்
முன்றொடர்ந்துவருங்காதன்முறைமையினாற்றொடக்குண்டு
நன்றெனைபாட்கொண்டவர்பானண்ணுவனென்றுண்மகிழ்ந்து
சென்றுடையநம்பிபூம்போய்த்தேவர்பிரான்கோயில்புக. (௱௪௯)

பரவையார்வலங்கொண்டுபணிந்தேத்திமுன்னரே
புரவலனார்கோயிலினின்றொருமருங்குபுறப்பட்டார்
விரவுபெருங்காதலினான்மெல்லியலார்தமைவேண்டி
யரவிணரம்புனைந்தாரடிபணிந்தாராரூரர். (௱௫௰)

அவ்வாறுபணிந்தேத்தியணியாரூர்மணிப்புற்றின்
மைவ்வாழுந்திருமிடற்றுவானவன்பானின்றும்போந்
தெவ்வாறுசென்றாளென்னின்னுயிராமன்னமெனச்
செவ்வாய்வெண்ணகைக்கொடியைத்தேடுவாராயினார். (௱௫௧)

வேறு.

பாசமாம்வினைப்பற்றறுப்பான்மிகும்
ஆசைமேலுமொராசையளிப்பதோர்
தேசின்மன்னியென்சிந்தைமயக்கிய
ஈசனாருளெந்நெறிச்சென்றதே. (௱௫௨)

உம்பர்நாயகர்தங்கழலல்லது
நம்புமாறறியேனைநடுக்குற
வம்புமால்செய்துவல்லியினெல்கியின்
றெம்பிரானருளெந்நெறிச்சென்றதே. (௱௫௩)

பந்தம்வீடுதரும்பரமன்கழல்
சிந்தையாரவுமுன்னுமென்சிந்தையை
வந்துமால்செய்துமானெனவேவிழித்
தெந்தையாரருளெந்நெறிச்சென்றதே. (௱௫௪)

என்றுசாலவுமாற்றலனொன்னுயிர்
நின்றதெங்கெனநித்திலப்பூண்முலை
மன்றல்வார்குழல்வஞ்சியைத்தேடுவான்
சென்றுதேவாசிரியனைச்சேர்ந்தபின். (௱௫௫)

காவிநேர்வருங்கண்ணியைநண்ணுவான்
யாவரோடுமுரையிலம்பாதிருந்
தாவிநல்குவராரூனையாண்டவர்
பூவின்மங்கையைத்தந்தெனும்போழ்தினில். (௱௫௬)

நாட்டுநல்லிசைநாவலூரன்சிந்தை
வேட்டமின்னிடையின்னமுதத்தினைக்
காட்டுவன்கடலைக்கடந்தென்பபோற்
பூட்டுமேழ்பரித்தேரோன்கடல்புக. (௱௫௭)

எய்துமென்பெடையோடிணைதேர்ந்துண்டு
பொய்கையிற்பகல்போக்கியபுள்ளினம்
வைகுஞ்சேக்கைகண்மேற்செலவந்ததூ
வையுண்மாலைதமியோர்பனிப்புற. (௱௫௮)

பஞ்சின்மெல்லடிப்பாவையருள்ளமும்
வஞ்சமாக்கடம்வல்வினையும்மரன்
அஞ்செழுத்துமுணராவறிவிலோர்
நெஞ்சுமென்னவிருண்டதுநீண்டவான். (௱௫௯)

மறுவில்சிந்தைவன்றொண்டர்வருந்திநல்
இறுமருங்குலார்க்கியார்பிழைப்பாரென்று
நறுமலர்க்கங்குனங்கைமுன்கொண்டபுன்
முறுவலென்னமுகிழ்த்ததுவெண்ணிலா. (௱௬௰)

அரந்தைசெய்வார்க்கழுங்கித்தம்மாருயிர்
வரன்கைதீண்டமலர்குலமாதர்போற்
பரந்தவெம்பகற்கொல்கிப்பனிமதிக்
கரங்குதீண்டவலர்ந்தகயிரவம். (௱௬௧)

தோற்றுமன்னுயிர்கட்கெலாந்தூய்மையே
சாற்றுமின்பமுந்தண்மையுந்தந்துபோ
யாற்றவண்டமெலாம்பரந்தண்ணல்வெண்
ணீற்றின்பேரொளிபோன்றதுநீணிலா. (௱௬௨)

வாவிபுள்ளொலிமாற்றியமாலையி
னூவலூரருநங்கைபரவையாம்
பாவைதந்தபடர்பெருங்காதலு
மாவிசூழ்ந்ததனிமையுமாயினார். (௱௬௩)

தந்திருக்கண்ணெரிதழலிற்பட்டு
வெந்தகாமன்வெளியேயுருச்செய்து
வந்தென்முன்னின்றுவாளிதொடுப்பதே
யெந்தையாரருளிவ்வண்ணமோவென்பார் (௱௬௪)

ஆர்த்திகண்டுமென்மேனின்றழற்கதிர்
தூர்ப்பதேயெனத்தொண்டுகொண்டாண்டவர்
நீர்த்தரங்கநெடுங்கங்கைநீண்முடி
சாத்தும்வெண்மதிபோன்றிலைதண்மதி. (௱௬௫)

அடுத்துமேன்மேலலைத்தெழுமாழியை
தடுத்துமுன்னெனையாண்டவர்தாமுணக்
கடித்தநஞ்சன்றரங்கக்கரங்களால்
எடுத்துநீட்டிநீயென்னையின்றென்செய்தாய் (௩௬௬)

பிறந்தவெங்கள்பிரான்மலயத்திடை
சிறந்தணைந்துதெய்வநீர்நாட்டணி
புறம்பணைத்தடம்பொங்கழல்வீசிட
மறம்பயின்றதெங்கோதமிழ்மாருதம். (௩௬௭)

இன்னதன்மையபின்னுமியம்புவான்
மன்னுகாதலனாகியவள்ளல்பாற்
றன்னரும்பெறனெஞ்சுதயங்கப்போம்
அன்னமன்னவள்செய்கையறைகுவாம். (௩௬௮)

வேறு.

கனங்கொண்டமணிகண்டர்கழல்வணங்கிக்கணவனைமுன்பெறுவாள்போல, இனங்கொண்டசேடியர்கள்புடைசூழ வெய்துபெருங்காதலோடுந், தனங்கொண்டுதளர்மருங்குற்பரவையுந்வன்றொண்டர்பாற்றனித்துச்சென்ற, மனங்கொண்டுவரும்பெரியமயல்கொண்டுதன்மணிமாளிகையைச்சார்ந்தாள். (௩௬௯)

சீறடிமேனூபுரங்களறிந்தனபோற்சிறிதளவேயொலிப்பமுன்னர், வேறொருவருடன்பேசாண்மெல்லவடியொதுங்கி மாளிகையின்மேலால், எறிமரகதத்தூணத்திலங்குமணி வேதிகையினலங்கொள் பொற்கான் மாநிலமலர்ச்சேக்கையிசைமணிநிலாமுன்றின் மருங்கிருந்தாள்வந்து. (௩௭௰)

அவ்வளவிலருகிருந்தசேடிதனைமுகநோக்கியாரூராண்ட
வைவிரவுகண்டனாநாம்வணங்கப்போமறுகெதிர்வந்தவராரென்ன
இவ்வுலகிலந்தணராயிருவாதேயொருவர்தாமெதிர்நின்றாண்ட
சைவமுதற்றிருத்தொண்டர்தம்பிரான்றோழனார்நம்பியென்றாள்.

என்றவுரைகேட்டலுமேயெம்பிரான்றமரோயோவென்றுமுன்னம், வன்றொண்டர்பால்வைத்தமனக்காதலளவின்றி வளர்ந்துபொங்க, நின்றநிறைநாண்முதலாங்குணங்களுடனீங்கவுயிரொன்றுந்தாங்கி, மின்றயங்குநுண்ணிடையாள்வெவ்வுயிர்த்து மெல்லணைமேல்வீழ்ந்தபோது. (௩௭௨)

ஆரநறுஞ்சேறாட்டியரும்பனிநீர்நறுந்திவலையருகுவீசி
ஈரவிளந்தளிர்குளிரப்படுத்துமடவார்செய்தவினையுமெல்லாம்

டோழலினெய்சொரிந்தாலொத்தனமற்றதன்மீதுசமிதையென்ன
மாரனுந்தன்பெருஞ்சிலையின்வலிகாட்டிமலர்வாளிசொரிந்தான்வந்
து. (௱௭௩)

மலரமளித்துயிலாற்றாள்வருந்தென்றன்மருங்காற்றண்மங்குல
வானி, னிலவுமிழுந்தழலாற்றாணிறையாற்றும்பொறையாற்றாநீர்மை
யோடுங், கலவமயிலெனவெழுந்துகருங்குழலின்பாரமாற்றாக் கைய
ளாகி, யிலவவிதழ்ச்செந்துவர்வாய்நெகிழ்ந்தாற்றாமையினவற்றேயி
ன்னசொன்னாள். (௱௭௪)

வேறு.

கந்தங்கமழ்மென்குழலீரிதுவென்கலைவாண்மதியங்கனல்வாளினை
சந்தின்றழலைப்பனிநீரளவித்தடவுங்கொடியீர்தவிரீர்தவிரீர் [யிச்
வந்திங்குலவுந்நிலவும்விரையார் மலயானிலமுமெரியாய்வருமால்
அந்தண்புனலுமரவும்விரவுஞ்சடையானருள்பெற்றுடையாரருளார்

புலரும்படியன்றிரவென்னளவும் பொறையுந்நிறையும்மிறையுந்தரி
யா, உலருந்தனமுமனமும்வினையேனொருவேனளவோபெருவாழ்வு
ளாயீர், பலரும்புரியந்துயர்தானிதுவோ படைமன்மதனார்புடைநி
ன்றகலார், அலரும்நிலவுமலரும்முடியா ரருள்பெற்றுடையாரவரோவ
றியார். (௱௭௬)

தேருங்கொடியுமிடையுமறுகிற்றிருவாரூரர்நீரோயல்லால்
ஆரொன்றுயரமறிவாரடிகளடியேனயரும்படியோவிதுதா [யே
னீரும்பிறையும்பொறிவாளரவி னிரையுநிரைவெண் டலையின்புடை
பூருஞ்சடையீர்விடைமேல்வருவீ ருமதன்பிலர்போலிடாதேவறு
வேன். (௱௭௭)

என்றின்னனவேபலவும்புகலுமிருளாரளகச்சுருளோதியையும்
வன்றொண்டனையும்படிமேல்வரமுன்பருள்வானருளும்வகையார்தி
னைவார், சென்றும்பர்களும்பணியுஞ்செல்வத் திருவாரூர்வாழ்பெ
ருமானடிகள், அன்றங்கவர்மன்றலைநீர்செயுமென் றடியாரறியப்படி
யாலருளி. (௱௭௮)

மன்னும்புகழ்நாவலர்கோன்மகிழமங்கைபரவைதனைத்தந்தோம்
இன்னவகைநம்மடியா ரறியும்படியேயுரை செய்தனமென்றருளிப்,
பொன்னின்புரிபுன் சடையன்விடையன் பொருமாகரியினுரிவைபு
னைவான், அன்னந்நடையாள்பரவைக்கணியஃதாரூரன்பான்மணமெ
ன்றருள. (௱௭௯)

காமத்துயரிற் கவல்வார்நெஞ்சிற் கரையில்லிருளுங் கங்குற்கழி
போம், யாமத்திருளும்புலரக்கதிரோனெழுகாலையில்வந்தடியார்கூ
டிச், சேமத்துணையாமவர்பேரருளைத்தொழுதே திருநாவலர்கோன்
மகிழத், தாமக்குழலாள்பரவைவதுவை தகுநீர்மையினனிகழச்செய்
தார். (௱௮௰)

வேறு-

தென்னாவலூர்மன்னன்றேவர்பிரான்றிருவருளால்
மின்னாருங்கொடிமருங்குற்பரவையெனுமெல்லியறன்
பொன்னாருமுலையோங்கற்புணர்குவடேசார்வாகப்
பன்னாளும்பயில்யோக பரம்பரையின்விரும்பினார். (௱அக)

தன்னையாளுடையபிரான்சரணாரவிந்தமலர்
சென்னியிலுஞ்சிந்தையிலுமலர்வித்துத்திருப்பதிகம்
பன்னுதமிழ்த்தொடைமாலைபலசாத்திப் பரவையெனு
மின்னிடையாளுடன்கூடிவிளையாடிச்செல்கின்றார். (௱அஉ)

வேறு.

மாதுடன்கூடவைகிமாளிகைமருங்குசோலைப்
போதலர்வாவிமாடுசெய்குன்றின்புடையோர்தெற்றிச்
சீதளத்தரளப்பந்தற்செழுந்தவிசிழிந்துதங்க
ணாதர்பூங்கோயினண்ணிக்கும்பிடும்விருப்பானம்பி. (௱அ௩)

அந்தரத்தமரர்போற்றுமணிகிளராடைசாத்திச்
சந்தனத்தளறுதோய்ந்தகுங்குமக்கலவைசாத்திச்
சுந்தரச்சுழியஞ்சாத்திச்சுடர்மணிக்கலன்கள்சாத்தி
இந்திரத்திருவின்மேலாமெழின்மிகவிளங்கித்தோன்ற. (௱அ௪)

கையினிற்புனைபொற்கோலுங்காதினிலிலங்குகோடு
மெய்யினிற்றுவளுநூலுநெற்றியின்விளங்குநீறும்
ஐயனுக்கழகிதாமென் றாயிழைமகளிர்போற்றச்
சைவமெய்த்திருவின்கோலந்தழைப்பவீதியினைச்சார்ந்தார் (௱அரு)

நாவலூர்வந்தசைவநற்றவக்களிறேயென்றும்
மேவலர்புரங்கள்செற்றவிடையவர்க்கன்பவென்றுந்
தாவில்சீர்ப்பெருமையாரூர்மறையவர்தலைவவென்றும்
மேவினரிரண்டுபாலும்வேறுவேறாயம்போற்ற. (௱அ௬)

கைக்கடாகுரங்குகோழிசிவல்கவுதாரிபற்றிப்
பக்கமுன்போதுவார்கள்பயின்மொழிபயிற்றிச்செல்ல
மிக்கபூம்பிடகைகொள்வோர்விளையடைப்பையோர்சூழ
மைக்கருங்கண்ணினார்கண்மறுகநீண்மறுகில்வந்தார். (௱அஎ)

பொலங்கலப்புரவிபண்ணிப்போதுவார்பின்புபோத
இலங்கொளிவலயப்பொற்றோளிடையிடைமிடைந்துதொங்க
னலங்கிளர்நீழல்சூழநான்மறைமுனிவரோடும்
அலங்கலந்தோளினான்வந்தணைந்தனனண்ணல்கோயில். (௱அஅ)

நண்ணுநல்கோயிற்றேவாசிரியனுங்காவணத்து
விண்ணவரொழிபமண்மேன்மிக்கசீரடியார்கூடி
எண்ணிலாரிருந்தபோதிலிவர்க்கியானடியேனுகப்
பண்ணுநாளெந்நாளென்றுபரமர்தாள்பரவிச்சென்றார். (ாஅகூ)

அடியவர்க்கடியனுவேனென்னுமாதரவுகூரக்
கொடிநெடுங்கொற்றவாயில்பணிந்துகைகுவித்துப்புக்கார்
கடிகொள்பூங்கொன்றைவேய்ந்தாரவர்க்கெதிர்காணக்காட்டும்
படியெதிர்மீதாழ்நிற்கப்பாதங்கள்பணிந்துபூண்டு. (ாகூ0)

வேறு.

மன்பெருந்திருமாமறைவண்டுசூழ்ந்
தன்பர்சிந்தை யலர்ந்தசெந்தாமரை
நன்பெரும்பர மானந்தநன்மது
என்றரத்து மளித்தெதிர் நின்றன. (ாகூக)

ஞாலமுய்ய நடமன்றுளாடின
காலனாருயிர் மாளக்கறுத்தன
மாலைதாழ்குழன் மாமலையாள்செங்கை
சீலமாக வருடச் சிவந்தன. (ாகூஉ)

நீதிமாதவர் நெஞ்சிற் பொலிந்தன
வேதியாதவர் தம்மை வேதிப்பன
சோதியா யெழுஞ் சோதியுட் சோதிய
ஆதிமாலயன் காணு வளவின. (ாகூங)

வேதவாரணமேற்கொண்டிருந்தன
பேதையேன்செய்பிழைபொறுத்தாண்டன
ஏதமானவை தீர்க்க விசைந்தன
பூதநாத நின் புண்டரீ கப்பதம். (ாகூச)

வேறு.

இன்னவாறேத்துநம்பிக் கேறுசேவகனார்தாமும்
அந்நிலையவர்தாம்வேண்டு மதனையேயருளவேண்டி
மன்னுசீரடியார்தங்கள் வழித்தொண்டையுணர நல்கிப்
பின்னையுமவர்கடங்கள் பெருமையையருளிச்செய்வார். (ாகூரு)

பெருமையாற்றம்மையொப்பார் பேணலாலெம்மைப்பெற்றார்
ஒருமையாலுலகைவெல்வா ரூனமேலொன்றுமில்லார்
அருமையாநிலையினின்ற ரன்பினுலின்பமார்வார்
இருமையுங்கடந்துநின்ற ரிவரைநீயடைவாயென்று. (ாகூசு)

நாதனாரருளிச்செய்ய நம்பியாரூரர்நானிங்
கேதந்தீர்நெறியைப்பெற்றே னென்றெதிர்வணங்கிப்போற்ற
நீதியாலவர்கடம்மைப் பணிந்துநீநிறைசொல்மாலை
கோதிலாவாய்மையாலே பாடெனவண்ணல்கூற. (௩௯எ)

தன்னையாளுடையநாதன் றானருள்செய்யக்கேட்டுச்
சென்னிமால்வணங்கிநின்றதிருநாவலூரர்நாடர்
இன்னவாறின்னபண்பென் றேத்துகே னதற்கியானார்
பன்னுபாமாலைபாடும் பரிசெனக்கருள்செய்யென்ன. (௩௯அ)

வேறு.

தொல்லைமால்வரைபயந்த தூயாடன்றிருப்பாகன்
அல்லறீர்ந்துலகுய்யமறையளித்ததிருவாக்கா
றில்லைவாழந்தணர்த மடியார்க்குமடியேனென்
றெல்லையிலவண்புகழா ரெடுத்திசைப்பாமொழியென்றான் ௩௯௯

மன்னுசீர்வயலாரூர் மன்னவனைவன்றொண்டர்
சென்னிபுறவடிவணங்கித்திருவருண்மேற்கொள்பொழுதின்
முன்னமாலயனறியா முதல்வர்தாமெழுந்தருள
அந்நிலைநண்டடியவர்பாற் சார்வதனுக்கணைகின்றார் (௪௦௦)

ஆரத்தேதிருக்கூட்டம்பலமுறைபாற்றொழுதன்பு
சேரத்தாழ்ந்தெழுந்தருகுசென்றெய்திநின்றழியா
வீரத்தாரெல்லார்க்குந்தனித்தனிவேறடியேனென்
றூர்வத்தாற்றிருத்தொண்டத்தொகைப்பதிகமருள்செய்வார். (௪௦௧)

தம்பெருமான்கொடுத்தமொழிமுதலாகத்தமிழ்மாலைச்
செம்பொருளாற்றிருத்தொண்டத்தொகையானதிருப்பதிகம்
உம்பர்பிரான்றானருளு முணர்வுபெறவுலகேத்த
எம்பெருமான்வன்றொண்டர்பாடியவரெதிர்பணிந்தார். (௪௦௨)

---

[திருத்தொண்டத்தொகைத்தேவாரம்-பண்-கொல்லிக்கௌவாணம்]

திருச்சிற்றம்பலம்

தில்லைவா ழந்தணர்த மடியார்க்கு மடியேன் றிருநீலகண்டத்
துக் குயவனார்க்கடியே, னில்லையே யென்னாத வியற்பகைக்கு மடி
யே னிளையான்றன் குடிமாற னடியார்க்கு மடியேன், வெல்லுமா
மிகவல்ல மெய்ப்பொருளுக் கடியேன் விரிபொழில்சூழ் குன்றை
யார் விறன்மிண் டர்க்கடியே, னல்லிமென் முல்லையந்தா ரமர்நீதி
க்கடியே னாரூரனாரூரி லம்மானுக்காளே. (௧)

இலைமலிந்த வேனம்பி யெறிபத்தர்க்கடியே னேனாதிநாதன்ற னடியார்க்கு மடியேன், கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பர்க்கடியேன் கடவூரிற்கலயன்ற னடியார்க்கு மடியேன், மலைமலிந்ததோள்வள்ளல் மானக்கஞ்சாற னெஞ்சாதவாட்டாய னடியார்க்கு மடியேன், அலைமலிந்த புனன்மங்கை யானாயர்க்கடியே னாரூர னாரூரி லம்மானுக்காளே. (௨)

மும்மையா லுலகாண்ட மூர்த்திக்கு மடியேன் முருகனுக்கு முருத்திர பசுபதிக்கு மடியேன், செம்மையே திருநாளைப் போவார்க்கு மடியேன் திருக்குறிப்புத் தொண்டர்தம் மடியார்க்கு மடியேன், மெய்ம்மையே திருமேனி வழிபடாநிற்க வெகுண்டெழுந்த தாதைதாள் மழுவினாலெறிந்த, வம்மையா னடித் தண்டிப் பெருமானுக்கடியே னாரூரனாரூரி லம்மானுக்காளே. (௩)

திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட திருநாவுக்கரையன்ற னடியார்க்கு மடியேன், பெருநம்பி குலச்சிறைத னடியார்க்கு மடியேன் பெருமிழலைக் குறும்பர்க்கும் பேயார்க்கு மடியேன், ஒருநம்பி யப்பூதி யடியார்க்கு மடியே னொலிபுனல்சூழ் சாத்தமங்கை நீலநக்கர்க் கடியேன், அருநம்பி நமிநந்தி யடியார்க்கு மடியே னாரூரனாரூரி லம்மானுக்காளே. (௪)

வம்பறா வரிவண்டு மணநாற மலரு மதுமலர்நற் கொன்றையா னடியலாற்பேணா, வெம்பிரான் சம்பந்த னடியார்க்கு மடியே னேயர்கோன் கலிக்காம னடியார்க்கு மடியே, னம்பிரான்திருமூல னடியார்க்கு மடியே னாட்டமிகு தண்டிக்கு மூர்க்கர்க்கு மடியேன், *அம்பரான் சோமாசி மாறனுக்கு மடியே னாரூரனாரூரி லம்மானுக்காளே. (௫)

வார்கொண்ட வனமுலையா ளுமைபங்கன் கழலே மறவாது கல்லெறிந்த சாக்கியர்க்கு மடியேன், சீர்கொண்ட புகழ்வள்ளல் சிறப்புலிக்கு மடியேன் செங்காட்டங்குடி மேய சிறுத்தொண்டர்க்கடியேன், கார்கொண்ட கொடைக்கழறிற் றறிவார்க்கு மடியேன் கடற்காழிக் கணநாத னடியார்க்கு மடியேன், ஆர்கொண்ட வேற்கூற்றன் களந்தைக்கோ னடியே னாரூரனாரூரி லம்மானுக்காளே.௬

பொய்யடிமை யில்லாத புலவர்க்கு மடியேன் பொழிற்கருவூர்த் துஞ்சிய புகழ்ச்சோழற் கடியேன், மெய்யடிய னரசிங்க முனையரையற் கடியேன் விரிதிரைசூழ் கடனாகை யதிபத்தர்க் கடியேன், கைதடிந்த வரிசிலையான் கலிக்கம்பன் கலியன் கழற்சத்திவரிஞ்சையர்கோ னடியார்க்கு மடியேன், ஐயடிகள் காடவர்கோ னடியார்க்கு மடியே னாரூர னாரூரி லம்மானுக்காளே. (௭)

---

* அம்பர் - என்பது - ஒரு சிவஸ்தலம்.

கறைக்கண்டன் கழலடியே காப்புக்கொண் டிருந்த கணம்புல்ல நம்பிக்குங் காரிக்கு மடியேன், னிறைக்கொண்ட சிந்தையா னெல்வேலி வென்ற நின்றசீர் நெடுமாற னடியார்க்கு மடியேன், றுறைக்கொண்ட செம்பவள மிருளகற் றுஞ்சோதித் தொன்மயிலைவாயிலா னடியார்க்கு மடியேன், அறைக்கொண்ட வேனம்பி முனையடுவார்க்கடியே னாரூர னாரூரி லம்மானுக்காளே. (௮)

கடல்சூழ்ந்த வுலகெலாங் காக்கின்ற பெருமான் காடவர்கோன் கழற்சிங்க னடியார்க்கு மடியேன், மடல்சூழ்ந்த தார்நம்பி யிடங்கழிக்குந் தஞ்சை மன்னவனாஞ் செருத்துணைத னடியார்க்கு மடியேன், புடைசூழ்ந்த புலியதன்மே லரவாடவாடி பொன்னடிக்கே மனம்வைத்த புகழ்த்துணைக்கு மடியேன், அடல்சூழ்ந்த வேனம்பி கோட்புலிக்கு மடியே னாரூர னாரூரி லம்மானுக் காளே. (௯)

பத்தராய்ப் பணிவார்க ளெல்லார்க்கு மடியேன் பரமனையே பாடுவா ரடியார்க்கு மடியேன், சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்குமடியேன் திருவாரூர்ப் பிறந்தார்க ளெல்லார்க்கு மடியேன், முப்பொழுதுந் திருமேனி தீண்டுவார்க் கடியேன் முழுநீறுபூசிய முனிவர்க்கு மடியேன், அப்பாலு மடிச்சார்ந்தா ரடியார்க்குமடியே னாரூர னாரூரி லம்மானுக்காளே. (௰)

மன்னியசீர் மறைநாவ னின்றவூர்ப் பூசல் வரிவளையாண் மானிக்கு நேசனுக்கு மடியேன், றென்னவனா யுலகாண்ட செங்கணார்க்கடியேன் திருநீல கண்டத்துப் பாணனார்க் கடியே, னென்னவனா மரனடியே யடைந்திட்ட சடைய னிசைஞானிகாதலன் திருநாவலூர்க்கோ, னன்னவனா மாரூர னடிமைகேட் டுவப்பா ராரூரி லம்மானுக் கன்ப ராவாரே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

---

உம்பர்நாயகரடியார்பேருவகைதாமெய்த
நம்பியாரூரர்திருக்கூட்டத்தினடுவணைந்தார்
தம்பிரான்றோழரவர்தாமொழிந்ததமிழ்முறையே
யெம்பிரான்றமர்கள்திருத்தொண்டேத்தலுறுகின்றேன். (௨௱௩)

---

தடுத்தாட்கொண்டபுராணமுற்றுப்பெற்றது.

ஆ- திருவிருத்தம்—௩௱௫௧.

---



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# தில்லைவாழந்தணர் புராணம்



## நடேசர்தோத்திரம்—வேறு.

ஆதியாய்நடுவுமாகி யளவிலாவளவுமாகிச்
சோதியாயுணர்வுமாகித் தோன்றியபொருளுமாகிப்
பேதியாவேகமாகிப் பெண்ணுமாயாணுமாகிப்
போதியாநிற்குந்தில்லைப் பொதுநடம்போற்றிபோற்றி. (௧)

கற்பனைகடந்தசோதி கருணையேயுருவமாகி
அற்புதக்கோலநீடி யருமறைச்சிரத்தின்மேலாஞ்
சிற்பரவியோமமாகுந் திருச்சிற்றம்பலத்துணின்று
பொற்புடனடஞ்செய்கின்ற பூங்கழல்போற்றிபோற்றி. (௨)

போற்றிநீடில்லைவாழந்தணர்திறம்புகலலுற்றே
னீற்றினானிறைந்தகோல நிருத்தனுக்குரியதொண்டாம்
பேற்றினார் பெருமைக்கெல்லை யாயினார்பேணிவாழும்
ஆற்றினார்பெருகுமன்பா லடித்தவம்புரிந்து வாழ்வார். (௩)

பொங்கியதிருவினீடும்பொற்புடைப்பணிகளேந்தி
மங்கலத்தொழில்கள்செய்துமறைகளாற்றுதித்துமற்றுந்
தங்களுக்கேற்றபண்பிற்றம்பணித்தலைநின்றுய்த்தே
யங்கணர்கோயிலுள்ளாவகம்படித்தொண்டுசெய்வார். (௪)

வருமுறையெரிமூன்றோம்பிமன்னுயிரருளான்மல்கத்
தருமமேபொருளாக்கொண்டுதத்துவநெறியிற்செல்லும்
அருமறைநான்கினோடாறங்கமும்பயின்றுவல்லார்
திருநடம்புரிவார்க்காளாந்திருவினாற்சிறந்தசீரார். (௫)

மறுவிலாமரபின்வந்துமாறிலாவொழுக்கம்பூண்டார்
அறுதொழிலாட்சியாலேயருங்கலிநீக்கியுள்ளார்
உறுவதுநீற்றின்செல்வ மெனக்கொளுமுள்ளமிக்கார்
பெறுவதுசிவன்பாலன்பாம் பேறெனப்பெருகிவாழ்வார். (௬)

ஞானமேமுதலாநான்குநவையறத்தெரிந்துமிக்கார்
தானமுந்தவமும்வல்லார்தகுதியின்பகுதிசார்ந்தார்
ஊனமேலொன்றுமில்லாருலகெலாம்புகழ்ந்துபோற்று
மானமும்பொறையுந்தாங்கிமனையறம்புரிந்துவாழ்வார். (௭)

செம்மையாற்றணிந்தசிந்தைத்தெய்வவேதியர்களானூர்
மும்மையாயிரவர்தாங்கள்போற்றிடமுதல்வனாரை
யிம்மையேபெற்றுவாழ்ந்தாரினிப்பெறும்பேறொன்றில்லார்
தம்மையேதமக்கொப்பானநிலைமையாற்றலைமைசார்ந்தார். (௫)

இன்றிவர்பெருமையெம்மாலியம்பலாமெல்லைத்தாமோ
தென்றமிழ்ப்பயனாயுள்ளதிருத்தொண்டத்தொகைமுன்பாட
அன்றுவன்றொண்டர்தம்மையருளியவாரூரண்ணன்
முன்றிருவாக்காற்கோத்த முதற்பொருளானாலென்றால். (௬)

அகலிடத்துயர்ந்ததில்லையந்தணரகிலமெல்லாம்
புகழ்திருமறையோரென்றும் பொதுநடம்போற்றிவாழ
நிகழ்திருநீலகண்டக்குயவனார்நீடுவாய்மை
திகழுமன்புடையதொண்டர்செய்தவங்கூறலுற்றாம். (௭)

திருச்சிற்றம்பலம்.

தில்லைவாழந்தணர்புராணமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௬௬௬,

—o—

தேவர்களெல்லாரும் போற்றுஞ் சிற்சபையில் ஆனந்தநிர்த்தனஞ் செய்தருளுகின்ற நடேசமூர்த்திக்கு மிகுந்த அன்புடன் ஆராதனைசெய்யும் தொண்டி லன்றி மோக்ஷத்திலும் விருப்பமில்லாதவர்களாய்ச் சுந்தரமூர்த்திசுவாமிகள் திருத்தொண்டத் தொகையோதிச்சாத்தத் தில்லைவாழந்தணர்தமடியார்க்கு மடியேனென்று நடராசமூர்த்தி முதலடியெடுத்துக்கொடுக்கத்தக்க திருவருள் பெற்றுத் தங்கள் பிராமணகுலத்துக் குரிய நித்தியாகுதி வளர்ப்பவர்களுமாய் வாழுகின்றவர்கள். இவர்களைவணங்கித் திருநீலகண்டநாயனார் திருத்தொண்டினைத் துதிசெய்கின்றனம்.



௨

# திருநீலகண்டநாயனார்புராணம்

வேதியர்தில்லைமூதூர்வேட்கோவர்குலத்துவந்தார்
மாதொருபாகநோக்கிமன்னுசிற்றம்பலத்தே
யாதியுமுடிவுமில்லா வற்புதத்தனிக்கூத்தாடு
நாதனார்கழல்கள்வாழ்த்திவழிபடுநலத்தின்மிக்கார். (௧)

பொய்கடிந்தறத்தின்வாழ்வார்புனற்சடைமுடியார்க்கன்பா
மெய்யடியார்கட்கானபணிசெயும்விருப்பினின்றார்
வையகம்போற்றுஞ்செய்கைமனையறம்புரிந்துவாழ்வார்
சைவமெய்த்திருவின்சார்வேபொருளெனச்சாருநீரார். (௨)

அளவிலாமரபின்வாழ்க்கைமட்கலமமுதுக்காக்கி
வளரிளந்திங்கட்கண்ணிமன்றுளாரடியார்க்கென்றும்
உளமகிழ்சிறப்பின்மல்கவோடளித்தொழுகுநாளில்
இளமைமீதூரவின்பத்துறையினிலெளியரானார். (௩)

அவர்தங்கண்மனைவியாருமருந்ததிகற்பின்மிக்கார்
புவனங்களுய்யவையர்பொங்குநஞ்சுண்ணயாஞ்செய்
தவநின்றுதடுத்ததென்னத்தகைந்துதான்றரித்ததென்று
சிவனெந்தைகண்டந்தன்னைத்திருநீலகண்டமென்பார். (௪)

ஆனதங்கேள்வரங்கோர்பரத்தைபாலணைந்துநண்ண
மானமுன்பொருதுவந்த வூடலான்மனையின்வாழ்க்கை
ஏனையவெல்லாஞ்செய்தேயுடனுறைவிசையாரானார்
தேனலர்கமலப்போதிற்றிருவினுமுருவமிக்கார். (௫)

ஆண்டவப்புலவிதீர்க்கவன்பனார்முன்புசென்று
பூண்டயங்கிளமென்சாயற்பொற்கொடியனையார்தம்மை
வேண்டுவவிரந்துகூறிமெய்யுறவணையும்போதிற்
தீண்டுவீராயினெம்மைத்திருநீலகண்டமென்றார். (௬)

ஆதியார்நீலகண்டத்தளவுதாங்கொண்டவார்வம்
பேதியாவாணைகேட்டபெரியவர்பெயர்ந்துநீங்கி
ஏதிலார்போலநோக்கியெம்மையென்றதனான்மற்றை
மாதரார்தமையுமென்றன்மனத்தினுந்தீண்டேனென்றார். (௭)

கற்புறுமனைவியாருங்கணவனார்க்கானவெல்லாம்
பொற்புறமெய்யுறாமற்பொருந்துவபோற்றிச்செய்தே
இற்புறம்பொழியாரங்கணிருவரும்வேறுவைகி
யற்புறுபுணர்ச்சியின்மையயலறியாமைவாழ்ந்தார். (௮)

இளமையின்மிக்குளார்களிருவருமறியநின்ற
அளவில்சீராணைபோற்றி யாண்டுகள்பலவுஞ்செல்ல
வளமலியிளமைநீங்கிவடிவுறுமூப்புவந்து
தளர்வொடுசாய்ந்துமன்புதம்பிரான்றிறத்துச்சாயார். (௯)

இந்நெறியொழுகுநாளிலெரிதளிர்த்தென்னநீண்ட
மின்னொளிர்சடையோனன்றுந்தொண்டனார்விளக்கங்காண
நன்னெறியிதுவாமென்றுஞாலத்தோர்விரும்பியுய்யும்
அந்நெறிகாட்டுமாற்றாலருட்சிவயோகியாகி. (௰)

வேறு.

கீளொடுகோவணஞ்சாத்திக்கேடிலா
வாள்விடுநீற்றொளிமலர்ந்தமேனிமேற்
றோளொடுமார்பிடைத்துவளுநூலுட
னீளொளிவளர்திருமுண்டநெற்றியும். (௰௧)

நெடுஞ்சடைகரந்திடநெறித்தபம்பையும்
விடுங்கதிர்முறுவல்வெண்ணிலவுமேற்பட
இடும்பலிப்பாத்திரமேந்துகையராய்
நடந்துவேட்கோவர்தமனையினண்ணினார். (௰௨)

நண்ணியதவச்சிவயோகநாதனைக்
கண்ணுறநோக்கியகாதலன்பர்தாம்
புண்ணியத்தொண்டராமென்றுபோற்றிசெய்
தெண்ணியவகையினாலெதிர்கொண்டேத்தினார். (௰௩)

பிறைவளர்சடைமுடிப்பிரானைத்தொண்டரொன்
றுறையுளிலணைந்துபேருவகைகூர்ந்திட
முறைமைபின்வழிபடமொழிந்தபூசைக
ணிறைபெருவிருப்பொடுசெய்துநின்றபின். (௰௪)

எம்பிரான்யான்செயும்பணியெதென்றவர்
வம்புலாமலர்ச்சடைவள்ளறொண்டனார்
உம்பர்நாயகனுமிவ்வோடுன்பால்வைத்து
நம்பிநீதருகநாம்வேண்டும்போதென்று. (௰௫)

தன்னையொப்பரியதுதலத்துத்தன்னுழைத்
துன்னியயாவையுந்தூய்மைசெய்வது
பொன்னினுமணியினும்போற்றவேண்டுவ
தின்னதன்மையதிதுவாங்குநீயென. (௰௬)

தொல்லைவேட்கோவர்தங்குலத்துட்டோன்றிய
மல்குசீர்த்தொண்டனார்வணங்கிவாங்கிக்கொண்
டொல்லையின்மனையிலோர்மருங்குகாப்புறும்
எல்லையில்வைத்துவந் திறையையெய்தினார். (௰௭)

வைத்தபின்மறையவராகிவந்தரு
ணித்தனார்நீங்கிடநின்றதொண்டரும்
உய்த்துடன்போய்விடைகொண்டுமீண்டனர்
அத்தர்தாமம்பலமணையமேவினார். (௰௮)

வேறு.

சாலநாள்கழிந்தபின்பு தலைவனார்தாமுன்வைத்த
கோலமாமோடுதன்னைக்குறியிடத்தகலப்போக்கிச்
சீலமார்கொள்கையென்றுந்திருந்துவேட்கோவர்தம்பால்
வாலிதாநிலைமைகாட்டமுன்புபோன்மனையில்வந்தார். (௰௯)

வந்தபின்றொண்டனாருமெதிர்வழிபாடுசெய்து
சிந்தைசெய்தருளிற்றெங்கள்செய்தவமென்றுநிற்ப
முந்தைநாளுன்பால்வைத்தமொய்யொளிவிளங்குமோடு
தந்துநில்லென்றானெல்லாந்தான்வைத்துவாங்கவல்லான். (௨௰)

என்றவர்விரைந்துகூறவிருந்தவரீந்தவோடு
சென்றுமுன்கொணர்வான்புக்கார்கண்டிலர்திகைத்துநோக்கி
நின்றவர்தம்மைக்கேட்டார்நேடியுங்காணார்மாயை
யொன்றுமங்கறிந்திலாதாருரைப்பதொன்றின்றிநின்றார். (௨௧)

மறையவனாகிநின்றமலைமகள்கேள்வன்றானும்
உறையுளிற்புக்குநின்றவொருபெருந்தொண்டர்கேட்ப
இறையிலிங்கெய்தப்புக்காய்தாழ்த்ததென்னென்னவந்து
கறைமறைமிடற்றினானைக்கைதொழுதுரைக்கலுற்றார். (௨௨)

இழையணிமுந்நூன்மார்பினெந்தைநீர்தந்துபோன
விழைதகுமோடுவைத்தவேறிடந்தேடிக்காணேன்
பழையமற்றதனினல்லபாத்திரந்தருவன்கொண்டிப்
பிழையினைப்பொறுக்கவேண்டும்பெருமவென்றிறைஞ்சிநின்றார்.()

சென்னியால்வணங்கிச்சொன்னதொண்டனைச்செயிர்த்துநோக்கி
யென்னிதுமொழிந்தவாநீயான்வைத்தமண்ணோடன்றிப்
பொன்னினாலமைத்துத்தந்தாயாயினுங்கொள்ளேன்போற்ற
முன்னைநான்வைத்தவோடேகொண்டுவாவென்றான்முனிந்தோன்.(௨௪

கேடிலாப்பெரியோயென்பால்வைத்ததுகெடுதலாலே
நாடியுங்காணேன்வேறுநல்லதோரோடுசால
நீடுசெல்வதுதானொன்றுதருகின்றேனெனவுங்கொள்ளா
தாடிநின்றுரைத்தெந்தன்றனுணர்வெலாமொழித்ததென்ன. (௨௫)

ஆவதென்னின்பால்வைத்த வடைக்கலப்பொருளை வௌவிப்
பாவகம்பலவுஞ்செய்துபழிக்குநீயொன்றுநாணா
யாவருங்காணவுன்னைவளைத்துநான்கொண்டேயன்றிப்
போவதுசெய்யேனென்றான்புண்ணியப்பொருளாய்நின்றான்(௨௬)

வளத்தினான்மிக்கவோடுவௌவினேனல்லேனெல்லை
யுளத்தினுங்களவிலாமைக்கென்செய்கேனுரையுமென்னக்

ளத்துநஞ்சொளித்துநின்றான்காதலுன்மகனைப்பற்றிக்
குளத்தினின்மூழ்கிப்போவென்றருளினன்கொடுமையில்லான். ( )

அய்யர்நீரருளிச்செய்தவண்ணமியான்செய்வதற்குப்
பொய்யில்சீர்ப்புதல்வனில்லையென்செய்கேன்புகலுமென்ன
மையறுசிறப்பின்மிக்கமனையவடன்னைப்பற்றி
மொய்யலர்வாவிப்புக்குமூழ்குவாயெனமொழிந்தார். (௨௮)

வேறு.

கங்கைநதிகரந்தசடைகரந்தருளியெதிர்நின்ற
வெங்கண்விடையவரருளவேட்கோவருரைசெய்வார்
எங்களிலோர்சபதத்தா லுடன் மூழ்கவிசைவில்லை
பொங்குபுனலியான்மூழ்கித்தருகின்றேன்போதுமென. (௨௯)

தந்ததுமுன்றராதேகொள்ளாமைக்குன்மனைவி
யந்தளிர்ச்செங்கைப்பற்றியலைபுனலின்மூழ்காதே
சிந்தைவலித்திருக்கின்றாய்தில்லைவாழந்தணர்கள்
வந்திருந்தபேரவையின்மன்னுவனியாவெனச்சென்றார். (௩௰)

நல்லொழுக்கந்தலைநின்றார்நான்மறையின்றுறைபோனார்
தில்லைவாழந்தணர்கள்வந்திருந்ததிருந்தவையில்
எல்லையிலான்முன்செல்ல விருந்தொண்டரவர்தாமு
மல்குபெருங்காதலினல்வழக்குமேலிட்டணைந்தார். (௩௧)

அந்தணனாமெந்தைபிரானருமறையோர்முன்பகர்வான்
இந்தவேட்கோவன்பால்யான்வைத்தபாத்திரத்தைத்
தந்தொழியான்கெடுத்தானேற்றன்மனைவிகைப்பற்றி
வந்துமூழ்கியுந்தாரான்வலிசெய்கின்றானென்றார். (௩௨)

நறைகமழுஞ்சடைமுடியுநாற்றோளுமுக்கண்ணுங்
கறைமருவுந்திருமிடறுங்கரந்தருளியெழுந்தருளு
மறையவனித்திறமொழியமாமறையோருரைசெய்வார்
நிறையுடையவேட்கோவர்நீர்மொழியும்புகுந்ததென. (௩௩)

நீணிதியாமிதுவென்றுநின்றவிவர்தருமோடு
பேணிநான்வைத்தவிடம்பெயர்ந்துகரந்துகாணேன்
பூணணிநூன்மணிமார்பீர்புகுந்தபரிசிதுவென்று
சேணிடையுந்தீங்கடையாத்திருத்தொண்டருரைசெய்தார். (௩௪)

வேறு.

திருவுடையந்தணாளர்செப்புவார்திகழ்ந்தநீற்றின்
உருவுடையிவர்தாம்வைத்த வோட்டினைக்கெடுத்தீராகிற்
றருமிவர்குளத்தின்மூழ்கித்தருகவென்றுரைத்தாராகின்
மருவியமனைவியோடுமூழ்குதல்வழக்கேயென்றார். (௩௫)

அரும்பெருந்தொண்டர்தாமுமந்தணர்மொழியக்கேட்டுத்
திருந்தியமனைவியாரைத் தீண்டாமைசெப்பமாட்டார்
பொருந்தியவகையான்மூழ்கித்தருகின்றேன்போதுமென்று
பெருந்தவமுனிவரோடும்பெயர்ந்துதம்மனையைச்சார்ந்தார். (ருசு)

மனைவியார்தம்மைக்கொண்டுமறைச்சிவயோகியார்முன்
சினவிடைப்பாகர்மேவுந்திருப்புலீச்சரத்துமுன்னர்
நனைமலர்ச்சோலைவாவிநண்ணித்தம்முண்மைகாப்பார்
புனைமணிவேணுத்தண்டினிருதலைபிடித்துப்புக்கார். (ருஎ)

தண்டிருதலையும்பற்றிப்புகுமவர்தம்மைநோக்கி
வெண்டிருநீற்றுமுண்டவேதியர்மாதைத்தீண்டிக்
கொண்டுடன்மூழ்கீரென்னக்கூடாமைபாரோர்கேட்கப்
பண்டுதஞ்செய்கைசொல்லிமூழ்கினார்பழுதிலாதார். (ருஅ)

வாவியின்மூழ்கியேறுங்கணவருமனைவியாரு
மேவியமூப்புநீங்கிவிருப்புறுமிளமைபெற்றுத்
தேவருமுனிவர்தாமுஞ்சிறப்பொடுபொழியுந்தெய்வப்
பூவின்மாமழையின்மீளமூழ்குவார்போன்றுதோன்ற. (ருகூ)

அந்நிலையவரைக்காணுமதிசயங்கண்டாரெல்லா
முன்னிலைநின்றவேதமுதல்வரைக்கண்டாரில்லை
இந்நிலையிருந்தவண்ணமென்னெனமருண்டுநின்றார்
துன்னியவிசும்பினூடுதுணையுடன்விடைமேற்கண்டார். (சுய)

கண்டனர்கைகளாரத்தொழுதனர்கலந்தகாதல்
அண்டருமேத்தினார்களன்பர்தம்பெருமைநோக்கி
விண்டரும்பொலிவுகாட்டிவிடையின்மேல்வருவார்தம்மைத்
தொண்டருமனைவியாருந்தொழுதுடன்போற்றிநின்றார். (சுக)

மன்றுளேதிருக்கூத்தாடியடியவர்மனைகடோறுஞ்
சென்றவர்நிலைமைகாட்டுந்தேவர்கடேவர்தாமும்
வென்றவைம்புலனான்மிக்கீர்விருப்புடனிருக்கநம்பால்
என்றுமிவ்விளமைநீங்காதென்றெழுந்தருளினாரே. (சுஉ)

திறலுடைத்தொண்டனாரும்வெண்ணகைச்செவ்வாய்மென்றோள்
அறலியற்கூந்தலாளாமனைவியுமருளினார்ந்த
திறலுடைச்செய்கைசெய்துசிவலோகமதனையெய்திப்
பெறலருமிளமைபெற்றுப்பேரின்பமுற்றாரன்றே. (சுங)

அயலறியாதவண்ணமண்ணலாராணையுய்த்த
மயலில்சீர்த்தொண்டனாரையானறிவகையால்வாழ்த்திப்
புயல்வளர்மாடநீடும்பூம்புகார்வணிகர்பொய்யில்
செயலியற்பகையார்செய்த திருத்தொண்டுசெப்பலுற்றேன். (சச)

திருநீலகண்டநாயனார்புராணமுற்றிற்று.

ஆக திருவிருத்தம்—சா௱யரு.

திருச்சிற்றம்பலம்

சிதம்பரத்தில் வாழ்கின்ற வேட்கோவர் குலத்தில் திருவவதாரஞ்செய்து சிவநேசமிகுதியால் திருத்தொண்டர்களுக்குத் திருவோடு தருகின்ற நியமம் பூண்டு இல்வாழ்க்கையில் வாழுநாளில், இன்பத்துறையி லிச்சை யுள்ளவராய் நிகழ்வதை மனைவி யறிந்து இனி - எம்மைத் தீண்டுவீராயின் திருநீலகண்டம் என்று சூளுமொழி சொல்லக் கேட்டு அஞ்சி என்னை யென்னாது எம்மையெனப் பன்மையாற் சொன் னமையின், இனி மனைவி யினையே யன்றி மற்ற எம்மாதரையு மனத்தினாலும் நினையேனென்று உறுதிப்பாடு கொண்டு அன்றுமுத லவ்வாறே யிருந்து மூப்புப்பருவம் அடைந்த காலத்தில் நடேசமூர்த்தியானவர் இவர்களுடைய அன்பினையுலகத்தா ரறிந்துய்ய விளக்கி முத்திநிலை அருளிச்செய்யத் திருவுளங்கொண்டு ஒரு சிவயோகிபோல் எழுந்தருளிவந்து திருவேட்கோவ ரிடத்துத் தம்மிடத்திலிருந்த ஒரு திருவோட்டினைக் கொடுத்து நாம் மறுபடிவந்து கேட்கும்போது இதனைத் தரவேண்டுமென்று சொல்லிப்போய்ப் பின்பு அவ்வோடு காணமற்போம் வண்ணஞ்செய்துவிட்டு ஒருநாள்வந்து அந்தத் திருவோட்டினைக் கொண்டுவரச்சொல்ல நாயனார் வைத்தவிடத்தைப்பார்த்துக் காணமையாற் பயந்துவந்து சொல்லக்கேட்டு நீகளவுசெய்யாமை நிசமா யிருக்குமாகில் உன்மனைவி கையைப்பற்றிக்கொண்டு குளத்தில்மூழ்கிச்சொல்லென்று சுவாமிவழக்கிட அப்போதும் மனைவி கையைப்பற்றுமல் ஒரு மூங்கிற் றண்டத்தை மனைவியுந் தாமுமாய் இருதலைப்பையும்பற்றிக்கொண்டு மூழ்கியிளமைபெற்றெழும்போது நமடேசர் - ரிஷபவாகனத்தோடு தரிசனங்கொடுக்கத் தரிசித்துச் சிவலோக மடைந்தனர். [இந்த நாயனார் இல்லறத்திலிருந்து சிவனடியாருக்குத் தொண்டுசெய்து முத்திபெற்றவர். அன்பினுறுதியைத் திருவுள்ளத்துணர்ந்தபி னியல்பாக முத்தியருளாது பலருமறிய வழக்கிடுதற்குக் காரணம் யாதெனில், உலகத்தின ரிதனையறிந்து பரமசிவத்துக்குத் தொண்டுசெய்வது நன்மார்க்க மென்று தாமுஞ்செய்துய்யும் பொருட்டெனவறிக.] மேல்வரும் புராணத்துக்கு மிதுவேகாரணம்.





சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# இயற்பகைநாயனார்புராணம்



வேறு.

* சென்னிவெண்குடைநீடநபாயன் றிருக்குலம்புகழ்பெருக்கிய சிறப்பின்; மன்னுதொல்புகழ்மருதநீர்நாட்டுவயல் வளந்தரவியல்பி னினளித்துப், பொன்னிநன்னதிமிக்கநீர்பாய்ந்து புனரிதன்னையும் புநிதமாக்குவதோர், நன்னெடும்பெருந்தீர்த்தமுன்னுடையநலஞ்சி றந்ததுவளம்புகார்நகரம். (௧)

அக்குலப்பதிக்குடிமுதல்வணிக ரளவில்செல்வத்து வளமையி னமைந்தார், செக்கர்வெண்பிறைச்சடையவரடிமைத் திறத்தின்மிக் கவர்மறைச்சிலம்படியார், மிக்கசீரடியார்கள் யாரேனும் வேண்டும் யாவையுமில்லையென்னாதே, இக்கடற்படிநிகழ முன்கொடுக்கு மிய ல்பினின்றவருலகியற்பகையார். (௨)

ஆறுசூடியவையர்மெய்யடிமை யளவிலாததோருளநிறையரு ளா.னீறுசேர்திரு மேனியர்மனத்து நினைத்தயாவையும் வினைப்பட முடித்து,மாறிலாத நன்னெறியினில் விளங்குமனையறம்புரிமகிழ்ச்சி யின்வந்த,பேறெலாமவரே வினசெய்யும் பெருமையேயெனப்பே ணிவாழ்நாளில். (௩)

ஆயுநண்பொருளாகியும்வெளியேயம்பலத்துநின் றாடுவாரும் பர்,நாயகிக்குமஃ தறியவோ பிரியா நங்கைதா னறியாமையோவறி யோந்.தூயநீறுபொன் மேனியில் விளங்கத் தூர்த்தவேடமுந் தோ ன்றவேதியராய்,மாயைவண்ணமே கொண்டுதந்தொண்டர் மறாதவ ண்ணமுங்காட்டுவான்வந்தார். (௪)

வந்துதண்புகார் வணிகர்தமறுகின் மருங்கியற்பகையார் ம னைபுகுத, எந்தையெம்பிரானடியவரணைந்தா ரென்றுநின்றதோரின் பவாதரவாற்,சிந்தையன் பொடுசென்றெதிர்வணங்கிச்சிறப்பின்மிக் கவர்ச்சனைகண்முன்செய்து,முந்தையெம் பெருந்தவத் தினாலென் கோ முனிவரிங் கெழுந்தருளிய தென்றார். (௫)

என்றுகூறிய வியற்பகையார்முனெய்தி நின்றவக்கைதவமறை யோர், கொன்றைவார்சடையாரடியார்கள் குறித்துவேண்டின கு ணமெனக்கொண்டே, ஒன்றுநீயெதிர் மறாதுவந்தளிக்கு முண்மை

* சென்னி — சோழன்.

கேட்டுநும்பாலொன்றுவேண்டி, இன்றுநானிங்குவந்தனனதனுக் கிசையலாமெனிலியம்பலாமென்றார். (௬)

என்னவவ்வுரைகேட்டியற்பகையார்யாதுமொன்றுமென்பக்க லுண்டாகில், அன்னதெம்பிரானடியவருடைமையையமில்லைநீரருள் செய்புமென்ன, மன்னுகாதலுன்மனைவியைவேண்டிவந்ததிங்கென வந்தணரோதிமோ, சொன்னபோதிலுமுன்னையின்மகிழ்ந்து தூயதொ ண்டனார்தொழுதுரைசெய்வார். (௭)

இதுவெனக்குமுன்புள்ளதேவேண்டி யெம்பிரான்றந்தபேறெ னக்கென்னுக், கதுமெனச்சென்றுதம்மனைவாழ்க்கைக்கற்பின்மேய் படுகாதலியாரை, விதிமணக்குலமடந்தையின்றுனையிம்மெய்த்தவர்க் குநான்கொடுத்தனனென்ன, மதுமலர்க்குழன்மனைவியார்கலங்கி ம னந்தெளிந்தபின்மற்றிதுமொழிவார். (௮)

இன்றுநீரென்னையருள்செய்ததிதுவேலென்னுயிர்க்கொருநாதர் நீருரைத்த, தொன்றைநான்செயுமத்தனையல்லாலுரிமைவேறுளதோ வெனக்கென்று, தன்றனிப்பெருங்கணவனைவணங்கத் தாழ்ந்துதொ ண்டனார்தாமெதிர்வணங்கச், சென்றுமாதவன்சேவடிபணிந்துதிகை த்துநின்றனடிருவினும்பெரியாள். (௯)

மாதுதன்னைமுன்கொடுத்தமாதவர்தாமனமகிழ்ந்துபேருவகையி ன்மலர்ந்தே, யாதுநானினிச்செய்பணியென்றிறைஞ்சிநின்றவர்த ம்மெதிர்நோக்கிச், சாதிவேதியராகியதலைவர்தையறன்னையான் றனி கொண்டுபோகக், காதன்மேவியசுற்றமும்பதியுங் கடக்கநீதுணைபோ துகவென்றார். (௰)

வேறு.

என்றவரருளிச்செய்ய யானேமுன்செய்குற்றேவல்
ஒன்றிதுதன்னையென்னையுடையவரருளிச்செய்ய
நின்றதுபிழையாமென்றுநினைந்துவேறிடத்துப்புக்குப்
பொன்றிகழுறுவைசாத்திப்பூங்கச்சுப்பொலியவீக்கி. (௰௧)

வாளொடுபலகையேந்திவந்தெதிர்வணங்கிமிக்க
ஆளரியேறுபோல்வாரவரைமுன்போக்கிப்பின்னே
தோளிணைதுணையேயாகப்போயினர்துன்னினாரை
நீளிடைப்படமுன்கூடி நிலத்திடைவீழ்த்தநேர்வார். (௰௨)

மனைவியார்சுற்றத்தாரும்வள்ளலார்சுற்றத்தாரும்
இனையதொன்றியாரோசெய்தாரியற்பகைபித்தனானாற்
புனையிழைதன்னைக்கொண்டுபோவதாமொருவனென்று
துனைபெரும்பழியைமீட்பான்றொடர்வதற்கெழுந்துசூழ்வார்.(௰௩

வேலொடுவில்லும்வாளுஞ்சுரிகையுமெடுத்துமிக்க
காலெனவிசையிற்சென்று கடிநகர்ப்புறத்துப்போகிப்
பாலிருமருங்குமீண்டிப்பரந்தவார்ப்பரவம்பொங்கி
மால்கடல்கிளர்ந்ததென்னவந்தெதிர்வளைத்துக்கொண்டார். (௰௪)

வழிவிடுந்துணைபின்போதவழித்துணையாகியுள்ளார்
கழிபெருங்காதல்காட்டிக்காரிகையுடன்போம்போதில்
அழிதகன்போமேலீண்டவருங்குலக்கொடியைவிட்டுப்
பழிவிடநீபோவென்றுபகர்ந்தெதிர்நிறைந்துவந்தார். (௰௫)

மறைமுனியஞ்சினான்போன்மாதினைப்பார்க்கமாதும்
இறைவனேயஞ்சவேண்டாவியற்பகைவெல்லுமென்ன
அறைகழலண்ணல்கேளாவடியனேனவரையெல்லாந்
தறையிடைப்படுத்துகின்றேனன்றளர்ந்தருள்செய்யேலென்று. (௰௬)

பெருவிறலாளியென்னப்பிறங்கெரிசிதறநோக்கிப்
பரிபவப்பட்டுவந்தபடர்பெருஞ்சுற்றத்தாரை
ஒருவருமெதிர்நில்லாமேயோடிப்போய்ப்பிழையுமன்றேல்
எரிசுடர்வாளிற்கூறாய்த்துடிக்கின்றீரொன்றுநேர்ந்தார். (௰௭)

* எடநீயென்செய்தாயாலித்திறமியம்புகின்றாய்
நாடுறுபழியுமொன்றார்நகையையுநாணுயின்று
பாடவமுறைப்பதுன்றன்மனைவியைப் * பணவற்கீந்தோ
கூடவேமடிவதன்றிக்கொடுக்கயாமொட்டேமென்றார். (௰௮)

மற்றவர்சொன்னமாற்றங்கேட்டலுமனத்தின்வந்த
செற்றமுன்பொங்கவுங்களுடற்றுணியெங்குஞ்சிந்தி
முற்றுநும்முயிரையெல்லாமுதல்விசும்பேற்றிக்கொண்டு
நற்றவர்தம்மைப்போகவிடுவனென்றெழுந்தார்நல்லோர். (௰௯)

நேர்ந்தவரெதிர்ந்தபோதுநிறைந்தவச்சுற்றத்தாருஞ்
சார்ந்தவர்தம்முன்செல்லார் தையலைக்கொண்டுபெற்றம்
ஊர்ந்தவர்பாடிமேற்செல்லவுற்றெதிருடன்றுபொங்கி
ஆர்ந்தவெஞ்சினத்தான்மேற்சென்றடர்ந்தெதிர்தடுத்தாரல்லே. ()

சென்றவர்தடுத்தபோதிலியற்பகையார்முன்சீறி
வன்றுணைவாளேயாகச்சாரியைமாறிவந்து
துன்றினர்தோளுந்தாளுந் தலைகளுந்துணித்துவீழ்த்து
வென்றடுபுலியேறென்ன வமர்விளையாட்டின்மிக்கார். (௨௧)

---

* எடா- என்பது- தோழன்முன்னிலைப்பெயர்.
* பணவன் - என்பது - பிராமணன்.

மூண்டுமுன்பலராய்வந்தார்தனிவந் தும்ட்டினர்கள்
வேண்டியதிசைகடோறும்வேறுவேறமர்செய்போழ்தில்
ஆண்டகைவீரர்தாமேயனைவர்க்குமனைவராகிக்
காண்டகுவிசையிற்பாய்ந்துகலந்துமுன்றுணித்துவீழ்த்தார். (௨௨)

சொரிந்தனகுடல்களெங்குந் துணிந்தனவுடல்களெங்கும்
விரிந்தனதலைகளெங்குமிடைந்தனகழுகுமெங்கும்
எரிந்தனவிழிகளெங்கு மெதிர்ப்பவரொருவரின்றித்
திரிந்தனர்களனிலெங்குஞ்சிவன்கழல்புனைந்தவீரர். (௨௩)

மாடலைகுருதிபொங்கமடிந்தசெங்களத்தினின்றும்
* ஆடுறுசெயலின்வந்தகிளைஞரோடணைந்தார்தம்மில்
ஓடினருள்ளாருய்ந்தா ரொழிந்தவரொழிந்தே மாண்டார்
நீடியவாளுந்தாமுநின்றவர்தாமேநின்றார் (௨௪)

திருவுடைமனைவியாரைக்கொடுத்திடைச்செறுத்துமுன்பு
வருபெருஞ்சுற்றமெல்லாம் வாளினாற்றுணித்துமாற்றி
அருமறைமுனியைநோக்கியடிகணீரஞ்சாவண்ணம்
பொருவருங்கானநீங்கவிடுவனென்றுடனேபோந்தார் (௨௫)

இருவராலறியவொண்ணாவொருவர்பின்செல்லுமேனழ
பொருதிறல்வீரர்பின்புபோதமுன்போகும்போதில்
அருமறைமுனிவர்சாய்க்காடதன்மருங்கணையமேவித்
திருமலிதோளினானைமீளெனச்செப்பினாரே (௨௬)

தவமுனிதன்னைமீளச்சொன்னபின்றலையாலார
அவன்மலர்ப்பதங்கள்சூடியஞ்சலிகூப்பிநின்று
புவனமூன்றுய்யவந்தபூசுரன்றன்னையேத்தி
இவனருள்பெறப்பெற்றேனென்றியற்பகையாருமீண்டார் (௨௭)

செய்வதற்கரியசெய்கைசெய்தநற்றொண்டர்போக
மைதிகழ்கண்டனெண்டோண்மறையவன்மகிழ்ந்துநோக்கிப்
பொய்தருமுள்ளமில்லான்பார்க்கிலன்போனனென்று
மெய்தருசிந்தையாரைமீளவுமழைக்கலுற்றார். (௨௮)

இயற்பகைமுனிவாவோலமீண்டநீவருவாயோலம்
அயர்ப்பிலாதானேயோலமன்பனேயோலமோலஞ்
செயற்கருஞ்செய்கைசெய்ததீரனேயோலமென்றுன்
மயக்குறுமறைபோலிட்டுமாலயன்றேடநின்றான். (௨௯)

* ஆடு - என்பது - வெற்றி.

அழைத்தபேரோசைகேளாவடியனேன்வந்தேன்வந்தேன்
பிழைத்தவருளரோவின்னும் பெருவலித்தடக்கைவாளின்
இழைத்தவராகின்றுமொன் றியற்பகையார்வந்தெய்தக்
குழைப்பொலிகாதிறுனுமறைந்தனன்கோலங்கொள்வான் (கஙுய)

சென்றவர்முனிவைக்காணார்சேயிழைதன்னைக்கண்டார்
பொன்றிகழ்குன்றுவெள்ளிப் பொருப்பின்மேற்பொலிந்ததென்ன
தன்றுணையுடனேவானிற்றலைவனைவிடைமேற்கண்டார்
சின்றிலர்தொழுதுவீழ்ந்தார்நிலத்தினின்றெழுந்தார்நேர்ந்தார். [த் (கஙுக)

சொல்லுவதறியேன்வாழி தோற்றியதோற்றப்போற்றி
வல்லைவந்தருளியென்னை வழித்தொண்டுகொண்டாய்போற்றி
எல்லையிலின்பவெள்ள மெனக்கருள் செய்தாய்போற்றி
தில்லையம்பலத்துளாடுஞ் சேவடிபோற்றியென்ன. (கஙுஉ)

விண்ணிடைநின்றவெள்ளை விடையவரடியார்தம்மை
எண்ணிய வுலகுதன்னி லிப்படிநம்பா லன்பு
பண்ணியபரிவுகண்டு மகிழ்ந்தனம்பழுதிலாதாய்
நண்ணியமனைவியோடு நம்முடன்போதுகென்று. (கஙுங)

திருவளர்சிறப்பின்மிக்க திருத்தொண்டர்தமக்குந்தேற்ற
மருவியதெய்வக்கற்பின் மனைவியார்தமக்குந்தக்க
பெருகியவருளினீடு பேறளித்திமையோ ரேத்தப்
பொருவிடைப்பாகர்மன்னும் பொற்பொதுவதனுட்புக்கார். (கஙுச)

வானவர்பூவின்மாரி பொழியமாமறைகளார்ப்ப
ஞானமாமுனிவர்போற்ற நலமிகுசிவலோகத்தில்
ஊனமில்தொண்டர்கும்பிட் டுடனுறைபெருமைபெற்றார்
ஈனயசுற்றத்தாரும் வானிடை யின்பம்பெற்றார். (கஙுரு)

இன்புறுதாரந்தன்னை யீசனுக்கன்பரென்றே
துன்புறுதவுந்தொண்டர் பெருமையைத்தொழுதுவாழ்த்தி
அன்புறுமனத்தாறுத னடியவர்க்கன்புநீடு
மன்புகழிளைசைமாறன் வளத்தினைவழுத்தலுற்றேன். (கஙுசா)

இயற்பகைநாயனார்புராணமுற்றிற்று.

ஆக திருவிருத்தம்-சாசுயகூ.

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலிருக்கும் காவிரிப்பூம்பட்டினத்தில் வாழ்கின்ற வைசியர்குலத்தில் திருவவதாரஞ்செய்து இயற்பகைநாயனாரென்னுந் திருநாமம்பெற்றுப் பரமசிவனிடத்தில் மிகுந்த அன்புள்ளவராய்ச் சிவனடியார்கள் விரும்பிய பொருள்களையெல்லாங்கொடுத்துப் பத்திசெய்துகொண்டிருக்குங் காலத்தில், பரமசிவன் இவருடைய அன்பினுறுதிப்பாட்டினையாவருமறிந்துய்வதுகாரணமாக அவரிடத்திற்குத் தூர்த்தவேடமுள்ள ஒரு பிராமணனாக வந்து உம்முடைய மனைவியை எனக்குத் தரவேண்டுமென்ன நாயனார் மகிழ்ந்து அவ்வாறு மனைவியைக்கொடுத்து வழிவிடப் போம்போது சுற்றத்தார் வந்து கொடுக்கவொட்டோமென்று தடுக்க அவர்களையெல்லாம் வாளாற்றடிந்து திருச்சாய்க்காடுவரையில் சுவாமியுடன்போயுத்தரவு பெற்றுக்கொண்டு வருகையில் மறுபடி சுவாமியானவர்பாம்நாஒரு அச்சத்தினால் கூவுகின்றவர்போல் இயற்பகையன்பனேயென்றுமுறையிடத் திரும்பிவிரைவிற்செல்லுகையில் பரமசிவன் ரிஷபவாகனாரூடராய்த் தரிசனங்கொடுத்தருளத் தரிசித்து மனைவியினுடன் முத்தியடைந்தனர். [இந்த மூர்த்தியு மில்லறத்திலிருந்து சிவனடியாருக்குத் தொண்டுசெய்து முத்தி பெற்றவர்.] இந்தச் சுற்றத்தார் சிவனடியாரைப்பகைத்து முத்தி பெற்றார்கள்.



௨

திருச்சிற்றம்பலம்.

# இளையான்குடிமாற நாயனார்புராணம்

வேறு.

அம்பொனீடு அம்பலத்தினி லாடுவாரடிசூடுவார்
தம்பிரானடிமைத்திறத்துயர் சால்பின்மேன்மைதரித்துளார்
நம்புவாய்மையினீடுசூத்திர நற்குலஞ்செய்தவத்தினால்
இம்பர்ஞாலம்விளக்கினா ரிளையான்குடிப்பதிமாறனார். (௧)

ஏரின்மல்குவளத்தினால்வருமெல்லையில்லதொர்செல்வமு
நீரின்மல்கியவேணியாரடியார்திறத்துநிறைந்ததோர்
சீரின்மல்கியவன்பின்மேன்மைதிருந்தமன்னியசிந்தையும்
பாரின்மல்கவிரும்பிமற்றவைபெற்றநீடுபயன்கொள்வார். (௨)

ஆரமென்புபுனைந்தஐயர்தமன்பரென்பதோர்தன்மையா
னேரவந்தவர்யாவராயினுநித்தமாகியபத்திமுன்
கூரவந்தெதிர்கொண்டுகைகள்குவித்துநின்றுசெவிப்புலத்
தீரமென்மதுரப்பதம்பரிவெய்தமுன்னுரைசெய்தபின். (௩)

கொண்டுவந்துமனைப்புகுந்துகுலாவுபாதம்விளக்கியே
மண்டுகாதலினாதனத்திடைவைத்தருச்சனைசெய்தபின்
உண்டிநாலுவிதத்திலாறுசுவைத்திறத்தினிலொப்பிலா
அண்டர்நாயகர்தொண்டரிச்சையிலமுதுசெய்யவளித்துளார். (௪)

ஆளுநாயகரன்பரானவரளவிலாருளமகிழவே
நாளுநாளுநிறைந்துவந்துநுகர்ந்ததன்மையினன்மையா
னீளுமாநிதியின்பரப்புநெருங்குசெல்வநிலாவியெண்
டோளினாரளகைக்கிறைத்திருத்தோழனாரெனவாழுநாள். (௫)

செல்வமேவியநாளிலிச்செயல்செய்வதன்றியுமெய்யினால்
அல்லனல்குரவானபோதினும்வல்லரென்றறிவிக்கவே
மல்லனீடியசெல்வமெல்லமறைந்துநாடொறுமாறிவந்
தொல்லையில்வறுமைப்பதம்புகவுன்னினார்தில்லைமன்னினார். (௬)

இன்னவாறுவளஞ்சுருங்கவுமெம்பிரானிளையான்குடி
மன்னன்மாறன்மனஞ்சுருங்குதலின்றியுள்ளனமாறியுந்
தன்னைமாறியிறுக்கவுள்ளகடன்கடக்கனகொண்டுபின்
முன்னைமாறிறிருப்பணிக்கண்முதிர்ந்தசெய்கையராயினார். (௭)

மற்றவர்செயலின்னதன்மையதாகமாலயனாவக்
கொற்றவேனமுமன்னமுந்தெரியாதகொள்கையராயினார்
பெற்றமூர்வதுமின்றிநீடியபம்பசையாருடனின்றியோர்
நற்றவத்தவர்வேடமேகொடுஞாலமுய்ந்திடநண்ணினார். (௮)

வேறு.

மாரிக்காலத்திரவினில்வைகியோர்
தாரிப்பின்றிப்பசிதலைக்கொள்வது
பாரித்தில்லடைத்தபின்பண்புற
வேரித்தாரான்விருந்தெதிர்கொண்டனன். (௯)

ஈரமேனியைநீக்கியிடங்கொடுத்
தாரவின்னமுதூட்டுதற்காசையாற்
றாரமாதனைநோக்கித்தபோதனர்
தீரவேபசித்தார்செய்வதென்னெனா. (௰)

நமக்குமுன்பிங்குணவிலையாயினும்
இமக்குலக்கொடிபாகர்க்கினியவர்
தமக்குநாமின்னடிசிறகவுற
அமைக்குமாறெங்ஙனேயணங்கேயென. (௰௧)

மாதுகூறுவள் மற்றொன்றுங்காண்கிலேன்
ஏதிலாருமினித்தருவாரில்லை
போதுவைகிற்று போமிடம்வேறிலை
தீதுசெய்வினையேற்கென்செயலென்று. (௰௨)

செல்லனீங்கப்பகல்வித்தியசெந்நெல்
மல்லனீர்முளைவாரிக்கொடுவந்தால்
வல்லவாறமுதாக்கலுமாகுமற்
றல்லதொன்றறியேனென்றயர்வுற. (௰௩)

மற்றமாற்றமனைவியார்கூறமுன்
பெற்றசெல்வமெனப்பெரிதுண்மகிழ்ந்
துற்றகாதலினொருப்பட்டனர்
சுற்றுநீர்வயல்செல்லத்தொடங்குவார். (௰௪)

பெருகுவானம்பிறங்கமழைபொழிந்
தருகுநாப்பணறிவருங்கங்குற்றான்
கருகுமையிருளின் கணங்கட்டுவிட்
டுருகுகின்றதுபோன்றதுலகெலாம். (௰௫)

எண்ணுமிவ்வுலகத்தவர்யாவருந்
துண்ணெனும்படிதோன்ற முன்றோன்றிடில்
வண்ணநீடியமைக்குழம்பாமென்று
நண்ணல்செய்யாநடுவிருள்யாமத்து. (௰௬)

உள்ளமன்புகொண்டூக்கவோர்பேர் * இடாக்
கொள்ளமுன்கவித்துக்குறியின்வழிப்
புள்ளுறங்கும்வயல்புகப்போயினர்
வள்ளலாரிளையான்குடிமாறனார். (௰௭)

காலினாற்றடவிச்சென்றுகைகளாற்
சாலிவெண்முளைநீர்வழிச்சார்ந்தன
கோலிவாரியிடாநிறையக்கொண்டு
மேலெடுத்துச்சுமந்தொல்லைமீண்டனர். (௰௮)

* இடா - என்பது - இறைகூடை.

வேறு.

வந்தபின்மனைவியாரும் வாய்தலினின்றுவாங்கிச்
சிந்தையில்விரும்பிநீரிற்சேற்றினையலம்பியூற்றி
வெந்தழலடுப்பின்மாட்டவிறகில்லையென்னமேலோர்
அந்தமின்மனையினீடும் அலக்கினையறுத்துவீழ்த்தார். (௧௯)

முறித்தவையடுப்பின்மாட்டிமுளைவித்துப்பதமுன்கொள்ள
வறுத்தபின்னரிசியாக்கி வாக்கியவுலையிற்பெய்து
வெறுப்பிலின்னடிசிலாக்கி மேம்படுகற்பின்மிக்கார்
கறிக்கினியென்செய்கோமென்றிறைஞ்சினார்கணவனாரை. (௨௰)

வழிவருமிளைப்பினோடும் வருந்தியபசியினாலே
அழிவுறுமையனென்னு மன்பினிற்பொலிந்துசென்று
குழிநிரம்பாதபுன்செய்க் குறும்பயிர்தடவிப்பாசப்
பழிமுதல்பறிப்பார்போலப் பறித்தவைகறிக்குநல்க. (௨௧)

மனைவியார்கொழுநர்தந்த மனமகிழ்கறிகளாய்ந்து
புனலிடைக்கழுவித்தக்க புனிதபாத்திரத்துக்கைம்மை
வினையினில்வேறுவேறு கறியமுதாக்கிப்பண்டை
நினைவினிற்குறையைநேர்ந்து திருவமுதமைத்துநின்று. (௨௨)

கணவனார்தம்மைநோக்கிக் கறியமுதானகாட்டி
இணையிலாதவரையீண்ட வமுதுசெய்விப்போமென்ன
உணர்வினாலுணரவொண்ணா வொருவரையுணர்த்தவேண்டி
அணையமுன்சென்றுநின்றங் கவர்துயிலகற்றலுற்றார். (௨௩)

அழுந்தியவிடருணீங்கி யடியனேனுய்யவென்பால்
எழுந்தருள்பெரியோயீண்ட வமுதுசெய்தருள்கவென்று
தொழும்பனாருரைத்தபோதிற் சோதியாயெழுந்துதோன்றச்
செழுந்திருமனைவியாருந் தொண்டருந்திகைத்துநின்றார். (௨௪)

மாலயற்கரியநாதன் வடிவொருசோதியாகச்
சாலவேமயங்குவார்க்குச் சங்கரன்றான்மகிழ்ந்தே
ஏலவார்குழலாடன்னோ டிடபவாகனனாய்த்தோன்றிச்
சீலமார்பூசைசெய்த திருத்தொண்டர்தம்மைநோக்கி. (௨௫)

அன்பனேயன்பர்பூசை யளித்தநீயணங்கினோடும்
என்பெருந் தலத்தையெய்தி யிருநிதிக்கிழவன்றானே
முன்பெருநிதியமேந்தி மொழிவழியேவல்கேட்ப
இன்பமார்ந்திருக்கவென்றே யருள்செய்தானெவர்க்குமிக்கான். ()

இப்பரிசிவர்க்குத்தக்க வகையினா லிட்டநல்கி
முப்புரஞ்செற்றாரன்பர் முன்னெழுந்தருளிப்போனார்
அப்பெரியவர்தந்தூய வடியிணை தலைமேற்கொண்டு
மெய்ப்பொருட்சேதிவேந்தன் செயலினைவிளம்பலுற்றேன். (உஎ)

இளையான்குடிமாறநாயனார் புராண முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - சாஎயரு.

திருச்சிற்றம்பலம்

இளையைம்பதி வேளாளகுலத்தில் திருவவதாரஞ்செய்து பரமசிவத்தினிடத்தில் மிகுந்த அன்புள்ளவராய்ச் சிவனடியார்களுக்குத் தொண்டுசெய்துகொண்டு வாழும்நாளில், செல்வ மாறினகாலத்திலும் இந்தத்தொண்டு மாறாமற்செய்யத்தக்க உறுதிப்பாடுள்ளவரென்னும் நிலைமையையுலகத்தினர் அறிந்துய்யும்படி தெரிவிப்பதற்காரணமாகத் தம்முடைய அடியாருக்கிருந்தசெல்வம் நாளுக்குநாட் குறையும்படித் திருவுளங்கொண்டமையால் இளையான்குடிமாறநாயனார் மிகுந்த வறுமையடைந்தும், முன்னிலைமையில் மாறுபடாமல் கடன்வாங்கியுஞ்செய்துவருகையில், பரமசிவம் ஒருநாள்பாதிராத்திரியிருளில் மழைபெய்யத் திருவுளத்தடைத்து ஒருதிருப்பிராமண வடிவமாய் அம்மழையில் நனைந்துகொண்டு நாயனார்மாளிகைக்குவந்து கதவைத்தட்டினார் நாயனார் கதவைத் திறந்து உள்ளேவரவழைத்து வேறேவஸ்திரங்கொடுத்துப் பின் அமுதுபடைக்கவேண்டுமென்று தமது மனைவியை வினவினார் அந்தம்மாள் நம்முடையவீட்டில் யாதொன்றுமில்லையே அயலார் கொடுப்பவர்களுமில்லை, நாழிகையும் அதிகமாய்விட்டது, அடியேனுலாவதென்னிருக்கின்றது, ஆயினும் பகல் விதைத்த நென்முளையை வாரிக்கொண்டுவந்தால் அடியேனுங் கூடுமானமட்டில் அமுது சமைக்கிறேனென்று சொல்லி அவ்வாறே அவர் கொண்டுவந்த முளையை வீட்டு மேற்கூரையினால் அடுப்பெரித்துப் பக்குவப்படுத்தி அரிசியாக்கி அமுதுசமைத்துக் குழிப்பயிரைக் கறிவகையாக்கித் தம்முடைய கணவனைநோக்கி அமுது சித்தமாயிருக்கின்றதென்றுசொல்ல அவர் நித்திரைகொள்வதுபோ லிருக்கின்ற சுவாமியை அனந்தல் தெளிவிக்கும்போது எழுந்த சுவாமி ஒரு பெருஞ்சோதி சொரூபமாயிருக்கக் கண்டவர்கள் மயங்கும்போது ரிஷபவாகனரூடராய்த் தரிசனந்தந்தருள முத்தியடைந்தனர். [இந்தநாயனாரு மில்லறத்திலிருந்து சிவனடியார்களுக்குத் தொண்டு செய்து பேறுபெற்றவர்.]



௨

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# மெய்ப்பொருணாயனார்புராணம்



வேறு.

சேதிநன்னாட்டுநீடு திருக்கோவலூரின்மன்னி
மாதொருபாகரன்பின் வழிவருமலாடர்கோமான்
வேதநன்னெறியின்வாய்மை விளங்கிடமேன்மைபூண்டு
காதலாலீசர்க்கன்பர் கருத்தறிந்தேவல்செய்வார். (௧)

அரசியனெறியின்வந்த வறநெறிவழாமற்காத்து
வரைநெடுந்தோளால்வென்று மாற்றலர்முனைகண்மாற்றி
உரைதிறம்பாதநீதி யோங்குநீர்மையினின்மிக்கார்
திரைசெய்நீர்ச்சடையானன்பர் வேடமேசிந்தைசெய்வார். (௨)

மங்கையைப்பாகமாக வுடையவர்மன்னுங்கோயில்
எங்கணும்பூசைநீடி யேழிசைப்பாடலாடல்
பொங்கியசிறப்பின்மல்கப் போற்றுதல்புரிந்துவாழ்வார்
தங்கணாயகருக்கன்பர் தாளலாற் சார்பொன்றில்லார். (௩)

தேடியமாடுநீடு செல்வமுந்தில்லைமன்றுள்
ஆடியபெருமானன்பர்க் காவனவாகுமென்று
நாடியமனத்தினோடு நாயன்மாரணைந்தபோது
கூடியமகிழ்ச்சிபொங்கக் குறைவறக்கொடுத்துவந்தார். (௪)

இன்னவாறொழுகுநாளி லிகற்றிறம்புரிந்தோர்மன்னன்
அன்னவர்தம்மைவெல்லு மாசையாலமர்மேற்கொண்டு
பொன்னணியோடையானை பொருபரிகாலாள்மற்றும்
பன்முறையிழந்துதோற்றுப் பரிபவப்பட்டுப்போனான். (௫)

இப்படியிழந்தமாற்றா னிகலினால்வெல்லமாட்டான்
மெய்ப்பொருள்வேந்தன்சீல மறிந்துவெண்ணீறுசாத்தும்
அப்பெருவேடங்கொண்டே யற்றத்தில்வெல்வானாகச்
செப்பருநிலைமையெண்ணித் திருக்கோவலூரிற்சேர்வான். (௬)

மெய்பெலாநீறுபூசி வேணிகண்முடித்துக்கட்டி
கையினிற்படைகரந்தபுத்தகக்கவளியேந்தி
மைபொதிவிளக்கேயென்னமனத்தினுட்கறுப்புவைத்துப்
பொய்த்தவவேடங்கொண்டுபுகுந்தனன்புத்திநாதன். (௭)

மாதவவேடங்கொண்டவன்கணன்மாடந்தோறுங்
கோதைசூழளகபாரக்குழைக்கொடியாடமீது
சோதிவெண்கொடிகளாடுஞ்சுடர்நெடுமறுகிற்போகிச்
சேதியர்பெருமான்கோயிற்றிருமணிவாயிற்சேர்ந்தான் (௮)

கடையுடைக்காவலாளர்கைதொழுதேறநின்றே
உடையவர்தாமேவந்தாருள்ளெழுந்தருளுமென்னத்
தடைபலபுக்கபின்புதனித்தடைநின்றதத்தன்
இடைதெரிந்தருளவேண்டுந்துயில்கொளுமிறைவனென்றான் (௯)

என்றவன்கூறக்கேட்டேயானிவற்குறுதிகூற
நின்றிடுநீயுமென்றேயவனையுநீக்கிப்புக்குப்
பொன்றிகழ்பள்ளிக்கட்டிற்புரவலன்றுயிலமாடே
மன்றலங்குழன்மென்சாயன்மாதேவியிருப்பக்கண்டான். (௰)

கண்டுசென்றணையும்போதுகதுமெனவெழுந்துதேவி
வண்டலர்மாலையானையெழுப்பிடவுணர்ந்துமன்னன்
அண்டர்நாயகனார்தொண்டராமெனக்குவித்தசெங்கை
கொண்டெழுந்தெதிரேசென்று கொள்கையின்வணங்கிநின்று (௰௧)

மங்கலம்பெருகமற்றென்வாழ்வுவந்தணைந்ததென்ன
இங்கெழுந்தருளப்பெற்றதென்கொலோவென்றுகூற
உங்களுபகனார்முன்னமுரைத்தவாகமநூன்மண்மேல்
எங்குமில்லாததொன்றுகொடுவந்தேனியம்பவென்றான். (௰௨)

பேறெனக்கிதன்மேலுண்டோபிரானருள்செய்தவிந்த
மாறிலாகமத்தைவாசித்தருள்செய்யவேண்டுமென்ன
நாறுபூங்கோதைமாதுதவிரவேநானுநீயும்
வேறிடத்திருக்கவேண்டுமென்றவன்விளம்பவேந்தன். (௰௩)

திருமகளென்னநின்ற தேவியார்தம்மைநோக்கிப்
புரிவுடன்விரையவந்தப்புரத்திடைப்போகவேவித்
தருதவவேடத்தானைத்தவிசின்மேலிருத்தித்தாமும்
இருநிலத்திருந்துபோற்றி யினியருள்செய்யுமென்றார். (௰௪)

கைத்தலத்திருந்தவஞ்சக்கவளிகைமடிமேல்வைத்துப்
புத்தகமவிழ்ப்பான்போன்றுபுரிந்தவர்வணங்கும்போதிற்
பத்திரம்வாங்கித்தான்முனினைந்தவப்பரிசேசெய்ய
மெய்த்தவவேடமேமெய்ப்பொருளெனத்தொழுதுவென்றார் (யரு)

மறைத்தவன்புகுந்தபோதேமனமங்கவைத்ததத்தன்
இறைப்பொழுதின்கட்கூடிவாளினாலெறியலுற்றா
னிறைத்தசெங்குருதிசோர வீழ்கின்றார்நீண்ட கையாற்
றறைப்படுமளவிற்றத்தாநமரெனத்தடுத்துவீழ்ந்தார். (யசு)

வேதனையெய்திவீழ்ந்தவேந்தரால்விலக்கப்பட்ட
தாதனாந்தத்தன்றானுந்தலையினால்வணங்கித்தாங்கி
யாதுநான்செய்வதென்னவெம்பிரானடியார்போக
மீதிடைவிலக்காவண்ணங்கொண்டுபோய்விடுநீயென்றார். (யஎ)

அத்திறமறிந்தாரெல்லாமரசனைத்தீங்குசெய்த
பொய்த்தவன்றன்னைக்கொல்வோமெனப்புடைசூழ்ந்தபோது
தத்தனுமவரையெல்லாந்தடுத்துடன்கொண்டுபோவான்
இத்தவம்போகப்பெற்றதிறைவனதாணையென்றான். (யஅ)

அவ்வழியவர்களெல்லாமஞ்சியேயகலநீங்கச்
செவ்வியநெறியிற்றத்தன்றிருநகர்கடந்துபோந்து
கைவ்வடிநெடுவாளேந்தியாளுறாக்கானஞ்சேர
வெவ்வினைக்கொடியோன்றன்னைவிட்டவன்மீண்டுபோந்தான். (யகூ)

மற்றவன்கொண்டுபோனவஞ்சனைவேடத்தான்மேற்
செற்றவர்தம்மைநீக்கித்தீதிலாநெறியில்விட்ட
சொற்றிறங்கேட்கவேண்டிச்சோர்கின்றவாவிதாங்குங்
கொற்றவன்முன்புசென்றான்கோமகன்குறிப்பினின்றான். (உய)

சென்றடிவணங்கிநின்றுசெய்தவவேடங்கொண்டு
வென்றவற்கிடையூறின்றிவிட்டனனென்றுகூற
இன்றெனக்கையன்செய்ததியார்செய்யவல்லாரென்று
நின்றவன்றன்னைநோக்கிநிறைபெருங்கருணைகூர்ந்தார். (உக)

அரசியலாயத்தார்க்குமழிவுறுங்காதலார்க்கும்
விரவியசெய்கைதன்னைவிளம்புவார்விதியினாலே
பரவியதிருநீற்றன்புபாதுகாத்துய்ப்பீரென்று
புரவலன்மன்றுளாடும்பூங்கழல்சிந்தைசெய்தான். (உஉ)

தொண்டனார்க்கிமையப்பாவை துணைவனாரவர்முன்றம்மைக்
கண்டவாறெதிரேநின்றுகாட்சிதந்தருளிமிக்க
அண்டவானவர்கட்கெட்டாவருட்கழனீழல்சேரக்
கொண்டவாறிடையறாமற்கும்பிடுங்கொள்கையீந்தார். (௨௩)

இன்னுயிர்செகுக்கக்கண்டுமெம்பிரானன்பரென்றே
நன்னெறிகாத்தசேதி நாதனார்பெருமைதன்னில்
என்னுரைசெய்தேனாக விகல்விறன்மிண்டர்பொற்றாள்
சென்னிவைத்தவர்முன்செய்ததிருத்தொண்டுசெப்பலுற்றேன் (௨௪)

மெய்ப்பொருள்நாயனார்புராணமுற்றிற்று.

ஆக திருவிருத்தம்- ௫௱.

திருச்சிற்றம்பலம்.

சிவனடியார்கள் திருவேடமே மெய்ப்பொருளென்னத்தெளிந்த சித்தமுடையவராய்ச் சேதிநாட்டைச்சேர்ந்ததிருக்கோவலூரில் அரசுசெய்துகொண்டிருக்கையில் ஒருபகைவனிவருடன் பலதரம் போர்செய்தும் வெல்லக்கூடாமையாயிருப்பதினால் வஞ்சனையால் வெல்ல நினைத்து ஒருநாளிராத்திரி சிவவேடம்பூண்டு கத்தியின்மேல் வஸ்திரத்தைச்சுற்றிப் புத்தகம்போல்வைத்துக்கொண்டு நாயனாரிடத்திற்குப்போய் உனக்கு ஞானோபதேசஞ்செய்ய வந்தேனென்ன அப்படியேயநுக்கிரகிக்கவேண்டுமென்று அஞ்சலியுடன்வணங்கி நிற்கையில் புத்தகமெடுப்பவன்போற் கத்தியையெடுத்துத் தன்னெண்ணப்படிசெய்தனன். அப்போது அங்குக் காவலாயிருக்குந் தத்தனறிந்து அவனைச் சேதிக்கப்போம் போது நாயனாரானவர் தத்தா இவர் நம்முடையவரென்று தடுத்துச்சிவத்தியானஞ்செய்துமுத்திபெற்றனர். [இந்தநாயனாரும் இல்லறநடத்திச்சிவனடியார்களுக்குத்தொண்டுசெய்துபேறுபெற்றவர் மரபு குறுநிலமன்னர்.]—[வஞ்சனெண்ணட்டடிசெய்யப்பரமசிவம்பார்த்திருக்கலாமோவென்றால் எவ்வகை மேம்பாட்டோருக்கும் முன்னைய ஊழைக்கடத்தலரிதாதலாற் றிருவருளும் அதன்வழியே கூடிற்று.] அவ்வஞ்சகன் சிவனடியாரைப்பகைத்து நரகம்பெற்றவர்களி லொருவன்.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# விறன்மிண்டநாயனார்

## புராணம்.



வேறு.

விரைசெய்நறும்பூந்தொடையிதழிவேணியார்தங்கழல்பரவிப்
* பரசுபெறுமாதவமுனிவன்பரசிராமன்பெறுநாடு
திரைசெய்கடலின்பெருவளனுந்திருந்துநிலனின்செழுவளனும்
வரையின்வளனுமுடன்பெருகிமல்குநாடுமலைநாடு. (௧)

வாரிசொரியுங்கதிர்முத்தும்வயன்மென்கரும்பிற்படுமுத்தும்
வேரல்விளையுங்குளிர்முத்தும்வேழமருப்பினொளிர்முத்து
மூரலெனச்சொல்வெண்முத்தநகையார்தெரிந்துமுறைகோக்குஞ்
சேரர்திருநாட்டூர்களின்முன் சிறந்தமூதூர்செங்குன்றூர் (௨)

என்னும்பெயரின்விளங்கியுலகேறும்பெருமையுடையதுதான்
அன்னம்பயிலும்வயலுழவினமைந்தவளத்தாலாய்ந்தமறை
சொன்னநெறியின்வழியொழுகுந்தூயகுடிமைத்தலைநின்றார்
மன்னுங்குலத்தின்மாமறைநூன்மரபிற்பெரியோர்வாழ்பதியாம். (௩)

அப்பொற்பதியினிடைவேளாண்குலத்தைவிளக்கவவதரித்தார்
செப்பற்கரியபெருஞ்சீர்த்திச்சிவனார்செய்யகழல்பற்றி
எப்பற்றினையுமறவெறிவா ரெல்லைதெரியவொண்ணாதார்
மெய்ப்பத்தர்கள்பாற்பரிவுடையாரெம்பிரானார்விறன்மிண்டர். (௪)

நதியுமதியும்புனைந்தசடைநம்பர்விரும்பிநலஞ்சிறந்த
பதிகளெங்குங்கும்பிட்டுப் படருங்காதல்வழிச்செல்வார்
முதிருமன்பிற்பெருந்தொண்டர்முறைமைநீடுதிருக்கூட்டத்
தெதிர்முன்பரவுமருள்பெற்றேயிறைவர்பாதந்தொழப்பெற்றார்.()

பொன்றாழருவிமலைநாடுகடந்துகடல்சூழ்புவியெங்குஞ்
சென்றாளுடையாரடியவர்தந்திண்மையொழுக்கநடைசெலுத்தி
வன்றாண்மருச்சிலைவளைத்துப்புரங்கள்செற்ற*வைதிகத்தேர்
நின்றாரிருந்ததிருவாரூர் பணிந்தார்நிகரொன்றில்லாதார். (௬)

* பரசு - என்பது - கோடாலி.

* வேதன் - என்னும் பிரமன் சாரதியாயும் வேதங் குதிரைகளாயும் பொருந்திய தேராதலால் வைதிகத் தேரென்னப்பட்டது.

திருவார்பெருமைதிகழ்கின்றதேவாசிரியனிடைப்பொலிந்து
மருவாநின்றசிவனடியார்தம்மைத்தொழுதுவந்தணையா [ற்
தொருவாறொதுங்கும்வன்றொண்டர்புறகென்றுரைக்கச்சிவனருளா
பெருகாநின்றபெரும்பேறுபெற்றார்மற்றும்பெறநின்றார். (௭)

சேணார்மேருச்சிலைவளைத்தசிவனாரடியார்திருக்கூட்டம்
பேணுந்தகுமாரனுக்கும்பிரானுந்தன்னைப்பிறைசூடிப்
பூணாரவப்பூண்டார்க்கும்புறகென்றுரைக்கமற்றவர்பாற்
கோணாவருளைப்பெற்றார்மற்றினியார்பெருமைகூறுவார். (௮)

ஞாலமுய்யநாமுய்ய நம்பிசைவ நன்னெறியின்
சீலமுய்யத்திருத்தொண்டத்தொகைமுன்பாடச்செழுமறைகள்
ஓலமிட்டுமுணர்வரியாரடியாருடனாமுளரென்றால்
ஆலமமுதுசெய்தபிரானடியார்பெருமையறிந்தாரார். (௯)

ஒக்கநெடுநாளிவ்வுலகிலுயர்ந்தசைவப்பெருந்தன்மை
தொக்கநிலைமைநெறிபோற்றித்தொண்டுபெற்றவிறன்மிண்டர்
தக்கவகையாற்றம்பெருமானருளினாலேதாணிழற்கீழ்
மிக்ககணநாயகராகுந்தன்மைபெற்றுவிளங்கினார். (௰)

வேறுபிரிதென்றிருத்தொண்டத்தொகையாலுலகுவிளங்கவரும்
பேறுதனக்குக்காரணராம்பிரானார்விறன்மிண்டனார்பெருமை
கூறுமளவென்னளவிற்றேயவர்தாள் சென்னிமேற்கொண்டே
யாறைவணிகரமர்நீதியன்பர்திருத்தொண்டறைகுவாம். (௰௧)

விறன்மிண்டநாயனார்புராணமுற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௩௱௰௧.

திருச்சிற்றம்பலம்.

மலையாளதேசத்தி லிருக்குஞ்செங்குன்றூர் வேளாளர்மரபில் அவதரித்துப் பரமசிவத்தினிடத்தில்மிகுந்த அன்புள்ளவராய்ச் சிவ தலங்களைத்தரிசித்துக்கொண்டு வருகையில் திருவாரூரில்வந்து தே வாசிரிய மண்டபத்திலிருக்குஞ் சிவனடியார்களை வணங்கி வீதிவி டங்கப்பெருமானையுந்தரிசித்து அவ்வடியார்களுட னிருக்கும்போ து சுந்தரமூர்த்தி சுவாமிகள் புற்றூராகிய சுவாமி தரிசனஞ்செ ய்ய அவ்வழியே எழுந்தருளுகின்றவர். இவ்வடியார்களுக்கு நான டியேனென்றும்படி புற்றிடங்கொண்டா ரெப்போது அருள்செய்வா ரென்றெண்ணிய எண்ணம் வெளிக்குத் தெரியாமையால்இவர் சிவ

னடியாரை வணங்காதுசெல்லுதலினால் "திருக்கூட்டத்துக்கும்புறம்பு பரமசிவனுக்கும்புறம்பே" என்றுசொல்லிச் சுந்தரமூர்த்திசுவாமிகள் திருத்தொண்டத் தொகைபாடினபின்பு சந்தோஷங்கொண்டு மற்றைய தலங்களுந் தரிசித்து இவ்வாறு தொண்டு வழுவாதிருந்து சிவ கணத்திலொருவராயினர். [இந்தநாயனாரு மில்லறத்திலிருந்துசிவனடியாரை வழிபட்டு முத்தியடைந்தவர்.]



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அமர்நீதி நாயனார் புராணம்.



வேறு.

சீரினீடியசெம்பியர்பொன்னிநன்னாட்டுக்
காரின்மேவியகளியளிமலர்ப்பொழில்சூழ்ந்து
தேரின்மேவியசெழுமணிவீதிகள்சிறந்து
பாரினீடியபெருமைசேர்பதிபழையாறை. (௧)

மன்னுமப்பதிவணிகர்தங்குலத்தினில்வந்தார்
பொன்னுமுத்துநன்மணிகளும்பூந்துகின்முதலா
எந்நிலத்தினுமுள்ளனவருவளத்தியல்பால்
அந்நிலைக்கண்மிக்கவரமர்நீதியாரென்பார். (௨)

சிந்தைசெய்வதுசிவன்கழலல்லதொன்றில்லார்
அந்திவண்ணர்தமடியவர்க்கமுதுசெய்வித்துக்
* கந்தைகீளுடைகோவணங்கருத்தறிந்துதவி
வந்தசெல்வத்தின்வளத்தினால்வரும்பயன்கொள்வார். (௩)

முக்கணக்கராமுதல்வனாரவர்திருநல்லூர்
மிக்கசீர்வளர்திருவிழாவிருப்புடன்வணங்கித்
தக்கவன்பர்களமுதுசெய்திருமடஞ்சமைத்தார்
தொக்கசுற்றமுந்தாமும்வந்தணைந்தனர்தூயோர். (௪)

* கந்தை - என்பது- பொந்தை, அதாவது நாலைந்து ஒன்றன்மேலொன்றாகவைத்து நூலிழைகளோட்டப்பட்டிருக்கும் போர்வை வஸ்திரம். கீள்- என்பது அரைஞாணுக்குப்பதிலாகத் துறவிகள் கட்டிக்கொள்வது.

மருவுமன்பொடுவணங்கினர்மணிகண்டர்நல்லூர்த்
திருவிழாவணிசேவித்துத்திருமடத்தடியார்
பெருநயப்பின்பமோடமுதுசெய்திடவருள்பேணி
உருகுசிந்தையின்மகிழ்ந்துறைநாளிடையொருநாள். (ரு)

பிறைத்தளிர்ச்சடைப்பெருந்தகைப்பெருந்திருநல்லூர்க்
கறைக்களத்திறைகோவணப்பெருமைமுன்காட்டி
நிறைத்தவன்புடைத்தொண்டர்க்குநீடருள்கொடுப்பான்
மறைக்குலத்தொருபிரமசாரிகள்வடிவாகி. (சா)

செய்ப்புன்சடைகரந்ததோர்திருமுடிச்சிகையுஞ்
சைவவெண்டிருநீற்றுமுண்டத்தொளித்தழைப்பு
மெய்யில்வெண்புரிநூலுடன்விளங்குமான்றோலும்
கையின்மன்னியபவித்திரமரகதக்கதிரும். (எ)

முந்திநாணுநன்முடிந்ததுசாத்தியவரையிற்
றந்தமாமறைக்கோவணவாடையின்றசைவும்
வஞ்சவல்வினைக்கறுப்பறுமனத்தடியார்க
ணெஞ்சினீங்கிடாவடிமலர்நீணிலம்பொலிய. (அ)

கண்டவர்க்குறுகாதலின்மனங்கரைந்துருகத்
தொண்டரன்பெனுந்தூநெறிவெளிப்படுப்பாராய்த்
தண்டின்மீதிருகோவணநீற்றுப்பைதருப்பை
கொண்டுவந்தமர்நீதியார்திருமடங்குறுக. (கூ)

வடிவுகாண்டலுமனத்தினுமுகமிகமலர்ந்து
கடிதுவந்தெதிர்வணங்கியிம்மடத்தினிற்காணும்
படியிலாதநீரணையமுன்பயிறவமென்னோ
அடியனேன்செய்ததென்றனரமர்நீதியன்பர். (ய)

பேணுமன்பரைநோக்கிநீர்பெருகியவடியார்க்
கூணுமேன்மையிலூட்டிநற்கந்தைகீளுடைகள்
யாணர்வெண்கிழிக்கோவணமீதல்கேட்டுமைக்
காணவந்தனமென்றனன்கண்ணுதற்கரந்தோன். (யக)

என்றுகம்பிரானருள்செயவித்திருமடத்தே
நன்றுநான்மறைப்பெருந்தவரமுதுசெய்தருளத்
துன்றுவேதியர்தூய்மையினமைப்பதுமுளதால்
இன்றுநீருமிங்கமுதுசெய்தருளுமென்றிறைஞ்ச. (யஉ)

வணங்குமன்பரைநோக்கியமறையவரிசைந்தே
அணங்குநீர்ப்பொன்னியாடிநான்வரமழைவரினும்
உணங்குகோவணம்வைத்துநீர்தாருமென்றொருவெண்
குணங்கொள்கோவணந்தண்டினிலவிழ்த்தது கொடுப்பார். (௧௩)

ஓங்குகோவணப்பெருமையையுள்ளவாறுமக்கே
ஈங்குநான்சொலவேண்டுவதில்லைநீரிதனை
வாங்கிநான்வருமளவுமும் மிடத்திகழாதே
ஆங்குவைத்துநீர்தாருமென்றவர்கையிற்கொடுத்தார். (௧௪)

கொடுத்தகோவணங்கைக்கொண்டுபோதிலாவன்பர்
கடுப்பிலிங்கெழுந்தருளுநீர்குளித்தெனக்கங்கை
மடுத்ததும்பியவளர்சடைமறைத்தவம்மறையோர்
அடுத்ததெண்டிரைப்பொன்னிநீராடுதற்ககன்றார். (௧௫)

தந்தகோவணம்வாங்கியதனிப்பெருந்தொண்டர்
முந்தையந்தணர்மொழிகொண்டுமுன்புதாங்கொடுக்குங்
கந்தைகீளுடைகோவணமன்றியோர்காப்புச்
சிந்தைசெய்துவேறிடத்தொருசேமத்தின்வைத்தார். (௧௬)

போனவேதியர்வைத்தகோவணத்தினைப்போக்கிப்
பானலந்துறைப்பொன்னிநீர்படிந்துவந்தாரோ
தூநறுஞ்சடைக்கங்கைநீர்தோய்ந்துவந்தாரோ
வானநீர்மழைபொழிந்திடநனைந்துவந்தணைந்தார். (௧௭)

கதிரிளம்பிறைக்கண்ணியர்நண்ணியபொழுதின்
முதிருமன்புடைத்தொண்டர்தாமுறைமையின்முன்னே
அதிகநன்மையினறுசுவைத்திருவமுதாக்கி
எதிரெழுந்துசென்றிறைஞ்சிடநிறைந்தநூன்மார்பர். (௧௮)

தொண்டரன்பெனுந்தூயநீராடுதல்வேண்டி
மண்டுதண்புனன்மூழ்கியவீரத்தைமாற்றத்
தண்டின்மேலுளதீரநான்றந்தகோவணத்தைக்
கொண்டுவாருமென்றுரைத்தனர்கோவணக்கள்வர். (௧௯)

ஐயர்கைதவமறிவுறாதவர்கடிதணுக
எய்திநோக்குறக்கோவணமிருந்தவேறிடத்தின்
மையில்சிந்தையர்கண்டிலர்வைத்தகோவணமுன்
செய்ததென்னென்றுதிகைத்தனர்தேடுவாரானார். (௨௰)

பொங்குவெண்கிழிக்கோவணம்போயினநெறிமேற்
சங்கையின்றியேதப்பினதென்றுதன்சரக்கில்
எங்குநாடியுங்கண்டிலரென்செய்வார்நின்றார்
அங்கண்வேதியர்பெருந்தொடக்கினிலகப்பட்டார். (உக)

மனைவிபாலொடுமன்னியகிளைஞருந்தாமும்
இனையதொன்றுவந்தெய்தியதெனவிடர்கூர்ந்து
நினைவதொன்றிலர்வருந்தினர்நிற்கவுமாட்டார்
புனையவேறொருகோவணங்கொடுபுறப்பட்டார். (உஉ)

அத்தர்முன்புசென்றடிகணீர்தந்தகோவணத்தை
வைத்திடத்துநான்கண்டிலன்மற்றமோரிடத்தில்
உய்த்தொளித்தனரில்லையஃதொளித்தவாறறியேன்
இத்தகைத்தவேறதிசயங்கண்டிலேனென்று. (உ௩)

வேறுநல்லதோர்கோவணம்விரும்பிமுன்கொணர்ந்தேன்
கீறுகோவணமன்றுநெய்தமைத்ததுகிளர்கொ
ணீறுசாத்தியநெற்றியீர்மற்றதுகளைந்து
மாறுசாற்றியென்பிழைபொறுப்பீரெனவணங்க. (உ௪)

நின்றவேதியர்வெகுண்டமர்நீதியார்நிலைமை
நன்றுசாலவுநாளிடைகழிந்ததுமன்றால்
இன்றுநான்வைத்தகோவணங்கொண்டதற்கெதிர்வே
றொன்றுகொள்கெனவுரைப்பதேனீரெனவுரையா. (உ௫)

நல்லகோவணங்கொடுப்பனென்றுலகின்மேனாளுஞ்
சொல்லுவித்ததென்கோவணங்கொள்வதுதுணிந்தோ
வொல்லையீங்குறுவாணிபமழகிதேயுமக்கென்
றெல்லையில்லவனெரிதுள்ளினாலெனவெகுண்டான். (உ௬)

மறிகரந்துதண்டேந்தியமறையவர்வெகுளப்
பொறிகலங்கியவுணர்வினராய்முகம்புலர்ந்து
சிறியவென்பெரும்பிழைபொறுத்தருளுவீரடியேன்
அறியவந்ததொன்றன்றெனவடிபணிந்தயர்வார். (உ௭)

செயத்தகும்பணிசெய்வனிக்கோவணமன்றி
நயத்தகுந்தனநல்லபட்டாடைகண்மணிகள்
உயர்த்தகோடிகொண்டருளுமென்றுடம்பினிலடங்காப்
பயத்தொடுங்குலைந்தடிமிசைப்பலமுறைபணிந்தார். (உ௮)

பணியுமன்பரைநோக்கியப்பரம்பொருளானார்
தணியுமுள்ளத்தராயினர்போன்றுநீர்தந்த
மணியும்பொன்னுநல்லாடையுமற்றுமென்செய்ய
அணியுங்கோவணநேர்தரவமையுமென்றருள. (உகூ)

மலர்ந்தசிந்தையராகியவணிகரேறனையார்
அலர்ந்தவெண்ணிறக்கோவணமதற்குநேராக
இலங்குபூந்துகில்கொள்வதற்கிசைந்தருள்செய்யீர்
நலங்கொள்கோவணந்தரும்பரிசியாதெனநம்பர். (ஙய)

உடுத்தகோவணமொழியநாமுங்கையிற்றரநீர்
கொடுத்ததாகமுன்சொல்லுமக்கிழித்தகோவணநேர்
அடுத்தகோவணமிதும்வல்லறுதண்டினிலவிழா
எடுத்துமற்றிதனிடையிடுங்கோவணமென்றார். (ஙக)

நன்றுசாலவென்றன்பர்தாமொருதுலைநாட்டக்
குன்றவில்லியார்கோவணமொருதட்டிலிட்டார்
நின்றதொண்டருங்கையினினெய்தகோவணந்தட்
டொன்றிலேயிடநிறைநிலாதொழிந்தமைகண்டார். (ஙஉ)

நாடுமன்பொடுநாயன்மார்க்களிக்கமுன்வைத்த
நீடுகோவணமடையநேராகவொன்றொன்றாக்
கோடுதட்டின்மீதிடவிடக்கொண்டெழுந்ததுகண்
டாடுசேவடிக்கடியருமற்புதமெய்தி (ஙங)

உலகிலில்லதோர்மாயையிக்கோவணமொன்றுக்
கலகில்கோவணமொத்திலவென்றதிசயித்துப்
பலவுமென்றுகில்பட்டுடனிடவிடவுயர
இலகுபூந்துகிற்பொதிகளையெடுத்துமேலிட்டார். (ஙச)

முட்டிலன்பர்தமன்பிடுந்தட்டுக்குமுதல்வர்
மட்டுநின்றதட்டருளொடுந்தாழ்வுறும்வழக்காற்
பட்டொடுந்துகிலனேககோடிகளிடப்பத்தர்
தட்டுமேற்படத்தாழ்ந்ததுகோவணத்தட்டு. (ஙரு)

(இதன்பொருள்.)

முட்டிலன்பர்தமன்பிடுந்தட்டிற்கு - என்பதனை - அன்பிடு முட்டிலன்பர்தந் தட்டிற்கு - எனப்படுத்துமாறுக. அன்பு - அன்பினை, இடும் - இடுவதான, குறைபாடில்லாத அன்பர்களுடை

ய தட்டுக்குப் பரமசிவத்தின்மட்டில் நின்ற தட்டானது அருளினு
ல் தாழ்கின்றமுறைமையினால் - அநேகங்கோடிப் பட்டுவஸ்திரங்க
ளும் பருத்தி வஸ்திரங்களுங் கொண்டுவந்து வைக்குந் தோறும்
அமர்நீதிநாயனார் தட்டுமேற்படப் பரமசிவனுடைய தட்டு தாழ்ந்
தது என்க. பரமசிவன் அடியவர்கட்கு எளியராந்தன்மை யுடை
யவரென்று வேதமுதலியவைகளாற் சொல்லப்படுகிற முறைமை
யினால், ஈண்டுப் பரமசிவனது கோவணம் வைத்ததட்டும் எளிய
தன்மையுடையதுபோலத் தாழ்ந்ததென்று சொற்சாதுரியந் தோ
ன்றக்கூறினார். தன்னடியார்க்கென்றும், எளிவரும்பெருமையேழு
லகுமெடுத்தேத்தும் என்பதனானும், அருளென்னுமன்பீன் குழவி
யென்பதினானு மறிக. அன்பருக்குத் தாழுந் தன்மை ஆண்டா
ளாகிய பரமசிவத்தின்மட்டிலுண்டு என்பார் முதல்வர்பட்டினின்ற
தட்டென்றார். முற்கூறிய இரண்டு தட்டினையுந் தன்மையாகக்
கொள்க. இதுதாற்பரியார்த்தம்.

ஆனதன்மைகண்டடியவரஞ்சியந்தணர்முன்
றானறுந்துகில்வர்க்கநூல்வர்க்கமேமுதலா
மானமில்லனகுவிக்கவுந்தட்டின்மட்டிதுவால்
ஏனையென்றனயிடப்பெறவேண்டுமென்றிறைஞ்ச. (௩௬)

மங்கைபாகராமறையவர்மற்றதற்கிசைந்தே
யிங்குநாமினிவேறென்றுசொல்லுவதென்கொல்
அங்குமற்றுங்கடனங்களினாகிலுமிடுவீர்
எங்கள்கோவணநேர்நிற்கவேண்டுவதென்றார். (௩௭)

நல்லபொன்னும்வெள்ளியுநவமணித்திரளும்
பல்வகைத்திறத்துலோகமும்புணர்ச்சிகள்பலவும்
எல்லையில்பொருள்சுமந்தவரிட்டிடக்கொண்டே
மல்குதட்டுமீதெழுந்ததுவியந்தனர்மண்ணோர். (௩௮)

தவநிறைந்தநான்மறைப்பொருணூல்களாற்சமைந்த
சிவன்விரும்பியகோவணமிருஞ்செழுந்தட்டுக்
அவனிமேலமர்நீதியார்தனமெலாமன்றிப்
புவனம்யாவையுநேர்நிலாவென்பதுபுகழோ. (௩௯)

நிலைமைமற்றிதுநோக்கியநிகரிலார்நேர்நின்
றுலைவில்பஃறனமொன்றொழியாமையத்தொழிந்தேன்
றலைவயானுமென்மனைவியுஞ்சிறுவனுந்தகுமேற்
றுலையிலேறிடப்பெறுவதுன்னருளெனத்தொழுதார். (௪௰)

பொச்சமில்லஃடிமைத்திறம்புரிந்தவரெதிர்நின்
றச்சமுன்புறவுரைத்தலுமங்கணரருளா
னிச்சயித்தவர்நிலையினைத்துலையெனுஞ் * சலத்தால்
இச்சழக்கினின்றேற்றுவாரோதுதற்கிசைந்தார். (௪௧)

மனமகிழ்ந்தவர்மலர்க்கழல்சென்னியால்வணங்கிப்
புனைமலர்க்குழன்மனைவியார்தம்மொடுபுதல்வன்
றனையுடன்கொடுதனித்துலையலங்கொடுதகவால்
இனையசெய்கையிலேறுவார்கூறுவாரெடுத்து. (௪௨)

இழைத்தவன்பினிலிறைதிருநீற்றுமெய்ப்பஃடிமை
பிழைத்திலோமெனிற்பெருந்துலைநேர்நிற்கவென்று
மழைத்தடம்பொழிற்றிருநல்லூரிறைவரைவணங்கித்
தழைத்தவஞ்செழுத்தோதினாரேறினார்தட்டில். (௪௩)

மண்டுகாதலின்மற்றவர்மகிழ்ந்துடனேற
அண்டர்தம்பிரான்றிருவரைக்கோவணமதுவுங்
கொண்டவன்பினிற்குறைபடாவடியவரடிமைத்
தொண்டுமொத்தலாலொத்துநேர்நின்றதத்துலைதான். (௪௪)

மதிவிளங்கியதொண்டர்தம்பெருமையைமண்ணோர்
துதிசெய்தெங்கணுமதிசயமுறவெதிர்தொழுதார்
கதிர்விசும்பிடைகரந்திடநிறைந்தகற்பகத்தின்
புதியபூமழையிமையவர்மகிழ்வுடன்பொழிந்தார். (௪௫)

அண்டர்பூமழைபொழியமற்றதனிடையொளித்த
* முண்டவேதியரொருவழியான்முதனல்லூர்ப்
பண்டுதாம்பயில்கோலம்விசும்பினிற்பாகங்
கொண்டபேதையுந்தாமுமாய்க்காட்சிமுன்கொடுத்தார். (௪௬)

தொழுதுபோற்றியத்துலைமிசைநின்றநேர்துதிக்கும்
வழுவிலன்பருமைந்தருமனைவியார்தாமு
முழுதுமின்னருள்பெற்றுத்தமுன்றொழுதிருக்கும்
அழிவில்வான்பதங்கொடுத்தெழுந்தருளினாரையர். (௪௭)

---

* சலம் - என்பது - வியாசம், அதுதான்
யாதெனில் முகாந்தர மென்பதாக வேண்டும்.

---

* முண்டம் - என்பது - திரிபுண்டரம். அதுதான்
விபூதி மூன்றுவரையாகத் தரிக்கப்படுவது.

நாதர்தந்திருவருளினாற்பெருந்துலையே
மீதுகொண்டெழுவிமானமதாகிமேற்செல்லக்
கோதிலன்பருந்தம்பழுந்துறைபரந்தொடுத்த
ஆதிமூர்த்தியாருடன்சிவபுரியினையணைந்தார். (சஅ)

வேறு.

மலர்மிசையயனுமாலுங் காணுதற்கரியவள்ளல்
பலர்புகழ்வெண்ணெய்நல்லூராவணப்பழைமைகாட்டி
உலகுய்யவாண்டுகொள்ளப்பெற்றவர்பாதமுன்னித்
தலைமிசைவைத்துவாழுந்தலைமைநந்தலைமையாகும். (சகூ)

அமர்நீதிநாயனார்புராண முற்றிற்று.

அஉ திருவிருத்தம். சஎ.

—*—

திருச்சிற்றம்பலம்

பழையாறைப்பதி வணிககுலத்தில்அவதரித்துச்சிவனடியார்களுக்குத் தொண்டுசெய்துகொண்டுவருநாளையில் அவ்வடியார்களுக்கு அமுதுபடைப்பதற்காகத் திருநல்லூரில்மடங்கட்டுவித்துஅங்குவசிக்கும்போது இவருடைய அன்பு உலகத்தாரெல்லாருமறிந்துய்வது காரணமாகப் பரமசிவம் பிரமசாரியருள்ள சிவனடியார்போல எழுந்தருளிவந்து நாயனார் வேண்டுதலினால் அம்மடத்தில் அமுது கொள்ள ஒத்துக்கொண்டவராய்க் காவிரியில் ஸ்நாநஞ்செய்து வருகிறோம் இதனை வைத்துவையென்று தம்முடைய கைத்தண்டத்தில் முடித்திருந்த கோவணத்தை அன்பர் கையிற் கொடுத்துப்போய் வரும்போது மழையில் நனைந்துவந்து அக்கோவணத்தைக்கேட்க அதுசுவாமி மாயையினுற் காணமற்போனதையறியாமல் வைத்த இடத்தைப் பார்த்தில்லாமையா லஞ்சிவந்து சுவாமியை வணங்கிச் சொல்லச் சுவாமிகோபங்கொண்டு அக்கோவணத்துக்கீடாக வேறொரு கோவணங்கொடுத்தால் வாங்கிக்கொள்ளுகிறோமென்றருளத் துலைநாட்டி அதில்சம்மிடத்திலிருக்குங்கோவணமுதலிய வஸ்திரங்களையும், பொன்முதலிய பொருள்களையும் ஒவ்வொன்றாகக்கொண்டுவந்துவைத்தனர் அது சுவாமிகைத்தண்டத்திலிருந்து அவிழ்த்து வைத்த மற்றொருகோவணத்துக்கொவ்வாமையால் மனைவிமைந்தருடன் தாம்அந்தத்தட்டிலேறிஅதுவே விமானமாகச் சிவலோகமடைந்தனர். [இவரும் இல்லறத்திலிருந்து சிவனடியார்களுக்குத் தொண்டுசெய்து முத்திபெற்றவர். காரணம் மேற்கூறியதே.]

—○❁○—

## திலஸ்ப வாழந்தணர்சருக்கம்

முற்றுப்பெற்றது.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## இலைமலிந்தசருக்கம்.

# எறிபத்தநாயனார் புராணம்.

வேறு.

மல்லனீர்ஞாலந்தன்னுண் மழவிடையுடையானன்பர்க்
கொல்லைவந்துற்றசெய்கையுற்றிடத்துதவுநீரார்
எல்லையில்புகழின்மிக்கவெறிபத்தர்பெருமையெம்மாற்
சொல்லலாம்படித்தன்றேனுமாசையாற்சொல்லலுற்றாம். (௧)

பொன்மலைப்புலிவென்றோங்கப்புதுமலையிடித்துப்போற்றும்
அந்நெறிவழியேயாகவயல்வழியடைத்தசோழன்
மன்னியவநபாயன்சீர் மரபின்மாநகரமாகுந்
தொன்னெடுங்கருவூரென்னுஞ்சுடர்மணிவீதிமூதூர். (௨)

மாமதின்மஞ்சுசூழு மாளிகைநிரைவிண்சூழுந்
தூமணிவாயில்சூழுஞ்சோலையில்வாசஞ்சூழுந்
தேமலரளகஞ்சூழுஞ்சிலமதிதெருவுஞ்சூழுந்
தாமகிழ்ந்தமரர்சூழுஞ் சதமகனகரந்தாழ. (௩)

கடகரிதுறையிலாடுங்களிமயில்புறவிலாடும்
அடர்மணியரங்கிலாடு மரிவையர்குழல்வண்டாடும்
படரொளிமறுகிலாடும்பயில்கொடிகதிர்மீதாடுந்
தடநெடும்புவிகொண்டாடுந்தனிநகர்வளமையீதால். (௪)

மன்னியசிறப்பின்மிக்கவளநகர்தன்னின்மல்கும்
பொன்னியல்புரிசைசூழ்ந்துசுரர்களும்போற்றும்பொற்பாற்
றுன்னியவன்பின்மிக்கதொண்டர்தஞ்சிந்தைநீங்கா
அந்நிலையரனார்வாழ்வ * தானிலையென்னுங்கோயில். (௫)

பொருட்டிருமறைகடந்த புனிதனையினிதக்கோயின்
மருட்டுறைமாற்றுமாற்றால்வழிபடுந்தொழிலராகி
இருட்கடுவொடுங்குகண்டத்திறையவர்க்குரிமைபூண்ட
அருட்பெருந்தொண்டுசெய்வா ரவெறிபத்தராவார். (௬)

* ஆனிலை - என்பது - கருவூரிலிருக்குஞ் சிவாலயத்தின்பெயர்.

மழைவளருலகிலெங்குமன்னியசைவமோங்க
அழலவிர்சடையானன்பர்க் கடாதனவடுத்தபோது
முழைபரியென்னத்தோன்றி முரண்கெடவெறிந்துதீர்க்கும்
பழமறைபரசுந்தூய் பரசுமுன்னெடுக்கப்பெற்றார். (எ)

அண்ணலார்திருநாளி லானிலையடிகளார்க்குத்
திண்ணியவன்புகூர்ந்த சிவகாமியாண்டாரென்னும்
புண்ணியமுநிவனார்தாம்பூப்பறித்தலங்கல்சாத்தி
உண்ணிறைகாதலோடு மொழுகுவாரொருநாண்முன்போல். (அ)

வைகறையுணர்ந்துபோந்துபுனன்மூழ்கிவாய்கட்டி
மொய்ம்மலர்நெருங்குவாசநந்தனவனத்துமுன்னிக்
கையினிற்றெரிந்துநல்ல கமழ்முகையலரும்வேலைத்
தெய்வநாயகர்க்குச்சாத்துந்திருப்பள்ளித்தாமங்கொய்து. (கூ)

கோலப்பூக்கூடைதன்னை நிறைத்தனர்கொண்டுநெஞ்சில்
வாலியநேசங்கொண்டுமலர்க்கையிற்றண்டுங்கொண்டங்
காலயமதனைநோக்கியங்கணர்க்கமைத்துச்சாத்துங்
காலைவந்துதவவேண்டிக்கடிதினில்வாராநின்றார். ( )

மற்றவரணையவிப்பால்வளநகர்தன்னின்மன்னுங்
கொற்றவர்வளவர்தங்கள்குலப் * புகழ்ச்சோழனார்தம்
பற்றலர்முனைகள்சாய்க்கும்பட்டவர்த்தனமாம்பண்பு
பெற்றவெங்களிறுகோலம்பெருகுமாநவமிமுன்னாள். (யக)

மங்கலவிழவுகொண்டுவருநதித்துறைநீராடிப்
பொங்கியகளிப்பினோடும்பொழிமதஞ்சொரியநின்றார்
எங்கணுமிரியல்போகவெதிர்பரிக்காரரோடத்
துங்கமால்வரைபோற்றோன்றித்துண்ணெனவணைந்ததன்றே. (யஉ)

வென்றிமால்யானைதன்னைமேல்கொண்டபாகரோடுஞ்
சென்றொருதெருவின்முட்டிச்சிவகாமியார்முன்செல்ல
வன்றனித்தண்டிற்றூங்குமலர்கொள்பூக்கூடைதன்னைப்
பின்றொடர்ந்தோடிச்சென்றுபிடித்துமுன்பறித்துச்சிந்த. (யங)

மேல்கொண்டபாகர்கண்டுவிசைகொண்டகளிறுசண்டக்
கால்கொண்டுபோவார்போலக்கடிதுகொண்டகலப்போக
நூல்கொண்டமார்பிற்றொண்டர்நோக்கினர்பதைத்துப்பொங்கி
மால்கொண்டகளிற்றின்பின்புதண்டுகொண்டடிக்கவந்தார். (யச)

---

* புகழ்ச்சோழனார் - அக்காலத்திருந்த சோழராசாவின் பெயர். இவர் நாயன்மார்களிலொருவர்.

அப்பொழுதணையவொட்டாதடற்களிறகன்றுபோக
மெய்ப்பெருந்தொண்டர்மூப்பால்விரைந்துபின்செல்லமாட்டார்
தப்பினர்விழுந்துகையாற்றரையடித்தெழுந்துநின்று
செப்பருந்துயரநீடச்செயிர்த்துமுன்சிவதாவென்பார், (௰௫)

வேறு.

களியானையினீருரியாய்சிவதா
எளியார்வலியாமிறைவாசிவதா
அளியாரடியாரறிவேசிவதா
தெளிவாரமுதேசிவதாசிவதா. (௰௬)

ஆறும்மதியும்மணியுஞ்சடைமேல்
ஏறும்மலர்க்கரிசிந்துவதே
வேறுந்திரிவார்புரம்வெந்தவியச்
சீறுஞ்சிலையாய்சிவதாசிவதா. (௰௭)

தஞ்சேசரணம்புகுதுந்தமியோர்
நெஞ்சேய்துயரங்கெடநேர்தொடரு
மஞ்சேயெனவீழ்மறலிக்கிறைநீள்
செஞ்சேவடியாய்சிவதாசிவதா. (௰௮)

நெடியோனறியாநெறியாரறியும்
படியாலடிமைப்பணிசெய்தொழுகும்
அடியார்களில்யாருளராவணைவார்
முடியாமுதலாவெனவேமொழிய. (௰௯)

வேறு.

என்றவருரைத்தமாற்றமெறிபத்தரெதிரேவாரா
நின்றார்மேலெழுநெருப்புயிர்த்தழன்றுபொங்கி
மன்றவரடியார்க்கென்றும்வழிப்பகைகளிறேயன்றோ
கொன்றதுவீழ்ப்பனென்றுகொலைமழுவெடுத்துவந்தார் (௨௰)

வந்தவரழைத்ததொண்டர்தமைக்கண்டுவணங்கியும்மை
இந்தவல்லிடும்பைசெய்தயானையெங்குற்றதென்ன
எந்தையார்சாத்தும்பூவையென்கையிற்பறித்துமண்மேற்
சிந்திமுன்பிழைத்துப்போகாநின்றதித்தெருவேயென்றார். (௨௧)

இங்கிதுபிழைப்பதெங்கேயினியெனவெரிவாய்சிந்தும்
அங்கையின்மழுவுந்தாமுமனலும்வெங்காலுமென்னப்
பொங்கியவிசையிற்சென்றுபொருகரிதொடர்ந்துசெல்லுஞ்
செங்கண்வாளரியிற்கூடிக்கிடைத்தனர்சீற்றமிக்கார். (௨௨)

கண்டவரிதுமுன்பண்ணலுரித்தவக்களிறேபோலும்
அண்டருமண்ணுமோருநடுக்கினுமடர்த்துசிந்தத்
துண்டமுத்துக்கொல்வேனென்றுசுடர்மழுவலத்தில்வீசிக்
கொண்டெழுந்தன்பர்சென்றுகாலினாற்குலுங்கப்பாய்ந்தார். (உ௩)

பாய்தலுமிசைகொண்டுய்க்கும்பாகரைக்கொண்டுசீறிக்
காய்தழலுமிழ்கண்வேழந்திரிந்துமேற்கதுவச்சந்
தாய்நல்புனலின்முன்பநிற்குமேதகைந்துபாய்ந்து
தோய்தனித்தடக்கைவீழமழுவினாற்றுணித்தார்தொண்டர். (உ௪)

கையினைத்துணித்தபோதுகடலெனக்கதறிவீழ்ந்து
மைவரையனையவேழம்புரண்டிடமருங்குவந்த
வெய்யகோற்பாகர்மூவர்மிசைகொண்டாரிருவராக
ஐவரைக்கொன்றுநின்றாரருவரையனையதோளார். (உ௫)

வெட்டுண்டுபட்டுவீழ்ந்தாரொழியவேறுள்ளாரோடி
மட்டவிழ்தொங்கன்மன்னன்வாயிற்காவலரைநோக்கிப்
பட்டவர்த்தனமும்பட்டுப்பாகரும்பட்டாரென்று
முட்டநீர்கடிதுபுக்குமுதல்வனுக்குரையுமென்றார். (உ௬)

மற்றவர்மொழிந்தமாற்றமணிக்கடைக்காப்போர்கேளாக்
கொற்றவன்றன்பாலெய்திக்குரைகழல்பணிந்துபோற்றிப்
பற்றலரிலாதாய்நின்பொற்பட்டமால்யானைவீழச்
செற்றனர்சிலராமென்றுசெப்பினார்பாகரென்றார். (உ௭)

வளவனுங்கேட்டபோதின்மாறின்றிமண்காக்கின்ற
கிளர்மணித்தோளலங்கற்சுரும்பினங்கிளர்ந்துபொங்க
அளவில்சீற்றத்தினாலேயார்செய்தாரென்றுகேளான்
இளவரியேறுபோலவெழுந்தன்மணிவாயினீங்க. (உ௮)

தந்திரத்தலைவர்தாமுந்தலைவன்றனிலைமைகண்டு
வந்துறச்சேனைதன்னைவல்விரைந்தெழமுன்சாற்ற
அந்தரத்தகலமெல்லாமணிதுகிற்பதாகைதூர்ப்ப
சந்திரத்தேருமாவுமிடையிடைகளிறுமாகி. (உ௯)

வில்லொடுவேல்வாடண்டுபிண்டிபாலங்கண்மிக்க
வல்லெழுமுசலநேமிமழுக்கழுக்கடைமுன்னான
பல்படைக்கலன்கள்பற்றிப்பைங்கழல்வரிந்தவன்கண்
எல்லையில்படைஞர்கொட்புற்றெழுந்தனரெங்குமெங்கும். (௩௰)

சங்கொடுதாரைகாளந்தழங்கொலிமுழங்குபேரி
வெங்குரற்பம்பைகண்டைவியன்றுடிதிமிலைதட்டி
பொங்கொலிச்சின்னமெல்லாம்பொருபடைமிடைந்தபொற்பின்
மங்குல்வான்கிளர்ச்சிநாணமருங்கெழுந்தியம்பிமல்க. (௫௧)

தூரியத்துவைப்புமுட்டுஞ்சுடர்ப்படையொலிப்புமாவின்
றார்மணியிசைப்பும்வேழமுழக்கமுந்தடந்தேர்ச்சீரும்
வீரர்தஞ்செருக்கினார்ப்புமிக்கெழுந்தொன்றாமெல்லைக்
காருடன்கடைநாட்பொங்குங்கடலெனக்கலித்ததன்றே. (௫௨)

பண்ணுறுமுறுப்புநான்கிற்பரந்தெழுசேனையெல்லா
மண்ணிடையிறுகான்மேன்மேல்வந்தெழுந்ததுபோற்றோன்றத்
தண்ணளிக்கவிகைமன்னன்றானையின்றொடரத்தானோர்
அண்ணலம்புரவிமேற்கொண்டரசமாவீதிசென்றான். (௫௩)

கடுவிசைமுடுகிப்பொங்கிக்களிற்றொடும்பாகர்வீழ்ந்த
படுகளங்குறுகச்சென்றான்பகைப்புலத்தவரைக்காணான்
விடுசுடர்மழுவொன்றேந்திவேறிருதடக்கைத்தாய
அடுகளிறென்னநின்றவன்பரைமுன்புகண்டான். (௫௪)

பொன்றவழருவிக்குன்றமெனப்புரள்களிற்றின்முன்பு
நின்றவர்மன்றுளென்றுநிருத்தமேபயிலும்வெள்ளிக்
குன்றவரடியாரானார்கொன்றவரிவரென்றோரான்
வென்றவரியாவரென்றான்வெடிபடமுழங்குஞ்சொல்லான். (௫௫)

அரசனங்கருளிச்செய்யவருகுசென்றணைந்துபாகர்
விரைசெய்தார்மாலையோய்நின்விறற்களிற்றெதிரோநிற்குந்
திரைசெய்நீருலகின்மன்னரியாருளார்தீங்குசெய்தார்
பரசுமுன்கொண்டுநின்றவிவரெனப்பணிந்துசொன்னார். (௫௬)

குழையணிகாதினானுக்கன்பராங்குணத்தின்மிக்கார்
பிழைபடினன்றிக்கொல்லார்பிழைத்ததுண்டென்றுட்கொண்டு
மழைமதயானைச்சேனைவரவினைமாற்றிமற்ற
உழைவயப்புரவிமேனின்றிழிந்தனனுலகமன்னன். (௫௭)

மைத்தடங்குன்றுபோலுமதகளிற்றெதிரேயிந்த
மெய்த்தவர்சென்றபோதுவேறொன்றுபுகுதாவிட்ட
அத்தவமுடையேனானேனம்பலவாணரன்பர்
இத்தனைமுனியக்கெட்டேனென்கொலோபிழையென்றஞ்சி. (௫௮)

செறிந்தவர்தம்மைநீக்கியன்பர்முன்றொழுது சென்றீ
தறிந்திலேனடியேனங்குக்கேட்டதொன்றதுதானிற்க
மறிந்தவிக்களிற்றின்குற்றம்பாகரோடிதனைமாள
எறிந்ததேபோதுமோதா னருள்செய்யுமென்றுநின்றான். (ஙகூ)

மன்னவன்றன்னைநோக்கிவானவரீசர்நேசர்
சென்னியித்துங்கவேழஞ்சிவகாமியாண்டார்கொய்து
பன்னகாபரணர்ச்சாத்தக்கொடுவரும்பள்ளித்தாமந்
தன்னைமுன்பறித்துச்சிந்தத்தலைப்படத்துணித்துவீழ்த்தேன். (சய)

மாதங்கந்தீங்குசெய்ய வருபரிக்காரர்தாமு
மீதங்குக்கடவுவாரும்விலக்கிடாதொழிந்துபட்டார்
ஈதிங்குநிகழ்ந்ததென்றுமொறியத்தமொன்னவஞ்சிப்
பாதங்கண்முறையாற்றாழ்ந்துபருவரைத்தடந்தோண்மன்னன் (சக)

அங்கணரடியார்தம்மைச்செய்தவிவ்வபராதத்துக்
கிங்கிவைதம்மாற்போதாதென்னையுங்கொல்லவேண்டு
மங்கலமழுவாற்கொல்கைவழக்குமன்றிதுவாமென்று
செங்கையிலுடைவாள்வாங்கிக்கொடுத்தனன்றீர்வுநேர்வான். (சஉ)

வெந்தழற்சுடர்வாணீட்டும்வேந்தனைநோக்கிக்கெட்டேன்
அந்தமில்புகழானன்புக்களவின்மைகண்டேனென்று
தந்தவாள்வாங்கமாட்டார்தலைத்தான்றுறக்குமென்று
சிந்தையாலுணர்வுற்றஞ்சிவாங்கினார்தீங்குதீர்ப்பார். (சங)

வாங்கியதொண்டர்முன்புமன்னனார்தொழுதுநின்றே
யீங்கெனைவாளினாற்கொன்றென்பிழைதீர்க்கவேண்டி
யோங்கியவுதவிசெய்யப் பெற்றனனிவர்பாலென்றே
ஆங்கவருரைப்பக்கண்டவெறிபத்தரதனுக்கஞ்சி. (சச)

வன்பெருங்களிறுபாகர்மடியவுமுடைவாளைத்தந்
தென்பெரும்பிழையினாலேயென்னையுங்கொல்லுமென்னும்
அன்பனார்தம்மைத்தீங்குநினைத்தனனென்றுகொண்டு
முன்பெனதுயிர்செகுத்துமுடிப்பதேமுடிவென்றெண்ணி (சரு)

புரிந்தவர்கொடுத்தவாளையன்பர்தங்கழுத்திற்பூட்டி
அரிந்திடலுற்றபோதிலரசனும்பெரியோர்செய்கை
இருந்தவாறிதுவென்கெட்டேனென்றெதிர்கடிதிற்சென்று
பெருந்தடந்தோளாற்கூடிப்பிடித்தனன்வாளுங்கையும், (சசா)

வளவனார்விடாதுபற்றமாதவர்வருந்திநிற்ப
அளவிலாப்பரிவில்வந்தவிடுக்கணையகற்றவேண்டிக்
களமணிகளத்துச்செய்யகண்ணுதலருளால்வாக்குக்
கிளரொளிவிசும்பின்மேல்வந்தெழுந்ததுபலருங்கேட்ப. (சஎ)

தொழுந்தகையன்பின்மிக்கீர்தொண்டினைமண்மேற்காட்டச்
செழுந்திருமலரையின்றுசினக்கரிசிந்தத்திங்கட்
கொழுந்தணிவேணிக்கூத்தரருளினாற்கூடிற்றென்றங்
கெழுந்ததுபாகரோடுமியானையுமெழுந்ததன்றே. (சஅ)

ஈரவேபூட்டும்வாளைவிட்டெறிபத்தர்தாமு
நேரியர்பெருமான்றண்மேல்விழுந்தனர்நிருபர்கோனும்
போர்வடிவாளைப்போகவெறிந்தவர்கழல்கள்போற்றிப்
பார்மிசைப்பணிந்தான்விண்ணோர்பணிமலர்மாரிதூர்த்தார். (சகூ)

இருவருமெழுந்துவானிலெழுந்தபேரொலியைப்போற்ற
அருமறைப்பொருளாயுள்ளாரணிகொள்பூங்கூடைதன்னின்
மருவியபள்ளித்தாமநிறைந்திடவருளமற்றத்
திருவருள்கண்டுவாழ்ந்துசிவகாமியாருநின்றார். (ரு0)

மட்டவிழலங்கல்வென்றிமன்னவர்பெருமான்முன்னர்
உட்டருகளிப்பினோடு முறங்கிமீதெழுந்ததொத்து
முட்டவெங்கடங்கள்பாய்ந்துமுகிலெனமுழங்கிப்பொங்கும்
பட்டவர்த்தனத்தைக்கொண்டுபாகருமணையவந்தார். (ருக)

ஆனசீர்த்தொண்டர்கும்பிட்டடியனேன்களிப்பவிந்த
மானவெங்களிற்றையேறிமகிழ்ந்தெழுந்தருளுமென்ன
மேன்மையப்பணிமேற்கொண்டுவணங்கிவெண்குடையினீழல்
யானைமேல்கொண்டுசென்றாரிவுளிமேற்கொண்டுவந்தார். (ருஉ)

அந்நிலையெழுந்தசேனையார்கலியேழுமொன்றாய்
மன்னியவொலியினார்ப்பமண்ணெலாமகிழ்ந்துவாழ்த்தப்
பொன்னெடும்பொதுவிலாடனீடியபுனிதர்பொற்றாள்
சென்னியிற்கொண்டுசென்னிதிருவளர்கோயில்புக்கான். (ருங)

தம்பிரான்பணிமேற்கொண்டுசிவகாமியாருஞ்சார
எம்பிரானன்பரான வெறிபத்தர் தாமுமென்னே
அம்பலநிறைந்தார்தொண்டரறிவதற்கரியாரென்று
செம்பியன்பெருமையுன்னித்திருப்பணிநோக்கிச்சென்றார். (ருச)

மற்றவரிணையதானவன்பெருந்தொண்டுமண்மேல்
உற்றிடத்தடியார்முன்சென் றுதவியேநாளுநாளு
நற்றவக்கொள்கைதாங்கிநலமிகுகயிலைவெற்பிற்
கொற்றவக்கணத்தின்முன்னாங்கோமுதற்றலைமைபெற்றார். (௫௫)

ஆளுடைத்தொண்டர்செய்தவாண்மையுந்தம்மைக்கொல்ல
வாளினைக்கொடுத்துநின்றவளவனார்பெருமைதானு
நாளுமற்றவர்க்குநல்குநம்பர்தாமளக்கிலன்றி
நீளுமித்தொண்டினீர்மைநினைக்கிலாரளக்கவல்லார். (௫௬)

தேனாருந்தண்பூங்கொன்றைச்செஞ்சடையவர்பொற்றாளில்
ஆனாதகாதலன்பரெறிபத்தரடிகள்சூடி
வானாளுந்தேவர்போற்றுமன்றுளார்நீறுபோற்றும்
ஏனாதிநாதர்செய்த திருத்தொழி லியம்பலுற்றேன். (௫௭)

எறிபத்தநாயனார்புராண முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௲௫௭.

திருச்சிற்றம்பலம்.

திருக்கருவூர்ப் பரமசிவனிடத்தி லன்புள்ளவராய்த் தொழு து துதிப்பதுமன்றி, சிவனடியார்களுக் கேதாவது இடறுநேரிடு மானால் அவ்விடரை நீக்கும் அன்புள்ளவராயு மிருக்குங் காலத்தில், சிவகாமி யாண்டாரென்னும் ஒருதொண்டர் திருக்கருவூர்ப் பரம சிவத்துக்குத் திருமாலைகட்டிச் சாத்தும்படிசெய்வதற்காகப் புட்ப க்குடலை நிறைய மலரெடுத்துக்கொண்டு போம்போது மகாநவமி முன்னாள் காவிரியில் முழுகுவித்துக்கொண்டு வருகிற சோழராச னுடைய பட்டத்துயானை அந்தப்புட்பக்குடலையைத் துதிக்கையா ல் பறித்துக் கீழேசிந்திவிட்டவளவில், சிவகாமியாண்டார் மனம்வ ருந்திச் சுவாமியை நோக்கி முறையிடும்போது எறிபத்தநாயனார் அந்தமுறையைக்கேட்டுவந்து தம்முடையகையிலிருந்த பரசுஎன் னும்ஆயுதத்தினால்அந்தயானையின் துதிக்கையறவெட்டி மேலிருந்த பாகனையுங்குத்துக்கோற்காரரையும்வெட்டிக்கொன்றனர். அதைச் சோழராஜனறிந்துவந்துநோக்கி இவர் சிவனடியாராகையினால் பி ழைகண்டல்லது இவ்வாறு செய்யாரென் றுணர்ந்து எறிபத்தநா யனார் அருகில்வந்து இது என்னுடைய குற்றமாகையால் என்னைச் சேதிக்கவேண்டுமென்று வாளாயுதத்தை யுருவிக்கொடுக்க எறிபத் த நாயனார் அரசனுடைய அன்பினைக்கண்டு தம்மையே சேதித்துக்

கொள்ளும்படி அவ்வாளாயுதத்தைத்தம்முடைய கழுத்தில்வைத்த
ரியத்தொடங்குகையில் அஞ்சலியுடனிறங்கிக்கொண்டிருந்த அரச
னறிந்து அதிகவிரைவில் அவர்கையைப் பற்றிக்கொண்டபோது
பரமசிவனுடைய அனுக்கிரகத்தினால் நாமேயுங்கள் அன்பினை உல
கத்தாரறிந்துய்யும்பொருட் டிவ்வாறு விளைவித்தன மென்று அச
ரீரி உண்டாக யானையும்பாகர்களும் பிழைத்தெழுந்தார்கள். எறி
பத்தநாயனார் பின்னும்அன்புடன் தொண்டுசெய்து சிவகணங்க
ளுக்கு ளொருவராயினர். [இந்தநாயனார் மரபறியார்களி லொரு
வர் சிவலிங்கத்தான் முத்தியடைந்தவர்.]



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ஏனாதிநாதநாயனார்புராணம்



வேறு.

புண்டரிகம்பொன்வரைமேலேற்றிப்புவியளிக்குந்
தண்டரளவெண்கவிகைத்தார்வளவர்சோணாட்டில்
வண்டறைபூஞ்சோலைவயன்மருதத்தண்பணைசூழ்ந்
தெண்டிசையுமேறியசீர்மூதூரெயினனூர். (௧)

வேழக்கரும்பினொடுமென்கரும்புதண்வயலிற்
றாழக்கதிர்ச்சாலிதாமோங்குந்தன்மையதாய்
வாழக்குடிதழைத்துமன்னியவப்பொற்பதியில்
ஈழக்குலச்சான்றா ரேனாதிநாதனார். (௨)

தொன்மைத்திருநீற்றுத்தொண்டின்வழிபாட்டி
னன்மைக்கணின்றநலமென்றுங்குன்றாதார்
மன்னர்க்குவென்றிவடிவாட்படையயிற்றுந்
தன்மைத்தொழில்விஞ்சையிற்றலைமைசார்ந்துள்ளார். (௩)

வாளின்படையயிற்றிவந்தவளமெல்லா
நாளும்பெருவிருப்பானண்ணுங்கடப்பாட்டிற்
றாளுந்தடமுடியுங்காணாதார்தம்மையுந்தொண்
டாளும்பெருமானடித்தொண்டர்க்காக்குவார். (௪)

நள்ளார்களும்போற்று நன்மைத்துறையின்கண்
எள்ளாதசெய்கையியல்பினொழுகுநாட்
டள்ளாததங்கடொழிலுரிமைத்தாயத்தின்
உள்ளானதிசூரனென்பானுளனானான். (௫)

மற்றவனுங்கொற்றவடிவாட்படைத்தொழில்கள்
கற்றவர்கடன்னிற்கடந்துள்ளாரில்லையெனும்
பெற்றிமையான்மாநிலத்துமிக்கபெருமிதம்வந்
துற்றுலகிற்றன்னையேசாலமதித்துள்ளான். (௬)

தானாள்விருத்திகெடத்தங்கள்குலத்தாயத்தின்
ஆனசெய்தொழிலாமாசிரியத்தன்மைவள
மேனாளுந்தான்குறைந்துமற்றவர்க்கேமேம்படலால்
ஏனாதிநாதர்திறத்தேலா விகல்புரிந்தான். (௭)

கதிரோனெழமழுங்கிக்கால்சாயுங்காலை
மதிபோலழிந்துபொருமற்றவனுஞ்சுற்றப்
பதியோருடன்கூடப்பண்ணியமர்மேற்சென்
றெதிர்போர்விளைப்பதற்கேயெண்ணித்துணிந்தெழுந்தான். (௮)

தோள்கொண்டவல்லாண்மைச்சுற்றத்தொடுந்துணையாங்
கோள்கொண்டபோர்மள்ளர்கூட்டத்தொடுஞ்சென்று
வாள்கொண்டதாயம்வலியாரேகொள்வதென
மூள்கின்றசெற்றத்தான்முன்கடையினின்றழைத்தான். (௯)

வெங்கட்புலிகிடந்தவெம்முழையிற்சென்றழைக்கும்
பைங்கட்குறுநரியே போல்வான்படைகொண்டு
பொங்கிப்புறஞ்சூழ்ந்துபோர்குறித்துநேர்நின்றே
யங்கட்கடைநின்றழைத்தானொலிகேளா. (௰)

ஆர்கொல்பொரவழைத்தானென்றரியேற்றிற்கிளர்ந்து
சேர்வுபெறக்கச்சிற்செறிந்தவுடைமேல்வீக்கி
வார்கழலுங்கட்டிவடிவாட்பலகைகொடு
போர்முனையிலேனாதிநாதர்புறப்பட்டார். (௰௧)

புறப்பட்டபோதின்கட்போர்த்தொழில்கள்கற்கும்
விறற்பெருஞ்சீர்க்காளையர்கள்வேறிடத்துநின்றார்
மறப்படைவாட்சுற்றத்தார்கேட்டோடிவந்து
செறற்கரும்போர்வீரர்க்கிருமருங்குஞ்சேர்ந்தார்கள். (௰௨)

வந்தழைத்தமாற்றான்வயப்புலிப்போத்தனார்மு
னந்தமதுவாட்பயிற்றுநற்றாயங்கொள்ளுங்கால்
இந்தவெளிமேற்கைவகுத்திருவேம்பொருபடையுஞ்
சந்தித்தமர்விளைத்தாற்சாயாதார்கொள்வதென. (௰௩)

என்றுபகைத்தோனுரைப்பவேனாதிநாதரு
நன்றுனக்குவேண்டுமேனலைனுவனென்றுண்மகிழ்ந்து
சென்றவன்முன்சொன்னசெருக்களத்துப்போர்குறிப்பக்
கன்றியிருபடையுங்கைவகுத்துநேர்மலைவார். (௰௪)

வேறு.

மேகவொழுங்குகண்முன்கொடுமின்னினாதம்மிடையேகொடு
மாகமருங்கினுமண்ணினும்வல்லுருமேறெதிர்செல்வன
வாகநெடும்பலகைக்குலமாள்வினைவாளுடையாடவர்
…ாகமிடைந்தகளத்திருகைகளின்வந்துகலந்தனர். (௰௫)

…ால்கழல்கட்டியமள்ளர்கள்கைகளின்மெய்களடக்கிய
வாளொளிவட்டமுனைத்திடவந்திருகைகளின்முந்தினர்
…ர்வலொடுவேலெதிர்நீள்வனமேவியபாதலம்விட்டுயர்
…ாலமுறும்பணிவீரர்களுநிமிர்கின்றனவொத்தன. (௰௬)

வெங்கண்விறற்சிலைவீரர்கள்வேறிருகையினுநேர்பவர்
…ங்கள்சிலைக்குலமுந்தினதாவில்சரங்கணெருங்குவ
பொங்குசினத்தெரியிற்புகைபோகுகொடிக்கள்வளைத்தெதிர்
செங்கண்விழிக்கனல்சிந்தியசீறுபொறிச்செலவொத்தன. (௰௭)

…ாளொடுநீள்கைதுடித்தனமார்பொடுவேல்கள்குளித்தன
…தாளொடுவாளிநிலத்தனதோலொடுதோல்கடகைத்தன
…ாளொடுவார்கழலிற்றனதாரொடுசூழ்சிரமற்றன
…ாளொடுசீறிமலைப்பவர்நாடியபோர்செய்களத்தினில். (௰௮)

…ருதியினதிகள்பரந்தனகுறையுடலொழுகியலைந்தன
பொருபடையறுதுணிசிந்தினபுடைசொரிகுடருடல்பம்பின
…வருவரவெருவவைநெருங்கினவிசியறுதுடிகள்புரண்டன
…ருபடைதனினுமெதிர்ந்தவரெதிரெதிரமர்செய்பறந்தலை. (௰௯)

…ளிடைமுடுகிநடந்தெதிர்நேரிருவரிலொருவன்றொடர்
…ளிருதொடையறமுன்பெயர்சாரிகைமுறைமைதடிந்தனன்
…ளொடுவிழுமுடல்வென்றவன்மார்பிடையறமுனெறிந்திட
…ளியினவனுமறிந்தனனாயினர்பலருளரெங்கணும். (௨௰)

கூர்முனையயில்கொடுமுட்டினர்கூடினருருவியதட்டுட
னேருரமுருவவுறைப்புடனேர்படவெதிரொதிர்குத்தினர்
ஆருயிர்கழியவுநிற்பவராண்மையிலிருவருமொத்தமை
போரடுபடைகொடளப்பவர்போல்பவரளவிலர்பட்டனர். (உக)

பொற்சிலைவளையவெதிர்ந்தவர்புற்றரவனையசரம்பட
விற்படைதுணியவுநின்றிலர்வெற்றிகொள்சுரிகைவழங்கினர்
முற்றியபெருவளனின்றியுமுற்படுகொடைநிலைநின்றிட
உற்றனவுதவியபண்பினரொத்தனருளர்சிலகண்டகர். (உஉ)

அடன்முனைமறவர்மடிந்தவரலர்முகமுயிருளவென்றுறு
படர்சிறைசுலவுகருங்கொடிபடர்வனசுழல்வனதுன்றலிற்
விடுசுடர்விழிகளிரும்புசெய்வினைஞர்தமுலையின்முகம்பொதி
புடைமிடைகரியிடைதங்கியபுகைவிடுதழலைநிகர்ந்தன. (உ௩)

திண்படைவயவர்பிணம்படுசெங்களமதனிடைமுன்சிலர்
புண்படுவழிசொரியுங்குடர்பொங்கியகழுகுபருந்தொடு
கொண்டெழுபொழுதினுமுன்செயல்குன்றுதலிலர்தலைநின்றனர்
விண்படர்கொடிவிடுபண்பயில்விஞ்சையர்குமரரையென்றனர். ()

வேறு.

இம்முனையவெம்போரிலிருபடையின்வாள்வீரர்
வெம்முனையின்வீடியபின்வீடாதுமிக்கொழிந்த
தம்முடையபல்படைஞர்பின்னாகத்தாமுன்பு
தெம்முனையிலேனாதிநாதர்செயிர்த்தெழுந்தார். (உரு)

வெஞ்சினவாடீபுமிழவீரக்கழல்கலிப்ப
நஞ்சணிகண்டர்க்கன்பர்தாமெதிர்ந்தஞாட்பின்கண்ண
எஞ்சியெதிர்நின்றவிகன்முனையில்வேலுழவர்
தஞ்சிரமுந்தோளுரமுந்தாளுரமுந்தாந்துணித்தார். (உசு)

தலைப்பட்டாரெல்லாருந்தனிவீரர்வாளிற்
கொலைப்பட்டார்முட்டாதார்கொல்களத்தைவிட்டு
நிலைப்பட்டமெய்யுணர்வுநேர்பட்டபோதில்
அலைப்பட்டவார்வமுதற்குற்றம்போலாயினார். (உஎ)

இந்நிலையவெங்களத்திலேற்றழிந்தமானத்தாற்
றன்னுடையபல்படைஞர்மீண்டார்தமைக்கொண்டு
மின்னொளிவாள்வீசிவிறல்வீரர்வெம்புலியே
மன்னவர்தமுன்சென்றதிசூரனேரடர்ந்தான். (உஅ)

மற்றவர்தஞ்செய்கைவடிவாளொளிகாணச்
சுற்றிவரும்வட்டணையிற்றோன்றுவகைகலந்து
பற்றியடர்க்கும்பொழுதிற்றானும்படைபிழைத்துப்
பொற்றடந்தோள்வீரர்க்குடைந்துபுறகிட்டான். (உகூ)

போனவதிசூரன்போரிலவர்க்கழிந்த
மானமிகமீதூரமண்படுவான்கண்படான்
ஆனசெயலோரிரவுஞ்சிந்தித்தலமருவான்
ஈனமிகுவஞ்சனையால்வெல்வனெனவெண்ணினான். (௩௰)

சேட்டாருங்கங்குல்புலர்காலைத்தீயோனு
நாட்டாரைக்கொல்லாதேநாமிருவேம்வேறிடத்து
வாட்டாயங்கொள்போர்மலைக்கவருகவெனத்
தோட்டார்பூந்தாரார்க்குச்சொல்லிச்செலவிட்டான். (௩க)

இவ்வாறுகேட்டலுமேயேனாதிநாதனார்
அவ்வாறுசெய்தலழகிதெனவமைந்து
கைவ்வாளமர்விளைக்கத்தான்கருதுமக்களத்தில்
வெவ்வாளுரவோன்வருகவெனமேற்கொள்வார். (௩உ)

சுற்றத்தார்யாருமறியாவகைசுடர்வாள்
பொற்பலகையுந்தாமேகொண்டுபுறப்போந்து
மற்றவன்முன்சொல்லிவரக்குறித்தவக்களத்தே
பற்றலனைமுன்வரவுபார்த்துத்தனிநின்றார். (௩௩)

தீங்குகுறித்தழைத்ததீயோன்றிருநீறு
தாங்கியநெற்றியினார்தங்களையேயெவ்விடத்தும்
ஆங்கவருந்தீங்கிழையாரென்பதறிந்தானாய்ப்
பாங்கிற்றிருநீறுபண்டுபயிலாதான். (௩ச)

வெண்ணீறுநெற்றிவிரவப்புறம்பூசி
யுண்ணெஞ்சில்வஞ்சக்கறுப்புமுடன்கொண்டு
வண்ணச்சுடர்வாண்மணிப்பலகைகைக்கொண்டு
புண்ணியப்போர்வீரர்க்குச்சொன்னவிடம்புகுந்தான். (௩ரு)

வென்றிமடங்கல்விடக்குவரமுன்பார்த்து
நின்றாற்போனின்றநிலைகண்டுதன்னெற்றி
சென்றுகிடைப்பளவுந்திண்பலகையான்மறைத்து
முன்றனிவீரர்க்கெதிரேமூண்டான்மறம்பூண்டான். (௩சா)

அடல்விடையேறென்னவடர்த்தவனைக்கொல்லும்
இடைதெரிந்துதாள்பெயர்க்குமேனாதிநாதர்
புடைபெயர்ந்தமாற்றான்பலகைபுறம்போக்கக்
கடையவன்றனெற்றியின்மேல்வெண்ணீறுதாங்கண்டார். (௩௭)

கண்டபொழுதேகெட்டேன்முன்பிவர்மேற்காணாத
வெண்டிருநீற்றின்பொலிவுமேற்கண்டேன்வேறினியென்
அண்டர்பிரான்சீரடியாராயினாரென்றுமனங்
கொண்டிவர்தங்கொள்கைக்குறிவழிநிற்பேனென்று. (௩௮)

கைவாளுடன்பலகைநீக்கக்கருதியது
செய்யார்நிராயுதரைக்கொன்றாரெனுந்தீமை
யெய்தாமைவேண்டுமிவர்க்கென்றிரும்பலகை
நெய்வாளுடனடர்த்துநேர்வார்போனேர்நின்றார். (௩௯)

அந்நின்றதொண்டர்திருவுள்ளமாரறிவார்
முன்னின்றபாதகனுந்தன்கருத்தேமுற்றுவித்தான்
இந்நின்றதன்மையறிவாரிவர்க்கருள
மின்னின்றசெஞ்சடையார்தாமேவெளிநின்றார். (௪௰)

மற்றினிநாம்போற்றுவதென்வானோர்பிரானருளைப்
பற்றலர்தங்கைவாளாற்பாசமறுத்தருளி
யுற்றவரையென்றுமுடன்பிரியாவன்பருளிப்
பொற்றொடியாள்பாகனார்பொன்னம்பலமணைந்தார். (௪௧)

தம்பெருமான்சாத்துந்திருநீற்றுச்சார்புடைய
எம்பெருமானேனாதிநாதர்கழலிறைஞ்சி
யும்பர்பிரான்காளத்தியுத்தமர்க்குக்கண்ணப்ப
நம்பெருமான்செய்தபணிநாந்தெரிந்தவாறுரைப்பாம். (௪௨)

ஏனாதிநாதநாயனார்புராண முற்றிற்று.

ஆக திருவிருத்தம். ௩௱௫௰௧.

---

திருச்சிற்றம்பலம்.

சோழவளநாட்டிலுள்ள எயினனூரி லவதரித்த ஈழக்கு லச் சான்றாராகிய ஏனாதிநாத நாயனார் பரமசிவத்தினிடத்தில் மி குந்த அன்புபூண்டு திருநீற்றினைத்தொழும் நேசமுள்ளவராய் அர சர்களுக்கு வாட்படைகற்பித்து அதனால் வரும்பொருளை யெல்

லாம் சிவனடியார்களுக் குபயோகப்படுத்தி வரும்நாளில், அதிசூ ரனென்பவனொருவன் அவ்வாட்படை கற்பிக்குந்தொழிலுள்ளவனு கித் தனக்கு மேம்பாடில்லாமையினால் நாயனாருக்கு மாறுகொ ண்டு, நாமிருவரும் போர்புரிந்து வென்றியடைந்தவர்களே இத் தொழிலுக் குரிமையுள்ளவர்களாவரென்றுகூறி ஒருதரம் போர்புரி ந்து தோற்று இனி வஞ்சகத்தால் வெல்லவேண்டுமென்றுகருதிம றுநாளுதயத்தில் நாமிருவரும் படைஞரின்றித் தனித் தின்னவிடத் திற் போர்புரிவோமென்று சொல்லிவிடுத்து நெற்றிநிறையவிபூதி பூசிக்கொண்டு புறப்பட்டான். அதற்குமுன்னமே நாயனார் அவன் குறித்தவிடத்திற்சென்று அவன்வருவதை நோக்கிக் கொண்டிருக் கும்போது வஞ்சகன் நெற்றியைத்தன்கைப் பலகையால் மறைத் துக்கொண்டுபோய்ச் சமீபித்து நாயனார் தன்னை வெட்ட வரும் போதுபலகையைப் புறம்வாங்கிவிட்டான். நாயனார் விபூதியைக் கண்டமாத்திரத்தி லிவர் சிவனடியா ராயினா ராதலால் இனி இவர் குறிப்பின்படியே நாம் நிற்கவேண்டுமென்று கருதிப் பரம சிவ த்தைத்தியானித்துக் கொண்டிருக்க வஞ்சகன் தன்னெண்ணத்தை நிறைவேற்றினான். நாயனார்க்குப்பரமசிவம் தம்மைவிட்டுநீங்காத முத்திநிலைதந்தருளினார். [இந்த நாயனாரும் இல்லறத்தி லிருந்து சிவனடியார்களுக்குத் தொண்டுசெய்து முத்தி பெற்றவர்.] அவ் வஞ்சகன்நரகத்திற் சேர்ந்தவர்களி லொருவனாகக் கொள்ள வேண்டு ம்.—[இவ்வாறு முத்தியருளியதற்கு மேற்கூறியதே காரணமா கக்கொள்க.]





௨

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# கண்ணப்பநாயனார்புராணம்*



வேறு.

மேவலர்புரங்கள்செற்ற விடையவர்வேதவாய்மைக்
காவலர்திருக்காளத்திக்கண்ணப்பர்திருநாடென்ப
நாவலர்புகழ்ந்துபோற்றுநல்வளம்பெருகிநின்ற
பூவலர்வாவிச்சோலைசூழ்ந்தபொத்தப்பிநாடு. (௧)

இத்திருநாடுதன்னிலிவர்திருப்பதியாதென்னி
னித்திலவருவிச்சாரனீள்வரைசூழ்ந்தபாங்கர்
மத்தவெங்களிற்றுக்கோட்டுவன்றொடர்வேலிகோலி
ஒத்தபேரரணஞ்சூழ்ந்தமுதுபதியுடுப்பூராகும் (௨)

குன்றவரதனில்வாழ்வார்கொடுஞ்செவிஞமலியார்த்த
வன்றிறல்விளவின்கோட்டுவார்வலைமருங்குதூங்கப்
பன்றியும்புலியுமெண்குங்கடமையுமானின்பார்வை
அன்றியும்பாறைமுன்றிலவைவணமுணங்குமெங்கும். (௩)

வன்புலிக்குருளையோடும்வயக்கரிக்கன்றினோடும்
புன்றலைச்சிறுமகார்கள்புரிந்துடனாடலன்றி
அன்புறுகாதல்கூரவணைபுமான்பிணைகளோடும்
இன்புறமருவியாடு மெயிற்றியர்மகளிரெங்கும். (௪)

வெல்படைத்தறுகண்வெஞ்சொல்வேட்டுவர்கூட்டந்தோறுங்
கொல்லெறிகுத்தென்றார்த்துக்குழுமியவோசையன்றிச்
சில்லரித்துடியுங்கொம்புஞ்சிறுகணுந்துளியுங்கூடிக்
கல்லெனுமொலியின்மேலுங்கறங்கிசையருவியெங்கும். (௫)

ஆறலைத்துண்ணும்வேடரயற்புலங்கவர்ந்துகொண்ட
வேறுபல்லுருவின்மிக்கவிரவுமாநிரைகளன்றி
ஏறுடைவானந்தன்னி லிடிக்குரலெழிலியோடு
மாறுகொண்முழக்கங்காட்டு மதக்கைமாநிரைகளெங்கும். (௬)

மைச்செறிந்தனையமேனிவன்றொழின்மறவர்தம்பால்
அச்சமுமருளுமென்றுமடைவிலாருடைவன்றோலார்
பொச்சையினறவுமூனின்புழுக்கலுமுணவுகொள்ளு
நச்சழற்பகழிவேடர்க் கதிபதிநாகனென்பான். (௭)

பெற்றியாற்றவமுன்செய்தானாயினும்பிறப்பின்சார்பாற்
குற்றமேகுணமாவாழ்வான்கொடுமையேதலைநின்றுள்ளான்
விற்றொழில்விறலின்மிக்கான்வெஞ்சினமடங்கல்போல்வான்
மற்றவன்குறிச்சிவாழ்க்கைமனைவியுந்தத்தையென்பாள். (௮)

அரும்பெறன்மறவர்தாயத்தான்றதொல்குடியில்வந்தாள்
இரும்புலியெயிற்றுத்தாலி யிடையிடைமனவுகோத்துப்
பெரும்புறமலையப்பூண்டாள்பீலியுங்குழையுந்தட்டச்
சுரும்புறுபடலைமுச்சிச்சூரரிப்பிணவுபோல்வாள். (௯)

பொருவருஞ்சிறப்பின்மிக்காரிவர்க்கினிப்புதல்வர்ப்பேறே
அரியதென்றெவருங்கூறவதற்படுகாதலாலே
முருகலரலங்கற்செவ்வேன்முருகவேண்முன்றிற்சென்று
பரவுதல்செய்துநாளும்பராய்க்கடனெறியினிற்பார். (௰)

வாரணச்சேவலோடும்வரிமயிற்குலங்கள்விட்டுத்
தோரணமணிகடூக்கிச்சுரும்பணிகதம்பநாற்றிப்
போரணிநெடுவேலாற்குப்புகழ்புரிகுரவைதூங்கப்
பேரணங்காடல்செய்துபெருவிழாவெடுத்தபின்றை. (௰௧)

பயில்வடுப்பொலிந்தயாக்கைவேடர்தம்பதியாநாகற்
கெயிலுடைப்புரங்கள்செற்றவெந்தையார்மைந்தரான
மயிலுடைக்கொற்றவூர்திவரையுரங்கிழித்ததிண்மை
அயிலுடைத்தடக்கைவென்றியண்ணலாரருளினாலே. (௰௨)

கானவர்குலம்விளங்கத்தத்தைபாற்கருப்பநீட
ஊனமில்பலிகள்போக்கியுறுகடன்வெறியாட்டோடும்
ஆனவத்திங்கள்செல்லவளவில்செய்தவத்தினாலே
பான்மதியுவரியீன்றாலெனமகப்பயந்தபோது. (௰௩)

கரிப்பருமருப்பின்முத்துங்கழைவிளைசெழுநீர்முத்தும்
பொருப்பினின்மணியும்வேடர்பொழிதருமழையேயன்றி
வரிச்சுரும்பலையவானின்மலர்மழைபொழிந்ததெங்கும்
அரிக்குறுந்துடியேயன்றியமரர்துந்துபியுமார்த்த. (௰௪)

அருவரைக்குறவர்தங்களகன்குடிச்சீறூராயம்
பெருவிழாவெடுத்துமிக்கபெருங்களிகூருங்காலைக்
கருவரைகாளமேகமேந்தியதென்னத்தாதை
பொருவரைத்தோள்களாரப்புதல்வனையெடுத்துக்கொண்டான். ( )

கருங்கதிர்விரிக்குமேனிக்காமருகுழவிதானும்
இரும்புலிப்பறழினோங்கியிறவுளரளவேயன்றி
யரும்பெறலுலகமெல்லாமளப்பரும்பெருமைகாட்டித்
திருங்குறிபலவுஞ்சாற்றுந்தன்மையிற்பொலிந்துதோன்ற. (௰௬)

அண்ணலைக்கையிலேந்தற்கருணடையாலூரிடைப்பேருந்
திண்ணனென்றியம்புமென்னத்திண்சிலைவேடரார்த்தார்
புண்ணியப்பொருளாயுள்ளபொருவில்சீருருவினானைக்
கண்ணினுக்கணியாத்தங்கள்கலன்பலவணிந்தாரன்றே. (௰௭)

வளையுறைகடவுட்காப்புமறக்குடிமரபிற்றங்கள்
புனையிறென்முறைமைக்கேற்கப்பொருந்துவபோற்றிச்செய்து
விளையிளந்தளிருஞ்சூட்டிவேம்பிழைத்திடையிற்கோத்த
அளைமணிக்கவடிகட்டியழகுறவளர்க்குநாளில். (௰௮)

வருமுறைப்பருவந்தோறும்வளமிகுசிறப்பிற்றெய்வப்
பெருமடைகொடுத்துத்தொக்கபெருவிறல்வேடர்க்கெல்லாந்
திருமலிதுழனிபொங்கச்செழுங்களிமகிழ்ச்சிசெய்தே
யருமையிற்புதல்வற்பெற்றவார்வமுந்தோன்றவுய்த்தார். (௰௯)

ஆண்டெதிரணைந்துசெல்லவிடுமடித்தளர்வுநீங்கிப்
பூண்டிரப்ச்சிறுபுன்குஞ்சிப்புலியுகிர்ச்சுட்டிசாத்தி
மூண்டெழுசினத்துச்செங்கண்முளவுமுள்ளரிந்துகோத்த
நாண்டருமெயிற்றுத்தாலிநலங்கிளர்மார்பிற்றூங்க. (௨௰)

பாசொளிமணியோடார்த்தபன்மணிச்சதங்கையேங்கக்
காசொடுதொடுத்தகாப்புக்கலன்புனைபணைஞாண்சேர்த்தித்
தேசுடைமருப்பிற்றண்டைசெறிமணிக்குதம்பைமின்ன
மாசறுகோலங்காட்டிமறுகிடையாடுநாளில். (௨௧)

தண்மலரலங்கற்றாதைதாய்மனங்களிப்பவந்து
புண்ணியக்கங்கைநீரிற்புனிதமாந்திருவாய்நீரில்
உண்ணனைந்தமுதமூறியொழுகியமழலைத்தீஞ்சொல்
வண்ணமென்பவளச்செவ்வாய்குதட்டியேவளராநின்றார். (௨௨)

பொருபுலிப்பார்வைப்பேழ்வாய்முழையெனப்பொற்கைநீட்டப்
பரிவுடைத்தந்தைகண்டுபைந்தழைகைக்கொண்டோச்ச
இருசுடர்க்குறுகண்டீர்க்குமெய்யில்வளர்கண்ணீர்மல்கி
வருதுளிமுத்தமத்தாய்வாய்முத்தங்கொள்ளமாற்றி. (௨௩)

துடிக்குறடுருட்டிபோடித்தொடக்குநாய்ப்பாசஞ்சுற்றிப்
பிடித்தறுத்தெகினப்பிள்ளைப்பேதையரிழைத்தவண்டல்
அடிச்சிறுதளிராற்சிந்தியருகுறுசிறுவரோடுங்
குடிச்சிறுதரம்பையெங்குங்குறுநடைக்குறும்புசெய்து. (௨௪)

அனையனபலவுஞ்செய்தேயைந்தின்மேலானவாண்டின்
வினைதருவடிவார்கண்ணிமறச்சிறுமைந்தரோடுஞ்
சினைமலர்க்காவுளாடிச்செறிகுடிக்குறிச்சிசூழ்ந்த
புனமருப்புழலைவேலிப்புறச்சிறுகானிற்போகி. (௨௫)

கடிமுயற்பறழுமேனுங்கானவேனத்தின்குட்டி
கொடுவரிக்குருளைசெந்நாய்கொடுஞ்செவிச்சாபமான
முடுகியவிசையிலோடித்தொடர்ந்துமுன்பற்றிமுற்றத்
திடுமரத்திரளிற்கட்டிவளர்ப்பனவெண்ணிலாத. (௨௬)

அலர்பகல்கழிந்தவந்தியையவிப்புகையுமாட்டிக்
குலமுதுகுறத்தியூட்டிக்கொண்டுகண்டுயிற்றிக்கங்குல்
புலரானுணவுநல்கிப்புரிவிளையாட்டின்விட்டுச்
சிலமுறையாண்டுசெல்லச்சிலைபயில்பருவஞ்சேர்ந்தார். (௨௭)

தந்தையுமைந்தனாரைநோக்கித்தன்றடித்ததோளாற்
சிந்தையுண்மகிழ்ச்சிப்புல்லிச்சிலைத்தொழில்பயிற்றவேண்டி
முந்தையத்துறையின்மிக்கமுதியரையழைத்துக்கூட்டி
வந்தநாட்குறித்ததெல்லாமறவர்க்குச்சொல்லிவிட்டான் (௨௮)

வேடர்தங்கோமானாகன்வென்றிவேளருளாற்பெற்ற
சேடரின்மிக்கசெய்கைத்திண்ணனைவிற்பிடிக்கின்றானென்
றாடியற்றுடியுஞ்சாற்றியறைந்தபேரோசைகேட்டு
மாடுயர்மலைகளாளுமறக்குலத்தலைவரெல்லாம். (௨௯)

மலைபடுமணியும்பொன்னுந்தரளமும்வரியின்றோலுங்
கொலைபுரிகளிற்றின்கோடும்பீலியின்குவையுந்தேனுந்
தொலைவில்பன்னறவுமூனும்பலங்களுங்கிழங்குந்துன்றச்
சிலையுடைவேடர்கொண்டுதிசைதொறுநெருங்கவந்தார். (௩௰)

மல்கியவளங்களெல்லாநிறைந்திடமாறில்சீறூர்
எல்லையிலடங்காவண்ணமீண்டினர்கொணர்ந்தாரெங்கும்
பல்பெருங்கிளைஞர்போற்றப்பராய்க்கடன்பலவுநேர்ந்து
வில்விழாவெடுக்கவென்றுவிளம்பினன்வேடர்கோமான். (௩௧)

பான்மையிற்சமைத்துக்கொண்டுபடைக்கலம்வினைஞரேந்தத்
தேனலர்கொன்றையார்தந்திருச்சிலைச்செம்பொன்மேரு
வானதுகடலினஞ்சமாக்கிடவவர்க்கேபின்னுங்
கானவூனமுதமாக்குஞ்சிலையினைக்காப்புச்சேர்த்தார். (௩௨)

சிலையினைக்காப்புக்கட்டுத்திண்புலிநரம்பிற்செய்த
நலமிகுகாப்புநன்னாட்கோர்பயந்தநாகக்
குலம்விளங்கரியகுன்றின்கோலமுன்கையிற்சேர்த்தி
மலையுறைமாக்களெல்லாம்வாழ்த்தெடுத்தியம்பினார்கள். (௩௩)

ஐவனவடிசில்வெவ்வேறமைந்தனபுற்பாற்சொன்றி
மொய்வரைத்தினைமென்சோறுமூங்கில்வன்பதங்கண்மற்றுங்
கைவினையெயினராக்கிக்கலந்தவூன்கிழங்குங்கூடச்
செய்வரையுயர்ப்பவெங்குங்கலந்தனர்சினவில்வேடர். (௯௪)

செந்தினையிடியுந்தேனுமருந்துவார்தேனிற்றோய்த்து
வெந்தவூனயில்வார்வேரிவிளங்கனிக்கவளங்கொள்வார்
நந்தியவீயலுண்டிநகையொடுமிசைவார்வெவ்வே
றந்தமிலுணவின்மேலோராயினாரளவிலார்கள். (௯௫)

அயல்வரைப்புறத்தின்வந்தாரருங்குடியிருப்பினுள்ளார்
இயல்வகையுணவிலார்ந்தவெயிற்றியரெயினரெல்லாம்
உயர்கதிருச்சிநீங்கவொழிவில்பன்னறவுமாந்தி
மயலுறுகளிப்பினீடிவரிசிலைவிழவுகொள்வார். (௯௬)

பாசிலைப்படலைசுற்றிப்பன்மலர்த்தொடையல்சூடிக்
காசுடைவடத்தோல்கட்டிக்கவடிமெய்க்கலன்கள்பூண்டார்
மாசில்சீர்வெட்சிமுன்னாவருந்துறைக்கண்ணிசூடி
ஆசிலாசிரியனேந்துமடற்சிலைமருங்குசூழ்ந்தார். (௯௭)

தொண்டகமுரசுங்கொம்புந்துடிகளுந்துளைகொள்வேயும்
எண்டிசைநிறைந்துவிம்மவெழுந்தபேரொலியினோடு
திண்டிறன்மறவரார்ப்புச்சேண்விசும்பிடித்துச்செல்லக்
கொண்டசீர்விழவுபொங்கக்குறிச்சியைவலங்கொண்டார்கள். (௯௮)

குன்றவர்வரிகொண்டாடக்கொடிச்சியர்துணங்கையாடத்
துன்றியமகிழ்ச்சியோடுஞ்சூரரமகளிராட
வென்றிவில்விழவினோடும்விருப்புடையேழாநாளாம்
அன்றிருடடங்குசெய்கையழகுறவமைத்தபின்னர். (௯௯)

வெங்கதிர்விசும்பினுச்சிமேவியபொழுதிலெங்கு
மங்கலவாழ்த்துமல்கமருங்குபல்லியங்களார்ப்பத்
தங்கடொன்மரபின்விஞ்சைத்தனுத்தொழில்வலவர்தப்பாற்
பொங்கொளிக்கரும்போரேற்றைப் பொருசிலைபிடிப் பித்தார்கள். ( )

பொற்றடவரையின்பாங்கர்ப்புரிவுறுகடன்முன்செய்த
விற்றொழிற்களத்தினண்ணிவிதிமுறைவணங்கிமேவும்
அற்றைநாட்டொடங்கிநாளுமடற்சிலையாண்மைமுற்றக்
கற்றனனென்னையாருங்காணவர்க்கரியசிங்கம் (௱)

வண்ணவெஞ்சிலையுமற்றப்படைகளுமலரக்கற்றுக்
கண்ணகன்சாயல்பொங்கக்கலைவளர்திங்களேபோல்
எண்ணிரண்டாண்டின்செவ்வியெய்தினொல்லையில்லாப்
புண்ணியந்தோன்றிமேன்மேல்வளர்வதன்பொலிவுபோல்வார். (௬௨)

வேறு.

இவ்வண்ணந்திண்ணனார் நிரம்புநாளிலிருங்குறவர்பெருங்குறிச்சிக்கி
றைவனாய, மைவ்வண்ணவரைநெடுந்தோ ணாகன்றானுமலையெங்கும்
வனமெங்கும்வரம்பில்காலங், கைவ்வண்ணச்சிலைவேட்டையாடித்தெ
வ்வர்கணநிரைகள்பலகவர்ந்துகான்காத்து, மெய்வ்வண்ணந்தளர்
மூப்பின் பருவமெய்திவில்லுழவின் பெருமுயற்சி மெலிவனானான்.

அங்கண்மலைத்தடஞ்சாரற்புனங்களெங் குமடலேனம்புலிகரடிகட
மையாமா, வெங்கண்மரைகலையொடுமான்முதலா யுள்ளமிருகங்கண்
மிகநெருங்கிமீ தூர்காலைத், திங்கண்முறைவேட்டைவினைதாழ்த்ததெ
ன்றுசிலைவேடர்தாமெல்லாந்திரண்டுசென்று, தங்கள்குலமுதற்றலை
வனாகியுள்ள தண்டெரியனாகன்பாற்சார்ந்துசொன்னார். (௬௪)

சொன்னவுரைகேட்டலுமேநாகன்றானுஞ்சூழ்ந்துவருதன்மூப்பின்
றொடர்வுநோக்கி, முன்னவர்க்குரைசெய்வான்மூப்பினாலேமுன்
போலவேட்டையினின்முயலகில்லேன், என்மகனையுங்களுக்குநாதனா
கவெல்லீருங்கைக்கொண்மினென்றபோதின், அன்னவருமிரங்கிப்
பின்மகிழ்ந்துதங்கோனடிவணங்கியிம்மாற்றமறைகின்றார்கள். (௬௫)

இத்தனைகாலமுநினதுசிலைக்கீழ்த்தங்கி யினிதுண்டு தீங்கின்றியிருந்
தோமின்னும், அத்தவுனதருள்வழியேநிற்பதல்லாலடுத்தநெறிவேறு
ளதோவதுவேயன்றி, மெய்த்தவிற்றிண்ணனையுன்மரபிற்சாலமே
ம்படவேபெற்றளித்தாய் விளங்குமேன்மை, வைத்தசிலைமைந்தனை
யீண்டழைத்துநங்களவரையாட்சியருளென்றார்மகிழ்ந்துவேடர். ()

சிலைமறவருரைசெய்யநாகன்றானுந் திண்ணனைமுன் கொண்டுவரச்
செப்பிவிட்டு, மலைமருவுநெடுங்காணிற் கன்னிவேட்டை மகன்போ
கக்காடுபலிமகிழவூட்டத், தலைமரபின்வழிவந்ததேவராட்டிதனையழை
மினெனவங்குச்சார்ந்தோர்சென்று, நிலைமையவ டனக்குரைப்பந
ரைமூதாட்டி நெடிதுவந்துவிருப்பினொடுங்கடிதுவந்தாள் (௬௭)

கானில்வரித்தளிர்துதைந்தகண்ணி சூடிக்கலைமருப்பினரிந்தகுழைகா
திற்பெய்து, மானின்வயிற்றரி தாரத்திலகமிட்டு மயிற்கழுத்துமன
வுமணிவடமும்பூண்டு, தானிழிந்துதிரங்கிமுலைசரிந்துதாழத்தழை

ட்பீலிமரவுரிமேற்சாரவெய்திப், பூநெருங்கு தோளைமலி சேணுடநீ
ல்கிப் போர்வேடர்கோமானைப்போற்றிநின்றாள். (௪௮)

நின்றமுதுகுறக்கோலப்படிவத்தாளை நேர்நோக்கியன்னைநீ நிரப்பு
நீங்கி, நன்றினிதினிருந்தனையோவென்றுகூறுநாகனெதிர் நலம்பெ
ருகவாழ்த்திநல்ல, மென்றசையுமீயலொடுநறவும்வெற்பில் விளைவ
ளனும்பிறவளனும்வேண்டிற்றெல்லாம், அன்றுநீவைத்தபடிபெற்று
வாழ்வேனழைத்தபணியென்னென்றாளணங்குசார்ந்தாள், (௪௯)

கோட்டமிலென்குலமைந்தன் திண்ணனெங்கள் குலத்தலைமையான்
கொடுப்பக்கொண்டுபூண்டு, பூட்டுறுவெஞ் சிலைவேடர் தம்மைக்கா
க்கும் பொருப்புரிமை புகுகின்றானவனுக்கென்றும், வேட்டைவி
னையெனக்கு மேலாகவாய்த்து வேறுபுலங்கவர்வென்றி மேவுமாறு,
காட்டிலுறைதெய்வங்கள்விரும்பியுண்ணக் காடுபலி யூட்டிடென்றான்
கவலையில்லான். (௫௰)

மற்றவன்றன்மொழிகேட்டவளைச்சூராட்டி மனமகிழ்ந்திங்கன்போ
டுவருகின்றேனாக், கெற்றைப்பினுங் குறிகண்மிக நலவான விதனா
லே யுன்மைந்தன் றிண்ணனானே, வெற்றிவரிச் சிலையாளினெளவி
லன்றி மேம்படுகின்றானென்றுவிரும்பிவாழ்த்திக், கொற்றவனைத்தெ
ய்வங்கண்மகிழவூட்ட வேண்டுவனகுறைவின்றிக்கொண்டுபோனாள்(

தெய்வநிகழ் குறமுதியாள் சென்றபின்பு திண்ணனார் சிலைத்தாதை
யழைப்பச் சீர்கொண், மைவிரவு நறுங்குஞ்சி வாசக்கண்ணி மணி
நீலமலையொன்றுவந்ததென்னக், கைவிரவுசிலைவேடர் போற்றவந்து
காதல்புரிதாதைகழல் வணங்கும்போதிற், செவ்வரைபோற் புயமிர
ண்டுஞ்செறியப்புல்லிச் செழும்புலித்தோ லிருக்கையின்முன் சேர
வைத்தான். (௫௨)

முன்னிருந்த மைந்தன்முக நோக்கிநாகன் மூப்பெனைவந்தடைதலி
னான் முன்புபோல, என்னுடைய முயற்சியினால் வேட்டையாட
லினியெனக்குக்கருத்தில்லையெனக்குமேலாய், மன்னுசிலைமலையர்கு
லக்காவல்பூண்டு மாறெறிந்து மாவேட்டையாடியென்றும், உன்னு
டையமரபுரிமைதாங்குவாயென்றுடைதோலுஞ்சுரிகையுங்கைக்கொ
டுத்தானன்றே. (௫௩)

தந்தைநிலையுட்கொண்டு தளர்வுகொண்டு தங்கள்குலத்தலைமைக்கு
ச்சார்வுதோன்ற, வந்தகுறை பாடதனை நிரப்புமாறு மனங்கொண்
டகுறிப்பினான் மறாமைகொண்டு, முந்தையவன்கழல்வணங்கிமுறை
மைதந்த முதற்சுரிகையுடைதோலும் வாங்கிக்கொண்டு, சிந்தையது

ஞ்கொள நின்ற திண்ணனார்க்குத் திருத்தாதை முகமலர்ந்து செப்பு கின்றான். (௫௪)

நம்முடையகுலமறவர்சுற்றத்தாரை நான்கொண்டு பரித்ததன்மேலை யுமேசெய்து, தெம்முனையிலபற்புலங்கள் கவர்ந்துகொண்ட திண்சி லையின்வளமொழியாச்சிறப்பின்வாழ்வாய், வெம்முனையில்வேட்டை களுமுனக்குவாய்க்கும் விரைந்துநீதாழாதேவேட்டையாட, இம்முர ண்வெஞ்சிலைவேடர்தங்களோடு மெழுகவெனவிடைகொடுத்தானிய ல்பினின்றான். (௫௫)

செங்கண்வயச்சோளரியேறன்னதிண்மைத் திண்ணனார் செய்தவத்தி ன்பெருமைபெற்ற,வெங்கண்விறற்றாதைகழல்வணங்கிநின்றவிடை கொண்டுபுறம்போந்துவேடரோடு,மங்கலநீர்ச் சுனைபடிந்துபனையி ல்வைகி வைகிருளின்புலர்காலைவரிவிற்சாலைப், பொங்குசிலையடல் வேட்டைக் கோலங்கொள்ளப்புனைதொழிற்கைவினைஞரொடும்பொ லிந்துபுக்கார். (௫௬)

வேறு.

நெறிகொண்டகுஞ்சிச்சுருடுஞ்சிநிமிர்ந்துபொங்க
முறிகொண்டகண்ணிக்கிடைமொய்யொளிப்பீலிசேர்த்தி
வெறிகொண்டமுல்லைப்பிணைமீதுகுறிஞ்சிவெட்சிச்
செறிகொண்டவண்டின்குலஞ்சேர்கொளப்பின்புசெய்து. (௫எ)

முன்னெற்றியின்மீதுமுருந்திடைவைத்தகுன்றி
தன்னிற்புரிகொண்டமயிர்க்கயிறாரச்சாத்தி
மின்னிற்றிகழ்சங்கவிளங்குவெண்டோடுகாதின்
மன்னிப்புடைநின்றனமாமதிபோல்வைக. (௫அ)

கண்டத்திடைவெண்கவடிக்கதிர்மாலைசேரக்
கொண்டக்கொடும்பன்மணிக்கோத்திடையேனக்கோடு
துண்டப்பிறைபோல்வனதூங்கிடவெங்கைவன்றோற்
றண்டைச்செயல்பொங்கியசன்னவீரந்தயங்க. (௫௯)

மார்பிற்சிறுகந்தமணித்திரண்மாலைதாழத்
தாரிற்பொலிதோள்வலயங்கடழைத்துமின்னச்
சேர்விற்பொலிகங்கணமீதுதிகழ்ந்தமுன்கை
கார்விற்செறிநாணெறிகைச்செறிகட்டிகட்டி. (௬௰)

அரையிற்சரணத்துரியாடையின்மீதுபௌவத்
திரையிற்படிவெள்ளலகார்த்துவிளிம்புசேர்த்தி
நிரையிற்பொலிநீளுடைத்தோல்சுரிகைப்புறஞ்சூழ்
விரையிற்றுவர்வார்விசிபோக்கியமைத்துவீக்கி. (௬௧)

வீரக்கழல்காலின்விளங்கவணிந்துபாதஞ்
சேரத்தொடுநீடுசெருப்புவிருப்புவாய்ப்பப்
பாரப்பெருவில்வலங்கொண்டுபணிந்துதிண்ணன்
சாரத்திருத்தாண்மடுத்தேற்றியந்துதாங்கி. (௬௨)

அங்கப்பொழுதிற்புவனத்திடர்வாங்கவோங்கித்
துங்கப்பெருமாமழைபோன்றுதுண்ணென்றொலிப்ப
வெங்கட்சினநீடுவிலங்குவிலங்கிநீங்கச்
செங்கைத்தலத்தாற்றடவிச்சிறுநாணெறிந்தார். (௬௩)

பல்வேறுவாளிபுதைபார்த்துடன்போதவேவி,
வில்வேடராயத்துடிமேவியொலிக்குமுன்றிற்
சொல்வேறுவாழ்த்துத்திசைதோறுந்துதைந்துவிம்ம
வல்லேறுபோல்வாரடல்வாளிதெரிந்துநின்றார். (௬௪)

மானச்சிலைவேடர்மருங்குநெருங்குபோதிற்
பானற்குலமாமலரிற்படர்சோதியார்முன்
றேனற்றனைதேறல்சருப்பொரிமற்றுமுள்ள
கானப்பலிநேர்கடவுட்பொறையாட்டிவந்தாள். (௬௫)

நின்றெங்குமொய்க்குஞ்சினவேடர்கணங்கட்புக்குச்
சென்றங்குவள்ளறிருநெற்றியிற்சேடைசாத்தி
யுன்றந்தைதந்தைக்குமிந்தன்மைகளுள்ளவல்ல
நன்றும்பெரிதுன்விறனம்மளவன்றிதென்றாள். (௬௬)

அப்பெற்றியில்வாழ்த்துமணங்குடையாட்டிதன்னைச்
செப்பற்கரிதாயசிறப்பெதிர்செய்துபோக்கிக்
கைப்பற்றியதிண்சிலைக்கார்மழைமேகமென்ன
மெய்ப்பொற்புடைவேட்டையின்மேற்கொடெழுந்துபோந்தார்.()

வேறு.

தாளில்வாழ்செருப்பர்தோறழைத்தநீடுதானையார்
வாளியோடுசாபமேவுகையர்வெய்யவன்கணார்
ஆளியேறுபோலவேகுமண்ணலார்முனெண்ணிலார்
மீளிவேடர்நீடுகூட்டமிக்குமேலெழுந்ததே. (௬௮)

வன்றொடர்ப்பிணித்தபாசம்வன்கைமள்ளர்கொள்ளவே
வென்றிமங்கைவேடர்வில்லின்மீதுமேவுபாதமுன்
சென்றுநீளுமாறுபோல்வசெய்யநாவின்வாயவாய்
ஒன்றொடொன்றுநேர்படாமலோடுநாய்கண்மாடெலாம். (௬௯)

போர்வலைச்சிலைத்தொழிற்புறத்திலேவிளைப்பவச்
சார்வலைத்தொடக்கறுக்கவேகுடையர்தம்முனே
கார்வலைப்படுத்தகுன்றுகானமாவளைக்கநீள்
வார்வலைத்திறஞ்சுமந்துவந்தவெற்பர்முந்தினார். (௭௰)

நண்ணிமாமறைக்குலங்களூடவென்றுநீடுமத்
தண்ணிலாவடம்புகொன்றைதங்குவேணியார்தமைக்
கண்ணினீடுபார்வையொன்றுகொண்டுகாணுமன்பர்முன்
எண்ணில்பார்வைகொண்டுவேடரெம்மருங்குமேகினார். (௭௧)

கோடுமுன்பொலிக்கவுங்குறுங்கணுகுளிக்குல
மாடுசென்றிசைப்பவுமருங்குபம்பைகொட்டவுஞ்
சேடுகொண்டகைவிளிச்சிறந்தவோசைசெல்லவுங்
காடுகொண்டெழுந்தவேடுகைவளைந்துசென்றதே. (௭௨)

நெருங்குபைந்தருக்குலங்கணீடுகாடுகூடநேர்
வருங்கருஞ்சிலைத்தடக்கைமானவேடர்சேனைதான்
பொருந்தடந்திரைக்கடற்பரப்பிடைப்புகும்பெருங்
கருந்தரங்கநீள்புனற்கலித்தகன்னியொத்ததே. (௭௩)

தென்றிசைப்பொருப்புடன்செறிந்தகானின்மானினம்
பன்றிவெம்மரைக்கணங்களாதியானபல்குலந்
துன்றிநின்றவென்றடிச்சுவட்டினெற்றர்சொல்லவே
வன்றடக்கைவார்கொடெம்மருங்கும்வேடரோடினார். (௭௪)

ஓடியெறிந்துவாரொழுக்கியோசனைப்பரப்பெலா
நெடியதிண்வலைத்தொடக்குநீளிடைப்பிணித்துநேர்
கடிகொளப்பரந்தகாடுகாவல்செய்தமைத்தபின்
செடிதலைச்சிலைக்கைவேடர்திண்ணனார்முனண்ணினார். (௭௫)

வெஞ்சிலைக்கைவீரனாரும்வேடரோடுகூடிமுன்
மஞ்சலைக்குமாமலைச்சரிப்புறத்துவந்தமா
அஞ்சுவித்தடர்க்குநாய்களட்டமாகவிட்டுநீள்
செஞ்சரத்தினோடுசூழல்செய்தகானுளெய்தினார். (௭௬)

வெய்யமாவெழுப்பவேவிவெற்பராயமோடிநேர்
எய்யும்வாளிமுன்றெரிந்து கொண்டுசெல்லவெங்கணு
மொய்குரற்றுடிக்குலங்கள்பம்பைமுன்சிலைத்தெழக்
கைவிளித்ததிர்த்துமாவெழுப்பினார்கள்காடெலாம். (௭௭)

ஏனமோடுமானினங்களெண்குதிண்கலைக்குலங்
கானமேதியானைவெம்புலிக்கணங்கள்காண்மறா
யானமாவனேகமாவெருண்டெழுந்துபாயமுன்
சேனைவேடர்மேலடர்ந்துசீறியம்புநூறினார். (எஅ)

வேறு.

தாளறுவனவிடைதுணிவனதலைதுமிவனகலைமான்
வாளிகளொடுகுடல்சொரிதரமறிவனசிலமரைமா
நீளுடல்விசைசரமுருவிடநிமிர்வனமிடைகடமா
மீளிகொள்கணைபடமுடலெழவிழுவனபலவுழையே. (எகூ)

வெங்கணைபடுபிடர்கிழிபடவிசையுருவியகயவாய்
செங்கனல்விடவதனொடுகணைசெறியமுனிருகருமா
அங்கெழுசிரமுருவியபொழுதடலெயிறுறவதனைப்
பொங்கியசினமொடுகவர்வனபுனைவனசிலபுலிகள். (அய)

பின்மறவர்கள்விடுபகழிகள்பிறகுறவயிறிடைபோய்
முன்னுமுகமிசையுருவிடமுடுகியவிசையுடனக்
கொன்முனையுறுசரமினமெதிர்குறுகியமுகமுருவத்
தன்னெதிரெதிர்பொருவனநிகர்தலையனபலகலைகள். (அக)

கருவரையொருதனுவொடுவிசைகடுகியதெனமுனைநேர்
குரிசின்முன்விடுமசரமெதிர்கொலைபயில்பொழுதவையே
பொருகரியொடுசினவரியிடைபுரையறுமுடல்புகலால்
வருமிரவொடுபகலணைவனவெனமிடையுமவ்வனமே. (அஉ)

நீளிடைவிசைமிசைகுதிகொளநெடுமுகிறொடவெழுமான்
றாளுறுகழன்மறவர்கள்விடுசரநிரைதொடர்வனதாம்
வாள்விடுகதிர்மதிபிரிவுறவருமெனவிழுமுழையைக்
கோளொடுபயில்பணிதொடர்நிலைகொளவுளதெதிர்பலவே. (அ௩)

கடல்விரிபுனல்கொளவிழுவனகருமுகிலெனநிரையே
படர்வொடுசெறிகழைபொதுளியபயில்புதல்வனமதன்மேல்
அடலுறுசரமுடலுறவரையடியிடமலமரலான்
மிடைகருமரைகரடிகளொடுவிழுவனவனமேதி. (அச)

பலதுறைகளின்வெருவரலொடுபயில்வலையறநுழைமா
உலமொடுபடர்வனதகைவுறவுறுசினமொடுகவர்நாய்
நிலவியவிருவினைவலையிடைநிலைசுழல்பவர்நெறிசேர்
புலனுறுமனனிடைதடைசெய்தபொறிகளினளவுளவே. (அ௫)

துடியடியனமடிசெவியன துறுகயமுனிதொடரார்
வெடிபடவிரிசிறுகுருளைகண்மிசைபடுகொலைவிரவார்
அடிதளர்வுறுகருவுடையனவணைவுறுபிணையலையார்
கொடியனவெதிர்முடுகியுமுறுகொலைபுரிசிலைமறவோர். (௮௬)

இவ்வகைவருகொலைமறவினையெதிர்நிகழ்வுழியதிரக்
கைவரைகளும்வெருவுறமிடைகானெழுவதோரேனம்
பெய்கருமுகிலெனவிடியொடுபிதிர்கனல்விழிசிதறி
மொய்வலைகளையறநிமிர்வுறமுடுகியநடுவிசையில். (௮௭)

போமதுதனையடுதிறலொடுபொருமறவர்களரியே
றாமவர்தொடர்வுறும்விசையுடனடிவழிசெலுமளவிற்
றாமொருவருமறிகிலரவர்தனிதொடர்வுழியதன்மேல்
ஏமுனையடுசிலைவிடலைக ளிருவர்களடியிரியார். (௮௮)

நாடியகழல்வயவர்களவர்நாணனுநெடுவரிவிற்
காடனுமெனுமிருவருமலைகாவலனொடுகடிதிற்
கூடினர்விடுபகழிகளொடுகொலைஞமலிகள்வழுவி
நீடியசரிபடர்வதுகருநீழலின்விரைகேழல். (௮௯)

குன்றியைநிகர்முன்செறவெரிகொடுவிழியிடிகுரனீள்
பன்றியுமடல்வன்றிறலொடுபடர்நெறிநெடிதோடித்
துன்றியதொருகுன்றடிவரைசுலவியநெறிசூழற்
சென்றதனிடைநின்றதுவலிதெருமரமரநிரையில். (௯௦)

அத்தருவளர்சுழலிடையடையதனிலையறிபவர்முன்
கைத்தெரிகணையினிலடுவதுகருதலர்விசைகடுகி
மொய்த்தெழுசுடர்விடுசுரிகையைமுனைபெறவெதிருருவிக்
குத்தினருடன்முறிபடவெறிகுலமறவர்கடலைவர். (௯௧)

வேறு.

வேடர்தங்கரியசெங்கண்வில்லியார்விசையிற்குத்த
மாடிருதுணியாய்வீழ்ந்தவராகத்தைக்கண்டுநாணன்
காடனேயிதன்பினின்றுகாதங்கள்பலவந்தெய்த்தோம்
ஆடவன்கொன்றானச்சோவென்றவரடியிற்றாழ்ந்தார். (௯௨)

மற்றவர்திண்ணனார்க்குமொழிகின்றார்வழிவந்தாற்ற
உற்றதுபசிவந்தெம்மையுதவியவிதனைக்காய்ச்சிச்
சற்றுநீயருந்தியாமுந்தின்றுதண்ணீர்குடித்து
வெற்றிகொள்வேட்டைக்காடுகுறுகுவோமெல்லவென்றார் (௯௩)

என்றவர்கூறநோக்கித்திண்ணனார்தண்ணீரெங்கே
நன்றுமிவ்வனத்திலுள்ளதென்றுரைசெய்யநாண
னின்றவிப்பெரியதேக்கினப்புறஞ்சென்றானீண்ட
குன்றினுக்கயலேயோடுங்குளிர்ந்தபொன்முகலியென்றான். (௯௪)

பொங்கியசினவில்வேடன்சொன்னபின்போவோமங்கே
இங்கிதுதன்னைக்கொண்டுபோதுமினென்றுதாமும்
அங்கதுநோக்கிச்சென்றார்காவதமளையிற்கண்டார்
செங்கணேறுடையார்வைகுந்திருமலைச்சாரற்சோலை. (௯௫)

நாணனேதோன்றுங்குன்றினண்ணுவேமென்னநாணன்
காணநீபோதினல்லகாட்சியேகாணுமிந்தச்
சேணுயர்திருக்காளத்திமலைமிசையெழுந்துசெவ்வே
கோணமில்குடுமித்தேவரிருப்பர்கும்பிடலாமென்றான். (௯௬)

ஆவதெனிதனைக்கண்டிங்கணைதொறுமென்மேற்பாரம்
போவதொன்றுளதுபோலுமாசையும்பொங்கிமேன்மேன்
மேவியநெஞ்சும்வேறோர்விருப்புறவிரையாநிற்குந்
தேவரங்கிருப்பதெங்கேபோதென்றார்திண்ணனார்தாம். (௯௭)

உரைசெய்துவிரைந்துசெல்லவவர்களுமுடனேபோந்து
கரைவளர்கழையின்முத்துங்காரகிற்குறடுஞ்சந்தும்
வரைதருமணியும்பொன்னும்வயிரமும்புளினந்தோறுந்
திரைகண்முன்றிரட்டிவைத்ததிருமுகலியினைச்சார்ந்தார். (௯௮)

ஆங்கதன்கரையின்பாங்கோரணிநிழற்கேழலிட்டு
வாங்குவிற்காடன்றன்னைமரக்கடைதீக்கோல்பண்ணி
ஈங்குநீநெருப்புக்காண்பாயிம்மலையேறிக்கண்டு
நாங்கள்வந்தணைவோமென்றுநாணனுந்தாமும்போந்தார். (௯௯)

அளிமிடைகரைசூழ்சோலையலர்கள்கொண்டணைந்தவாற்றின்
றெளிபுனலிழிந்துசிந்தைதெளிவுறுந்திண்ணனார்தாங்
களிவருமகிழ்ச்சிபொங்கக்காளத்திகண்டுகொண்டு
குளிர்வருநதியூடேகிக்குலவரைச்சாரல்சேர்ந்தார். (௱)

கதிரவனுச்சிநண்ணக்கடவுண்மால்வரையினுச்சி
அதிர்தருமோசையைந்துமார்கலிமுழக்கங்காட்ட
இதுவென்கொனாணவென்றார்க்கிம்மலைப்பெருந்தேன்சூழ்ந்து
மதுமலரீக்கண்மொய்த்து மருங்கெழுமொலிகொலென்றான். (௱௧)

முன்புசெய்தவத்தினீட்ட முடிவிலாவின்பமான
அன்பினையெடுத்துக்காட்ட வளவிலாவார்வம்பொங்கி
மன்பெருங்காதல்கூர வள்ளலார்மலையைநோக்கி
என்புநெக்குருகியுள்ளத் தெழுபெருவேட்கையோடும். (௱௨)

நாணனு மன்புமுன்பு நளிர்வரையேறத்தாமும்
பேணுதத்துவங்களென்னும் பெருகுசோபானமேறி
ஆணையாஞ்சிவத்தைச்சார அணைபவர்போலவையர்
நீணிலை மலையையேறிநேர்படச்செல்லும்போதில். (௱௩)

திங்கள்சேர்சடையார்தம்மைச் சென்றவர்காணுமுன்னே
அங்கணர்கருணைகூர்ந்தவருட்டிருநோக்கமெய்தத்
தங்கியபவத்தின்முன்னைச் சார்புவிட்டகலநீங்கிப்
பொங்கியவொளியினீழற் பொருவிலன்புருவமானார். (௱௪)

மாகமார்திருக்காளத்திமலையெழுகொழுந்தாயுள்ள
ஏகநாயகனைக்கண்டா ரெழுந்தபேருவகையன்பின்
வேகமானதுமேற்செல்ல மிக்கதோர்விரைவினோடி
மோகமாயோடிச்சென்றார் தழுவினார் மோந்துநின்றார். (௱௫)

நெடிதுபோதுயிர்த்துநின்று நிறைந்தெழுமயிர்க்காலெல்லாம்
வடிவெலாம்புளகம்பொங்க மலர்க்கண்ணீரருவிபாய
அடியனேற்கிவர்தாமிங்கே யகப்பட்டாரச்சோவென்று
படியிலாப்பரிவுதானோர் படிவமாம்பரிசுதோன்ற. (௱௬)

வெம்மறக்குலத்துவந்தவேட்டுவச்சாதியார்போற்
கைம்மலைகரடிவேங்கை யரிதிரிகானந்தன்னில்
உம்முடன்றுணையாயுள்ளா ரொருவருமின்றிக்கெட்டேன்
இம்மலைத்தனியேநீரிங்கிருப்பதேயென்றணைந்தார். (௱௭)

கைச்சிலைவிழுந்ததோரார் காளையார்மீளவிந்தப்
பச்சிலையோடுபூவும்பறித்திட்டு நீரும்வார்த்து
மச்சிதுசெய்தார்யாரோ வென்றலுமருங்குநின்ற
அச்சிலைநாணன்றானு நானிதுவறிந்தேனென்பான். (௱௮)

வன்றிறனுந்தையோடுமாவேட்டையாடிப்பண்டிக்
குன்றிடைவந்தோமாகக் குளிர்ந்தநீரிவரையாட்டி
ஒன்றியவிலைப்பூச்சூட்டி யூட்டிமுன்பறைந்தோர்பார்ப்பான்
அன்றிதுசெய்தானின்று மவன்செய்தானாகுமென்றான். (௱௯)

உண்ணிறைந்தெழுந்ததேனுமொழிவின்றியாராவன்பிற்
றிண்ணனார்திருக்காளத்திநாயனார்க்கினியசெய்கை
எண்ணிலவிவையெலாமென்றிதுகடைப்பிடித்துக்கொண்டவ்
வண்ணலைப்பிரியமாட்டாதளவிலாதரவுநீட. (௱௰)

இவர்தமைக்கண்டேனுக்குத்தனியராயிருந்தாரொன்னே
இவர்தமக்கமுதுசெய்யவிறைச்சியுமிடுவாரில்லை
இவர்தமைப்பிரியவொண்ணாதென்செய்கேனியான்சால
இவர்தமக்கிறைச்சிகொண்டிங்கெய்தவும்வேண்டுமென்று. (௱௰௧)

போதுவர்மீண்டுசெல்வர்புல்லுவர்மீளப்போவர்
காதலினோக்கிநிற்பர்கன்றகல்புனிற்றுப்போல்வர்
நாதனையமுதுசெய்யநல்லமெல்லிறைச்சிநானே
கோதறத்தெரிந்துவேறுகொண்டிங்குவருவேனென்பார். (௱௰௨)

ஆர்த்துமராகிநீரிங்கிருப்பதென்றகலமாட்டே
னீர்பசித்திருக்கவிங்குநிற்கவுங்கில்லேனென்று
சோர்தருகண்ணீர்வாரப்போய்வரத்துணிந்தாராகி
வார்சிலையெடுத்துக்கொண்டுமலர்க்கையாற்றொழுதுபோந்தார். ( )

முன்புநின்றரிதுநீங்கிமொய்வரையிழிந்துநாணன்
பின்புவந்தணையமுன்னைப்பிறதுறைவேட்கைநீங்கி
அன்புகொண்டுய்ப்பச்செல்லுமவர்திருமுகலியாற்றின்
பொன்புனைகரையிலேறிப்புதுமலர்க்காவிற்புக்கார் (௱௰௪)

காடனுமெதிரேசென்றுதொழுதுதீக்கடைந்துவைத்தேன்
கோடுடையேனமுங்கள்குறிப்படியுறுப்பையெல்லா
மாடுறநோக்கிக்கொள்ளுமறித்துநாம்போகைக்கின்று
நீடநீர்தாழ்த்ததென்னேயென்றலுநின்றநாணன். (௱௰௫)

அங்கிவன்மலையிற்றேவர்தம்மைக்கண்டணைத்துக்கொண்டு
வங்கினைப்பற்றிப்போதாவல்லுடும்பென்னநீங்கான்
இங்குமத்தேவர்தின்னவிறைச்சிகொண்டேகப்போந்தா
னங்குலத்தலைமைவிட்டானலப்பட்டான்தேவர்க்கென்றான். (௱௰௬)

என்செய்தாய்திண்ணாநீதானென்னன்மால்கொண்டாயெங்கள்
முன்பெருமுதலியல்லையோவெனமுகத்தைநோக்கார்
வன்பெரும்பன்றிதன்னையெரியினில்வக்கிமிக்க
இன்புறுதசைகள்வெவ்வேறம்பினாலீர்ந்துகொண்டு. (௱௰௭)

கோலினிற்கோத்துக்காய்ச்சிக்கொழுந்தசைபதத்தில்வெவ்வ
வாலியசுவைமுன்காண்பான்வாயினிலதுக்கிட்பார்த்துச்
சாலவுமினியவெல்லாஞ்சருகிலையிணைத்தகல்லை
ஏலவேகோலிக்கூடவதன்மிசையிடுவாரானார். (௱௰௮)

மருங்குநின்றவர்கள்பின்னுடையன்மிகமுதிர்ந்தானென்னே
அரும்பெறலிறைச்சிகாய்ச்சியதுக்கிவேறுமிழாநின்றான்
பெரும்பசியுடையனேனும்பேச்சிலனெமக்கும்பேறு
தரும்பரிசுணரான்மற்றிறைத்தசைபுறத்தெறியாநின்றான். (௱௰௯)

தேவுமால்கொண்டானிந்தத்திண்ணன்மற்றிதனைத்தீர்க்க
லாவதொன்றறியோந்தேவ ராட்டியைநாகனோடு
மேவிநாங்கொணர்ந்துதீர்க்கவேண்டுமவ்வேட்டைக்கானில்
ஏவலாட்களையுங்கொண்டுபோதுமென்றெண்ணிப்போனார். (௱௨௰)

கானவர்போனதோரார்கடிதினிற்கல்லையின்கண்
ஊனமுதமைத்துக்கொண்டுமஞ்சனமாட்டவுன்னி
மாநதிநன்னீர்தூயவாயினிற்கொண்டுகொய்த
தூநறும்பள்ளித்தாமங்குஞ்சிமேற்றுதையக்கொண்டார். (௱௨௰௧)

தனுவொருகையில்வெய்யசரத்துடன்றாங்கிக்கல்லைப்
புனிதமெல்லிறைச்சிநல்லபோனகமொருகையேந்தி
இனியவெம்பிரானார்சாலப்பசிப்பரென்றிரங்கியேங்கி
நனிவிரைந்திறைவர்வெற்பைநண்ணினார்திண்ணனார்தாம். (௱௨௰௨)

இளைத்தனர்நாயனாரென்றீண்டச்சென்றெய்திவெற்பின்
முளைத்தெழுமுதலைக்கண்டுமுடிமிசைமலராக்காலில்
வளைத்தபொற்செருப்பான்மாற்றிவாயின்மஞ்சனநீர்தன்னை
விளைத்தவன்புமிழ்வார்போலவிமலனார்முடிமேல்விட்டார். (௱௨௰௩)

தலைமிசைச்சுமந்தபள்ளித்தாமத்தைத்தடங்காளத்தி
மலைமிசைத்தம்பிரானார்முடிமிசைவணங்கிச்சாத்திச்
சிலைமிசைப்பொலிந்தசெங்கைத்திண்ணனார்சேர்த்தகல்லை
இலைமிசைப்படைத்தவூனின்றிருவமுதெதிரேவைத்து. (௱௨௰௪)

கொழுவியதசைகளெல்லாங் கோலினிற்றெரிந்துகோத்தங்
கழலுறுபதத்திற்காய்ச்சிப்பல்லினாலதுக்கிநாவிற்
பழகியவினிமைபார்த்துப்படைத்தவிவ்விறைச்சிசால
அழகிது நாயனீரேயமுதுசெய்தருளுமென்றார் (௱௨௰௫)

அன்னவிம்மொழிகள்சொல்லியமுதுசெய்வித்தவேடர்
மன்னனார்திருக்காளத்திமலையினார்க்கினியநல்லூண்
இன்னமும்வேண்டுமென்னுமெழுபெருங்காதல்கண்டு
பன்னெடுங்கரங்கள்கூப்பிப்பகலவன்மலையிற்றாழ்ந்தான். (௩௨௬)

அவ்வழியந்திமாலைப்பனிபடுமிரவுசேரும்
வெவ்விலங்குளவென்றஞ்சிமெய்ம்மையின்வேறுகொள்ளாச்
செவ்வியவன்புதாங்கித்திருக்கையிற்சிலையுந்தாங்கி
மைவ்வரையென்னவையர்மருங்குநின்றகலாநின்றார். (௩௨௭)

சார்வருந்தவங்கள்செய்துமுனிவருமமரர்தாமுங்
கார்வரையடவிசேர்ந்துங்காணுதற்கரியார்தம்மை
ஆர்வமுன்பெருகவாராவன்பினிற்கண்டுகொண்டே
நேர்பெறநோக்கிநின்றார்நீளிருணீங்கநின்றார். (௩௨௮)

[illegible]ழைசொரிதரளக்குன்றிற்கதிர்நிலவொருபாற்பொங்க
முழைபரவுமிழ்ந்தசெய்யமணிவெயிலொருபான்மொய்ப்பத்
தழைகதிர்ப்பரிதியோடுஞ்சந்திரன்றலையுவாவிற்
குழையணிகாதர்வெற்பைக்கும்பிடச்சென்றாலொக்கும். (௩௨௯)

விரவுபன்மணிகள்கான்றவிரிகதிர்ப்படலைபொங்க
மரகதவொளிகொணீலமணிகளுமிமைக்குஞ்சோதி
பொரவிருசுடருமஞ்சிப்போயினபுடைகடோறும்
இரவிநொளாதுங்கினும்லம்போன்றுளதெங்குமெங்கும். (௩௩௰)

செந்தழலொளியிற்பொங்குந் * தீபமாமரங்களாலும்
மந்திகண்முழையில்வைத்தமணிவிளக்கொளிகளாலும்
ஐந்துமாறடக்கியுள்ளாரரும்பெருஞ்சோதியாலும்
எந்தையார்திருக்காளத்தி மலையினிலிரவொன்றில்லை. (௩௩௧)

வருங்கறைப்பொழுதுநீங்கிமல்கியயாமஞ்சென்று
சுருங்கிடவறிந்தபுள்ளின்சூழ்சிலம்போசைகேட்டுக்
கருங்கடலென்னநின்றகண்டுயிலாதவீரர்
அரும்பெறற்றம்பிரானார்க்கமுதுகொண்டணையவேண்டி. (௩௩௨)

ஏறுநாற்பன்றிபோடுமிருங்கலைபுனமான்மற்றும்
வேறுவேறினங்கள்வேட்டைவினைத்தொழில்விரகினாலே
ஊறுசெய்காலஞ்சிந்தித்துருமிகத்தெரியாப்போதின்
மாறநிசிலையுங்கொண்டுவள்ளலைத்தொழுதுபோந்தார். (௩௩௩)

---

* தீபமரம் - என்பது - சோதிவிருக்ஷம்.

வேறு.

மொய்காட்டுமிருள்வாங்கிமுகங்காட்டுந்தேரிரவி
மெய்காட்டுமன்புடையவில்லியார்தனிவேட்டை
* எய்காட்டினமர்விளக்கவிட்டகருந்திரையெடுத்துக்
கைகாட்டுவான்போலக்கதிர்காட்டியெழும்போதில். (௱௫௪)

எய்தியசீராகமத்தியம்பியபூசனைக்கேற்பக்
கொய்தமலரும்புனலுமுதலானகொண்டணைந்தார்
மைதழையுங்கண்டத்துமலைமருந்தைவழிபாடு
செய்துவருந்தவமுடையமுனிவர்சிவகோசரியார். (௱௫௫)

வந்துதிருமலையின்கண்வானவர்நாயகர்மருங்கு
சிந்தைநியமத்தோடுஞ்செல்கின்றார்திருமுன்பு
வெந்தவிறைச்சியுமெலும்புங்கண்டகலமிதித்தோடி
இந்தவநுசிதங்கெட்டேனியார்செய்தாரென்றழிவார். (௱௫௬)

மேவநேர்வரவஞ்சாவேடுவரேயிதுசெய்தார்
தேவதேவீசனேதிருமுன்பேயிதுசெய்து
போவதேயிவ்வண்ணம்புகுதநீர்திருவுள்ளம்
ஆவதேயெனப்பதறியழுதுவிழுந்தலமந்தார். (௱௫௭)

பொருப்பிலெழுஞ்சுடர்க்கொழுந்தின்பூசனையுந்தாழ்க்க நான்
இருப்பதினியென்னென்றவ்விறைச்சியெலும்புடனிலையுஞ்
செருப்படியுநாயடியுந்திருவலகான்மாற்றியபின்
விருப்பினொடுந்திருமுகலிப்புனன்மூழ்கிவிரைந்தணைந்தார். (௱௫௮)

பழுதுபுகுந்ததுதீரப்பவித்திரமாஞ்செயல்புரிந்து
தொழுதுபெறுவனகொண்டுதூயபூசனைதொடங்கி
வழுவிறிருமஞ்சனமேமுதலாகவரும்பூசை
முழுதுமுறைமையின்முடித்துமுதல்வனார்கழல்பணிந்தார். (௱௫௯)

பணிந்தெழுந்துதனிமுதலாம்பரனென்றுபன்முறையாற்
றுணிந்தமறைமொழியாலேதுதிசெய்துசுடர்த்திங்கள்
அணிந்தசடைமுடிக்கற்றையங்கணனாவிடைகொண்டு
தணிந்தமனத்திருமுனிவர்தம்போவனத்தினிடைச்சார்ந்தார். (௱௬௰)

இவ்வண்ணம்பெருமுனிவரேகினாரினியிப்பால்
மைவ்வண்ணக்கருங்குஞ்சிவனவேடர்பெருமானார்
கைவ்வண்ணச்சிலைவளைத்துக்கான்வேட்டைதனியாடிச்
செய்வ்வண்ணத்திறமொழிவேன்றீவினையின்றிறமொழிவேன் (௱௬௧)

* எய் - என்பது - முள்ளம்பன்றி.

திருமலையின்புறம்போனதிண்ணனார்செறிதுறுகற்
பெருமலைகளிடைச்சரியிற்பெரும்பன்றிபுன்மேய்ந்து
வருவனவுந்துணிபடுத்துமானினங்கள்கானிடைநின்
றொருவழிச்சென்றேறுதுறையொளிநின்றுகொன்றருளி. (௱௬௨)

பயில்விளியாற்கலைபழைத்துப்பாடுபெறவூடுருவும்
அயின்முகவெங்கணைபோக்கியஃதொழித்திமரையினங்க
டுயிலிடையிற்கிடையெய்துதொடர்ந்துகடமைகளெய்து
வெயில்படுவெங்கதிர்முதிரத்தனிவேட்டைவினைமுடித்தார். (௱௬௩)

பட்டவனவிலங்கெல்லாம்படர்வனத்திலொருசூழல்
இட்டருகுதீக்கடைகோலிருஞ்சுரிகைதனையுருவி
வெட்டிநறுங்கொற்றேனமிகமுறித்துத்தேக்கிலைபால்
வட்டமுறுபெருங்கல்லைமருங்குபுடைபடவமைத்தார். (௱௬௪)

இந்தனத்தைமுறித்தடுக்கியெரிகடையுமரணியினில்
வெந்தழலைப்பிறப்பித்துமிகவளர்த்துமிருகங்கள்
கொந்தியயிலலகம்பாற் * குட்டமிடுங்கொழுப்பறிந்து
வந்தனகொண்டெழுந்தழலில்வக்குவனவக்குவித்து. (௱௬௫)

வாயம்பாலழிப்பதுவும்வகுப்பதுவுஞ்செய்தவற்றின்
ஆயவுறுப்பிறைச்சியெல்லாமரிந்தொருகல்லையிலிட்டுக்
காயநெடுங்கோல்கோத்துக்கனலின்கணுறக்காய்ச்சித்
தூயதிருவமுதமைக்கச்சுவைகாணலுறுகின்றார். (௱௬௬)

எண்ணிறந்தகடவுளருக்கிடுமுணவுகொண்டூட்டும்
வண்ணவெரிவாயின்கண்வைத்ததெனக்காளத்தி
அண்ணலார்க்காம்பரிசுதாஞ்சோதித்தமைப்பதற்குத்
திண்ணனார்திருவாயிலமைத்தாருன்றிருவமுது. (௱௬௭)

நல்லபதமுறவெந்துநாவின்கணிடுமிறைச்சி
கல்லையினிற்படைத்துத்தேன்பிழிந்துகலந்ததுகொண்டு
வல்விரைந்துதிருப்பள்ளித் தாமமுந்தூய்மஞ்சனமும்
ஒல்லையினின்முன்புபோலுடன்கொண்டுவந்தணைந்தார். (௱௬௮)

வந்துதிருக்காளத்திமலையேறிவனசரர்கள்
தந்தலைவனாரிமையோர்தலைவனார்தமையெய்தி
அந்தணனார்பூசையினைமுன்புபோலகற்றியபின்
முந்தைமுறைதம்முடையபூசனையின்செயன்முடிப்பார். (௱௬௯)

---

* குட்டமிடுதல் - கொழுப்புள்ள இடத்தில் வட்டமாகக் கொத்துதல்.

ஊனமுதுகல்லையுடன்வைத்திதுமுன்னையினன்றால்
ஏனமொடுமான்றலைகண்மனாகடமையிவையிற்றில்
ஆனவுறுப்பிறைச்சியமுதடியேனுஞ்சுவைகண்டேன்
தேனுமுடன்கலந்ததிதுதித்திக்குமெனமொழிந்தார். (௱௫௰)

இப்பரிசுதிருவமுதுசெய்வித்துத்தம்முடைய
ஒப்பரியபூசனைசெய்தந்நெறியிலொழுகுவார்
எப்பொழுதுமேன்மேல்வந்தெழுமன்பாற்காளத்தி
அப்பரொடிரவுறங்கார் பகலும்வேட்டையாடுவார். (௱௫௧)

மாமுனிவர்நாடோறும்வந்தணைந்துவனவேந்தர்
தாமியலும்பூசனைக்குச்சாலமிகத்தளர்வெய்தித்
தீமையெனவதுநீக்கிச்செப்பியவாகமவிதியால்
ஆமுறையிலர்ச்சனைசெய்தந்நெறியிலொழுகுவரால். (௱௫௨)

நாணனொடுகாடனும்போய்நாகனுக்குச்சொல்லியபின்
ஊணுமுறக்கமுமின்றியணங்குறைவாளையுங்கொண்டு
பேணுமகனார்தம்பால்வந்தெல்லாம்பேதித்துக்
காணுநெறிதங்கள்குறிவாராமற்கைவிட்டார். (௱௫௩)

முன்புதிருக்காளத்திமுதல்வனாருனோக்கால்
இன்புறுவேதகத்திரும்புபொன்னானாற்போல்யாக்கை
தன்பரிசும்வினையிரண்டுஞ்சாருமலமூன்றுமற
அன்புபிழம்பாய்த்திரிவாரவர்கருத்தினளவினரோ. (௱௫௪)

அந்நிலையிலன்பனாரறிந்தநெறிபூசிப்ப
மன்னியவாகமப்படியான்மாமுனிவரர்ச்சித்திங்
கென்னுடையநாயகனையிதுசெய்தார்தமைக்காணேன்
உன்னுடையதிருவருளா லொழித்தருளவேண்டுமென. (௱௫௫)

அன்றிரவுகனவின்கணருண்முனிவர்தம்பாலே
மின்றிகழுஞ்சடைமவுலிவேதியர்தாமெழுந்தருளி
வன்றிறல்வேடுவனென்றுமற்றவனைநீநினையே
லன்றவன்றன்செயறன்னைநாமுரைப்பக்கேளென்று. (௱௫௬)

அவனுடையவடிவெல்லா நம்பக்கலன்பென்றும்
அவனுடையவறிவெல்லாநமையறியுமறிவென்றும்
அவனுடையசெயலெல்லாநமக்கினியவாமென்றும்
அவனுடையநிலையிவ்வா றறிநீயென்றருள்செய்தார் (௱௫௭)

உனக்கவன்றன்செயல்காட்டநாளைநீயொளித்திருந்தால்
எனக்கவன்றன்பரிவிருக்கும்பரிசெல்லாங்காண்கின்றாய்
மனக்கவலையொழிகென்றுமறைமுனிவர்க்கருள்செய்து
புனற்சடிலத்திருமுடியாரெழுந்தருளிப்போயினார். (௱௫௮)

கனவுநிலைநீங்கியபின்விழித்துணர்ந்துகங்குலிடைப்
புனைதவத்துமாமுனிவர்புலர்வளவுங்கண்டுயிலார்
மனமுறுமற்புதமாகிவரும்பயமுமுடனாகித்
துனைபுரவித்தனித்தேர்மேற்றோன்றுவான்கதிர்தோன்ற. (௱௫௯)

முன்னைநாள்போல்வந்துதிருமுகலிப்புனன்மூழ்கிப்
பன்முறையுந்தம்பிரானருள்செய்தபடிநினைந்து
மன்னுதிருக்காளத்திமலையேறிமுன்புபோற்
பிஞ்ஞகனைப்பூசித்துப்பின்பாகவொளித்திருந்தார். (௱௬௰)

வேறு.

கருமுகிலென்னநின்றகண்படாவில்லியார்தாம்
வருமுறையாறாநாளின்வருமிரவொழிந்தகாலை
அருமறைமுனிவனார்வந்தணைவதன்முன்னம்போகித்
திருமுறைமுன்புபோலத்தனிப்பெருவேட்டையாடி. (௱௬௧)

மாறிலூனமுதுநல்லமஞ்சனப்புனலுஞ்சென்னி
ஏறுநாண்மலரும்வெவ்வேறியல்பினிலமைத்துக்கொண்டு
தேறுவார்க்கமுதமானசெல்வனார்திருக்காளத்தி
ஆறுசேர்சடையார்தம்மையணுகவந்தணையாநின்றார். (௱௬௨)

இத்தனைபொழுதுதாழ்த்தேனென்னவிரைந்தேகுவார்முன்
மொய்த்தபல்சகுனமெல்லாமுறைமுறைதீங்குசெய்ய
இத்தகுதீயபுட்களீண்டமுன்னுதிரங்காட்டும்
அத்தனுக்கென்கொல்கெட்டேனடுத்ததென்றணையும்போதில். (௱௬௩)

அண்ணலார்திருக்காளத்தியடிகளார்முனிவனார்க்குத்
திண்ணனார்பரிவுகாட்டத்திருநயனத்திலொன்று
துண்ணெனவுதிரம்பாயவிருந்தனர்தூரத்தேயவ்
வண்ணவெஞ்சிலையார்கண்டுவல்விரைந்தோடிவந்தார். (௱௬௪)

வந்தவர்குருதிகண்டார்மயங்கினார்வாயினன்னீர்
சிந்திடக்கையிலூனுஞ்சிலையுடன்சிதறிவீழக்
கொந்தலர்பள்ளித்தாமங்குஞ்சிநின்றலைந்துசோரப்
பைந்தழையலங்கன்மார்பர்நிலத்திடைப்பதைத்துவீழ்ந்தார். ௱௬௫

விழுந்தவரெழுந்துசென்றுதுடைத்தனர்குருதிவீழ்வ
தொழிந்திடக்காணார்செய்வதறிந்திலருயிர்த்துமீள
அழிந்துபோய்வீழ்ந்தார்தேறியாரிதுசெய்தாரென்னா
எழுந்தனர்திசைகளெங்கும்பார்த்தனரெடுத்தார்வில்லும். (௱௬௬)

வாளியுந்தெரிந்துகொண்டிம்மலையிடையெனக்குமாறா
மீளிவெம்மறவர்செய்தாருளர்கொலோவிலங்கின்சாதி
ஆளிமுன்னாகியுள்ளவிளைத்தவோவறியேனென்று
நீளிருங்குன்றச்சாரனெடியிடைநேடிச்சென்றார். (௱௬௭)

வேடரைக்காணார்தீயவிலங்குகண்மருங்குமெங்கு
நாடியுங்காணார்மீண்டுநாயனார்தம்பால்வந்து
நீடியசோகத்தோடுநிறைமலர்ப்பாதம்பற்றி
மாடுறக்கட்டிக்கொண்டுகதறினார்கண்ணீர்வார. (௱௬௮)

பாவியேன்கண்டவண்ணம்பரமனார்க்கடுத்ததென்னோ
ஆவியினினியவெங்களத்தனார்க்கடுத்ததென்னோ
மேவினர்பிரியமாட்டா விமலனார்க்கடுத்ததென்னோ
ஆவதொன்றறிகிலேனா னென்செய்கேனென்றுபின்னும். (௱௬௯)

என்செய்தாற்றீருமோதானெம்பிரான்றிறத்துத்தீங்கு
முன்செய்தார்தம்மைக்காணேன்மொய்கழல்வேடனொன்று
பின்செய்வார்பகழிப்புண்கடீர்க்குமெய்மருந்துநாடிப்
பொன்செய்தாழ்வரையிற்கொண்டுவருவனென்றுபோனார். ( )

நினைத்தனர்வேறுவேறுநெருங்கியவனங்களெங்கும்
இனத்திடைப்பிரிந்தசெங்கணேறெனவெருக்கொண்டெய்திப்
புனத்திடைப்பறித்துக்கொண்டுபூதநாயகன்பால்வைத்த
மனத்தினுங்கடிதுவந்துமருந்துகள்பிசைந்துவார்த்தார். (௱௭௧)

மற்றவர்பிசைந்துவார்த்தமருந்தினாற்றிருக்காளத்திக்
கொற்றவர்கண்ணிற்புண்ணீர்குறைபடாதொழுகக்கண்டே
இற்றையினிலைமைக்கென்னோ வினிச்செயலென்றுபார்ப்பார்
உற்றநோய்தீர்ப்பதூனுக்கூனெனுமுரைமுன்கண்டார் (௱௭௨)

இதற்கினியென்கணம்பாலிடந்தப்பினெந்தையார்கண்
ணதற்கிதுமருந்தாய்ப்புண்ணீர் நிற்கவுமடுக்குமென்று
மதர்த்தெழுமுள்ளத்தோடுமகிழ்ந்துமுன்னிருந்துதங்கண்
முதற்சரமடுத்துவாங்கி முதல்வர்தங்கண்ணிலப்ப. (௱௭௫)

நின்றசெங்குருதிகண்டார்நிலத்தினின்றேறப்பாய்ந்தார்
குன்றெனவளர்ந்ததோள்கள் கொட்டினார்கூத்துமாடி

நன்றுநான்செய்தவிந்தமதியெனநகையுந்தோன்ற
ஒன்றியகளிப்பினாலே யுன்மத்தர்போலமிக்கார். (௱எச)

வலத்திருக்கண்ணிற்றங்க ணப்பியவள்ளலார்த
நலத்தினைப்பின்னுங்காட்டநாயனார்மற்றைக்கண்ணில்
உலப்பில்செங்குருதிபாயக் கண்டனருலகில்வேடர்
குலப்பெருந்தவத்தால்வந்தகொள்கையினும்பர்மேலோர். (௱எரு)

கண்டபின்கெட்டேனெங்கள்காளத்தியார்கண்ணொன்று
புண்டருகுருதிநிற்கமற்றைக்கண்குருதிபொங்கி
மண்டுமற்றிதனுக்கஞ்சேன்மருந்துகைகண்டேனின்னும்
உண்டொருகண்ணக்கண்ணை யிடந்தப்பியொழிப்பேனென்றான். (௱எ௬)

கண்ணுதல்கண்ணிற்றங்க ணிடந்தப்பிற்காணுநேர்பா
டெண்ணுவார்தம்பிரான்றன்றிருக்கண்ணிலிடக்காலூன்றி
உண்ணிறைவிருப்பினோடுமொருதனிப்பகழிகொண்டு
திண்ணனார்கண்ணிலூன்றத்தரித்திலர்தேவதேவர். (௱எஎ)

செங்கண்வெள்விடையின்பாகன்றிண்ணனார்தம்மையாண்ட
அங்கணன்றிருக்காளத்தியற்புதன்றிருக்கைடப்பாற்
றங்கண்முன்னிடக்குங்கையைத் தடுக்கமுன்னொருமூன்றாக
கங்கணனமுதவாக்கு கண்ணப்பநிற்கவென்ற. (௱எ௮)

கானவர்பெருமானார்தங்கண்ணிடந்தப்பும்போதும்
ஊனமுதுவந்தவையருற்றுமுன்பிடித்தபோதும்
ஞானமாமுனிவர்கண்டார்நான்முகன்முதலாயுள்ள
வானவர்பூவின்மாரிபொழிந்தனர் மறைகளார்ப்ப. (௱எ௯)

பேறினியிதன்மேலுண்டோ பிரான்றிருக்கண்ணில்வந்த
ஊறுகண்டஞ்சித்தங்கணிடந்தப்பவுதவுங்கையை
ஏறுயர்த்தவர்தங்கையாற் பிடித்துக்கொண்டென்வலத்தின்
மாறிலாய்நிற்கவென்றுமன்னுபேரருள்புரிந்தார். (௱௮௰)

மங்குல்வாழ்திருக்காளத்திமன்னனார்கண்ணிற்புண்ணீர்
தங்கணான்மாற்றப்பெற்றதலைவர்தாடலைமேற்கொண்டே
கங்கைவாழ்சடையார்வாழுங் கடவூரிற்கலயனாராம்
பொங்கியபுகழின்மிக்கார்திருத்தொண்டுபுகலலுற்றேன். (௱௮௧)

கண்ணப்பநாயனார்புராணமுற்றிற்று

ஆக திருவிருத்தம்—௮௱௪௰.

இந்தப்புராணத்தில், (௱௫எ) வது திருவிருத்தத்திற்குமேல் வெள்ளிசேர்த்த (௫) பாடல் சிலபிரதிகளிலிருக்கும்.

திருச்சிற்றம்பலம்.



தொண்டை வளநாட்டிற்சேர்ந்த திருக்காளத்தியென்னும் ஸ்தலத்துக்குச் சமீபித்திருக்கின்ற உடுப்பூரில்வாழும் வேடர்குல ராசனாகிய நாகனென்பவன்செய்த தபோபலத்தினால் புத்திரராயத் திருவவதாரஞ்செய்து திண்ணனென்று திருநாமம்பெற்று விற்வித்தை கற்றுணர்ந்து தம்முடைய பிதாவினால் தங்கள் குலத்தலைமைபெற்றுக்கொண்டு வேடர்களுடன் போய்க் காட்டில் மிருக வேட்டையாடும்போது ஒரு பன்றியானது வேடர்களையும் வலைகளையுந் தப்பிப்போடுவதைக்கண்டு துரத்திக்கொண்டுபோய் அதனைச் சுரிகையாற் குத்திக்கொன்றபோது தம்முடன் தொடர்ந்துவந்த-நாணன், காடன், என்னும் இரண்டு வேடரும் அதிசயித்து அச்சனே ! இந்தப் பன்றியிறைச்சியைத் தேவர்சிறிதுண்டு, எங்களுக்குங்கொடுத்தால் நாங்களும் உண்டுபசியாறுவோமென்றுசொல்லி நீரிருக்குமிடமுங் காட்ட அவர்களுடன்சென்று பொன்முகலியாற்றில்நடந்து அந்த நதிக்கரையில் பன்றியையிட்டபோது நாணன் திண்ணனாரைநோக்கி இந்த மலையின்மேல் குடுமித்தேவ ரிருக்கின்றார் அங்கேபோனால் தம்பிடலாமென்றான்; அப்படியானாற்செல்லுவோமென்று மலையிலேறும்போதே சத்திநிபாதப் பதிந்ததுபோல அன்புவளரச் சுவாமியைக் கட்டிக்கொண்டு ஆனந்தக்கண்ணீர்பெருகிப் புளகம்போர்ப்பப்பரவசமடைந்துசுவாமியைநோக்கித் தேவர்வேடுவர்போலத் தனியேயிருக்கின்றீர் இறைச்சிகொண்டுவந்து கொடுப்பாருமில்லையாதலால், நான் கொண்டுவருவேனென்று சென்றுகரையிலிட்டபன்றியின் தசையை அம்பினாற்கொத்தியெடுத்துக் காடன் மூட்டிவைத்த தீயிற்காய்ச்சி வாயிலிட்டுப் பக்குவப்பார்த்துத் தேக்கிலையைத் தைத்து அதில் வைத்துத் தேனும்விட்டுப் பொன்முகலிநீர் வாயினிடத்தும், திருப்பள்ளித்தாமம் சிரசினிடத்தும் வைத்துக்கொண்டுவந்து சுவாமி திருமுடியில் சிவகோசரியார் அருச்சனைசெய்த பத்திரபுட்பங்களைத் தமது காலில் தொடுத்திருக்கும் பாதரக்ஷையால மாற்றி வாய்நீர் மஞ்சனஞ்செய்து முடியிலிருந்த பத்திர புட்பங்களைச் சாத்தித் தையலிலைத் தொன்னையை எதிரில்வைத்து - சுவாமீ இது பக்குவமுள்ள இறைச்சி, நானும்-மென்றுபார்த்தேன் தேனுங் கலந்திருக்கின்றது அமுதுசெய்தருளுமென்றுசொல்லி அமுதுசெய்வித்தவுடன் அந்திப்பொழுதாக அவ்விரவு முழுவதும் நித்திரையின்றிக் காவலிருந்து மறு நாள் சென்று வேட்டையாடி இறைச்சிகளைப் பக்குவஞ்செய்து முன்னாட்போல் திருமஞ்சன முதலானது ஐந்துதினத் தளவுஞ்செய்து வருகையில், இச்செய்கை சிவகோசரியாருக்கு அநுசிதமாயிருப்

நன்றுநான்செய்தவிந்தமதியெனநகையுந்தோன்ற
ஒன்றியகளிப்பினாலே யுன்மத்தர்போலமிக்கார். (௱௭௪)

வலத்திருக்கண்ணிற்றங்க ணப்பியவள்ளலார்த
நலத்திளைப்பின்னுங்காட்டநாயனார்மற்றைக்கண்ணில்
உலப்பில்செங்குருதிபாயக் கண்டனருலகில்வேடர்
குலப்பெருந்தவத்தால்வந்தகொள்கையினுயர்மேலோர். (௱௭௫)

கண்டபின்கெட்டேனெங்கள்காளத்தியார்கண்ணொன்று
புண்டருகுருதிநிற்கமற்றைக்கண்குருதிபொங்கி
மண்டுமற்றிதனுக்கஞ்சேன்மருந்துகைகண்டேனின்னும்
உண்டொருகண்ணக்கண்ணை யிடந்தப்பியொழிப்பேனென்றான் (௱௭௬)

கண்ணுதல்கண்ணிற்றங்க ணிடந்தப்பிற்காணுநேர்பா
டெண்ணுவார்தம்பிரான்றன்றிருக்கண்ணிலிடக்காலூன்றி
உண்ணிறைவிருப்பினோடுமொருதனிப்பகழிகொண்டு
திண்ணனார்கண்ணிலூன்றத்தரித்திலர்தேவதேவர். (௱௭௭)

செங்கண்வெள்விடையின்பாகன்றிண்ணனார்தம்மையாண்ட
அங்கணன்றிருக்காளத்தியற்புதன்றிருக்கையப்பாற்
றங்கண்முன்னிடக்குங்கையைத் தடுக்கமூன்றடுக்குநாக
கங்கணனமுதவாக்கு கண்ணப்பநிற்கவென்ற. (௱௭௮)

கானவர்பெருமானார்தங்கண்ணிடந்தப்பும்போதும்
ஊனமுதுவந்தவையருற்றுமுன்பிடித்தபோதும்
ஞானமாமுனிவர்கண்டார்நான்முகன்முதலாயுள்ள
வானவர்பூவின்மாரிபொழிந்தனர் மறைகளார்ப்ப. (௱௭௯)

பேறினியிதன்மேலுண்டோ பிரான்றிருக்கண்ணில்வந்த
ஊறுகண்டஞ்சித்தங்கணிடந்தப்பவுதவுங்கையை
ஏறுயர்த்தவர்தங்கையாற் பிடித்துக்கொண்டென்வலத்தின்
மாறிலாய்நிற்கவென்றுமன்னுபேரருள்புரிந்தார். (௱௮௰)

மங்குல்வாழ்திருக்காளத்திமன்னனார்கண்ணிற்புண்ணீர்
தங்கணான்மாற்றப்பெற்றதலைவர்தாடலைமேற்கொண்டே
கங்கைவாழ்சடையார்வாழுங் கடவூரிற்கலயனாராம்
பொங்கியபுகழின்மிக்கார்திருத்தொண்டுபுகலலுற்றேன். (௱௮௧)

கண்ணப்பநாயனார்புராணமுற்றிற்று

ஆக திருவிருத்தம்—௮௱௪௰.

இந்தப்புராணத்தில், (௱௫௭) வது திருவிருத்தத்திற்குமேல் வெள்ளிசேர்த்த (௫) பாடல் சிலபிரதிகளிலிருக்கும்.

திருச்சிற்றம்பலம்.

---

தொண்டை வளநாட்டிற்சேர்ந்த திருக்காளத்தியென்னும் ஸ்தலத்துக்குச் சமீபித்திருக்கின்ற உடுப்பூரில்வாழும் வேடர்குலராசனாகிய நாகனென்பவன்செய்த தபோபலத்தினால் புத்திரராகத் திருவவதாரஞ்செய்து திண்ணனென்று திருநாமம்பெற்று வில்வித்தை கற்றுணர்ந்து தம்முடைய பிதாவினால் தங்கள் குலத்தலைமைபெற்றுக்கொண்டு வேடர்களுடன் போய்க் காட்டில் மிருகவேட்டையாடும்போது ஒரு பன்றியானது வேடர்களையும் வலைகளையுந் தப்பிப்போடுவதைக்கண்டு துரத்திக்கொண்டுபோய் அதனைச் சுரிகையாற் குத்திக்கொன்றபோது தம்முடன் தொடர்ந்துவந்த-நாணன், காடன், என்னும் இரண்டு வேடரும் அதிசயித்து அச்சனே ! இந்தப் பன்றியிறைச்சியைத் தேவரீர்சிறிதுண்டு, எங்களுக்குங்கொடுத்தால் நாங்களும் உண்டுபசியாறுவோமென்றுசொல்லி நீரிருக்கு மிடமுங் காட்ட அவர்களுடன்சென்று பொன்முகலியாற்றில்நடந்து அந்த நதிக்கரையில் பன்றியையிட்டபோது நாணன் திண்ணனைநோக்கி இந்த மலையின்மேல் குடுமித்தேவ ரிருக்கின்றார் அங்கேபோனால் கும்பிடலாமென்றான்; அப்படியானாற்செல்லுவோமென்று மலையிலேறும்போதே சத்திநிபாதப் பதிந்ததுபோல அன்புவளரச் சுவாமியைக் கட்டிக்கொண்டு ஆனந்தக்கண்ணீர்பெருகிப் புளகம்போர்ப்பப்பரவசமடைந்துசுவாமியைநோக்கித் தேவரீர்வேடர்போலத் தனியேயிருக்கின்றீர் இறைச்சிகொண்டுவந்து கொடுப்பாருமில்லையாதலால், நான் கொண்டுவருவேனென்று சென்றுகரையில்விட்டபன்றியின் தசையை அம்பினாற்கொத்தியெடுத்துக் காடன் மூட்டிவைத்த தீயிற்காய்ச்சி வாயிலிட்டுப் பக்குவப்பார்த்துத் தேக்கிலையைத் தைத்து அதில் வைத்துத் தேனும்விட்டுப் பொன்முகலிநீர் வாயினிடத்தும், திருப்பள்ளித்தாமம் சிரசினிடத்தும் வைத்துக்கொண்டுவந்து சுவாமி திருமுடியில் சிவகோசரியார் அருச்சனைசெய்த பத்திரபுட்பங்களைத் தமது காலில் தொடுத்திருக்கும் பாதரக்ஷையால மாற்றி வாய்நீர் மஞ்சனஞ்செய்து முடியிலிருந்த பத்திர புட்பங்களைச் சாத்தித் தையலிலைத் தொன்னையை எதிரில்வைத்து - சுவாமீ இது பக்குவமுள்ள இறைச்சி, நானும்-மென்றுபார்த்தேன் தேனுங் கலந்திருக்கின்றது அமுதுசெய்தருளுமென்றுசொல்லி அமுதுசெய்வித்தவுடன் அந்திப்பொழுதாக அவ்விரவு முழுவதும் நித்திரையின்றிக் காவலிருந்து மறுநாள் சென்று வேட்டையாடி இறைச்சிகளைப் பக்குவஞ்செய்து முன்னாட்போல் திருமஞ்சன முதலானது ஐந்துதினத் தளவுஞ்செய்து வருகையில், இச்செய்கை சிவகோசரியாருக்கு அநுசிதமாயிருப்

பதினால் சுவாமீ இது தேவரீர் திருவுளத்திற்குப் பாங்குதானோ வென்று வருந்துகின்றமையால், அவருக்குத் தம்முடைய தொண்டனார் அன்பினுறுதிப்பாட்டினைத் தெரிவிக்கும்பொருட்டு, ஏழாநாள் ஒரு திருக்கண்ணில் உதிரமொழுகும்படியிருக்க, அதனை உளன முது கொண்டுவருகிறநாயனார் கண்டுமிகவும்வருந்திப் பச்சிலைமூலிக் கைகளைப்பிசைந்துவிட்டும் நிற்காமையால்தம்முடைய வலக்கண்ணைப்பெயர்த்து அப்பினார் உடனே உதிரம்நிற்கக்கண்டுமகிழும்போது சிவகோசரியார் நாயனார் உறுதியை அறியும்பொருட்டு மற்றொருதிருக்கண்ணிலும் உதிரம்பெருகும்படி சுவாமிதிருவுளங்கொண்டிருக்கக்கண்டு இதற்கு நானஞ்சேன் என்னிடத்தில் மருந்திருக்கின்றதென்று உதிரம்பெருகுங்கண்ணில் அடையாளத்துக்காகத் தம்முடைய காலைத்தூக்கி அக்கண்ணிடத்தில்வைத்துக்கொண்டு தம்முடையமற்றொருகண்ணினைப் பாணத்தினாற் குத்திப் பெயர்க்கத் தொடங்கினபோது காளத்திநாயனார் திருவுளமிரங்கி அன்பர்கையைத் தமது திருக்கரத்தாற் பற்றிக்கொண்டு கண்ணப்பநிற்க என்றுதிருவாய்மலர்ந்தருளி எப்போதும் நம்முடையவலப்புறத்திலிருக்கக் கடவையென்று அருள்செய்தனர். [இந்தச் சுவாமிகள் சிவலிங்கத்தினால் முத்தி யடைந்தது.] — கண்ணப்பிவைத்த காரணத்தினால் கண்ணப்ப சுவாமிகளென்று யாவருந் துதிக்கின்றனர். [இந்தத் தலத்தில் சுவாமிக்குத் திருப்பெயர் காளத்தீசர். தேவியார் ஞானப்பூங்கோதை. திருப்பதிகம்—௪.]






உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# குங்கிலியக்கலய நாயனார் புராணம்.



வேறு.

வாய்ந்தநீர்வளத்தாலோங்கிமன்னியபொன்னிநாட்டின்
ஏய்ந்தநீர்மறையோர்வாழு மெயிற்பதியெறிநீர்க்கங்கை
தோய்ந்தநீள்சடையார்பண்டுதொண்டர்மேல்வந்தகூற்றைக்
காய்ந்தசேவடியார்நீடியிருப்பது.கடவூராகும். (௧)

வயலெலாம்விளைசெஞ்சாலிவரம்பெலாமலையின்முத்தம்
அயலெலாம்வேள்விச்சாலையணையெலாங்கழுநீர்க்கற்றை
புயலெலாங்கமுகின்காடப்புறமெலாமதன்சீர்போற்றல்
செயலெலாந்தொழில்களாறேசெழுந்திருக்கடவூரொன்றும். (௨)

குடங்கையினகன்றவுண்கட்கடைசியர்குழுமியாடும்
இடம்படுபண்ணைதோறுமெழுவனமருதம்பாடல்
வடம்புரிமுந்நூன்மார்பின்வைதிகமறையோர்செய்கைச்
சடங்குடையிடங்கடோறுமெழுவனசாமம்பாடல். (௩)

துங்கநீண்மருப்பின்மேதிபடிந்துபால்சொரிந்தவாவிச்
செங்கயல்பாய்ந்துவாசக்கமலமுந்தீம்பாலாறு
மங்குறோய்மாடச்சாலைமருங்கிறையொதுங்குமஞ்சும்
அங்கவைபொழிந்தநீருமாகுதிப்புகைப்பாலாறும். (௪)

மருவியதிருவின்மிக்கவளம்பதியதனில்வாழ்வார்
அருமறைமுந்நூன்மார்பி னத்தணர் கலயனென்பார்
பெருநதியணியும்வேணிப்பிரான்கழல்பேணிநாளும்
உருகியவன்புகூர்ந்தசிந்தையாரொழுக்கமிக்கார். (௫)

பாலனாமறையோன்பற்றப்பயங்கெடுத்தருளுமாற்றான்
மாலுநான்முகனுங்காணாவடிவுகொண்டெதிரேவந்து
காலனாருயிர்செற்றார்க்குக்கமழ்ந்தகுங்கிலியத்தூபஞ்
சாலவேநிறைந்துவிம்மவிடும்பணிதலைநின்றுள்ளார். (௬)

கங்கைநீர்கலிக்குஞ்சென்னிக்கண்ணுதலெம்பிராற்குப்
பொங்குகுங்கிலியத்தூபம்பொலிவுறப்போற்றிச்செல்ல
அங்கவரருளினாலேவறுமைவந்தடைந்தபின்னுந்
தங்கணாயகர்க்குத்தாமுன்செய்பணிதவாமையுய்த்தார். (௭)

இந்நெறியொழுகுநாளில் * இலம்பாடுநீடுசெல்ல
நன்னிலமுற்றும்விற்றுநாடியவடிமைவிற்றும்
பன்னெடுந்தனங்கண்மாளப் பயின்மனைவாழ்க்கைதன்னின்
மன்னியசுற்றத்தோடுமக்களும்வருந்தினார்கள். (௮)

யாதொன்றுமில்லையாகியிருபகலுணவுமாறிப்
பேதுறுமைந்தரோடும்பெருகுசுற்றத்தைநோக்கிக்
காதல்செய்மனைவியார்தங்கணவனார்கலயனார்கைக்
கோதின்மங்கலநூற்றாலிகொடுத்துநெற்கொள்ளுமென்றார். (௯)

* இலம்பாடு - என்பது - வறுமை.

அப்பொழுததனைக்கொண்டுநெற்கொள்வானவரும்போக
ஒப்பில்குங்கிலியங்கொண்டோர்வணிகனுமெதிர்வந்துற்றான்
இப்பொதியென்கொலென்றார்க்குள்ளவாறியம்பக்கேட்டு
முப்புரிவெண்ணூன்மார்பர்முகமலர்ந்திதனைச்சொன்னார் (௰)

ஆறுசெஞ்சடைமேல்வைத்தவங்கணர்பூசைக்கேற்ற
நாறுகுங்கிலியமீதேனின்றுபெற்றேனல்ல
பேறுமற்றிதன்மேலுண்டோபெறும்பேறுபெற்றுவைத்து
வேறினிக்கொள்வதென்னென்றுரைத்தெழும்விருப்பின்மிக்கார். (௰௧)

பொன்றரத்தாருமென்றுபுகன்றிடவணிகன்றானும்
என்றரவிசைந்ததென்னத்தாலியைக்கலயரீந்தார்
அன்றவனதனைவாங்கியப்பொதிகொடுப்பக்கொண்டு
நின்றிலர்விரைந்துசென்றார்நிறைந்தெழுகளிப்பினோடும். (௰௨)

விடையவர்வீரட்டானம்விரைந்துசென்றெய்தியென்னை
உடையவரெம்மையாளுமொருவர்தம்பண்டாரத்தில்
அடைவுறவொடுக்கியெல்லாமார்ந்தெழுமன்புபொங்கச்
சடையவர்மலர்த்தாள்போற்றியிருந்தனர்தமக்கொப்பில்லார். (௰௩)

அன்பரங்கிருப்பநம்பரருளினாலளகைவேந்தன்
றன்பெருநிதியந்தூர்த்துத்தரணிமேனெருங்கவெங்கும்
பொன்பயில்குவையுநெல்லும்பொருவில்பல்வளனும்பொங்க
மன்பெருஞ்செல்வமாக்கிவைத்தனன்மனையினீட. (௰௪)

மற்றவர்மனைவியாருமக்களும்பசியால்வாடி
அற்றைநாளிரவுதன்னிலயர்வுறத்துயிலும்போதி
னற்றவக்கொடியனார்க்குக்கனவிடைநாதனல்கத்
தெற்றெனவுணர்ந்துசெல்வங்கண்டபின்சிந்தைசெய்வார். (௰௫)

கொம்பனாரில்லமெங்குங்குறைவிலாநிறைவிற்காணும்
அம்பொனின்குவையுநெல்லுமரிசியுமுதலாயுள்ள
எம்பிரானருளாமென்றே யிருகரங்குவித்துப்போற்றித்
தம்பெருங்கணவனார்க்குத்திருவமுதமைக்கச்சார்ந்தார். (௰௬)

காலனைக்காய்ந்தசெய்ய காலனார்கலயனாராம்
ஆலுமன்புடையசிந்தையடியவரறியுமாற்றாற்
சாலநீபசித்தாயுன்றன் றடநெடுமனையினண்ணிப்
பாலினின்னடிசிலுண்டுபருவரலொழிகவென்றார். (௰௭)

கலயனாரதனைக்கேளாக்கைதொழுதிறைஞ்சிக்கங்கை
அலைபுனற்சென்னியார்தமருண்மறுத்திருக்கவஞ்சித்
தலைமிசைப்பணிமேற்கொண்டுசங்கரன்கோயினின்று
மலைநிகர்மாடவீதிமருங்குதம்மனையைச்சார்ந்தார். (௧௮)

இல்லத்திற்சென்றுபுக்காரிருநிதிக்குவைகளார்ந்த
செல்வத்தைக்கண்டுநின்றுதிருமனையாரைநோக்கி
வில்லொத்தநுதலாயிந்தவிளைவெலாமென்கொலென்ன
அல்லொத்தகண்டனெம்மா னருடரவந்ததென்றார். (௧௯)

மின்னிடைமடவார்கூற மிக்கசீர்க்கலயனார்தா
மன்னியபெருஞ்செல்வத்துவளமலிசிறப்பைநோக்கி
என்னையுமாளுந்தன்மைக்கெந்தையெம்பெருமானீசன்
றன்னருளிருந்தவண்ணமென்றுகைதலைமேற்கொண்டார். (௨௰)

பதுமநற்றிருவின்மிக்கார் பரிகலந்திருத்திக்கொண்டு
கதுமெனக்கணவனாரைக்கண்ணுதற்கன்பரோடும்
விதிமுறைதீபமேந்திமேவுமின்னடிசிலூட்ட
அதுநுகர்ந்தின்பமார்ந்தா ரருமறைக்கலயனார்தாம். (௨௧)

ஊர்தொறும்பலிகொண்டுய்க்குமொருவனதருளினாலே
பாரினிலார்ந்தசெல்வமுடையராய்ப்பண்பினீடிச்
சீருடையரிசிநல்லசெழுங்கறிதயிர்நெய்பாலால்
ஆர்தருகாதல்கூர வடியவர்க்குதவுநாளில். (௨௨)

செங்கண்வெள்ளேற்றின்பாகன்றிருப்பனந்தாளின்மேவும்
அங்கணன்செம்மைகண்டுகும்பிடவரசனார்வம்
பொங்கித்தன்வேழமெல்லாம்பூட்டவுநேர்நில்லாமைக்
கங்குலும்பகலுந்தீராக்கவலையுற்றழுங்கிச்செல்ல, (௨௩)

மன்னவன்வருத்தங்கேட்டுமாசறுபுகழின்மிக்க
நன்னெறிக்கலயனார்தா நாதனைநேரேகாணும்
அந்நெறிதலைநின்றானென் றரசனைவிரும்பித்தாமு
மின்னெறித்தனையவேணிவிகிர்தனைவணங்கவந்தார். (௨௪)

மழவுடைச்செய்யவையர்கோயிலின்மருங்குசென்று
தொழுதுபோந்தன்பினோடுந்தொன்மறைநெறிவழாமை
முழுதுலகினையும்போற்றமுன்னெறிபுரப்போர்வாழுஞ்
செழுமலர்ச்சோலைவேலித்திருப்பனந்தாளைச்சேர்ந்தார். (௨௫)

காதலாலரசனுற்றவருத்தமுங்களிற்றினோடுந்
தீதில்வன்சேனைசெய்யுந்திருப்பணிநேர்படாமை
மேதினிமிசையேயெய்த்துவீழ்ந்திளைப்பதுவுநோக்கி
மாதவக்கலயர்தாமுமனத்தினில்வருத்தமெய்தி. (௨௬)

சேனையுமானைபூண்டதிரளுமெய்த்தெழாமைநோக்கி
யானுமிவ்விளைப்புற்றெய்க்குமிதுபெறவேண்டுமென்று
தேனலர்கொன்றையார்தந்திருமேனிபூங்கச்சேய்ந்த
மானவன்கயிறுபூண்டுகழுத்தினால்வருந்தலுற்றார். (௨௭)

நண்ணியவொருமைப்பன்பினாருறுபாசத்தாலே
திண்ணியதொண்டர்பூட்டியிளைத்தபின்றிறம்பிநிற்க
ஒண்ணுமோகலயனார்தமொருப்பாடுகண்டபோதே
அண்ணலார்நேரேநின்றாரமரரும்விசும்பிலார்த்தார். (௨௮)

பார்மிசைநெருங்கவெங்கும் பரப்பினபயில்பூமாரி
தேர்மலிதானைமன்னன்சேனையுங்களிறுமெல்லாங்
கார்பெறுகானம்போலக்களித்தனகைகள்கூப்பி
வார்கழல்வேந்தன்றொண்டர்மலரடிதலைமேல்வைத்து. (௨௯)

விண்பயில்புரங்கள்வேவவைதிகத்தேரின்மேருத்
திண்சிலைகுனியநின்றார்செந்நிலைகாணச்செய்தீர்
மண்பகுந்தவனுங்காணாமலரடியிரண்டும்யாமோ
பண்புடையடியாரல்லாற்பரிந்துநேர்காணவல்லார். (௩௰)

என்றுமெய்த்தொண்டர்தம்மையேத்தியங்கெம்பிரானுக்
கொன்றியபணிகண்மற்றுமுள்ளனபலவுஞ்செய்து
நின்றவெண்கவிகைமன்னனீங்கவுநிகரிலன்பர்
மன்றிடையாடல்செய்யுமலர்க்கழல்வாழ்த்திவைகி. (௩௧)

சிலபகல்கழிந்தபின்புதிருக்கடவூரினண்ணி
நிலவுதம்பணியிற்றங்கிநிகழுநாள்நிகரில்காழித்
தலைவராம்பிள்ளையாருந்தாண்டகச்சதுரராகும்
அலர்புகழரசுங்கூடவங்கெழுந்தருளக்கண்டு. (௩௨)

மாறிலாமகிழ்ச்சிபொங்கவெதிர்கொண்டுமனையிலெய்தி
ஈறிலாவன்பின்மிக்கார்க்கின்னமுதொக்குமாற்றால்
ஆறுநற்சுவைகளோங்கவமைத்தவரருளேயன்றி
நாறுபூங்கொன்றைவேணிநம்பர்தமருளும்பெற்றார். (௩௩)

கருப்புவில்லோனைக்கூற்றைக்காய்ந்தவர்கடவூர்மன்னி
விருப்புறுமன்புமேன்மேன்மிக்கெழுவேட்கைகூர
ஒருப்படுமுள்ளத்தன்மை யுண்மையாற்றமக்குநேர்ந்த
திருப்பணிபலவுஞ்செய்துசிவபதநிழலிற்சேர்ந்தார். (௩௪)

தேனக்ககோதைமாதர்திருநெடுந்தாலிமாறிக்
கூனற்றண்பிறையினார்க்குக்குங்கிலியங்கொண்டுய்த்த
பான்மைத்திண்கலயனாரைப்பணிந்தவரருளினாலே
மானக்கஞ்சாறர்மிக்கவன்புகழ்வழுத்தலுற்றேன். (௩௫)

குங்கிலியக்கலயநாயனார்புராணமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௪௭௫.

திருச்சிற்றம்பலம்

காவிரிநதிவளஞ்சுரக்குஞ் சோழவளநாட்டிலுள்ள திருக்கடவூரில்வாழும் பிராமணர்குலத்தில் திருவவதாரஞ்செய்து அமிர்தகடேசரிடத்தில் மிகுந்த அன்புள்ளவராய்க் குங்கிலியத்தூபப்பணிசெய்துகொண்டு வருநாளில், இவர் அன்பி னுறுதிப்பாட்டினை உலகத்தாரறிந் துய்யும்பொருட்டுப் பரமசிவனது திருவருளினால் செல்வங்குறைந்துவறுமை மேலிட்டும் அந்தப்பணியில் வழுவாமலிருந்தார். இப்படியிருக்க மக்களும் மற்றவர்களும் இரண்டுபகலுணவின்றிவருந்துகின்றதை இவருடைய மனைவியார்நோக்கித்தன் திருமங்கிலியத்தைக்கொடுத்து நெற்கொள்ளச்சொல்ல, நாயனார் அதனை வாங்கிக்கொண்டு கடைவீதியிற்போம்போது ஒருவர்த்தகன் குங்கிலியப்பொதி கொண்டுவர அதைநோக்கி அவன் கையில் திருமங்கிலியத்தைக்கொடுத்துப் பொதியை வாங்கிக்கொண்டு கோயிலிற்சென்று தூபப்பணி செய்துகொண்டிருக்கையில் அமிர்தகடேசர் நாயனார் மாளிகையில் செல்வம் நிறைத்து அமுதுசெய்து வரும்படி நாயனாருக்குங்கட்டளையிடச் சென்று அடியார்களுடன் புசித்துத் தம்முடையபணியை நடத்திக்கொண்டிருந்து திருப்பனந்தாளில் திருமேனி வளைவாக இருந்த சிவலிங்கப்பெருமானை நேர்நிறுத்தச் சோழன்முயன்று வருந்துவதைஅறிந்து அங்குச் சென்று சிவலிங்கப்பெருமானுக்கும் தம்முடையகழுத்துக்குங் கயிறுமாட்டித் தம்முள்ளத்திலுண்டான அன்பின்வலிமையால் வலித்துச் சிவலிங்கப் பெருமான் நேரே நின்றருளத் தரிசித்து மீட்டுந் திருக்கடவூர்வந்து தமதுபணியை நடத்திச் சிவலோகஞ்சேர்ந்தனர்.— [இந்த மூர்த்தியும் இல்லற நடத்திச் சிவலிங்கத்தினால் மோக்ஷம் பெற்றவர்.] சுவாமிபெயர்- அமிர்தகடேசர். தேவியார்பெயர்- அபிராமித்தாய். பதிகம்—௩. திருப்பனந்தாளில் - சடையப்பநாதர். பெரியநாயகி. பதிகம்—௪.

[ ௩௩ ]



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# மானக்கஞ்சாறநாயனார்

## புராணம்



வேறு.

மேலாறுசெஞ்சடைமேல்வைத்தவர்தாம்விரும்பியது
நூலாறுநன்குணர்வார்தாம்பாடுநோன்மையது
கோலாறுதேன்பொழியக்கொழுங்கனியின்சாறொழுகுங்
காலாறுவயற்கரும்பின்கமழ்சாறூர்கஞ்சாறூர். (௧)

கண்ணீலக்கடைசியர்கள்கடுங்களையிற்பிழைத்தொதுங்கி
உண்ணீர்மைப்புணர்ச்சிக்கண் ணுறைத்துமலர்க்கண்சிவக்குந்
தண்ணீர்மென்கழுநீர்க்குத்தடஞ்சாலிதலைவணங்கு
மண்ணீர்மைநலஞ்சிறந்தவளவயல்களுளவயல்கள் (௨)

புயல்காட்டுங்கூந்தல்சிறுபுறங்காட்டப்புனமயிலின்
இயல்காட்டியிடையொதுங்கவினங்காட்டுமுழத்தியர்கண்
முயல்காட்டுமதிதோற்குமுகங்காட்டக்கண்மூரிக்
கயல்காட்டுந்தடங்கள்பலகதிர்காட்டுந்தடம்பணைகள். (௩)

சேறணிதண்பழனவயற்செழுநெல்லின்கொழுங்கதிர்போய்
வேறருகுமிடைவேலிப்பைங்கமுகின்மிடறுரிஞ்சி
மாறெழுதிண்குலைவளைப்பவண்டலைதண்டலையுழவர்
தாறரியுநெடுங்கொடுவாளனையவுளதனியிடங்கள் (௪)

பாங்கின்மணிப்பலவெயிலுஞ்சுலவெயிலுமுளமாட
ஞாங்கரணிதுகிற்கொடியுநகிற்கொடியுமுளவரங்கம்
ஓங்குநிலைத்தோரணமும்பூரணகும்பமுமுளவாற்
பூங்கணைவீதியிலணைவோர் புலமறுகுஞ்சிலமறுகு. (௫)

மனைசாலுநிலையறத்தின்வழிவந்துவளம்பெருகும்
வினைசாலுமுழவுத்தொழின்மிக்கபெருங்குடிதுவன்றிப்

புனைசாயன்மயிலனையார்நடம்புரியப்புகன்முழவங்
கனைசாறுமிடைவீழ்க்கஞ்சாறுவிளங்கியதால். (௬)

அப்பதியிற்குலப்பதியாயரசர்சேனாபதியாஞ்
செப்பவருங்குடிவிளங்கத்திருவவதாரஞ்செய்தார்
மெய்ப்பொருளையறிந்துணர்ந்தார்விழுமியவேளாண்குடிமை
வைப்பனைய மேன்மையினார் மானக்கஞ்சாறனார். (௭)

பணிவுடையவடிவுடையார்பணியினெடும்பணிமதியின்
அணிவுடையசடைமுடியார்க்காளாகும்பதம்பெற்ற
தணிவில்பெரும்பேறுடையார்தம்பெருமான்கழல்சார்ந்த
துணிவுடையதொண்டர்க்கேயேவல்செயுந்தொழில்பூண்டார். (௮)

மாறில்பெருஞ்செல்வத்தின்வளம்பெருகமற்றதெலாம்
ஆறுலவுஞ்சடைக்கற்றையந்தணர்தமடியாராம்
ஈறில்பெருந்திருவுடையாருடையாவொன்றியாவையுநேர்
கூறுவதன்முன்னவர்தங்குறிப்பறிந்துகொடுத்துள்ளார். (௯)

விரிகடல்சூழ்மண்ணுலகில்விளங்கியவித்தன்மையராம்
பெரியவர்க்குமுன்சிலநாட்பிள்ளைப்பேறின்மையினால்
அரியறியாமலர்க்கழல்களறியாமையறியாதார்
வருமகவுபெறற்பொருட்டுமனத்தருளால்வழுத்தினார். (௰)

குழைக்கலையும்வடிகாதிற்கூத்தனாரருளாலே
மழைக்குதவும்பெருங்கற்பின்மனைக்கிழத்தியார்தம்பால்
இழைக்கும்வினைப்பயன்சூழ்ந்தவிப்பிறவிக்கொடுஞ்சூழல்
பிழைக்குநெறிதமக்குதவப்பெண்கொடியைப்பெற்றெடுத்தார். (௰௧)

பிறந்தபெருமகிழ்ச்சியினாற்பெருமூதூர்களிசிறப்பச்
சிறந்தநிறைமங்கலதூரியமுழங்கத்தேவர்பிரான்
அறந்தலைநின்றவர்க்கெல்லாமளவில்வளந்தருள்பெருக்கிப்
புறந்தருவார்போற்றிசைப் பொற்கொடியைவளர்க்கின்றார். (௰௨)

காப்பணியுமிளங்குழவிப்பதநீங்கிக்கமழ்சுருண்மேற்
பூப்பயிலுஞ்சுருட்குழலும்பொலன்குழையுமுடன்றாழ
யாப்புறுமென்சிறுமணிமேகலையணிசிற்றாடையுடன்
கோப்பமைகிண்கிணியசையக்குறுந்தளிர்மெல்லடிபொதுங்கி (௰௩)

பூணமலர்மென்கரங்களினாற்போற்றியதாதியர்நடுவண்
மனையகத்துமணிமுன்றின்மணற்சிற்றிலிழைத்துமணிக்

கணைகுரனூபுரமலையக்கழன்முதலாப்பயின்றுமுலை
நணைமுகஞ்செய்முதற்பருவநண்ணினளப்பெண்ணமிர்தம். (யச)

உறுகவின்மெய்ப்புறம்பொலியவொளிநுசுப்பைமுலைவருத்த
முறுவல்புறமலராதமுகிழ்முத்தநகையென்னு
நறுமுகைமென்கொடிமருங்கு னளிர்ச்சுருணந்தளிர்ச்செங்கை
மறுவில்குலக்கொழுந்தினுக்குமணப்பருவம்வந்தணைய. (யரு)

திருமகட்குமேல்விளங்குஞ்செம்மணியின்றீபமெனும்
ஒருமகளைமன்னுலகிலோங்குகுலமரபினராய்க்
கருமிடற்றுமறையவனார் தமராயகழலையர்
பெருமகற்குமகட்பேசவந்தணைந்தார்பெருமுதியோர். (யசு)

வந்தமுதறிவோரைமாணக்கஞ்சாறனார்
முந்தைமுறைமையின்விரும்பிமொழிந்தமணத்திறங்கேட்டே
எந்தமதுமரபினுக்குத்தகும்பரிசாலேயுமெனச்
சிந்தைமகிழ்வுறவுரைத்துமணநேர்ந்துசெலவிட்டார். (யஎ)

சென்றவருங்கஞ்சாறர்மணமிசைந்தபடிசெப்பக்
குன்றனையபுயத்தேயர்கோனாருமிகவிரும்பி
நின்றநிலைமையினிரண்டுதிறத்தார்க்குநேராய
மன்றல்வினைமங்கலநாண்மதிநூல்வல்லவர்வகுத்தார். (யஅ)

மங்கலமாஞ்செயல்விரும்பிமகட்பயந்தவள்ளலார்
தங்குலநீள்சுற்றமெலாந்தயங்குபெருங்களிசிறப்பப்
பொங்கியவெண்முளைப்பெய்துபொலங்கலங்களிடைநெருங்கக்
கொங்கலர்த்தண்பொழின்மூதூர்வதுவைமுகங்கோடித்தார். (யகூ)

கஞ்சாறர்மகட்கொடுப்பக்கைப்பிடிக்கவருகின்ற
எஞ்சாதபுகழ்ப்பெருமை யேயர்குலப்பெருமானுந்
தஞ்சால்புநிறைசுற்றந்தலைநிறையமுரசியம்ப
மஞ்சாலுமலர்ச்சோலைக்கஞ்சாற்றின்மருங்கணைய. (உய)

வள்ளலார்மணமவ்வூர்மருங்கணையாமுன்மலர்க்கண்
ஒள்ளிழைபயந்தார்தந்திருமனையிலொருவழியே
தெள்ளுந்திரைநீருலகமுய்வதற்குமற்றவர்தம்
உள்ளநிலைப்பொருளாயவும்பர்பிரான்றாமணைவார். (உக)

வேறு.

முண்டநிறைநெற்றியின்மேன்முண்டித்ததிருமுடியிற்
கொண்டசிகைசிறையின்கட் கோத்தணிந்தவெற்புமணி

பண்டொருவனுடலங்கம்பரித்தநாளதுகடைந்த
வெண்டரளமெனக்காதின் மிசையசையுங்குண்டலமும். (௨௨)

அவ்வென்பினொளிமணிகோத்தணிந்ததிருத்தாழ்வடமும்
பைவ்வனப்பேரரவொழியத்தோளில்லிடும்பட்டிகையும்
மைவ்வந்தநிறக்கேசவடப்பூணுநூலுமனச்
செவ்வன்பர்பவமாற்றுந்திருநீற்றுப்பொக்கணமும். (௨௩)

ஒருமுன்கைத்தனிமணிகோத்தணிந்தவொளிர்ருத்திரமும்
அருமறைநூற்கோவணத்தின்மிசையசையுந்திருவுடையும்
இருநிலத்தின்மிசைதோய்ந்தவெழுதரியதிருவடியும்
திருவடியிற்றிருப்பஞ்சமுத்திரையுந்திகழ்ந்திலங்க. (௨௪)

பொடிமூழ்கிதழலென்னத்திருமேனிதனிற்பொலிந்த
படிநீடுதிருநீற்றின்பரப்பணிந்தபான்மையராய்க்
கொடிநீடுமறுகணைந்துகம்புடையகுளிர்கமலத்
தடிநீடுமனத்தன்பர்தம்மனையினகம்புகுந்தார். (௨௫)

வந்தணைந்தமாவிரதமுனிவரைக்கண்டெதிரெழுந்து
சிந்தைகளிகூர்ந்துமகிழ்சிறந்தபெருந்தொண்டனார்
எந்தைபிரான்புரிதவத்தோரிவ்விடத்தேயெழுந்தருள
உய்ந்தொழிந்தேனடியேனென்றுருகியவன்பொடுபணிந்தார் (௨௬)

நற்றவராம்பெருமானார்நலமிகுமன்பரைநோக்கி
உற்றசெயன்மங்கலமிங்கொழுகுவதென்னெனவடியேன்
பெற்றதொருபெண்கொடிதன்வதுவையெனப்பெருந்தவரு
மற்றுமக்குச்சோபனமாகுவதென்றுவாய்மொழிந்தார். (௨௭)

ஞானச்செய்தவரடிமேற்பணிந்துமனையகநண்ணி
மானக்கஞ்சாறனார்மணக்கோலம்புனைந்திருந்த
தேனக்கமலர்க்கூந்தற்றிருமகளைக்கொண்டணைந்து
பானற்கந்தரமறைத்துவருமவரைப்பணிவித்தார். (௨௮)

தஞ்சரணத்திடைப்பணிந்துதாழ்ந்தெழுந்தமடக்கொடிதன்
மஞ்சுதழைத்தெனவலர்ந்தமலர்க்கூந்தற்புறநோக்கி
அஞ்சலிமெய்த்தொண்டரைப்பார்த்தணங்கிவடன்மயிர்நமக்குப்
* பஞ்சவடிக்காமென்றார்பரவவடித்தலங்கொடுப்பார். (௨௯)

---

* பஞ்சவடி - என்பது - மயிர்ப்பூணநூல் - ௨௩ - வது - திருவிருத்தத்தில் "மைவந்தநிறக்கேச வடப்பூணநூலும்." என்றதனுமுணர்க. மாவிரதசமயத்தார் மயிர்ப்பூணநூலும் எலும்புமணியும் அணிகின்றவர்கள். மாவிரதம் - உட்சமயம் ஆறிலொன்று.

அருள்செய்தமொழிகேளாவடற்சுரிகைதனையுருவிப்
பொருள்செய்தாமெனப்பெற்றே னெனக்கொண்டுபூங்கொடிதன்
இருள்செய்தகருங்கூந்தலடியிலரிந்தெதிர்நின்ற
மருள்செய்தபிறப்பறுப்பார்மலர்க்கரத்தினிடைநீட்ட. (௬௰)

வாங்குவார்போனின்றமறைப்பொருளாமவர்மறைந்து
பாங்கின்மலைவல்லியுடன்பழையமழவிடையேறி
ஓங்கியவிண்மிசைவந்தாரொளிவிசும்புநிலநெருங்கத்
தூங்கியபொன்மலர்மாரிதொழும்பர்தொழுதெதிர்விழுந்தார். (௬௧)

விழுந்தெழுந்துமெய்ம்மறந்த மெய்யன்பர்தமக்குமதிக்
கொழுந்தலையவிழுங்கங்கைகுதித்தசடைக்கூத்தனார்
எழும்பரிவினம்பக்கலுனக்கிருந்தபரிசிந்தச்
செழும்புவனங்களிலேறச்செய்தோமென்றருள்செய்தார். (௬௨)

மருங்குபெருங்கணநாதர்போற்றிசைப்பவானவர்க
ணெருங்கவிடைமேற்கொண்டுநின்றவர்முனின்றவர்தாம்
ஒருங்கியநெஞ்சொடுகரங்களுச்சியின்மேற்குவித்தையர்
பெருங்கருணைத்திறம்போற்றும்பெரும்பேறுநேர்பெற்றார். (௬௩)

தொண்டனார்தமக்கருளிச்சூழ்ந்திமையோர்துதிசெய்ய
இண்டைவார்சடைமுடியாரெழுந்தருளிப்போயினார்
வண்டுவார்குழற்கொடியைக்கைப்பிடிக்கமணக்கோலங்
கண்டவர்கள்கண்களிப்பக்கலிக்காமனார்புகுந்தார், (௬௪)

வந்தணைந்தவேயர்குல மன்னவனார்மற்றந்தச்
சிந்தைநினைவரியசெயல்செறிந்தவர்பாற்கேட்டருளிப்
புந்தியினின்மிகவுவந்துபுனிதனாரருள்போற்றிச்
சிந்தைதளர்ந்தருள்செய்ததிருவாக்கின்றிறங்கேட்டு. (௬௫)

மணந்தளருமிடர்நீங்கிவானவர்நாயகரருளாற்
புனைந்தமலர்க்குழல்பெற்றபூங்கொடியைமணம்புணர்ந்து
தனம்பொழிந்துபெருவதுவையுலகெலாந்தலைசிறப்ப
இனம்பெருகத்தம்முடையவெயின்மூதூர்சென்றணைந்தார். (௬௬)

வேறு.

ஒருமகள்கூந்தறன்னைவதுவைநாளொருவர்க்கீந்த
பெருமையார்தம்மைப்போற்றும்பெருமையென்னளவிற்றே

மருவியகமரிற்புக்கமாவடுவிடேலென்னுளைச
உரிமையாற்கேட்கவல்லார்திறமினியுரைக்கலுற்றேன். (௯௭)

மானக்கஞ்சாறநாயனார்புராணமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தகம் - ௯௱௨௰௨.

திருச்சிற்றம்பலம்.

கஞ்சாறு என்னும் க்ஷேத்திரத்தில் வாழும் வேளாள குலத்தில் திருவவதாரஞ்செய்து சிவநேசமிகக்கொண்டு திருத்தொண்டர்களுக்கே எவல்செய்துஅவர்கள்வேண்டும்பொருள்கள் இல்லையெனுது கொடுக்கும் நியமம் பூண்டு பரமசிவன் அநுக்கிரகத்தினுல் ஒருபெண்குழந்தையைப் பெற்றுச் சீராட்டி வளர்க்க அக்குழந்தை வளர்ந்து மணப்பருவம் அமைந்திருக்க அவர்குலத்துக்குத் தக்க எயர்கோனென்பவர்க்கு விவாகஞ் செய்து கொடுக்கநிச்சயித்துக் கல்யாணப் பந்தல் அலங்கரித்து மாப்பிள்ளையும் மணக்கோலமாக வந்துகொண்டிருக்குந் தருணத்தில் பரமசிவம் தம்முடைய தொண்டனர் அன்பினை யாவரும் தெரிந்து பத்தி செய்து கடைத்தேறுவது காரணமாக ஒரு மாவிரதியர்போலஅந்தக் கல்யாணப்பந்தலில் வந்தபோது மானக்கஞ்சாறநாயனார் கண்டுவந்து அலங்காரஞ் செய்திருக்குந் தம்முடையகுமாரத்தியையுஞ்சேவித்துக்கொள்ளச்சொல்ல வணங்கினபோது அந்தப்பெண் கூந்தலைப்பார்த்து இது நம்முடைய பஞ்சவடிக்காகுமென்ன உடனே நாயனார் சுரிகையினுல் அரிந்து சுவாமிகையிற்கொடுக்க நீட்டும்போது மறைந்து ரிஷபவாகனத்தின்மேல் பார்வதிசமேதராய்த் தரிசனந்தந்தருளி அன்பனுருக்கு முத்தி யளித்தனர். பின்பு வந்த எயர்கோன் பரமசிவம் அசரீரிவாக்கருளிச் செய்யக்கேட்டு, கூந்தல்வளரப்பெற்ற அந்தக்கன்னிகையை விவாகஞ்செய்துகொண்டு மகிழ்ந்து வாழ்ந்தனர். [இந்த நாயனுரும் சிவனடியார்களுக்குத் தொண்டுசெய்து முத்திபெற்றவர்.]







உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அரிவாட்டாயநாயனார்

## புராணம்.



வேறு.

வரும்புனற்பொன்னிநாட்டொருவாழ்பதி
சுரும்புவண்டொடுசூழ்ந்துமுரன்றிட
விரும்புமென்கணுடையவாய்விட்டுநீள்
கரும்புதேன்சொரியுங்கணமங்கலம். (௧)

செந்நெலார்வயற்கட்டசெந்தாமரை
முன்னர்நந்துமிழ்முத்தஞ்சொரிந்திடத்
துன்னுமள்ளர்கைமேற்கொண்டுதோன்றுவார்
மன்னுபங்கயமாநிதிபோன்றுளார். (௨)

வளத்தினீடும்பதியதன்கண்வரி
யுளர்த்துமைம்பாலுடையோர்முகத்தினுங்
களத்தின்மீதுங் கயல்பாய்வயலயற்
குளத்துநீருங்குழையடைநீலங்கள் (௩)

அக்குலப்பதிதன்னிலறநெறித்
தக்கமாமனைவாழ்க்கையிற்றங்கினார்
தொக்கமாநிதித்தொன்மையிலோங்கிய
மிக்கசெல்வத்துவேளாண்டலைமையார். (௪)

தாயனாரெனுநாமந்தரித்துளார்
சேயகாலந்தொடர்ந்துந்தெளிவிலா
மாயனார்மண்கிளைத்தறியாததவத்
தூயநாண்மலர்ப்பாதந்தொடர்ந்துளார். (௫)

மின்னுசெஞ்சடைவேதியர்க்காமென்று
செந்நெலின்னமுதோடுசெங்கீரையு

மன்னுபைந்துணர்மாவடுவுங்கொணர்ந்
தன்னவெல்லாமமுதுசெய்விப்பரால். (௬)

இந்தநன்னிலைபின்னல்வந்தெய்தினுஞ்
சிந்தைநீங்காச்செயலினுவந்திட
முந்தைவேதமுதல்வரவர்வழி
வந்தசெல்வமறியாமைமாற்றினார். (௭)

மேவுசெல்வங் * களிறுண்விளங்கனி
யாவதாகியழிபவுமன்பினாற்
பாவைபங்கர்க்குமுன்புபயின்றவத்
தாவில்செய்கைதவிர்ந்திலர்தாயனார். (௮)

அல்லனல்குரவாயிடக்கூலிக்கு
நெல்லறுத்துமெய்ந்நீடியவன்பினா
னல்லசெந்நெலிற்பெற்றனநாயனார்க்
கொல்லையின்னமுதாக்கொண்டொழுகுவார். (௯)

சாலிதேடியறுத்தவைதாம்பெறுங்
கூலியெல்லாந்திருவமுதாக்கொண்டு
நீலநெல்லரிகூலிகொண்டுண்ணுநாண்
மாலயற்கரியாரதுமாற்றுவார் (௰)

வேறு,

நண்ணியவயல்களெல்லாநாடொறுமுன்னங்காண
வண்ணவார்கதிர்ச்செஞ்சாலியாக்கிடமகிழ்ந்துசிந்தை
அண்ணலாரறுத்தகூலிகொண்டிஃதடியேன்செய்த
புண்ணியமென்றுபோதவமுதுசெய்விப்பாரானார். (௰௧)

வைகலுமுணவிலாமைமனைப்படப்பையினிற்புக்கு
நைகரமில்லாவன்பினங்கைகையடகுகொய்து
பெய்கலத்தமைத்துவைக்கப்பெருந்தகையருந்தித்தங்கள்
செய்கடன்முட்டாவண்ணந்திருப்பணிசெய்யுநாளில். (௰௨)

மனைமருங்கடகுமாள * வடநெடுவானமீனை
அனையவர்தண்ணீர்வார்க்கவமுதுசெய்தன்பனாரும்
வினைசெயன்முடித்துச்செல்லமேவுநாளொருநாண்மிக்க
முனைவனார்தொண்டர்க்கங்குநிகழ்ந்ததுமொழியப்பெற்றேன் (௰௩)

* களிறுண் விளங்கனி என்பது - வேழமுண்ட விளாங்கனி. வேழமாவது அக்கனிக்குண்டாவதோர்நோய்- அது தேரை மோந்த காயெனத் தேங்காய்க் குண்டாகுமோர்நோய் போல்வதென்றறிக.

* வடநெடுவானமீன் - என்பது - அருந்ததி.

முன்புபோன்முதல்வனாரையமுதுசெய்விக்குமேனும்
அன்புபோற்றூயசெந்நெலரிசிமாவடுமென்கீரை
துன்புபோமனத்துத்தொண்டர்கூடையிற்சுமந்துசெல்லப்
பின்புபோமனைவியார் * ஆன்பெற்றவஞ்சேந்திச்சென்றார். (௰௪)

போதராநின்றபோதுபுலர்ந்துகாறளர்ந்துதப்பி
மாதாரர்வருந்திவீழ்வார்மட்கலமூடுகையாற்
காதலாலணைத்துமெல்லாங்கமரிடைச்சிந்தக்கண்டு
பூதநாயகர்தந்தொண்டர்போவதங்கினியெனென்று. (௰௫)

நல்லசெங்கீரைதூயமாவடுவரிசிசிந்த
அல்லதீர்த்தாளவல்லாரமுதுசெய்தருளும்பே
றெல்லையிறீமையேனிங்கெய்திடப்பெற்றிலேனென்
றொல்லையிலரிவாட்பூட்டிபூட்டியையரியலுற்றார். (௰௬)

ஆட்கொள்ளுமையர்தாமிங்கமுதுசெய்திலர்கொலென்னுப்
பூட்டியவரிவாட்பற்றிப்புரையறவிரவுமன்பு
காட்டியநெறியினுள்ளந்தண்டறக்கழுத்திரேடும்
ஊட்டியுமரியாநின்றாருறுபிறப்பரிவாரொத்தார். (௰௭)

மாசறுசிந்தையன்பர்கழுத்தரியரிவாட்பற்றும்
ஆசில்வண்கையைமாற்றவம்பலத்தாடுமையர்
வீசியசெய்யகையுமாவடு * விடேல்விடேலென்
றோசையுங்கமரினின்றுமொக்கவேயெழுந்ததன்றே. (௰௮)

திருக்கைசென்றரிவாட்பற்றுந்திண்கையைப்பிடித்தபோது
வெருக்கொடங்கூறுநீங்கவெவ்வினைவிட்டுநீங்கிப்
பெருக்கவேமகிழ்ச்சிநீடத்தப்பிரான்பேணித்தந்த
அருட்பெருங்கருணைநோக்கியஞ்சலிகூப்பிநின்று. (௰௯)

அடியனேனறிவிலாமைகண்டுமென்னடிமைவேண்டிப்
படியிசைக்கமரில்வந்திங்கமுதுசெய்பரனேபோற்றி
துடியிடைபாகமானதூயநற்சோதிபோற்றி
பொடியணிபவளமேனிப்புரிசடைப்புராணபோற்றி. (௨௰)

என்றவர்போற்றிசெய்யவிடபவாகனராய்த்தோன்றி
நன்றுநீபுரிந்தசெய்கைநன்னுதலுடனேகூட
என்றுநம்முலகில்வாழ்வாயென்றவருடனேநண்ண
மன்றுளேயாடுமையர்மழவிடையுகைத்துச்சென்றார். (௨௰௧)

---

* ஆன்பெற்றவஞ்சு - என்பது - பஞ்சகவ்வியம்.

* விடேலென்பது - அநுகரணவோசை.

பரிவுறுசிந்தையன்பர்பரம்பொருளாகியுள்ள
பெரியவரமுதுசெய்யப்பெற்றிலேனென்றுமாவின்
வரிவடுவிடேலெனாமுன்வன்கழுத்தரிவாள்பூட்டி
அரிதலாலரிவாட்டாயராயினார்தூயநாமம் (௨௨)

முன்னிலைதமோயாகமுதல்வனாரமுதுசெய்யச்
செந்நெலினரிசிசிந்தச்செவியுறவடுவினோசை
அந்நிலைகேட்டதொண்டரடியிணைதொழுதுவாழ்த்தி
மன்னுமானாயர்செய்கையறிந்தவாவழுத்தலுற்றேன். (௨௩)

அரிவாட்டாயநாயனார்புராண-முற்றிற்று.

ஆ-திருவிருத்தம்-௯௩௫

திருச்சிற்றம்பலம்.

சோழவளநாட்டில் செல்வத்தால்மிகுந்த கணமங்கலம் என்னும்பதியினிடத்து வேளாளகுலத்துத் திருவவதாரஞ்செய்து ஸ்ரீகயிலாய பதியினிடத்தில்மிகுந்த அன்புடையவராய்ச்சுவாமிக்குநிவேதனஞ்செய்யும்படி,செந்நெலரிசி, செங்கீரை, மாம்பிஞ்சு, இவைகளைச்சிவாலயத்திற்கொண்டுபோய்க் கொடுக்கும் நித்தியநியமங்கொண்டுவாழும்நாளில் வறுமைவந்தகாலத்திலும் இந்நிலையில் வழுவாமலிருப்பவரென்று இவ்வுலகத்தாரறிந்து பத்திசெய்வது காரணமாக தொண்டனார்க்கு வறுமை வரும்படி பரமசிவம் திருவுளங்கொண்டதினால் செல்வமாறினபோது கூலிக்கு நெல்லரிந்து சப்பாநெல் வருமாகில் அது சுவாமிநிவேதனத்துக்கும் மற்றையநெல் வருமாகில் தம்முடைய உணவுக்குமாகக் கொண்டு பத்திசெலுத்தப் பரமசிவத்தின் திருவிளையாட்டால் சப்பாநெற்களேவிளைய அந்தநெற்களையரிவதனால் வருங்கூலி நெல்லையெல்லாம் சுவாமி நிவேதனத்துக்கே கொடுத்துத் தம்முடைய மனைவியார் அவித்துப் படைக்கும் இலைக்கறியமுதையுண்டும் சிலநாளதுவுமின்றிச் சுத்தசலமுண்டுந் தம்பணி தவறாமல் நடத்திக்கொண்டு வருகின்ற நாளில் ஒருநாள் அரிசி, செங்கீரை, மாம்பிஞ்சு, இவைகளைக் கூடையிலெடுத்துக் கொண்டு போம்போது கால்தவறி வழியிலுள்ளநிலவெடிப்பில் யாவும் விழுந்துவிட மனம்வருந்தி அரிவாளினால் தம்முடைய கழுத்தையரிந்துகொள்ளும்போது திருவுளமிரங்கிய பரமசிவனுடைய திருக்கரம் அவ்வெடிப்பினின்றும் வெளிவந்து தொண்டனார் கையைப் பற்றிக் கொண்டதுமன்றி வெடிப்பில் சிந்திய பொருளை

நிவேதனங் கொண்டது தெரியும்வண்ணம் மாம்பிஞ்சினைக் கடித்த ஓசையும் உண்டாகியது, அன்றியும் அரிவாளினால் அரியப்பட்ட ஊறும் நீங்கிற்று உடனே பரமசிவம் ரிஷபவாகனா ரூடராய்த்தெரிசனங் கொடுத்து அன்பருடன் சிவலோகத்துக் கெழுந்தருளினர். [அரிவாளினால் கழுத்தையரிந்த காரணம்பற்றி அரிவாட்டாய நாயனாரென்னுந் திருநாமம் பெற்றனர்.] இவரும் இல்லறத்தி லிருந்து சிவலிங்கத்தால் முத்தியடைந்தவர்.





உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.



# ஆனாய நாயனார்புராணம்.



வேறு.

மாடுவிரைப்பொலிசோலையில்வான்மதிவந்தேறச்
சூடுபரப்பியபண்ணை வரம்புசுரும்பேற
ஈடுபெருக்கியபோர்களின்மேகமிளைத்தேற
நீடுவளத்ததுமேன்மழநாடெனுநீர்நாடு. (க)

நீவிநிதம்பவுழத்தியர்நெய்க்குழன்மைச்சூழன்
மேவியுறங்குவமென்சிறைவண்டுவிரைக்கஞ்சப்
பூவிலுறங்குவநீள்கயல்பூமலிதேமாவின்
காவினறுங்குளிர்நீழலுறங்குவகார்மேதி. (உ)

வன்னிலைமள்ளருடைப்பவெழுந்தமரக்கோவை
பன்முறைவந்தெழுமோசைபயின்றமுழக்கத்தால்
அன்னமருங்குறைதண்டுறைவாவியதன்பாலைக்
கன்னலடும்புகையான்முகில்செய்வகருப்பாலை. (ந)

பொங்கியமாநதிநீடலையுந்துபுனற்சங்கந்
துங்கவிலைக்கதலிப்புதன்மீதுதொடக்கிப்போய்த்
தங்கியபாசடைசூழ்கொடியூடுதவழ்ந்தேறிப்
பைங்கமுகின்றலைமுத்தமுதிர்க்குவபாளையென. (௪)

அல்லிமலர்ப்பழனத்தயலாகிளவானினும்
ஒல்லைமுழுப்பையுகைப்பினுழக்குமுழக்கன்று.
கொலலைமடக்குறுமான்மறியோடுகுதித்தோடு
மல்குவளத்ததுமுல்லையுடுத்தமருங்கோர்பால். (௫)

கண்மலர்காவிகள்பாயவிருப்பனகார்முல்லைத்
தண்ணகைவெண்முகைமேவுசுரும்புதடஞ்சாலிப்
பண்ணையெழுங்கயல்பாயவிருப்பனகாயாவின்
வண்ணநறுஞ்சினைமேவியவஞ்சிறைவண்டானம். (௬)

பொங்கரில்வண்டுபுறம்பலைசோலைகண்மேலோடும்
வெங்கதிர்தங்கவிளங்கியமேன்மழநன்னாடாம்
அங்கதுமண்ணினருங்கலமாகவதற்கேயோர்
மங்கலமானதுமங்கலமாகியவாழ்மூதூர். (௭)

ஒப்பில்பெருங்குடிநீடியதன்மையிலோவாமே
தப்பில்வளங்கள்பெருக்கியறம்புரிசால்போடுஞ்
செப்பவுயர்ந்தசிறப்பின்மலிந்ததுசீர்மேவும்
அப்பதிமன்னியவாயர்குலத்தவரானாயர். (௮)

ஆயர்குலத்தைவிளக்கிடவந்துதயஞ்செய்தார்
தூயசுடர்த்திருநீறுவிரும்புதொழும்புள்ளார்
வாயினின்மெய்யின்வழுத்துமனத்தின்வினைப்பாலிற்
பேயுடனாடுபிரானடியல்லதுபேணாதார். (௯)

ஆனிரைகூடவகன்புறவிற்கொடுசென்றேறிக்
கானுறைதீயவிலங்குறும்நோய்கள்கடிந்தெங்குந்
தூநறும்மென்புலருந்திவிரும்பியதூநீருண்
டூனமிலாயமுலப்பிலபல்கவளித்துள்ளார். (௰)

கன்றொடுபான்மறைநாகுகறப்பனபாலாவும்
புன்றலைமென்சினையானொடுநீடுபுனிற்றாவும்
வெற்றிவிடைக்குலமோடுமினந்தொறும்வெவ்வேறே
துன்றிநிறைந்துளசூழலுடன்பலதொழுங்கள். (௰௧)

ஆவினிரைக்குலமப்படி பல்கவளித்தென்றுங்
கோவலரேவல்புரிந்திடவாயர்குலம்பேணுங்
காவலர்தம்பெருமானடியன்புறுகானத்தின்
மேவுதுளைக்கருவிக்குழல்வாசனைமேல்கொண்டார். (௰௨)

வேறு.

முந்தைமறைநூன்மரபின்மொழிந்தமுறையெழுந்தவே
யந்தமுதலளிரண்டிலரிந்துநரம்புறுதானம்
வந்ததுளைநிரையாக்கிவாயுமுதல்வழங்குதுளை
யந்தமிலசீரிடையிட்டினங்குலியெண்களினமைத்து. (௰௩)

ஈமத்தகுழற்கருவியினிலெம்பிரானெழுத்தஞ்சு
தொடுத்தமுறையேழிசையின்சுருதிபெறவாசித்துத்
தடுத்தசராசரங்களெலாந்தங்கவருந்தங்கருணை
யடுத்தவிசையமுதளித்துச்செல்கின்றாரங்கொருநாள். (௰௪)

வாசமலர்ப்பிணைபொங்கமயிர்நுழுதிமருங்குயர்ந்த
தேசுடையசிகழிகையிற்செறிகண்ணித்தொடைசெருகிப்
பாசிலைமென்கொடியின்வடம்பயிலநறுவிலிபுனைந்து
காசுடைநாணதற்கயலேகருஞ்சுருளின்புறங்கட்டி. (௰௫)

வெண்கோடலிலைச்சுருளிற்பைந்தோட்டுவினைத்தோன்றித்
தண்கோலமலர்புனைந்தவடிகாதிலொளிதயங்கத்
திண்கோலநெற்றியின்மேற்றிருநீற்றினொளிகண்டோர்
கண்கோடனிறைந்தாராக்கவின்விளங்கமிசையணிந்து. (௰௬)

நிறைந்தநீறணிமார்பினிரைமுல்லைமுகைசுருக்கிச்
செறிந்தபுனைவடந்தாழத்திரடோளின்புடையலங்கல்
அறைந்தசுரும்பிசையரும்பவரையுடுத்தமரவுரியின்
புறந்தழையின்மலிகானைப்பூம்பட்டுப்பொலிந்தசைய. (௰௭)

சேவடியிற்றொடுதோலுஞ்செங்கையினில்வெண்கோலு
மேவுமிசைவேய்ங்குழலுமிகவிளங்கவினைசெய்யுங்
காவல்புரிவல்லாயர்கன்றுடையானிரைசூழப்
பூவலர்தார்க்கோவலனார் நிரைகாக்கப்புறம்போந்தார். (௰௮)

நீலமாமஞ்ஞையேங்கநிரைகொடிபுறவம்பாடக்
கோலவெண்முகையேர்முல்லைக்கோபவாய்முறுவல்காட்ட
ஆலுமின்னிடைசூழ்மாலைப்பயோதரமசையவந்தாள்
ஞாலநீடரங்கிலாடக்காரெனும்பருவநல்லாள். (௰௯)

எம்மருங்குநிரைபரப்பவெடுத்தகோலுடைப்பொதுவர்
தம்மருங்குதொழுதணையத்தண்புறவில்வருந்தலைவர்
அம்மருங்குதாழ்ந்தசினையலர்மருங்குமதுவுண்டு
செம்மருந்தண்சுரும்புசுழல்செழுங்கொன்றைமருங்கணைந்தார். (௨௰)

சென்றணைந்தவானாயர்செய்தவிரைத்தாமமென
மன்றன்மலர்த்துணர்தூக்கிமருங்குதாழ்சடையார்போ
னின்றநறுங்கொன்றையினைநேர்நோக்கிநின்றுருகி
யொன்றியசிந்தையிலன்பையுடையவர்பான்மடைதிறந்தார். (௨௧)

அன்பூறிமிசைப்பொங்குமமுதவிசைக்குழலொலியால்
வன்பூதப்படையாளியெழுத்தைந்தும்வழுத்தித்தா
முன்பூதிவருமளவின்முறைமையேயெவ்வுயிரும்
என்பூடுகரைந்துருக்குமின்னிசைவேய்ங்கருவிகளில் (௨௨)

எழுவிரலிடையிட்டவின்னிசைவங்கியமெடுத்துத்
தாழுமலர்வரிவண்டுதாவிப்பிடிப்பனபோற்
சூழுமுரன்றெழநின்றுதூயபெருந்தனித்துளையில்
வாழியநந்தோன்றலார்மணியதரம்வைத்தூத. (௨௩)

முத்திரையேமுதலனைத்துமுறைத்தானஞ்சோதித்து
வைத்ததுளையாராய்ச்சிவக்காணைவழிபோக்கி
யொத்தநிலையுணர்ந்ததற்பின்னொன்றுமுதல்படிமுறையால்
அத்தகைமையாரோசையமரோசைகளினமைத்தார் (௨௪)

மாறுமுதற்பண்ணினபின்வளர்முல்லைப்பண்ணாக்கி
யேறியதாரமுமுழையுங்கிழமைகொளவிடுந்தானம்
ஆறுலவுஞ்சடைமுடியாரஞ்செழுத்தினிசைபெருகக்
கூறியபட்டடைக்குரலாங்கொடிப்பாலையினிறுத்தி. (௨௫)

ஆயவிசைப்புகணான்கினமைந்தபுகல்வகையெடுத்து
மேயதுளைப்பற்றுவனவிடுவனவாம்விரனிரையிற்
சேயவொளியிடையலையத்திருவாளனெழுத்தஞ்சுந்
தூயவிசைக்கிளைகொள்ளுந்துறையஞ்சின்முறைவிளைத்தார். (௨௬)

மந்தரத்துமத்திமத்துந்தாரத்தும்வரன்முறையாற்
றந்திரிக்கண்மெலிவித்துஞ்சமங்கொண்டுவலிவித்தும்
அந்தரத்துவிரற்றொழில்களளவுபெறவசைத்தியக்கிச்
சுந்தரச்செங்கனிவாயுந்துளைவாயுந்தொடக்குண்ண, (௨௭)

எண்ணியநூற்பெருவண்ணமிடைவண்ணம்வனப்பென்னும்
வண்ணவிசைவகையெல்லாமாதுரியநாதத்தி
னண்ணியபாணியலுந்தூக்குநடைமுதற்கதியிற்
பண்ணமையவெழுமோசையெம்மருங்கும்பரப்பினார். (௨௮)

வள்ளலார்வாசிக்குமணித்துளைவாய்வேய்ங்குழலின்
உள்ளுறையஞ்செழுத்தாகவொழுகியெழுமதுரவொலி
வெள்ளநிறைந்தெவ்வுயிர்க்குமேலமரர்தருவிளைதேன்
றெள்ளமுதினுடன்கலந்துசெவிவார்ப்பதெனத்தேக்க (௨௯)

ஆனிரைகளறுகருந்தியசைவிடாதணைந்தயரப்
பானுரைவாய்த்தாய்முலையிற்பற்றுமிளங்கன்றினமுந்
தானுணவுமறந்தொழியத்தடமருப்பின்விடைக்குலமு
மான்முதலாங்கான்விலங்குமயிர்முகிழ்த்துவந்தணைய (௩௰)

ஆடுமயிலினங்களுமங்கசைவயர்ந்துமருங்கணுக
ஊடுசெவியிசைநிறைந்தவுள்ளமொடுபுள்ளினமு
மாடுபடிந்துணர்வொழியமருங்குதொழில்புரிந்தொழுகுங்
கூடியவன்கோவலருங்குறைவினையின்றுறைநின்றார். (௩௧)

பணிபுவனங்களிலுள்ளார்பயில்பிலங்கள்வழியணைந்தார்
மணிவரைவாழரமகளிர்மருங்குமயங்கினர்மலிந்தார்
தணிவிலொளிவிஞ்சையர்கள்சாரணர்கின்னரரமரர்
அணிவிசும்பினயர்வெய்திவிமானங்கண்மிசையணைந்தார். (௩௨)

சுரமகளிர்கற்பகப்பூஞ்சோலைகளின்மருங்கிருந்து
கரமலரினமுதூட்டுங்கனிவாய்மென்கிள்ளையுடன்
விரவுநறுங்குழலலையவிமானங்கள்விரைந்தேறிப்
பரவியவேழிசையமுதஞ்செவிமடுத்துப்பருகினார். (௩௩)

நலிவாருமெலிவாருமுணர்வொன்றாய்நயத்தலினான்
மலிவாய்வெள்ளெயிற்றரவமயின்மீதுமருண்டுவிழுஞ்
சலியாதநிலையரியுந்தடங்கரியுமுடன்சாரும்
புலிவாயின்மருங்கணையும்புலவாயபுல்வாயும். (௩௪)

மருவியகால்விசைத்தசையாமரங்கண்மலர்ச்சினைசலியா
கருவரைவீழருவிகளுங்கான்யாறுங்கலித்தோடா
பெருமுகிலின்குலங்கள்புடைபெயர்வொழியப்புனல்சோரா
இருவிசும்பினிடைமுழங்காவெழுகடலுமிடைதுளும்பா. (௩௫)

இவ்வாறு நிற்பனவுஞ்சரிப்பனவுமிசைமயமாய்
மெய்வ்வாழும்புலன்கரணமேவியவொன்றாயினவான்
மொய்வ்வாசநறுங்கொன்றைமுடிச்சடையாரடித்தொண்டர்
செவ்வாயின்மிசைவைத்ததிருக்குழல்வாசனையுருக்க. (௩௬)

மெய்யன்பர்மனத்தன்பின்விளைந்தவிசைக்குழலோசை
வையந்தன்னையுநிறைத்துவானந்தன்வயமாக்கிப்
பொய்யன்புக்கெட்டாதபொற்பொதுவினடம்புரியும்
ஐயன்றன்றிருச்செவியினருகணையப்பெருகியதால். (௩௭)

ஆனாயர்குழலோசைகேட்டருளியருட்கருணை
தானாயதிருவுள்ளமுடையதவவல்லியுடன்
கானாதிகாரணராங்கண்ணுதலார்விடையுகைத்து
வானாறுவந்தணைந்தார்மதிநாறுஞ்சடைதாழ. (௩௮)

திசைமுழுதுங்கணநாதர்தேவர்கட்குமுன்னெருங்கி
மிசைமிடைந்துவரும்பொழுதுவேற்றொலிகள்விரவாமே
யசையவெழுங்குழனாதத்தஞ்செழுத்தாற்றமைப்பரவும்
இசைவிரும்புங்கூத்தனாரெழுந்தருளியெதிர்நின்றார். (௩௯)

முன்னின்றமழவிடைமேன்முதல்வனாரெப்பொழுதுஞ்
செந்நின்றமனப்பெரியோர்திருக்குழல்வாசனைகேட்க
இந்நின்றநிலையேநம்பாலணைவாயெனவவரும்
அந்நின்றநிலைபெயர்ப்பாரையர்திருமருங்கணைந்தார். (௪௰)

விண்ணவர்கண்மலர்மாரிமிடைந்துலகமிசைவிளங்க
எண்ணிலருமுனிவர்குழாமிருக்குமொழியெடுத்தேத்த
அண்ணலார்குழற்கருவியருகிசைத்தங்குடன்செல்லப்
புண்ணியனாரெழுந்தருளிப்பொற்பொதுவினிடைப்புக்கார். (௪௧)

வேறு

தீதுகொள்வினைக்குவாரோஞ்செஞ்சடைக்கூத்தர்தம்மைக்
காதுகொள்குழைகள்வீசுங்கதிர்நிலவிருள்கால்சீப்ப
மாதுகொள்புலவிநீக்கமனையிலடையிருகாற்செல்லத்
தூதுகொள்பவராநம்மைத்தொழும்புகொண்டுரிமைகொள்வார். ()

ஆனாயநாயனார்புராணமுற்றிற்று

ஆக திருவிருத்தம் - ௩௭௭.

திருச்சிற்றம்பலம்.

மேன்மழநாட்டுள்ள மங்கலவூர்ப் பொதுவர்குலஞ் சிறப்புறத் திருவவதாரஞ் செய்து பரமசிவனிடத்தில் அன்புவைத்து விபூதி சாதனம் விரும்புகின்ற தொழும்புள்ளவராய்ப்பசுவர்க்கங்களைப் போஷித்துப் பஞ்சாக்ஷரங்களை அமைத்து வேய்ங்குழலூது நியமத்துடன் வாழ்கின்றவர், ஒருநாள் பசுவர்க்கங்களை ஏவலாளிகளோட்டிக்கொண்டுவரத் தாமுஞ்சென்று ஒரு சரக்கொன்றை மரத்தைக்கண்டு அது காய்களாலுமலர்களாலுஞ் சடைமுடியுள்ள பரமசிவம்போற்றோன்ற! அன்புறல மனமுருகித் தியானித்து இசைவழுவாமல்முறைமையுடன் வேய்ங்குழலில் பஞ்சாக்ஷரத்தை அமைத்துத்தோத்திரஞ்செய்யப்பரமசிவம் திருவுளமகிழ்ந்து பார்வதிதேவியாருடன் ரிஷபவாகனத்தின் மேலெழுந்தருளி அவ்வேய்ங்குழலிசை நாதத்தைத் திருச்செவிகளிலேற்றுக் கருணைகூர்ந்து தொண்டனாரிவ்வாறே தம்மருகிருந்து வேய்ங்குழல் வாசிக்கும்படியுடன்கொண்டெழுந்தருளினர். [இந்தநாயனா ரில்லறத்திலிருந்து சிவலிங்கத்தால் முத்திபெற்றவர்.]—[அமர்நீதி நாயனார்புராணமுற்றுப்பெற்றவிடத்தும், ஈண்டுஞ் சுந்தரமூர்த்திசுவாமிகளைத் துதிசெய்ததென்னையெனின், "ஆரூரனாரூரிலம்மானுக்காளே" எனத் திருத்தொண்டத்தொகைத் தேவாரகூறுகள் தோறும் அமைந்திருப்பதினால் என்றுணர்க.—இனி இவ்வாறேசருக்கமுடிவுதோறுமிருக்கும் நம்பியாண்டார் நம்பி அருளிச்செய்த திரு அந்தாதியினு மிவ்வாறே சுந்தரமூர்த்தி சுவாமிகளைத் துதிசெய்திருக்கின்றனர்.]



## இலைமலிந்த சருக்கம்

முற்றுப்பெற்றது.





உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

மூன்றாவது

மும்மையாலுலகாண்டசருக்கம்.

# மூர்த்திநாயனார்புராணம்.



வேறு.

சீர்மன்னுசெல்வக்குடிமல்குசிறப்பினோங்குங்
கார்மன்னுசென்னிக்கதிர்மாமணிமாடவைப்பு
நார்மன்னுசிந்தைப்பலநற்றுறைமாந்தர்போற்றும்
பார்மன்னுதொன்மைப்புகழ்பூண்டதுபாண்டிநாடு. (௧)

சாயுந்தளிர்வல்லிமருங்குனெடுந்தடங்கண்
வேயும்படுதோளியர்பண்படுமின்சொற்செய்ய
வாயும்படுநீள்கரைமண்பொருந்தண்பொருந்தம்
பாயுங்கடலும்படுநீர்மைபணித்தமுத்தம். (௨)

மொய்வைத்தவண்டின்செறிசூழன்முரன்றசந்தின்
மைவைத்தசோலைமலயந்தரவந்தமந்த
மெய்வைத்தகாலுந்தருஞாலமளந்தமேன்மைத்
தெய்வத்தமிழுந்தருஞ்செவ்விமணஞ்செயீரம். (௩)

சூழுமிதழ்ப்பங்கயமாகவத்தோட்டின்மேலாள்
தாழ்வின்றியென்றுந்தனிவாழ்வதத்தையலொப்பார்
யாழின்மொழியிற்குழலின்னிசையுஞ்சுரும்பும்
வாழுநகரமதுராபுரியென்பதாகும். (௪)

சால்பாயமும்மைத்தமிழ்தங்கியவங்கண்மூதூர்
நூல்பாயிடத்தும்முளநான்றலைமேதிபாயப்
பால்பாய்முலைதோய்மதுப்பங்கயம்பாயவெங்குஞ்
சேல்பாய்தடத்தும்முளசெய்யுண்மிக்கேறுசங்கம். (௫)

மந்தானிலம்வந்தசைபந்தரின்மாடமுன்றிற்
பந்தாடியமங்கையர்பங்கயச்செங்கைதாங்குஞ்
சந்தார்முலைமேலனதாழ்குழைவாண்முகப்பொற்
செந்தாமரைமேலனநித்திலஞ்சேர்ந்தகோவை (௬)

மும்மைப்புவனங்களின்மிக்கதன்றேயம்மூதூர்
மெய்ம்மைப்பொருளாந்தமிழ்நூலின்விளங்குவாய்மைச்
செம்மைப்பொருளுந்தருவார்திருவாலவாயில்
எம்மைப்பவந்தீர்ப்பவர்சங்கமிருந்ததென்றால். (௭)

அப்பொற்பதிவாழ்வணிகக்குலத்தான்றதொன்மைச்
செப்பத்தகுசீர்க்குடிசெய்தவஞ்செய்யவந்தார்
எப்பற்றினையுமறுத்தேறுகைத்தேறுவார்தாண்
மெய்ப்பற்றெனப்பற்றிவிடாதவிருப்பின்மிக்கார். (௮)

நாளும்பெருங்காதனயப்புறும்வேட்கையாலே
கேளுந்துணையும்முதற்கேடில்பதங்களெல்லாம்
ஆளும்பெருமானடித்தாமரையல்லதில்லார்
மூளும்பெருகன்பெனுமூர்த்தியார்மூர்த்தியார்தாம் (௯)

அந்திப்பிறைசெஞ்சடைமேலணியாலவாயில்
எந்தைக்கணிசந்தனக்காப்பிடையென்றுமுட்டா
அந்தச்செயலின்னிலைநின்றடியாருவப்பச்
சிந்தைக்கினிதாயதிருப்பணிசெய்யுநாளில் (௰)

கானக்கடிசூழ்வடுகக்கருநாடர்காவன்
மானப்படைமன்னன்வலிந்துநிலங்கொள்வானா
யானைக்குதிரைக்கருவிப்படைவீரர்திண்டேர்
சேனைக்கடலுங்கொடுதென்றிசைநோக்கிவந்தான். (௰௧)

வந்துற்றபெரும்படைமண்புதையப்பரப்பிச்
சந்தப்பொதியிற்றமிழ்நாடுடைமன்னன்வீரஞ்
சிந்தச்செருவென்றுதன்னாணைசெலுத்துமாற்றாற்
கந்தப்பொழில்சூழ்மதுராபுரிகாவல்கொண்டான். (௰௨)

வல்லாண்மையின்வண்டமிழ்நாடுவளப்படுத்து
நில்லாநிலையொன்றியவின்மையினீண்டமேரு
வில்லானடிமைத்திறமேவியநீற்றின்சார்பு
செல்லாதருகந்தர்திறத்தினிற்சிந்தைசார்ந்தான். (௰௩)

தாழுஞ்சமண்கையர்தவத்தைமெய்யென்றுசார்ந்து
வீழுங்கொடியோனதுவன்றியும்வெய்யமுன்னைச்
சூழும்வினையாலரவஞ்சுடர்த்திங்களோடும்
வாழுஞ்சடையானடியாரையும்வன்மைசெய்வான். (௰௪)

செக்கர்ச்சடையார்விடையார்திருவாலவாயுண்
முக்கட்பரனார்திருத்தொண்டராமூர்த்தியாரா
மைக்கற்புரைநெஞ்சுடைவஞ்சகன்வெஞ்சமண்பேர்
எக்கர்க்குடனாகியிகழ்ந்தனசெய்யவெண்ணி. (௰௫)

அந்தமிலவாமிறைசெய்யவுமன்பனார்தா
முந்தைம்முறைமைப்பணிமுட்டலர்செய்துவந்தார்
தந்தம்பெருமைக்களவாகியசார்பினிற்கும்
எந்தம்பெருமக்களையாவர்தடுக்கவல்லார். (௰௬)

எள்ளுஞ்செயல்வன்மைகளெல்லையில்லாதசெய்யத்
தள்ளுஞ்செயலில்லவர்சந்தனக்காப்புத்தேடிக்
கொள்ளுந்துறையுமடைத்தான்கொடுங்கோன்மைசெய்வான்
றெள்ளும்புனல்வேணியர்க்கன்பருஞ்சிந்தைநொந்து. (௰௭)

புன்மைச்செயல்வல்லமண்குண்டரிற்போதுபோக்கும்
வன்மைக்கொடும்பாதகன்மாய்ந்திடவாய்மைவேத
நன்மைத்திருநீற்றுயர்நன்னெறிதாங்குமேன்மைத்
தன்மைப்புவிமன்னரைச்சார்வதென்றென்றுசார்வார். (௰௮)

காய்வுற்றசெற்றங்கொடுகண்டகன்காப்பவுஞ்சென்
றாய்வுற்றகொட்பிற்பகலெல்லைபடங்கநாடி
மேய்வுற்றநற்சந்தனமெங்கும்பெறாதுசிந்தை
சாய்வுற்றிடவந்தனர்தம்பிரான்கோயிறன்னில். (௰௯)

நட்டம்புரிவாரணிநற்றிருமெய்ப்பூச்சின்று
முட்டும்பரிசாயினுந்தேய்க்குங்கைமுட்டாதென்று
வட்டந்திகழ்பாறையின்வைத்துமுழங்கைதேய்த்தார்
கட்டும்புறந்தோனரம்பென்புகரைந்துதேய. (௨௰)

கல்லின்புறந்தேய்த்தமுழங்கைகலுழ்ந்துசோரி
செல்லும்பரப்பெங்கணுமென்புதிறந்துமூளை
புல்லும்படிகண்டுபொறுத்திலர்தம்பிரானார்
அல்லின்கணெழுந்ததுவந்தருள்செய்தவாக்கு. (௨௧)

அன்பின்றுணிவாலிதுசெய்திடலையவுன்பால்
வன்புன்கண்விளைத்தவன்கொண்டமண்ணெல்லாங்கொண்டு
முன்பின்னல்புகுந்தனமுற்றவுநீத்துக்காத்துப்
பின்புன்பணிசெய்துநம்பேருலகெய்துகென்ன. (உ௨)

இவ்வண்ணமெழுந்ததுகேட்டெழுந்தஞ்சிமுன்பு
செவ்வண்ணமொழிந்திடத்தேய்ந்தபுண்ணாறுதீர்ந்து
தைவ்வண்ணநிரம்பினவாசமெல்லாங்கலந்து
மொய்வ்வண்ணவிளங்கொளியெய்தினர்மூர்த்தியார்தாம். (உ௩)

அந்நாளிரவின்கணமண்புகல்சார்ந்துவாழு
மன்னாகியபோர்வடுகக்கருநாடர்மன்னன்
றன்னாளுமுடிந்ததுசங்கரன்சார்பிலோர்க்கு
மின்னாமெனநீடியமெய்ந்நிலையாமையெல்லை. (உ௪)

இவ்வாறுலகத்தினிறப்பவுயர்ந்தநல்லோர்
மெய்வ்வாழுலகத்துவிரைந்தணைவார்களேபோல்
அவ்வாறரனாரடியாரையலைத்ததீயோன்
வெவ்வாய்நிரயத்திடைவீழ்வான்விரைந்துவீழ்ந்தான். (உ௫)

முழுதும்பழுதேபுரிமூர்க்கனுலந்தபோதின்
எழுதுங்கொடிபோல்பவருட்படவெங்குஞ்சுற்ற
முழுதும்புலர்வுற்றதுமற்றவனன்னமாலைப்
பொழுதும்புலர்வுற்றதுசெங்கதிர்மீதுபோத. (உ௬)

அவ்வேலையிலங்கணமைச்சர்கள்கூடித்தங்கள்
கைவ்வேறுகொளீஇவருங்கடன்காலைமுற்றி
வைவ்வேலவன்றன்குலமைந்தருமின்மைபாலே
செய்வ்வேறுவினைத்திறஞ்சிந்தனைசெய்துந்தேர்வார். (உ௭)

தாழுஞ்செயலின்றொருமன்னவன்றங்கவேண்டிங்
கூழுங்குடியுமுதலாயினகொள்கைத்தேனுஞ்
சூழும்படைமன்னவன்றோளிணைகாவலின்றி
வாழுந்தகைத்தன்றிந்தவையகமென்றுசொன்னார். (உ௮)

வேறு.

பன்முறையுயிர்களெல்லாம்பாலித்துஞாலங்காப்பான்
றன்னெறிந்துடைக்கீழ்த்தக்கநெறிகளிற்சரித்துவாழு
மன்னனையின்றிவைகுமண்ணுலகெண்ணுங்காலை
யின்னுயிரின்றிவாழும்யாக்கையையொக்குமென்பார். (உ௯)

இவ்வகைபலவுமெண்ணியிங்கினியரசரில்லை
செய்வகையிதுவேயென்றுதெளிபவர்சிறப்பின்மிக்க
மைவ்வரையனையவேழங்கண்கட்டிவிட்டால்மற்றக்
கைவ்வரைகைக்கொண்டார்மண்காவல்கைக்கொள்வாரென்று. (௫௰)

வேறு.

செம்மாண்வினையர்ச்சனைநூன்முறைசெய்துதோளால்
இம்மாநிலமேந்தவொரேந்தலையேந்துகென்று
பெய்ம்மாமுகில்போன்மதப்பாய்பெருங்கோடைநெற்றிக்
கைம்மாவைநறுந்துகில்கொண்டுகண்கட்டிவிட்டார். (௫௧)

கண்கட்டிவிடுங்களியானையக்காவன்மூதூர்
மண்கொட்புறவீதிமருங்குதிரிந்துபோகித்
திண்பொற்றடமாமதில்சூழ்திருவாலவாயின்
விண்பிற்படவோங்கியகோபுரமுன்புமேவி. (௫௨)

நீங்கும்பிரவின்கணிகழ்ந்ததுகண்டதொண்டர்
ஈங்கெம்பெருமானருளாமெனிலிந்தவையந்
தாங்குஞ்செயல்பூண்பனென்றுள்ளந்தளர்வுநீங்கிப்
பூங்கொன்றைமிலைந்தவர்கோயிற்புறத்துநிற்ப (௫௩)

வேழத்தரசங்கண்விரைந்துநடந்துசென்று
வாழ்வுற்றுலகஞ்செய்தவத்தினின்வள்ளலாரைச்
சூழ்பொற்சுடர்மாமணிமாநிலந்தோயமுன்பு
தாழ்வுற்றெடுத்துப்பிடர்மீதுதரித்ததன்றே. (௫௪)

மாதங்கமெருத்தினில்வைத்தவர்தம்மைக்காணு
ஏதங்கெடவெண்ணியதிண்மையமைச்சரெல்லாம்
பாதங்களின்மீதுபணிந்தெழுந்தார்களப்போ
தோதங்கிளர்வேலையையொத்தொலிமிக்கதவ்வூர். (௫௫)

சங்கங்கண்முரன்றனதாரைகள்பேரியோடும்
எங்கெங்குமியம்பினபல்லியமெல்லையில்ல
அங்கங்குமலிந்தனவாழ்த்தொலியம்பொற்கொம்பின்
பங்கன்னருளாலுலகாள்பவர்பாங்கரெங்கும். (௫௬)

வெங்கட்களிற்றின்மிசைநின்றுமிழிச்சிவேரித்
தொங்கற்சுடர்மாலைகள்சூழ்முடிசூடுசாலை
யங்கட்கொடுபுக்கரியாசனத்தேற்றியொற்றைத்
திங்கட்குடைக்கீழுரிமைச்செயல்சூழ்ந்துசெய்வார். (௫௭)

மன்னுந்திசைவேள்விபின்மங்கலவாகுதிக்கட்
டுன்னுஞ்சுடர்வன்னிவளர்த்துத்துதைந்தநூல்சூழ்
பொன்னின்கலசங்கள்குடங்கள்பூரித்ததூநீர்
உன்னுஞ்செயன்மந்திரயோகினிறுத்தினார்கள். (௫௮)

வந்துற்றெழுமங்கலமாந்தர்கடம்மைநோக்கிச்
சிந்தைச்சிவமேதெளியுந்திருமூர்த்தியார்தா
முந்தைச்செயலாமமண்போய்முதற்சைவமோங்கில்
இந்தப்புவிதாங்கியிங்கின்னரசாள்வனென்றார். (௫௯)

அவ்வாறுமொழிந்ததுகேட்டவமைச்சரோடு
மெய்வாழ்தருநூலறிவின்மிகுமாந்தர்தாமும்
எவ்வாறருள்செய்தனைமற்றவையன்றியாவர்
செய்வார்பெரியோயெனச்சேவடிதாழ்ந்துசெப்ப. (௬௰)

வையம்முறைசெய்குவனாகில்வயங்குநீறே
செய்யும்மபிடேகமுமாகச்செழுங்கலன்கள்
ஐயன்னடையாளமுமாகவணிந்துதாங்கு
மொய்புன்சடைமாமுடியேமுடியாவதென்றார். (௬௧)

என்றிவ்வுரைகேட்டலுமெல்லையில்கல்வியோரும்
வன்றிண்மதிநூல்வளர்வாய்மையமைச்சர்தாமு
நன்றிங்கருடானெனநற்றவவேந்தர்சிந்தை
யொன்றுமரசாளுரிமைச்செயலானவுய்த்தார். (௬௨)

மாடெங்குநெருங்கியமங்கலவோசைமல்கச்
சூடுஞ்சடைமௌலியணிந்தவர்தொல்லையேனந்
தேடுங்கழலார்திருவாலவாய்சென்றுதாழ்ந்து
நீடுங்களிற்றின்மிசைநீண்மறுகூடுபோந்தார். (௬௩)

மின்னும்மணிமாளிகைவாயிலின்வேழமீது
தன்னின்றுமிழிந்துதயங்கொளிமண்டபத்திற்
பொன்னின்னரிமெல்லணைச்சாமரைக்காமர்பூங்கால்
மன்னுங்குடைநீழலிருந்தனர்வையந்தாங்கி. (௬௪)

குலவுந்துறைநீதியமைச்சர்குறிப்பின்வைகக்
கலகஞ்செயமண்செயலாயினகட்டுநீங்கி
நிலவுந்திருநீற்றுநெறித்துறைநீடுவாழ
உலகெங்குநிரம்பியசைவமுயர்ந்துமன்ன. (௬௫)

நுதலின்கண்விழித்தவர்வாய்மை நுணங்கு நூலின்
பதமெங்குநிறைந்துவிளங்கப்பவங்கண்மாற்ற
உதவுந்திருநீறுயர்கண்டிகைகொண்டவேணி
முதன்மும்மையினுலகாண்டனர்மூர்த்தியார்தாம் (சசு)

ஏலங்கமழ்கோதையர்தந்திறமென்றுநீங்குஞ்
சீலங்கொடுவெம்புலன்றெவ்வுடன்வென்றுநீக்கி
ஞாலந்தனிமேனமிநடாத்திநலங்கொளூழிக்
காலம்முயிர்கட்கிடரானகடிந்துகாத்து. (சஎ)

பாதம்பரமன்னவர்சூழ்ந்துபணிந்துபோற்ற
ஏதம்பிணிபாவகையிவ்வுலகாண்டுதொண்டின்
பேதம்புரியாவருட்பேரரசாளப்பெற்று
நாதன்கழற்சேவடிநண்ணினரண்ணலாரே. (சஅ)

அகல்பாறையின்வைத்துமுழங்கையையன்றுதேய்த்த
இகலார்களிற்றன்பனாயேத்திமுருகனாரா
முகில்சூழ்நறுஞ்சோலையின்மெய்யொளிமாடவீதிப்
புகலூர்வருமந்தணர்தந்திறம்போற்றலுற்றும். (சகூ)

மூர்த்திநாயனார்புராணம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௩௨௰௬.

திருச்சிற்றம்பலம்.

பாண்டிநாட்டிற் சிறப்புள்ளதாய் விளங்குகின்ற மதுரையில் வாழும் வணிககுலத்தில் திருவவதாரஞ் செய்து மிகுந்த அன்பினால் சொக்கநாதசுவாமிக்குச் சந்தனக்காப்புத் திருத்தொண்டு வழுவாமல்செய்துகொண் டிருக்கும் நாளில், வடதேசத் திருந்து வந்த வடுகக் கருநட மன்னவ னொருவன் பாண்டியராசனுடன் போர்செய்துவென்று அந்தப் பாண்டிநாட்டைத் தன்னுடையதாக்கிக்கொண்டு இராச்சியபாரஞ் செய்யும்போது அவ்விடத்திருந்தசமணர்கள் துர்ப்போதனைக் குட்பட்டுச் சைநனாகிச் சிவனடியார்களுக்கு இடையூறு செய்கின்றவன், மூர்த்திநாயனார் செய்யுஞ் சந்தனக்காப்புத் திருத்தொண்டுநடவாதவண்ணமும் இடையூறு செய்கையில், நாயனார் அன்பின் உறுதிப்பாட்டினால் சந்தனக்காப்புத்திருத்தொண்டு முட்டுப்படாவாறு செய்துவர, அந்தமகாபாவி

யானவன் சந்தனக்கட்டை அகப்படாவண்ணஞ் செய்தனன் நாய னார் அன்று பகல் முழுவதுந் தேடியுஞ் சந்தனக்கட்டை அகப்ப டாமையால் மனம்வருந்தி ஆலயத்தில்வந்து சந்தனக்கட்டைமுட்டு ப்படினும் அதனைத்தேய்க்குங்கைக்குமுட்டுப்பாடில்லையேயென்று சந்தனக்கல்லின்மேல் முழங்கை வைத்து எலும்புந் தேய்ந்து உதி ரம் பெருகும்படி தேய்க்கும்போது சொக்கநாத சுவாமியார் திரு வுளமிரங்கி அன்பனே பத்திவைராக்கியத்தா லிவ்வாறு செய்யவே ண்டா!உனக்குத்துன்பஞ்செய்தவன்வசப்படுத்திக்கொண்டஅரசினை நீபெற்றுக்கொண்டு உயிர்களைக்காத்து உன்னுடைய தொண்டினை யும் வழுவறச் செய்து நம்முடைய உலகத்தில் வந்து சேரக்கடவை யென்று அசரீரிவாக்கால்அருளிச்செய்தவளவில் நாயனார் அஞ்சித் தேய்ப்பதை விட்ட வளவில் கையூறு நீங்கி முன்போல வாயிற்று இங்கிவ்வாறிவரிருக்கச்சமண்சார்பிலிருந்த மன்னவன் அவ்விரவில்மா ண்டனன். பொழுதுவிடிந்தபின் மந்திரி முதலானவர்கள்கூடி மு ன்னிருந்த அரசனுக்கு மிவனுக்குஞ் சந்ததியில்லாமையால் வேறே அரசன் வேண்டுமேயென்று ஆலோசித்துப் பட்டத்து யானையை நோக்கி இந்தத் தேசத்துக்கு ஒரு ராசனைக் கொண்டுவா வென்று சொல்லி அதன்கண்களைக்கட்டி விடுத்தனர். அது சிலவீதிகளைக்க டந்து திருவாலவாயென்னும் ஆலயத்தின் சமீபத்திற்சென்றுகோ புரவாயிலில் வந்து சுவாமிதிருவருளைச் சிந்தித்துக்கொண்டிருக்கு மூர்த்திநாயனாரை வணங்கி யெடுத்துப் பிடரியில வைத்துக்கொண் டவுடன் மந்திரிமுதலானவர்கள் பணிந்து கூடவந்து அரண்மனைக் கடைவாயிலில் உபசாரத்துடனிழிச்சிமுடிசூட்டத் தரித்துக்கொண் டுவிபூதிருத்திராக்ஷஞ் சடைமுடியுடனேதொண்டு மாறுபடாத அர சுசெய்துமுத்தியடைந்தனர். [இந்தநாயனார் துறவறத்திலிருந்து சி வலிங்கத்தால்முத்தியடைந்தவர்.]—[இந்தத் தலத்தில் திருக்கோவில் கொண்டெழுந்தருளியிருக்கும் சுவாமிக்குத்திருநாமம் - சொக்கே சர். தேவியார் - மீனாக்ஷியம்மை. திருப்பதிகம்—௰௪]





உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# முருகநாயனார் புராணம்.



வேறு.

தாதுசூழுங்குழன்மலையாடளிர்க்கைசூழுந்திருமேனி
மீதுசூழும்புனற்கற்றைவேணிநம்பர்விரும்புபதி
சோதிசூழுமணிமௌலிச்சோழர்பொன்னித்திருநாட்டுப்
போதுசூழுந்தடஞ்சோலைப்பொய்கைசூழும்பூம்புகலூர் (க)

நாமமூதூர்மற்றதனுணல்லோர்மனம்போலவரணிந்த
சேமநிலவுதிருநீற்றின்சிறந்தவெண்மைத்திருந்தொளியால்
யாமவிருளும்வெளியாக்குமிரவேயல்லவிரைமலர்மேற்
காமர்மதுவுண்சிறைவண்டுங்களங்கமின்றிவிளங்குமால். (உ)

நண்ணுமிசைதேர்மதுகரங்கணனைமென்சினையின்மருங்கலைய
வண்ணமதுரத்தேன்பொழிவவாசமலர்வாயேயல்ல
தண்ணென்சோலையெம்மருங்குஞ்சாருமடமென்சாரிகையின்
பண்ணின்கிளவிமணிவாயும்பதிகச்செழுந்தேன்பொழியுமால். (௩)

வண்டுபாடப்புனற்றடத்துமலர்ந்துகண்ணீரரும்புவன
கொண்டவாசமுகையவிழ்ந்தகுளிர்பங்கயங்களேயல்ல
அண்டர்பெருமான்றிருப்பாட்டினமுதம்பருகச்செவிமடுக்குந்
தொண்டர்வதனபங்கயமுந்துளித்தகண்ணீரரும்புமால். (௪)

ஆனபெருமைவளஞ்சிறந்தவந்தண்புகலூரதன்கண்ணின்
மானமறையோர்குலமரபின்வந்தார்முந்தைமறைமுதல்வர்
ஞானவரம்பின்றலைநின்றார்நாகம்புனைவார்சேவடிக்கீழ்
ஊனமின்றிநிறையன்பாலுருகுமனத்தார்முருகனார். (௫)

அடைமேலலவன்றுயிலுணரவலர்செங்கமலவயற்கயல்கண்
மடைமேலுகளுந்திருப்புகலூர்மன்னிவாழுந்தன்மையராய்
விடைமேல்வருவார்க்காளாயமெய்ம்மைத்தவத்தாலவர்கற்றைச்
சடைமேலணியத்திருப்பள்ளித்தாமம்பறித்துச்சாத்துவார். (௬)

புலரும்பொழுதின்முன்னெழுந்துபுனிதநீரின்மூழ்கிப்போய்
மலருஞ்செவ்வித்தம்பெருமான்முடிமேல்வானீராறுமதி
உலவுமருங்குமுருகுயிர்க்குநகைக்கும்பதத்தினுடன்பறித்த
அலகின்மலர்கள்வெவ்வேறுதிருப்பூக்கூடைகளிலமைப்பார். (௭)

கோட்டுமலருநிலமலருங்குளிர்நீர்மலருங்கொழுங்கொடியின்
றோட்டுமலருமாமலருஞ்சுருதிமலருந்திருவாயிற்
காட்டுமுறுவனிலவலரக்கனகவரையிற்பன்னகநாண்
பூட்டுமொருவர்திருமுடிமேற்புனையலாகுமலர்தெரிந்து. (௮)

கொண்டுவந்துதனியிடத்திலிருந்துகோக்குங்கோவைகளும்
இண்டைச்சுருக்குந்தாமமுடனிசைக்கும்வாசமாலைகளுந்
தண்டிற்கட்டுங்கண்ணிகளுந்தாளிற்பிணைக்கும்பிணையல்களு [ர்.
நுண்டாதிறைக்குந்தொடையல்களுஞ்சமைத்துநுடங்குநூன்மார்ப

ஆங்கப்பணிகளானவற்றுக்கமைத்தகாலங்களினமைத்துத்
தாங்கிக்கொடுசென்றன்பினொடுஞ்சாத்திவாய்ந்தவர்ச்சனைகள்
பாங்கிற்புரிந்துபரிந்துள்ளார்பரமர்பதிகப்பற்றான
ஓங்கிச்சிறந்தவஞ்செழுத்துமோவாநாவினுணர்வினார். (௰)

தள்ளுமுறைமையொழிந்திடவித்தகுதியொழுகுமறையவர்தாந்
தெள்ளுமறைகண்முதலானஞானஞ்செம்பொன்வள்ளத்தில்
அள்ளியகிலமீன்றளித்தவம்மைமுலைப்பாலுடனுண்ட
பிள்ளையார்க்குநண்பருமாம்பெருமையுடையாராயினார். (௰௧)

அன்னவடிவுமனமுமாயறிவாரிருவரறியாமே
மன்னும்புகலூருறைவாரைவர்த்தமானவீச்சரத்து
நன்னர்மகிழ்ச்சிமனங்கொள்ளநாளும்பூசைவழுவாமே
பன்னும்பெருமையஞ்செழுத்தும்பயின்றேபணிந்துபரவினார். ()

அங்கணமருந்திருமுருகரழகார்புகலிப்பிள்ளையார்
பொங்குமணத்தின்முன்செய்தபூசையதனாற்புக்கருளிச்
செங்கணடலேறுடையவர்தாஞ்சிறந்தவருளின்பொருளளிக்கத்
தங்கள்பெருமானடிநீழற்றலையாநிலைமைசார்வுற்றார். (௰௩)

அரவமணிந்தவரையாரையர்ச்சித்தவர்தங்கழனிழற்கீழ்
விரவுபுகலூர்முருகனார்மெய்ம்மைத்தொண்டின்றிறம்போற்றி
கரவிலவர்பால்வருவாரைக்கருத்திலுருத்திரங்கொண்டு
பரவுமன்பர்பசுபதியார்பணிந்தபெருமைபகர்வுற்றேன். (௰௪)

முருகநாயனார்புராணம்-முற்றிற்று.

ஆ-திருவிருத்தம்-௩௪௰.

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டு விளங்குந் திருப்புகலூ ரென்னுந் தலத்தில் வாழும் பிராமண குலச்சிரேஷ்டரா யவதரித்துப் பரமசிவனிடத் தில் மிகுந்த அன்புடன் திருப்பள்ளித்தாமம் பறித்துச் சாத்துந் திருத்தொண்டுபூண்டு தினந்தோறும் உதயத்துக்குமுன் னித்திரை நீங்கி ஸ்நாநஞ்செய்து நித்தியகருமங்களை முடித்துக்கொண்டு நந்தனவனத்திற்சென்று சுவாமி திருமுடியிற் சாத்துங் காலத்தில் மலரும் பக்குவமுள்ள அரும்புகள் எடுத்துப்பூக்கூடையில் நிறை த்து வைத்துக்கொண்டு - கோவைமாலை, இண்டைமாலை, முதலான பலவகைமாலைகள்கட்டிச்சாத்துபடிசெய்வதே நியமமாகக்கொண்டு வழுவாமல் அப்புகலூரிலிருக்கும் வர்த்தமானேச் சரத்தாரைத்தொ ழுது துதிப்பதானதொண்டுசெய்து கொண்டிருந்து - திருஞான சம்பந்தசுவாமிகள் திருக்கல்யாண மகோச்சவ தரிசனத்துக்குச்செ ன்று பரமசிவத்தின் திருவருளால் திருஞானசம்பந்தசுவாமிகளும் இன்னுஞ் சில திருத்தொண்டர்களு முத்தியடைந்தபோதுமுத்திய டைந்தனர். [இந்தநாயனரு மில்லறத்திலிருந்து சிவலிங்கத்தால்மு த்தியடைந்தவர்.] [திருப்புகலூரில்-திருக்கோயில்கொண்டிருக்கும் பரமசிவத்தின் திருநாமம்- அக்கினீசுவரர். தேவியார்-கொந்தார்கு ழலி. இந்தத்தலத்தில் வர்த்தமானேச்சரமென்று ஒருதல மிருக்கின் றது அதில்வீற்றிருக்கும் சுவாமி திருநாமம் - வர்த்தமானேசுவரர். தேவியார் - கருந்தார்க்குழலி. திருப்பதிகம்—௧.]

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# உருத்திரபசுபதிநாயனர் புராணம்.

வேறு.

நிலத்திஞேங்கிய நிவந்தெழும் பெரும்புனனீத்த
மலர்த்தடம்பணைவயல்புகுபொன்னிநன்னாட்டுக்
குலத்திஞேங்கியகுறைவிலா நிறைகுடிகுழுமித்
தலத்தின்மேம்படுநலத்ததுபெருந்திருத்தலையூர். (௧)

வானளிப்பனமறையவர்வேள்வியின்வளர்தீ
தேனளிப்பனநறுமலர்ச்செறிசெழுஞ்சோலை
ஆனளிப்பனவஞ்சுகந்தாடுவார்க்கவ்வூர்
தானளிப்பனதருமமுநீதியுஞ்சால்பும். (௨)

அங்கண்மாநகரதனிடையருமறைவாய்மைத்
துங்கவேதியர்குலத்தினிற்றோன்றியதூயோர்
செங்கண்மால்விடையார்செழும்பொன்மலைவல்லி
பங்கினாரடிமைத்திறம்புரிபசுபதியார். (௩)

ஆயவந்தணரருமறையுருத்திரங்கொண்டு
மாயனாரறியாமலர்ச்சேவடிவழுத்துந்
தூயவன்பொடுதொடர்பினிலிடைபறாச்சுருதி
நேயநெஞ்சினராகியதொழிற்றலைநின்றார் (௪)

கரையில்கம்பலைபுள்ளொலிகறங்கிடமருங்கு
பிரசமென்சுரும்பறைந்திடக்கருவரால்பிறழு
நிரைநெடுங்கயனீரிடைநெருப்பெழுந்தனைய
விரைநெகிழ்ந்தசெங்கமலமென்பொய்கையுண்மேவி. (௫)

தெள்ளுதண்புனல்கழுத்தளவாயிடைச்செறிய
உள்ளுறப்புக்குநின்றுகையுச்சிமேற்குவித்துத்
தள்ளுவெண்டிரைக்கங்கைநீர்ததும்பியசடையார்
கொள்ளுமன்பினிலுருத்திரங்குறிப்பொடுபயின்றார். (௬)

அருமறைப்பயனாகியவுருத்திரமதனை
வருமுறைப்பெரும்பகலுமெல்லியும்வழுவாமே
திருமலர்ப்பொகுட்டிருந்தவனனையவர்சிலநாள்
ஒருமையுய்த்திடவுமையிடமகிழ்ந்தவருவந்தார். (௭)

காதலன்பர்தமருந்தவப்பெருமையுங்கலந்த
வேதமந்திரநியதியின்மிகுதியும்விரும்பி
ஆதிநாயகரமர்ந்தருள்செய்யமற்றவர்தாந்
தீதிலாநிலைச்சிவபுரியெல்லையிற்சென்றார் (௮)

நீடுமன்பினிலுருத்திரமோதியநிலையால்
ஆடுசேவடியருகுறவணைந்தனரவர்க்குப்
பாடுபெற்றசீருருத்திரபசுபதியாராங்
கூடுநாமமுநிகழ்ந்ததுவுலகம்போற்ற. (௯)

அயில்கொண்முக்குடுமிப்படையார்மருங்கருளாற்
பயிலுருத்திரபசுபதியார்திறம்பரசி
யிலுடைத்தில்லையெல்லையினாளைப்போவாராஞ்
செயலுடைப்புறத்திருத்தொண்டர்திறத்தினைமொழிவாம். (௰)

உருத்திரபசுபதிநாயனார்புராணம்-முற்றிற்று.

ஆ-திருவிருத்தம்-௩௫௰௰.

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டு விளங்குந் திருத்தலை யூரென்னுந் தலத்தில் திருவவதாரஞ் செய்து பிராமணகுலோத்தமராய்ப் பசுபதியாரென்னும் பிள்ளைத் திருநாமங் கொண்டு பரமசிவனிடத்தில் மிகுந்த அன்புபூண்டு தடாகத்தில் கழுத்தளவு நீரிலிருந்து இரண்டுகைகளையுங் குவித்து உச்சியின்மேல் வைத்துக்கொண்டு உருத்திரமந்திரஞ் செபித்துச் சிவகிருபையினால் முத்தியடைந்தனர். [இந்தநாயனாரும் இல்லறத்திலிருந்து சிவலிங்கத்தால் முத்தியடைந்தவர்.] உருத்திரமந்திரஞ் செபித்தமையால் உருத்திரபசுபதியாரென்னுந் திருநாமம்பெற்றனர்.



௨
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# திருநாளைப்போவார்

## நாயனார்புராணம்.

வேறு.

பகர்ந்துலகுசீர்போற்றும்பழையவளம்பதியாகுந்
திகழ்ந்தபுனற்கொள்ளிடம்பொன்செழுமணிகள்திரைக்கரத்தான்
முகந்துகரவிருமருங்குமுளரிமலர்க்கையேற்கும்
அகன்பணைநீர்நன்னாட்டுமேற்காநாட்டாதனூர் (௧)

ஊற்றலர்பேரொளிநெருங்குமப்பதியினிறைகரும்பின்
சாற்றலைவன்குலைவயலிற்றகட்டுவராலெழப்பகட்டேர்
ஆற்றலவன்கொழுக்கிழித்தசால்வழிபோயசைந்தேறிச்
சேற்றலவன்கருவுயிர்க்கமுருகுயிர்க்குஞ்செழுங்கமலம். (௨)

நனைமருவுஞ்சினைபொதுளிநறுவிரைசூழ்செறிதளிரிற்
றினகரன்மண்டலம்வருடுஞ்செழுந்தருவின்குலம்பெருகிக்
கனமருவியசைந்தலையக்களிவண்டுபுடைசூழப்
புனன்மழையோமதுமழையோபொழிவொழியாபூஞ்சோலை. (௩)

பாளைவிரிமணங்கமழும்பைங்காய்வன்குலைத்தெங்கின்
றாளதிரமிசைமுட்டித்தடங்கிடங்கினெழப்பாய்ந்த
வாளைபுதையச்சொரிந்தபழமிதப்பவண்பலவி
னீளமுதிர்கனிகிழிதேனீத்தத்திலெழுந்துகளும். (௪)

வயல்வளமுஞ்செயல்படுபைந்துடவையிடைவருவளமும்
வியலிடமெங்கணுநிறையமிக்கபெருந்திருவினவாம்
புயலடையுமாடங்கள்பொலிவெய்தமலிவுடைத்தா
யயலிடைவேறடிநெருங்கக்குடிநெருங்கியுளதவ்வூர். (௫)

மற்றவ்வூர்ப்புறம்பணையின்வயன்மருங்குபெருங்குலையிற்
சுற்றம்விரும்பியகிழமைத்தொழிலுழவர்கிளைதுவன்றிப்
பற்றியபைங்கொடிச்சுரைமேற்படர்ந்தபழங்கூரையுடைப்
புற்குரம்பைச்சிற்றில்பலநிலைத்துளதோர்புலைப்பாடி. (௬)

கூருகிர்மெல்லடியளகின்குறும்பார்ப்புக்குழுச்சுழலும்
வார்பயின்முன்றினினின்றவள்ளுகிர்நாய்த்துள்ளுபறழ்
காரிரும்பின்சரிசெறிகைக்கருஞ்சிறார்கவர்ந்தோட
வார்சிறுமென்குரைப்படக்குமரைக்கசைத்தவிருப்புமணி. (௭)

வன்சிறுதோன்மிசையுழத்திமகவுறக்குநிழன்மருதுந்
தன்சினைமேற்பெடையொடுங்குந்தடங்குழிசிப்புதைநீழன்
மென்சினையவஞ்சிகளும்விசிப்பறைதூங்கினமாவும்
புன்றலைநாய்ப்புனிற்றுமுழைப்புடைத்தெங்குமுடைத்தெங்கும். (௮)

செறிவலித்திண்கடைஞர்வினைச்செயல்புரிவைகறையாமக்
குறியளக்கவழைக்குஞ்செங்குடுமிவாரணச்சேக்கை
வெறிமலர்த்திண்சினைக்காஞ்சிவிரிநீழன்மருங்கெல்லா
நெறிகுழற்புன்புலைமகளிர்நெற்குறுபாட்டொலிபரக்கும். (௯)

புள்ளுந்தண்புனற்கலிக்கும்பொய்கையுடைப்புடையெங்குந்
தள்ளுந்தாண்டையசையத்தளையவிழ்பூங்குவளைமது
விள்ளுமடைபைந்தழற்கதிர்நென்மிலைச்சியபுன்புலைச்சியர்கள்
கள்ளுண்டுகளிதூங்கக்கறங்குபறையுங்கலிக்கும், (௰)

இப்படித்தாகியகடைஞரிருப்பின்வரைப்பினின்வாழ்வார்
மெய்ப்பரிவுசிவன்கழற்கேவிளைந்தவுணர்வொடும்வந்தார்
அப்பதியிலூர்ப்புலைமையான்றதொழிற்றாயத்தார்
ஒப்பிலவர்நந்தனாரெனவொருவருளரானார். (௰௧)

பிறந்துணர்வுதொடங்கியபின்பிறைக்கண்ணிப்பெருந்தகைபாற்
சிறந்தபெருங்காதலினாற் செம்மைபுரிசிந்தையராய்
மறந்துமயனினைவின்றிவருபிறப்பின்வழிவந்த
அறம்புரிகொள்கையராயேயடித்தொண்டினெறிநின்றார். (௰௨)

ஊரில்விடும்பறைத்துடவையுணவுரிமையாக்கொண்டு
சார்பில்வருந்தொழில்செய்வார்தலைநின்றார்தொண்டினாற்
கூரிலையமுக்குடுமிப்படையண்ணல்கோயிறோறும்
பேரிகையேமுதலாயமுகக்கருவிபிறவினுக்கும். (௰௩)

போர்வைத்தோல்விசிவாரென்றினையனவும்புகலுமிசை
நேர்வைத்தவீணைக்கும்யாழுக்குநிலைவகையாற்
சேர்வுற்றதந்திரியுந்தேவர்பிரானர்ச்சனைகட்
கார்வத்தினுடன்கோரோசனையுமிவையளித்துள்ளார். (௰௪)

இவ்வகையாற்றந்தொழிலினியன்றவெலாமெவ்விடத்துஞ்
செவ்வனவுங்கோயில்களிற்றிருவாசற்புறநின்று
மெய்விரவுபேரன்புமிகுதியினாலாடுதலும்
அவ்வியல்பிற்பாடுதலுமாய்நிகழ்வாரந்நாளில். (௰௫)

திருப்புன்கூர்ச்சிவலோகன்சேவடிகண்மிகநினைந்து
விருப்பினொடுந்தம்பணிகள்வேண்டுவனசெய்வதற்கே
அருத்தியினாலொருப்பட்டங்காதனூர்தனினின்றும்
வருத்தமுறுங்காதலினால்வந்தவ்வூர்மருங்கணைந்தார். (௰௬)

சீரேறுமிசைபாடித்திருத்தொண்டர்திருவாயி
னேரேகும்பிடவேண்டுமெனநினைந்தார்க்கதுநேர்வார்
காரேறுமெயிற்புன்கூர்க்கண்ணுதலார்திருமுன்பு
போரேற்றைவிலகவருள்புரிந்தருளிப்புலப்படுத்தார். (௰௭)

சிவலோகமுடையவர்தந்திருவாயின்முன்னின்று
பவலோகங்கடப்பவர்தம்பணிவிட்டுப்பணிந்தெழுந்து
சுவலோடுவாரலையப்போவார்பின்பொருகுழல்
அவலோடுமடுத்ததுகண்டாதரித்துக்குளந்தொட்டார். (௰௮)

வடங்கொண்டபொன்னிதழிமணிமுடியார்திருவருளாற்
றடங்கொண்டகுளத்தளவுசமைத்ததற்பின்றம்பெருமான்
இடங்கொண்டகோயில்புறம்வலங்கொண்டுபணிந்தெழுந்து
நடங்கொண்டுவிடைகொண்டுதம்பதியினண்ணினார். (௰௯)

இத்தன்மையீசர்மகிழ்பதிபலவுஞ்சென்றிறைஞ்சி
மெய்த்ததிருத்தொண்டுசெய்துவிரவுவார்மிக்கெழுந்த
சித்தமொடுந்திருத்தில்லைத்திருமன்றுசென்றிறைஞ்ச
உய்த்தபெருங்காதலுணர்வொழியாதுவந்துதிப்ப. (௨௰)

அன்றிரவுகண்டுயிலார்புலர்ந்ததற்பினங்கெய்த
ஒன்றியணைதருதன்மையுறுகுலத்தோடிசைவில்லை
யென்றிதுவுமெம்பெருமானேவலெனப்போக்கொழிவார்
நன்றுமெழுங்காதன்மிகநாளைப்போவேனென்பார். (௨௧)

நாளைப்போவேனென்றுநாள்கள்செலத்தரியாது
பூளைப்பூவாம்பிறவிப்பிணிப்பொழியப்போவாராய்ப்
பாளைப்பூங்கமுகுடுத்தபழம்பதியினின்றும்போய்
வாளைப்போத்தெழும்பழனஞ்சூழ்தில்லைமருங்கணைந்தார். (௨௨)

செல்கின்றபோழ்தந்தத்திருவெல்லைபணிந்தெழுந்து
பல்குஞ்செந்தீவளர்த்தபயில்வேள்வியெழும்புகையு
மல்குபெருங்கிடையோதுமடங்கணெருங்கினவுங்கண்
டல்குந்தங்குலநினைந்தேயஞ்சியணைந்திலர்நின்றார். (௨௩)

நின்றவரங்கெய்தரியபெருமையினைநினைப்பார்முன்
சென்றிவையுங்கடந்தூர்சூழெயிற்றிருவாயிலைப்புக்கார்
குன்றனையமாளிகைகடொறுங்குலவும்வேதிகைகள்
ஒன்றியமூவாயிரமங்குளவென்பாராகுதிகள். (௨௪)

இப்பரிசாயிருக்கவெனக்கெய்தலரிதென்றஞ்சி
அப்பதியின்மதிற்புறத்திலாராதபெருங்காதல்
ஒப்பரிதாய்வளர்ந்தோங்கவுள்ளுருகிக்கைதொழுதே
செப்பரியதிருவெல்லைவலங்கொண்டுசெல்கின்றார். (௨௫)

இவ்வண்ணமிரவுபகல்வலஞ்செய்தங்கெய்தரிய
அவ்வண்ணநினைந்தழிந்தவடித்தொண்டரயர்வெய்தி
மைவ்வண்ணத்திருமிடற்றார்மன்றினடங்கும்பிடுவ
தெவ்வண்ணமெனநினைந்தேசறவினொடுந்துயில்வார். (௨௬)

இன்னறருமிழிபிறவியிதுதடையென்றேதுயில்வார்
அந்நிலைமையம்பலத்துளாடுவாரறிந்தருளி
மன்னுதிருத்தொண்டரவர்வருத்தமெலாந்தீர்ப்பதற்கு
முன்னணைந்துகனவின்கண்முறுவலொடுமருள்செய்வார் (௨எ)

இப்பிறவிபோய்நீங்கவெரியினிடைநீமூழ்கி
முப்புரிநூன்மார்பருடன்முன்னணைவாயெனமொழிந்த
அப்பரிசேதில்லைவாழந்தணர்க்குமெரியமைக்க
மெய்ப்பொருளானாரருளியம்பலத்தேமேவினார். (௨அ)

தம்பெருமான்பணிகேட்டதவமறையோரெல்லாரும்
அம்பலவர்திருவாயின்முன்பச்சமுடனீண்டி
யெம்பெருமானருள்செய்தபணிசெய்வோமென்றேத்தித்
தம்பரிவுபெருகவருந்திருத்தொண்டர்பாற்சார்ந்தார் (௨௯)

ஐயரேயம்பலவரருளாலிப்பொழுதணைந்தோம்
வெய்யவழலமைத்துமக்குத்தரவேண்டியெனவிளம்ப
நையுமனத்திருத்தொண்டர்நானுய்ந்தேனெனத்தொழுதார்
தெய்வமறைமுனிவர்களுந்தீயமைத்தபடிமொழிந்தார். (௩௰)

மறையவர்கண்மொழிந்ததற்பின்றென்றிசையின்மதிற்புறத்துப்
பிறையுரிஞ்சுந்திருவாயின்முன்னாகப்பிஞ்ஞகர்த
நிறையருளான்மறையவர்கணெருப்பமைத்தகுழியெய்தி
இறையவர்தாண்மனங்கொண்டேயெரிசூழவலங்கொண்டார். (௩௧)

கைதொழுதுநடமாடுங்கழலுன்னியழல்புக்கார்
எய்தியவப்பொழுதின்கணெரியின்கணிம்மாயப்
பொய்தகையுருவொழித்துப்புண்ணியமாமுனிவடிவாய்
மெய்திகழ்முந்நூலவிளங்கவேணிமுடிகொண்டெழுந்தார். (௩௨)

செந்தீமேலெழும்பொழுதுசெம்மலர்மேல்வந்தெழுந்த
அந்தணன்போற்றோன்றினாரந்தரதுந்துபிநாதம்
வந்தெழுந்ததிருவிசும்பில்வானவர்கண்மகிழ்ந்தார்த்துப்
பைந்துணர்மந்தாரத்தின்பனிமலர்மாரிகள்பொழிந்தார். (௩௩)

திருவுடையதில்லைவாழந்தணர்கள்கைதொழுதார்
பரவரியதொண்டர்களும்பணிந்துமனங்களிபயின்றார்
அருமறைசூழ்திருமன்றிலாடுகின்றகழல்வணங்க
வருகின்றார்திருநாளைப்போவாராமறைமுனிவர். (௩௪)

தில்லைவாழந்தணருமுடன்செல்லச்சென்றெய்திக்
கொல்லைமான்மறிக்கரத்தார்கோபுரத்தைத்தொழுதிறைஞ்சி
ஒல்லைபோய்ப்புக்காருலகுய்யநடமாடும்
எல்லையினைத்தலைப்பட்டார்யாவர்களுங்கண்டிலரால். (௧௫)

அங்கணர்களதிசயித்தாரருமுனிவர் துதிசெய்தார்
வந்தணைந்தந் திருத்தொண்டர்தம்மைவினைமாசறுத்து
சுந்தரத்தாமரைபுரையுந் துணைப்படிகடொழுதிருக்க
அந்தமிலாவானந்தப்பெருங்கூத்தரருள்புரிந்தார். (௧௬)

மாசுடம்புவிடத்தீயின்மஞ்சனஞ்செய்தருளியெழுந்
தாசின்மறைமுனியாகியம்பலவர்தாளடைந்தார்
தேசுடையகழல்வாழ்த்தித்திருக்குறிப்புத்தொண்டர்வினைப்
பாசமறமுயன்றவர்செய்திருத்தொண்டின்பரிசுரைப்பாம் (௧௭)

திருநாளைப்போவார்நாயனார்புராணம்

முற்றிற்று.

ஆ.திருவிருத்தம்-௩அ௰௭.

---

திருச்சிற்றம்பலம்.

கொள்ளிடநதிக்கருகாகிய மேற்காநாட்டைச் சேர்ந்த ஆதனூரில் புலைச்சேரியார் குலஞ்செய்த தவத்தால் திருவவதாரஞ்செய்து நந்தனென்னும் பிள்ளைத் திருநாமங்கொண்டு மிகுந்த சிவநேசத்துடன் வளர்ந்து சிவாலயங்களி லிருக்கும் பேரிகை முதலான வாத்தியங்களுக்குப் போர்வைத்தோலிட்டு வார்விசித்தலும்- வீணைக்கும் - யாழுக்கும் - தந்திரி பூட்டுதலும் - அர்ச்சனைக்குக்- கோரோசனை - கொடுத்தலு மாகிய பணிபூண்டு - திருப்புன்கூ ரென்னுந் தலத்திற்சென்று தாம்செய்கின்ற பணிசெய்து துதித்துச் சிவலிங்கப்பெருமானை நேரே தரிசிக்கவேண்டுமென்னும் அன்பு கொள்ளப் பரமசிவமானது தமக்குநேரே நிற்கும் விடைத்தேவர்விலங்கும்படி செய்து நாயனாருக்குத் தரிசனந்தந்தருளினர். இவ்வாறு தரிசித்துத் தம்முடைய பதியில் வந்து வசிப்பவர் ஒருநாள்சிதம் பரத்துக்குப் போய் நடேசர் தரிசனஞ் செய்ய வேண்டுமென்கிற ஆசையுண்டாக இரவெல்லாம் நித்திரை யில்லாம லிருந்து விடிந்தபின்பு அவ்வெல்லையிற்செல்வது நம்முடைய குலத்துக்கொவ்வாமை யாதலால் போகலாகாதென்று நின்றுவிடுவதும்பின்புநாளையதினம் போவே

னென்று சிந்தித்தலுமாய்ப் பலநாள் போகலாகாதென்றே யிருந்தவ ரொருநாள் புறப்பட்டுப் போ யெல்லையைக் கண்டு பணிந்து அதைக்கடந்து போவதற்குத் தமதுகுலத்துக் கொவ்வாமையை நினைந்து சற்றுநின்றுபின்பு அதையுங்கடந்து ஊரெல்லைக்குச் சமீபத்திற்போய்ப் பணிந்து அவ்விடத்துநிகழும் வேள்விகளையும்வேதவொலியையுங்கண்டு இனியுள்ளே போகலாகாதென்று அந்த எல்லையைப் பகலு மிரவும்பிரதக்ஷணஞ்செய்துநமக்கெவ்வாறுநடேசர் தரிசனங்கிடைக்குமென்றுமனத்தளர்ச்சியுடன் ஒருநாள் துயில்கொள்ளும்போதுநடராசமூர்த்தி திருவுள்ளமிரங்கி அவர் கனவிலெழுந்தருளி அன்பனே நீ தீயில்முழுகித்தில்லைவாழந்தணருடன் நமது சந்நிதிக்கு வரக்கடவையென்று கட்டளையிட்டு அவ்வாறே தீ யமைக்கும்படித் தில்லைவாழந்தணர்க்குங் கட்டளையிட்டருள அவர்களெல்லாருங்கூடி நாயனாரிடத்திற்சென்று உபசாரத்துடன் அழைத்துக்கொண்டுவந்து தென்திருமதிலுக்குப்புறத்தில் நடேசர் சந்நிதிக்கு நேராகத் தீயமைக்கநாயனார் அந்தத்தீக்குழியில் மூழ்கிச்சடைமுடியும் பூணநூலுந் திகழத் தவமுநிவரா யெழுந்து யாவருங்கண்டதிசயித்துத் தொழுதுவரச்சென்றுசிற்சபைக்குச் சமீபத்திற் சென்றனர். பின்பு நாயனாரை ஒருவருங் கண்டிலராய் அற்புதமடைந்து தீக்ஷிதர்கள். நடேசமூர்த்தியானவர் தம்மைத் தொழுது கொண்டிருக்கும் படியாக அன்பருக்கருள் செய்தனர். நாயனார் இசைத்தமிழ் வல்லவர்களாகச் சொல்லப் பட்டிருக்குந் திருத்தொண்டர் நால்வரிலொருவர். [இவருமில்லறத்திலிருந்துசிவலிங்கத்தால் முத்தியடைந்தவர்.]திருப்புன்கூரில், சுவாமிதிருநாமம் - சிவலோகநாதர். தேவியார்-சொக்கநாயகி. திருப்பதிகம்—ரு.] இசைத்தமிழ் வல்லவர்கள்- திருநாளைப்போவார். ஆனாயநாயனார். திருநீலகண்டயாழ்ப்பாணர். பரமனையேபாடுவார். என்பவர்கள்.







உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருக்குறிப்புத்தொண்ட நாயனார்புராணம்.



வேறு.

ஏயுமாறுடல்லுயிர்களுக்கெல்லையில்கருணைத்
தாயனாடனியாயினதலைவனைத்தழுவப்
பாயுநான்மறைபோற்றநின்றருந்தவம்புரியத்
தூயமாதவஞ்செய்ததுதொண்டைநன்னாடு. (௧)

நன்மைநீடியநடுநிலையொழுக்கத்துநயந்த
தன்மைமேவியதலைமைசால்பெருங்குடிதழைப்ப
வன்மையோங்கெயிலவளம்பதிபயின்றதுவரம்பின்
றொன்மைமேன்மையினிகழ்பெருந்தொண்டைநன்னாடு. (௨)

நற்றிறம்புரிபழையனூர்ச்சிறுத்தொண்டர்நவைவந்
துற்றபோதுதம்முயிரையும்வணிகனுக்கொருகாற்
சொற்றமெய்ம்மையுந்தூக்கியச்சொல்லையேகாக்கப்
பெற்றமேன்மையினிகழ்ந்ததுபெருந்தொண்டைநாடு. (௩)

ஆணையாமெனநீறுகண்டடிச்சேரனென்னுஞ்
சேணுலாவுசீர்ச்சேரனார்திருமலைநாட்டு
வாணிலாவுபூண்வயவர்கன்னமைத்துனக்கேண்மை
பேணநீடியமுறையதுபெருந்தொண்டைநாடு. (௪)

கறைவிளங்கியகண்டர்பாற்காதல்செய்முறைமை
நிறைபுரிந்திடநேரிழையறம்புரிந்ததனாற்
பிறையுரிஞ்செயிற்பதிபயில்பெருந்தொண்டைநாடு
முறைமையாமெனவுலகினின்மிகுமொழியுடைத்தால். (௫)

தாவில்செம்மணியருவியாறிழிவனசாரல்
பூவில்வண்டினம்புதுநறவருந்துவபுறவம்
வாவிநீள்கயல்வரம்பிறவுகைப்பனமருதம்
நீவிநித்திலம்பரத்தியருணக்குவநெய்தல். (௬)

குறவர்பன்மணியரித்திதைவிதைப்பனகுறிஞ்சி
கறவையானினாமாணுடன்பயில்வனகானம்
பறவைதாமரையிருந்திறவருந்துவபழனஞ்
சுறவமுண்மருப்பணங்கயர்வனகழிச்சூழல். (௭)

கொண்டல்வானத்தின்மணிசொரிவனகுலவரைப்பாற்
றண்டுணர்க்கொன்றைபொன்சொரிவனதளவயற்பால்
வண்டன்முத்தநீர்மண்டுகால்சொரிவனவயற்பாற்
கண்டன்முன்றுறைக்கரிசொரிவனகலங்கடற்பால். (௮)

தேனிறைந்தசெந்தினையிடிதருமலைச்சீறூர்
பானிறைந்தபுற்பதத்தனமுல்லைநீள்பாடி
தூநெலன்னநெய்கன்னலின்கனியதண்டுறையூர்
மீனிறைந்தபேருணவினவேலைவைப்பிடங்கள். (௯)

குழல்செய்வண்டினங்குறிஞ்சியாழ்முரல்வனகுறிஞ்சி
முழவுகார்கொளமுல்லைகண்முகைப்பனமுல்லை
மழலைமென்கிளிமருதமர்சேக்கையமருத
நிழல்செய்நைதைசூழ்நெய்தலங்கழியனநெய்தல். (௰)

மல்குமப்பெருநிலங்களில்வரைபுணர்குறிஞ்சி
யெல்லையெங்கணுமிறவுளரேனன்முன்விளக்கும்
பல்பெரும்புனம்பயில்வனபடர்சிறைத்தோகை
சொல்லுமப்புனங்காப்பவுஞ்சுரிகுழற்றோகை. (௰௧)

அங்கண்வான்மிசையரம்பையர்கருங்குழற்சுரும்பு
பொங்குபூண்முலைக்கொடிச்சியர்குழன்மூழ்கிப்போகாச்
செங்கண்மால்விடையார்திருக்காளத்தியென்னு
மங்குல்சூழ்வரைநிலவியவாழ்வினான்மல்கும். (௰௨)

பேறுவேறுசூழிமையவரரம்பையர்பிறந்து
மாறில்வேடருமாதருமாகவேவணங்கும்
ஆறுசூழ்சடையண்ணலார்திருவிடைச்சுரமுங்
கூறுமேன்மையின்மிக்கதந்நாட்டுவண்குறிஞ்சி. (௰௩)

அம்பொன்வார்குழற்கொடிச்சியருடனரமகளிர்
வம்புலாமலர்ச்சுனைபடிந்தாடுநீள்வரைப்பின்
உம்பர்நாயகர்திருக்கழுக்குன்றமுமுடைத்தால்
கொம்பர்வண்டுசூழ்குறிஞ்சிசெய்தவங்குறையுளதோ. (௰௪)

திருஞானமாமுனிவரரசிருந்தபூந்துருத்திக்
[illegible]வெழுந்தருளியெங்குற்றாரப்பரென
[illegible]றும்மடியேனும்மடிகடாங்கிவரும்
[illegible]வந்தெய்தப்பெற்றிங்குற்றேனென்றார். (௱௯௬)

[illegible]பரதுகேளாப்பெருகுவிரைவுடனிழிந்தே
[illegible]டைப்பெய்தியுடையவரசினைவணங்க
[illegible]ளலார்வாகீசரவர்வணங்காமுன்வணங்கத்
[illegible]மறிக்கரத்தார்தொண்டரொலாந்தொழுதார்த்தார் (௱௯௭)

[illegible]ழுமல்கீனாந்திருநாவுக்கரசருடன்கலந்தருளிச்
செழுந்திப்பந்தவழ்சோலைப்பூந்துருத்தித்திருப்பதியின்
[illegible]ந்துதிருக்கரத்தார்மலர்த்தாள்கள்
தொழுதுருகியின்புற்றுத்துதிசெய்தங்குடனிருந்தார் (௱௯௮)

வல்லமணர்தமைவாதில்வென்றதுவும்வழுதியாற்
புல்லியகூனிமிர்த்ததுவுந்தண்பொருந்தப்புனனாட்டில்
எல்லையில்லாத்திருநீறுவளர்த்ததுவுமிருந்தவத்தோர்
சொல்லவதுகேட்டுவந்தார்தூயபுகழ்வாகீசர். (௱௯௯)

பண்புடையபாண்டிமாதேவியார்தம்பரிவு
நண்புடையகுலச்சிறையார்பெருமையுஞானத்தலைவர்
எண்பெருகவுரைத்தருளவெல்லையில்சீர்வாகீசர்
மண்குலவுதமிழ்நாடுகாண்பதற்குமனங்கொண்டார். (௨௱)

பிரமபுரத்திருமுனிவர்பெருந்தொண்டைநன்னாட்டில்
அரன்மகிழுந்தானங்களனைந்திறைஞ்சிப்பாடுவதற்
குரனுடையதிருநாவுக்கரசருரைசெய்தருளப்
புரமெரித்தார்திருமகனார்பூந்துருத்திதொழுதகன்றார். (௨௱௧)

ஆண்டவரசங்கணர்சீரருள்பெற்றப்பதிநின்றும்
பாண்டிநாட்டெழுந்தருளும்பான்மையராய்த் தென்றிசைபோய்க்
காண்டகையதிருப்புத்தூர்பணிந்தேத்திக்கதிர்மதியந்
தீண்டுகொடிமதின்மதுரைத்திருவாலவாய்சேர்ந்தார் (௨௱௨)

சென்றணைந்துமதுரையினிற்றிருந்தியநூற்சங்கத்துள்
அன்றிருந்துதமிழாராய்ந்தருளியவங்கணர்கோயின்
முன்றிலினைவலங்கொண்டுமுன்னிறைஞ்சியுள்புக்கு
வன்றனிமால்விடையாரைவணங்கிமகிழ்வொடுந்திளைத்தார். (௨௱௩)

எய்தியபேரானந்தவின்பத்தினிடையழுந்தி
மொய்திகழுஞ்சடையானைமுளைத்தானையென்றெடுத்து
செய்தவத்தோர்தாண்டகச்செந்தமிழ்பாடிப்புறத்தணைவார்
கைதொழுதுபணிந்தேத்தித்திருவுள்ளங்களிசிறந்தார். ([illegible])

—(*)—

[திருவாலவாய்த்-திருத்தாண்டகம்.]

திருச்சிற்றம்பலம்.

முளைத்தானையெல்லார்க்குமுன்னேதோன்றிமுதிருஞ்சடை[illegible]
மேன்முகிழ்வெண்டிங்கள், வளைத்தானைவல்லசுரர்புரங்கள்மூ[illegible]ம்
வரைசிலையாவாசுகிமாநாணாக்கோத்து, துளைத்தானைச்சு[illegible]
றுவளநீறாத்தூமுத்தவெண்முறுவலுமையோடாடி, திளை[illegible]
தென்கூடற்றிருவாலவாய்ச்சிவனடியேசிந்திக்கப்பெற்றே[illegible]

தூர்த்தனைத்தோள்முடிபத்திறுத்தான்றன்னைத்தொல்[illegible]
னிசைகேட்டருள்செய்தானைப், பார்த்தனைப்பணிகண்டு[illegible]
ன்னைப்பரிந்தவற்குப்பாசுபதமீந்தான்றன்னை, யாத்[illegible]
க்கன்பன்றன்னைஅளவில்லாப்பல்லூழிகண்டு நின்றா[illegible]
ன்கூடற்றிருவாலவாய்ச்சிவனடியேசிந்திக்கப்பெற்றேனு[illegible]

திருச்சிற்ற[illegible]

சுவாமிபெயர் - சொக்கநாதர்
தேவியார் - மீனாக்ஷியம்மை - திருப்பதிகம்—ம[illegible]

---

சீர்திகழும்பாண்டிமாதேவியார்திருமேனி
சேரவருளுடையதனுற்கூனிமிர்ந்ததென்னவனார்
பார்பரவுங்குலச்சிறையார்வாகீசர்தமைப்பணிவுற்
றாரதிலாக்காதல்மிகவடிபோற்றவங்கிருந்தார். ([illegible]௫)

திருவாலவாயமர்ந்தசெஞ்சுடரைச்செழும்பொருளை
றருவானநேரிசையுந்தாண்டகமுமுதலான
பெருவாய்மைத்தமிழ்பாடிப்பேணுதிருப்பணிசெய்து
மருவார்தம்புரமெரித்தார்பூவணத்தைவந்தடைந்தார் ([illegible])

---

[திருவாலவாய்த்திருநேரிசை.]

திருச்சிற்றம்பலம்.

வேதியாவேதகீதாவிண்ணவரண்ணாவென்றென்
றோதியேமலர்கடூவியொருங்கிநின்கழல்கள்காணப்
பாதியோர்பெண்ணைவைத்தாய்படர்சடைமதியஞ்சூடு
மாதியேயாலவாயிலப்பனேயருள்செய்யாயே

பொடிக்கொடுபூசிப்பொல்லாக்குரம்பையிற்புந்தியொன்றிப்
பிடித்துநின்றாள்களென்றும்பிதற்றிநானிருக்கமாட்டே
னெடுப்பனென்றிலங்கைக்கோன்வந்தெடுத்தலுமிருபதுதோ
ளடர்த்தனேயாலவாயிலப்பனேயருள்செய்யாயே

திருச்சிற்றம்பலம்

கொடிமாடநிலவுதிருப்பூவணத்துக்கோயிலினுள்
நெடியானுக்கறிவரியார்நேர்தோன்றக்கண்டிறைஞ்சி
வடிவேறுதிரிசூலத்தாண்டகத்தால்வழுத்திப்போய்ப்
பொடிநீடுதிருமேனிப்புனிதர்பதிபிறபணிவார். (௪௱௭)

[திருப்பூவணந்திருத்தாண்டகம்]

திருச்சிற்றம்பலம்.

வடிவேறு திரிசூலந்தோன்றுந்தோன்றும் வளர்சடைமேலிளமதி யுந்தோன்றுந்தோன்றுங், கடியேறுகமழ்கொன்றைக்கண்ணிதோன் றுங் காதில்வெண்குழைதோடு கலந்துதோன்றும், இடியேறுகளிற் றுரிவைப்போர்வைதோன்றுமெழிதிகழுந்திருமுடியுநிலவித்தோன் றும், பொடியேறுதிருமேனிபொலிந்துதோன்றும் பொழிதிகழும் பூவணத்தெம்புனிதனார்க்கே

ஆருருவவுள்குவாருள்ளத்துள்ளேயவ்வுருவாய் நிற்கின்ற வருளுந் தோன்றும்,வாருருவப்பூண்முலைநன்மங்கைதன்னைமகிழ்ந் தொருபா ல்வைத்துகந்தவடிவுந்தோன்று,நீருருவக்கடலிலங்கையரக்கர்கோனை நெறுநெறெனவடர்த்திட்டநிலையுந்தோன்றும், போருருவக்கூற்று தைத்தபொற்புந்தோன்றும்பொழிதிகழும்பூவணத்தெம்புனிதனார்க் கே. திருச்சிற்றம்பலம்

சுவாமிபெயர் - பூவணநாதர்

தேவியார் - மின்னம்மை - திருப்பதிகம்—௪.

தென்னிலங்கையிராவணன்றன்சிரமீரைந்துந்துணித்த
மன்னவனாமிராமனுக்குவரும்பெரும்பாதகந்தீர்க்கும்
பின்னுதனாத்தொழுவதற்குநினைந்துபோய்ப்பெருமகிழ்ச்சி
துன்னிமனங்களாந்துருகத்தொழுதெழுந்தார்சொல்லரசர். (௪௱௮)

தேவர்தொழுந்தனிமுதலைத்திருவிராமேச்சுரத்து
மேவியசங்கரனையெதிர்நின்றுவிருப்புறுமொழியாற்
பாவுதிருநேரிசைகண்முதலானதமிழ்பாடி
நாவரசர்திருத்தொண்டுநலம்பெருகச்செய்தமர்ந்தார். (௪௱௯)

[ திருவிராமேச்சரத்திருநேரிசை. ]
திருச்சிற்றம்பலம்.

பாசமுங் கழிக்ககில்லா வரக்கரைப் படுத்துத் தக்க
வாசமிக் கலர்கள் கொண்டு மதியினால் மால்செய் கோயி
னேசமிக் கன்பி னாலே நினைமினீர் நின்று நாளுந்
தேசமிக் கானிருந்த திருவிரா மேச்சரமே

வரைகளொத் தேயுயர்ந்த மணிமுடி யரக்கர் கோனை
விரையமுற் றறவொடுக்கி மீண்டுமால் செய்த கோயி
றிரைகண்முத் தால்வணங்குந் திருவிரா மேச்சரத்தை
யுரைகள்பத் தாலுரைப்பா ருள்குவா ரன்பி னாலே

திருச்சிற்றம்பலம்

சுவாமிபெயர் - இராமநாதர் - தேவியார் - பர்வதவர்த்தனி
தமிழ்ப்பெயர் - மலைவளர்காதலி - திருப்பதிகம்—௩.



அங்குறைந்து கண்ணுதலா ரருள்சூடி யகன்றுபோய்ப்
பொங்குதமிழ்த் திருநாட்டுப் புறம்பணைசூழ் நெல்வேலி
செங்கண்விடை யார்மன்னுந் திருக்கானப் பேர்முதலா
எங்குநிகழ் தானங்க ளெல்லாம்புக் கிறைஞ்சுவார். (௬௱௰)

தொழுதுபல வகையாலுஞ் சொற்றொடைவண் டமிழ்பாடி
வழுவிதிருப் பணிசெய்து மனங்கசிவுற் றெப்பொழுது
மொழுகியகண் பொழிபுனலு மோவாது சிவன்றாள்கள்
தழுவியசிந் தையிலுணர்வுந் தங்கியநீர் மையிற்சரித்தார் (௬௱௰௧)

செம்பொழியுஞ் செந்தமிழ்நாட் டினிலெங்குஞ் சென்றிறைஞ்சிப்
பாம்பணிவார் தமைப்பணிவார் பொன்னிநா டதுவணைந்து
வாம்புனல்சூழ் வளநகர்கள் பின்னும்போய் வணங்கியே
பூம்புகலூர் வந்தடைந்தார் பொய்ப்பாசம் போக்குவார் (௬௱௰௨)

பொய்கைசூழ் பூம்புகலூர்ப் புனிதர்மலர்த் தாள்வணங்கி
மையுமணப் பரிவோடு நாடோறுந் திருமுன்றிற்
கைகலந்த திருத்தொண்டு செய்துபெருங் காதலுடன்
வைகுநா ளெண்ணிறந்த வண்டமிழ்மா லைகள்மொழிவார் (௬௱௰௩)

நின்றதிருத் தாண்டகமு நீடுதனித் தாண்டகமு
மன்றுறைவார் வாழ்பதிகள் வழுத்துதிருத் தாண்டகமுங்
கொன்றைமலர்ச் சடையார்பாற் குறைந்தடைந்த நேரிசையும்
துன்றுதனி நேரிசையு முதலான தொடுத்தமைத்தார். (௬௱௰௪)

[ நின்றதிருத்தாண்டகம். ]

திருச்சிற்றம்பலம்.

இருநிலனாய்த்தீயாகிநீருமாகியியமானனாயெறியுங்காற்றுமாகி
யருநிலையதிங்களாய்ஞாயிறாகியாகாசமாயட்டமூர்த்தியாகி
பெருநலமுங்குற்றமும் பெண்ணுமாணும் பிறருருவுந்தம்முருவுந்
தாமேயாகி, நெருநலையாயின்றாகி நாளையாகி நிமிர்புன்சடையடிக
ணின்றவாறே.

மாலாகிநான்முகனாய்மாபூதமாய்மருக்கமாயருக்கமாய்மகிழ்வுமாகிப்
பாலாகியெண்டிசைக்குமெல்லையாகிப்பரப்பாகிப்பரலோகந்தானே
யாகிப், பூலோகபுவலோகசுவலோகமாய்ப் பூதங்களாய்ப் புராணன்
றானேயாகி, யேலாதனவெல்லாமேல்விப்பானாயெழுஞ்சுடராயெம்
மடிகள்நின்றவாறே திருச்சிற்றம்பலம்



[ தனித்தாண்டகம். ]

திருச்சிற்றம்பலம்

ஆமயந்தீர்த்தடியேனையாளாக்கொண்டாரதிகை வீரட்டானமாட்
சிகொண்டார், தாமரையோன் சிரமரிந்துகையிற் கொண்டார் த
லையதனிற்பலிகொண்டார்நிறைவார்தன்மை, வாமனனார் மாகாயத்
துதிரங்கொண்டார் மானிடங் கொண்டார்வலங்கை மழுவாட்கொண்
டார்,காமனையுமுடல்கொண்டார்கண்ணால்நோக்கிக் கண்ணப்பர்பணி
யுங்கொள்கபாலியாரே

குராமலரோடராமதியஞ்சடைமேற்கொண்டார் குடமுழநந்தீச
னைவாசகனாக்கொண்டார், சிராமலைதஞ்சேர்விடமாத்திருந்தக்கொண்
டார்தென்றல்நெடுந்தேரோனைப்பொன்றக்கொண்டார்,பராபரனெ
ன்பதுதமதுபேராக்கொண்டார்பருப்பதங்கைக்கொண்டார்பயங்க
ள்பண்ணி, இராவணனென்றவனைப்பேரியம்பக்கொண்டாரிடருறு
நோய்தீர்த்தென்னையாட்கொண்டாரே திருச்சிற்றம்பலம்



[க்ஷேத்திரக்கோவை]

திருச்சிற்றம்பலம்.

தில்லைச்சிற்றம்பலமுஞ்செம்பொன்பள்ளி தேவன்குடி திருப்ப
ள்ளிதெங்கூர், கொல்லிக்குளிரறைப்பள்ளிக்கோவல்வீரட்டங் கோ
கரணங்கோடிகாவு, முல்லைப்புறவமுருகன் பூண்டி முழையூர்பழை
யாறைசத்திமுற்றங், கல்லிற்றிகழ்சீரார் காளத்தியுங் கயிலாயநாத
னையேகாணலாமே.

புலிவலம்புத்தூர்புன்கூர்புறம்பியம்பூவணம் பொய்கைநல்லூர் வலிவலமாற்பேறுவாய்மூர்வைகல்வலஞ்சுழி வாஞ்சியமருகல்வன்னி நிலமலிநெய்த்தானத்தோ டெத்தானத்துநிலவுபெருங் கோயில்பல கண்டாற்றொண்டீர், கலிவலிமிக்கோனைக்கால்விரலாற்செற்றகயிலா யநாதனையேகாணலாமே. திருச்சிற்றம்பலம்.

(*)

[ குறைந்ததிருநேரிசை. ]

திருச்சிற்றம்பலம்.

வென்றிலேன்புலன்களைந்தும்வென்றவர்வளாகந்தன்னில்
சென்றிலேனதலாலேசெந்நெறியதற்குச்சேயே
னின்றுபோதுருரும்புகின்றேனீசனேனீசனேயோ
வின்றுமேளுளையிலேனென்செய்வான்றோன்றினேனே.

வெட்டனவுடையனாகிவீரத்தான்மலையெடுத்த
துட்டனைத்துட்டுத்தீர்த்துச்சுவைபடக்கீதங்கேட்ட
வட்டமாமூர்த்தியாயவாதியையோதினாளு
மெட்டனையெட்டமாட்டேனென்செய்வான்றோன்றினேனே.

திருச்சிற்றம்பலம்

---

[ தனித்திருநேரிசை. ]

திருச்சிற்றம்பலம்.

நம்மாணங்காப்பதாகித்தையலார்வலைபுளாழ்ந்து
அம்மானையமுதன்றன்னையாதியையந்தமாய
செம்மானவொளிகொண்மேனிச்சிந்தையுளொன்றிநின்ற
வெம்மானைநினையமாட்டேனென்செய்வான்றோன்றினேனே.

வளைத்துநின்றவர்களைவர்வந்தெனைநடுக்கஞ்செய்யத்
தளைத்துவைத்துலையையேற்றித்தழலெரிமடுத்தநீரிற்
றிளைத்துநின்றாடுகின்றவாமைபோற்றெளிவிலாதே
னிளைத்துநின்றாடுகின்றேனென்செய்வான்றோன்றினேனே.

திருச்சிற்றம்பலம்

---

[ தனித்திருநேரிசை. ]

திருச்சிற்றம்பலம்.

தொண்டனேன்பட்டதென்னே தூயகாவிரியினன்னீர்
கொண்டிருக்கோதையாட்டிக்குங்குமக்குழம்புசாத்தி
பிண்டைகொண்டேறநோக்கியீசனையெம்பிரானைக்
கண்டனைக்கண்டிராதேகாலத்தைக்கழித்தவாறே.

பெருவிரலிறைதானூன்றப்பிறையெயிறிலங்கவங்காந்
தருவரையனையதோளானரக்கனன்றலறிவீழ்ந்தா
னிருவருமொருவனாயவுருவமங்குடையவள்ளல்
திருவடிசுமந்துகொண்டுகாணநான்றிரியுமாறே. திருச்சிற்றம்பலம்

[ தனித் திருநேரிசை. ]

திருச்சிற்றம்பலம்

மருளவாமனத்தனாகிமயங்கினேன்மதியிலாதே
யிருளவாவறுக்குமெந்தையிணையடிநீழலென்னு
மருளவாப்பெறுதலின்றியஞ்சினேனலமந்தேற்குப்
பொருளவாத்தந்தவாறேபோதுபோய்ப்புலர்ந்ததன்றே.

நடுவிலாக்காலன்வந்துநணுகும்போதறியவொண்ணா
வடுவனவஞ்சபூதமவைதனக்காற்றலாகேன்
படுவனபலவுங்குற்றம்பாங்கிலாமனிதர்வாழ்க்கைக்
கெடுவதிப்பிறவிசீசீகிளரொளிச்சடையினீரே. திருச்சிற்றம்பலம்

[ தனித் திருநேரிசை. ]

திருச்சிற்றம்பலம்.

கடும்பகல்நட்டமாடிக்கையிலோர்கபாலமேந்தி
யிடும்பலிக்கில்லந்தோறுமுழிதருமிறைவனீரே
நெடும்பொறைமலையர்பாவைநேரிழைநெறிமென்கூந்தற்
கொடுங்குழைபுகுந்தவன்றுங்கோவணமரையதேயோ.

உய்த்தகாலுதையத்தும்பருமையவனடுக்கந்தீரா
வைத்தகாலரக்கனேதன்வான்முடிதனக்குநேர்ந்தான்
மொய்த்தகால்முகிழ்வெண்டிங்கள்மூர்த்தியென்னுச்சிதன்மேல்
வைத்தகால்வருந்துமென்றுவாடினானொடுங்கினேனே.

திருச்சிற்றம்பலம்

ஆருயிரின்திருவிருத்தந்தசபுராணத்தடைவும்
பார்பரவும்பாவநாசப்பதிகம்பன்மூறையும்
நேர்படநின்றறைகூவுந்திருப்பதிகமுதற்பிறவும்
பேரருளின்கடலளிக்கும்பெருமானைப்பாடினார். (சா௭௫)

[ஆருயிர்த்திருவிருத்தம்.]
திருச்சிற்றம்பலம்.
எட்டாந்திசைக்குமிருதிசைக்குமிறைவாமுறையென்
றிட்டாரமரர்வெம்பூசலெனக்கேட்டெரிவிழியா
வொட்டாக்கயவர்திரிபுரமூன்றையுமோரம்பினா
லட்டானடிநிழற்கீழதன்றோவென்றனாருயிரே.

பழகவோரூர்தியானைபைங்கட்பாரிடம்பாணிசெய்யக்
குழலுமுழவொடுமாநடமாடியுயரிலங்கைக்
கிழவனிருபதுதோளுமொருவிரலாலிறுத்த
வழகனடிநிழற்கீழதன்றோவென்றனாருயிரே. திருச்சிற்றம்பலம்



[தசபுராணம்-பழம்பஞ்சுரம்.]
திருச்சிற்றம்பலம்.
பருவரைபொன்றுசுற்றி யரவங்கைவிட்டவிமையோ ரிறந்துபய
மாய்த்.திருநெடுமால்நிறத்தையடுவான்விசும்புசுடுவா னெழுந்துவி
சைபோய்ப், பெருகிடமற்றிதற்கோர்பிதிகாரமொன்றையருளாய்
பிரானேயெனலு, மருள்கொடுமாவிடத்தை யெரியாமலுண்டவவ
னண்டரண்டரரைசே.

கடுகியதேர்செலாதுகயிலாயமீதுகருதேலுன்வீரமொழிநீ,முடு
குவதன்றுகாண்டியெனநின்றுபாகன்மொழிவோனைநன்றுமுனியா,
விடுவிடுவென்றுசென்று விரைவுற்றரக்கன் வரையுற் றெடுக்க முடி
தோ, ணெறுவிடுவித்துவீழ்விரலுற்றபாதநினைவுற்றதென்றன்மன
மே. திருச்சிற்றம்பலம்.



[பாவநாசம்-பண்-பழம்பஞ்சுரம்.]
திருச்சிற்றம்பலம்.
பற்றற்றார்சேர்பழம்பதியைப்பாசூர்நிலாயபவளத்தைச்
சிற்றம்பலத்தெந்திகழ்கனியைத்தீண்டற்கரியதிருவுருவை
வெற்றியூரில்விடுசுடரைவிமலாகரனைத்திரைசூழ்ந்த
வொற்றியூரெம்முத்தமனையுள்ளத்துள்ளேவைத்தேனே.

முந்தித்தானேமுளைத்தானைமூரிவெள்ளேறூர்ந்தானை
யந்திச்செவ்வான்படியானையரக்கனாற்றலழித்தானைச்
சிந்தைவெள்ளப்புனலாட்டிச்செஞ்சொன்மாலையடிசேர்த்தி
யெந்தைபெம்மானென்னெம்மானென்பார்பாவநாசமே,
திருச்சிற்றம்பலம்

[ சரக்கறைத்-திருவிருத்தம். ]

திருச்சிற்றம்பலம்.

விடையும்விடைப்பெரும்பாகாவென்விண்ணப்பம்வெண்மழுவாட்
படையும்படையாய்நிரைத்தபல்பூதமும்பாய்புலித்தோ
லுடையுமுடைதலைமாலையும்மாலைப்பிறையொதுங்குஞ்
சடையுமிருக்குஞ்சரக்கறையோவென்றனிநெஞ்சமே.

விவந்தாடியகழலெந்தாயென்விண்ணப்பமேவிலங்குந்
தவந்தானெரிக்கத்தலைபத்தரித்தனைதாழ்புலித்தோல்
சிவந்தாடியபொடிநீறுஞ்சிரமாலைசூடிநின்று
தவந்தானிருக்குஞ்சரக்கறையோவென்றனிநெஞ்சமே.

திருச்சிற்றம்பலம்

---

அந்நிலைமைதனிலாண்டவரசுபணிசெய்யவவர்
நன்னிலைமைகாட்டுவார்நம்பர்திருமணிமுன்றில்
தன்னில்வருமுழவாரநுழைந்தவிடத்தானெங்கும்
பொன்னினொடுநவமணிகள்பொலிந்திலங்கவருள்செய்தார். (௩௱௰௬)

செம்பொன்னுநவமணியுஞ்சேண்விளங்கவாங்கவையு
மும்பர்பிரான்றிருமுன்றிலுருள்பருக்கையுடனொக்க
வெம்பெருமான்வாகீசருழவாரத்தினிலேந்தி
வம்பலர்மென்பூங்கமலவாவியினிற்புகவெறிந்தார். (௩௱௰௭)

புல்லோடுங்கல்லோடும்பொன்னோடுமணியோடும்
சொல்லோடும்வேறுபாடிலாநிலைமைதுணிந்திருந்த
நல்லோர்முன்றிருப்புகலூர்நாயகனார்திருவருளால்
வில்லோடுநுதன்மடவார்விசும்பூடுவந்திழிந்தார். (௩௱௰௮)

வானகமின்னுக்கொடிகள்வந்திழிந்தாலெனவந்து
தானநிறைசுருதிகளிற்றருமலங்காரத்தன்மை
கானவமுதம்பர்க்குங்கனிவாயிலொளிபரப்பப்
பானனெடுங்கண்கள்வெளிபரப்பியிசைபாடுவார் (௩௱௰௯)

கற்பகப்பூந்தளிரடிபோங்காமருசாரிகைசெய்ய
உற்பலமென்முகிழ்விரல்வட்டணையோடுங்கைபெயரப்
பொற்புறுமக்கையின்வழிப்பொருகயற்கண்புடைபெயர
அற்புதப்பொற்கொடிநுடங்கியாடுவபோலாடினார் (௩௱௨௰)

ஆடுவார்பாடுவாரலர்மாரிமேற்பொழிவார்
கூடுவார்போன்றணைவார்குழலவிழவிடைநுடங்க
ஓடுவார்மாரவேளுடன்மீள்வாரொளிபெருக
நீடுவார்துகிலசையநிற்பாருமாயினார் (௪௨௧)

இத்தன்மையரம்பையர்களெவ்விதமுஞ்செயல்புரிய
அத்தனார்திருவடிக்கீழ்நினைவகலாவன்புருகு
மெத்தன்மையுணர்வுடையவிழுத்தவத்துமேலோர்தஞ்
சித்தநிலைதிரியாதுசெய்பணியின்றலைநின்றார் (௪௨௨)

இம்மாயப்பவத்தொடக்காமிருவினைகடமைநோக்கி
யும்மாவிங்கென்னகுறையுடையேன்யான்திருவாரூர்
அம்மானுக்காளானேனலையேன்மினீயென்று
பொய்ம்மாயப்பெருங்கடலுளெனுந்திருத்தாண்டகம்புகன்றார். ( )

---

[திருவாரூர்த் திருத்தாண்டகம்.]

திருச்சிற்றம்பலம்.

பொய்ம்மாயப்பெருங்கடலிற்புலம்பாநின்றபுண்ணியங்காடீவினைகாள்திருவேநீங்கள், தம்மாயப்பெருங்கடலையரித்துத்தின்பீர்க்கில்லையேகிடந்ததுதான்யானேல்வானோர், தம்மானைத்தலைமகனைத்தண்ணாரூர்த்தடங்கடலைத்தொடர்ந்தோரையடங்கச்செய்யு, மெம்மான்றனடித்தொடர் வானுழதாகின்றே னிடையிலென்கெடுவீர்காளிடேன்மின்னே.

சுருக்கமொடுபெருக்கநிலைநிற்றல்பற்றித்துட்பறையென்றனைவீரிவ்வுலகையோடிச், செருக்கிமிகைசெலுத்தியுஞ்செய்கைவைகல்செய்கின்றீர்க்கடமையாதேயானேன்மிக்க, தருக்கிமிக வரையெடுத்தவரக்கனைந்தளரவடியெடுத்தவன்றன்பாடல்கேட், டிரக்கமெழுந்தருளியவெம்பெருமான்பாதத்திடையிலென்கெடுவீர் காளிடேன்மின்னே. திருச்சிற்றம்பலம்.

---

மாதரவர்மருங்கணையவந்தெய்திமனவசக்
காதலவர்புரிந்தொழுகுங்கைதவங்கள்செய்திடவும்
பேதமிலாவோருணர்விற்பெரியவனாப்பெயர்விக்க
யாதுமொருசெயலில்லாமையிலிறைஞ்சியெதிரகன்றார். (௪௨௪)

இந்நிலைமையுலகேழுமெய்சவிந்தியல்பேத்த
மன்னியவன்புறுபத்திவடிவானவாகீசர்
மின்னிலவுஞ்சடையார்தமெய்ப்பொருடானெய்தவரு
மந்நிலைமையணித்தாகச்சிலநாளங்கமர்ந்திருந்தார். (௪௨௫)

மன்னியவந்தக்கரணமருவுதலைப்பாட்டினாற்
றன்னுடையசரணானதமியேனைப்புகலூர
னென்னையினிச்சேவடிக்கீழிருத்திடுமென்றெழுகின்ற
முன்னுணர்வின்முயற்சியினாற்றிருவிருத்தம்பலமொழிந்தார். ( )

மண்முதலாமுலகேத்தமன்னுதிருத்தாண்டகத்தைப்
புண்ணியாவுன்னடிக்கேபோதுகின்றேனெனப்புகன்று
நண்ணரியசிவானந்தஞானவடிவேயாகி
யண்ணலார்சேவடிக்கீழாண்டவரசமர்ந்திருந்தார். (சஉஎ)

---

[திருப்புகலூர்த்-திருத்தாண்டகம்.]

திருச்சிற்றம்பலம்,

எண்ணுகேனென்சொல்லியெண்ணுகேனோ வெம்பெருமான் திருவடியேயெண்ணினல்லாற், கண்ணிலேன்மற்றோர்களை கண்ணிலேன்கழலடியேகைதொழுதுகாணினல்லா, லொண்ணுளே யொன்பதுவாசல்வைத்தாயோக்கவடைக்கும்போதுணரமாட்டேன், புண்ணியனேயுன்னடிக்கேபோதுகின்றேன் பூம்புகலூர்மேவியபுண்ணியனே.

ஒருவரையுமில்லாதுணராதுள்ள முணர்ச்சித் தடுமாற்றத்துள்ளேநின்ற, விருவரையு மூவரையு மென்மேலேவி யில்லாத தரவறுத்தாய்க் கில்லேனல்க, கருவரைசூழ்கான விலங்கைவேந்தன் கடுந்தேர் மீ தோடாமைக் காலாற்செற்ற, பொருவரையா யுன்னடிக்கே போதுகின்றேன் பூம்புகலூர்மேவியபுண்ணியனே.

திருச்சிற்றம்பலம்

---

வானவர்கண்மலர்மாரிமண்ணிறையவிண்ணுலகின்
மேனிறைந்தவைந்துபேரியவொலியும்விரிஞ்சன்முதல்
யோனிகளாயினவெல்லாமுண்ணிறைந்தபெருமகிழ்ச்சி
தானிறைந்தசித்திரையிற்சதயமாந்திருநாளில். (சஉஅ)

அடியனேனுதரவாலாண்டவரசின்சரிதப்
படியையானறிந்தபடிபகர்ந்தேனப்பரமுனிவன்
கடிமலர்மென்சேவடிகள்கைதொழுதுகுலச்சிறையார்
முடிவில்புகழ்த்திருத்தொண்டின்முயற்சியினைமொழிகின்றேன். ( )

திருநாவுக்கரசுசுவாமிகள்புராணம்-முற்றிற்று.

ஆ- திருவிருத்தம்-சஎ௱ச.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருநாவுக்கரசுசுவாமிகள் சரித்திரம்.



திருமுனைப் பாடிநாட்டிற் சிறப்புள்ள திருவாமூரில் வாழும்
வேளாளகுலத்திற் குறுக்கையர் குடிவிளங்கச்செல்வத்துடன் வாழ்
கின்ற புகழனார் தவத்தினால் அவர் மனைவியாராகிய மாதினியார்
திருவயிற்றினிடமாகத் திலதவதியார் பிறந்தபின்திருவவதாரஞ்செய்
து மருணீக்கியாரென்னும் பிள்ளைத்திருநாமம்பெற்றுக்கலைகள்பயி
ன்றுவருநாளில், திலதவதியாருக்குப் பன்னிரண்டு வயதுசெல்ல,
வேளாண்குலத்தில் புகழனார் மரபுக்கொத்த மரபும் சிவநேசமுமு
ள்ளவருஞ் சோழராச னிடத்திற் சேனாபதியா யிருப்பவரு மாகிய
கலிப்பகையா ரென்பவருக்குத் திலதவதியாரை மணஞ்செய்விப்ப
தற்குச் சிலமுதியோர்வந்துபேசப் புகழனார் சம்மதித்தனர் அந்
தச்செதியை வந்த முதியோர் கலிப்பகையாருக்குத்தெரிவிக்க அவ
ர் மகிழ்ச்சியுடன் விவாகஞ் செய்துகொள்ள எத்தனமா யிருக்கும்
போது வடதேசத்துப் பகை மன்னவருடன் போர் செய்யும்
படி, அரசன் அனுப்ப அவர் சேனையுடன் போய், அந்தப்பகை
மன்னவருடன் நெடுநாள் போர்செய்து கொண்டிருந்தனர் அவ
ரப்படியிருக்க, புகழனாரானவர், தொன்றுதொட்டு வருகின்ற நிலை
யாமை வினைவயத்தா லிவ்வுலகைவிட்டுச் சுவர்க்கலோகஞ்சேர்ந்தன
ர். அவர்மனைவியாராகிய மாதினியாரும், சுற்றத்தாரையு மக்களையுந்
துகள்போல்நினைந்து கற்புநெறிவழுவாமல் தம்முடைய கணவனா
ருடன் பிரியாமல் வாழும்படி சுவர்க்கலோகஞ்சேர்ந்தனர். இவ்வா
று தாய் தந்தையர் சுவர்க்கலோகஞ் சேரவே, திலதவதியாரு மரு
ணீக்கியாரும் சுற்றத்தாரும் புலம்பித் துயர்க்கடலிலாழ்ந்து, பின்
பு சுற்றத்தார் தேற்ற ஒருவாறு துயர்நீங்கி மாதா பிதாக்களுக்குச்
செய்யவேண்டிய கடனை மருணீக்கியார் செய்து நிறைவேற்றினர்.
இங்கிவ்வாறிருக்க,போர்விளைத்துக் கொண்டிருந்த கலிப்பகையார்
பகைவரைவென்று புகழ்கொண்டு வீரசுவர்க்கஞ்சேர்ந்தனர். அந்
தச்செதியையூரார்சொல்லிக்கொள்ளத்திலதவதியாரறிந்து, என்தாயு
ந் தந்தையும், அவருக் கென்னைக் கொடுக்கும்படி சம்மதித்திருந்

தார்கள், அந்தமுறைமையினால், என்னுயிரைப்போர்வென்றுவீரசுவ
ர்க்கம் அடைந்தவருடன் சேர்ப்பேனென்று துணிய, மருணீக்கியா
ருக்குத்தெரிந்து தமக்கையார் பாதத்தில்விழுந்து மிகவும்புலம்பித்
தாயுந் தந்தையுஞ் சுவர்க்கலோகஞ் சேர்ந்த பின்னும் நான் அவர்
களை வணங்கிக் கொண்டிருந்தது போல் உம்மைவணங்கிக் கொ
ண் டிருக்கலா மென்கிற எண்ணத்தினா லுயிருட னிருந்தேன்,
இப்போது உம்முடைய எண்ணப்படி முடித்தால் உமக்கு முன்
னே நானும் சுவர்க்கம் புகுவேனென்று புலம்பினர், அதைக்கண்ட
திலதவதியாரானவர், தம்முடைய தம்பியாரிடத்திலிருக்கும் அன்பி
னால், தாம் நினைத்தபடி செய்யாமல் உயிர்தாங்கித்
தவநெறியுள்ளவராயிருந்தனர், இவரிவ்வாறிருக்க ம
ருணீக்கியா ரிவ்வுலகவாழ்க்கை அநித்திய மான தென் றுணர்ந்து
தருமவிஷயங்களில் மனஞ் செலுத்திக்கொண்டிருந்து பின்னுமு
த்திநெறி யறியவேண்டு மென்று கருத்துண்டாகச் சமயசாஸ்திர
ங்களை ஆராய்ச்சி செய்யத் தொடங்கும் போது, சைவ சமயத்திற்
சேரும்படி சிவகிருபைநேராமையால் சமண சமயத்தைச்சார்ந்து
அந்தச்சமய சாஸ்திரங்களை ஆராய்ச்சி செய்து அவர்களில் மேம்
பட்டுத் தருமசேனரென்னும் பெயரும் பெற்றிருந்தனர், இவர்நி
லைமை யிவ்வாறாகிவிடவே, திலதவதியார் திருவதிகையிற் சேர்ந்து
சிவசின்னந் தாங்கிக்கொண்டு, ஆலயத்தில் திருவலகு திருமெழுக்கி
ட்டு, திருமாலை தொடுத்துந் தொண்டு செய்கின்றவர், தம்முடைய
தம்பியார் பரசமயஞ் சேர்ந்ததை நினைத்து வருந்தி, வீரட்டானே
சுவரரை நோக்கி- அய்யனே- என்னுடன்பிறந்தவனைப்பரசமயக்கு
ழியில் நின்று மெடுத்து ஆட்கொள்ள வேண்டுமென்று பலமுறை
யும் விண்ணப்பஞ் செய்து கொண்டிருக்க ஒருநாள் வீரட்டானே
சுவரர் திலதவதியார் சொப்பனத்திலெழுந்தருளி, உன்னுடன்பிற
ந்தவன் முன்னம் வாகீசனென்னும் பெயருள்ளமுனிவன் அப்பொ
தே நம்மைச்சேரும்படி தவஞ்செய்து ஒருகாரணத்தினா லிங்குஉற்
பவமாயினன் ஆதலா லிப்போது அவனுக்குச் சூலைநோயுண்டாக்
கி அதுகாரணமாக நாம் ஆட்கொள்ளுகிறோம் நீ துயரங்கொள்ள
வேண்டுவதில்லையென் றருள்செய்து, அவ்வண்ணமே தருமசேன
ர்வயிற்றிற் சூலைநோய் பொருந்தும்படி அருள்செய்தவளவில் அந்
தநோயானது அவர்வயிற்றில் மிகவுங் கொடுமையுட னடைந்து
குடலைமுறுக்கி வருத்தவே தாளாமல் பாழியறையில் வந்து விழுந்
து அச்சமயத்தில் தாம்வந்த பின்புணர்ந்த மந்திரங்களாற் றடுத்திட

வும் அது குறையாமல் மேல்மேலும் அதிகரிக்க இனி யென்னசெ
ய்வோமெனவருந்தினர், அதைக்கண்ட சமணர்களும் தங்கள்கையி
லிருக்குங் கரகநீரைத்தெளித்துமயிற்பிச்சத்தினாற் றடவி மந்திரித்
தார்கள் அதனாலு மந்நோய் தணியாமையால் திலத வதியாருக்குச்
சொல்லும்படி தம்முடைய ஏவலாளிகளில் ஒருவனை யனுப்ப அ
வன்போய்த் தெரிவித்ததற்குத் திலதவதியார் யானங்கே வரேனெ
ன்று சொல்ல அவன் போய் அவருக்குச் சொன்னான் அதைக்கேட்
டதருமசேனர்இராத்திரியில்புறப்பட்டுஒருவரும்அறியாமல் முன்ன
னுப்பியவனைதரவுபற்றிக்கொண்டுதிருவதிகைசேர்ந்து திலதவதியா
ரைக்கண்டுவணங்கிஅன்னையேஇந்தச்சூலைநோய்தீரும்படிஅனுக்கிர
கஞ்செய்யவேண்டுமென்றுசோருகின்றதைப்பார்த்துவீரட்டானே
சுவரர் கிருபையை நினைந்து தொழுது தம்பியாரை நோக்கி யெ
ழுந்திருமென்றார் அவரெழுந்து நடுங்கி நிற்கும்போது இதுவீர
ட்டானேசுவரர்கிருபையால்வந்து நேரிட்டது ஆகையால் அவரை
த் தொழுது பணிசெய்வீரென்று கட்டளையிட்டுச் சுவாமி சந்நிதா
னத்துக்கு அழைத்துக்கொண்டு போம் பொருட்டுப்பஞ்சாக்ஷரம்
ஓதி விபூதி கொடுத்துத்தரித்துக் கொள்ளச்சொல்லித்திருப்பள்ளி
யெழுச்சிக்காலத்தில் தமதுதம்பியாரைஅழைத்துக்கொண்டுபோக
ப்போய்,ஆலயத்தைப் பிரதக்ஷணஞ்செய்து வணங்கிச் சுவாமியின
துகிருபையினால் பதிகம் ஓதும்படி யுணர்ச்சி யுண்டாக "கூற்
றாயினவாறுவிலக்ககிலீ ரென்னும்" பதிக மோதினார். அவ்வாறோ
தின வளவில் அந்நோய் தீரவே வீரட்டானேசுவரருடைய பெ
ருங்கருணையை நினைந்துஆனந்த மடைந்து பரவச முற்றிருக்கு
ம்போது சுவாமியானவர் அவரை நோக்கி நீ பதிகம்பாடிய தன்
மையினால்-நாவுக்கரசென்று உனக்குப் பெயருண்டாகக்கடவதென்
று அசரீரி வாக்கருள்செய்ய அதைக் கேட்டுப் பின்னு மதிகமாக
மகிழ்ச்சியடைந்து சுவாமியைத் தொழுது. அன்றுமுதல் சிவசின்
னந்தாங்கி மனவாக்குக் காயங்களினாற் றொண்டு செய்துகொண்
டிருந்தனர், சமணர்களிதையறிந்து இனிநம்முடைய சமயம்போ
ய்விட்டது, அரசனறிந்தால் அவனுஞ் சைவசமயத்தவனாகி விடுவன்
ஆதலால் அவனறிதற்கு முன்னமே நாம்போய் வேறு வகையாகத்
தெரிவிக்கவேண்டுமென்று தங்களில் ஆலோசனைசெய்துகொண்டு
அரசனைக்கண்டு தருமசேனரென்பவர்தமக்கை-சடையான்சமயத்தி
லிருப்பதினால்,தாமும் அங்கேபோய்ச்சேர வேண்டுமென்கிறஎண்
ணங்கொண்டு, பொய்யாகத் தமக்குச் சூலைநோய் கண்டதென்றும்
அதுநம்முடையமந்திர முதலி யவைகளால்தீரவில்லையென்றுப்ப
டுத்தித்தமக்கையிடத்துக்குப்போய்விட்டனரென்று சொன்னார்க
ள், அவர்கள் சொன்னதைக் கேட்ட அரசன் கோபங்கொண்டவனு

ளைச் சமணரைநோக்கி யிப்படிக்கொத்த காரியஞ்செய்தவனையென்
ன செய்யவேண்டுவதென்ன,நீற்றறையிலிட வேண்டுமென்றுசொல்
லி யவ்வண்ணமே செய்ய- திருநாவுக்கரசு சுவாமிகள்- "மாசில்வீ
ணையுமாலைமதியமு மென்னும்,, பதிக மோதிப் பரமசிவத்தைத் தி
யானம்பண்ணிக்கொண் டிருந்ததினால்,வெப்பமென்பதுசிறிதுமில்
லாம லிருந்தது அப்படியிருக்கச்சமணர்களேழாநாள்நீற்றறையைத்
திறந்துபார்க்கும்போது திருநாவுக்கரசுசுவாமிகள்.திருமேனிக்குயா
தொருவருத்தமு மில்லாம லிருக்கக் கண்டு அதிசயித்து மறுபடி
பாலுடன் விஷங் கலந்து கொடுத் தார்கள் அதையு முண்டு து
ன்ப மின்றி யிருந்தனர்- அதன்பின்பு மிதிக்கும்படி யானையைத்
தூண்டினார்கள், அதுவரும்போது "சுண்ணவெண்சந்தனச்சாந்து
என்னும்,, பதிகமோதஅந்தயானை திருநாவுக்கரசுசுவாமிகளை வண
ங்கி, மேலிருந்த பாகர்களையும் சமணர்களையுங் கொன்றுபோய்வி
ட்டது, அதன் பின்பு கற்றூணிற்கட்டி நடுக்கடலிலிட்டார்கள், அ
ப்போது திருநாவுக்கரசுசுவாமிகள் பரமசிவனைத்தியானஞ்செய்து
"சொற்றுணை வேதிய னென்னும்,, பஞ்சாக்ஷரப் பதிகமோத. கட்டு
களெல்லாம் நீங்கி அந்தக்கற்றூண் தெப்பம்போலாக அதன்மேலி
ருந்துகொண்டு பதிகமுழுவது மோதிச் சாற்றித் திருப்பாதிரிப்
புலியூருக்கடுத்த திருக்கெடிலநதி முகத்துவாரக் கரைசேர்ந்து தி
ருப்பாதிரிப் புலியூருக்கெழுந்தருளிச் சுவாமியைத் தரிசித்துப்ப
திகமோதித்துதித்து, மறுநாள் திருவதிகைவீரட்டானத்திறைவனை
வணங்கிப்பதிகமோதித்துதித்து,அங்குங்கைத்தொண்டுமுதலியதிரு
த்தொண்டுசெய்திருக்கும்நாளில்,சமண்சமயத்திலிருந்த பல்லவனெ
ன்னும்அரசன்திருநாவுக்கரசுசுவாமிகளின் உண்மையைஅறிந்துசை
வசமயத்துக்குரியவனாகிச்சமணர்மடம் ஆலயமிவைகளையிடித்துஒ
ருசிவாலயப்பிரதிஷ்டைசெய்தனன்-பின்புதிருநாவுக்கரசுசுவாமிகள்
திருவதிகைவீரட்டானத்தினின்றும்புறப்பட்டுஅருகிலிருக்கும் ஸ்த
லங்களை யெல்லாந்தரிசித்துப் பதிகமோதித் துதித்துத் திருத்தூங்
கானைமாடத்துக்கெழுந்தருளிப், பரமசிவத்தைத்தொழுதுதுதித்து
அய்யனேசமண் சமயச்சார்பிலிருந்த இவ்வுடலைத் தாங்கிக் கொண்
டிருக்க அருவருக்கின்றேனாகலால், தேவரீருடைய * இலச்சினையை
அடியேனுக்குத் தரித்தருள வேண்டுமென்று பதிகமோத அவ்வ
ண்ணமேபரமசிவத்தின்திருவருளால் ஒருவருமறியாமல்ஒருசிவபூத
ம்வந்து சூலத்துடன் விடையி லச்சினைதம்முடைய தோட்களில்
தரிக்கமகிழ்ந்து துதித்து, அங்கிருந்துஎழுந்தருளிமற்றத்தலங்களை
யுந் தரிசித்து அளவில்லா அன்புபெருகச் சிதம்பரத்துக் கெழுந்
தருளி நடேசமூர்த்தியைத் தரிசித்துப் பதிகமோதித் துதிசெய்து
விடைபெற்றுக்கொண்டு, திருஞானசம்பந்த சுவாமிகளைத் தரிசிக்

* இலச்சினை-என்பது. முத்திரை.

கவேண்டுமென்னும் விருப்பத்துடன் எழுந்தருளித் திருஞானசம்பந்தசுவாமிகள் திருக்கூட்டத்துடன் எதிரில்வரக்கண்டு வணங்கச்சுவாமிகள் அப்பரோ யெழுந்திருமென்று தம்முடையஇரண்டுதிருக்கரங்களாலு மெடுக்க எழுந்து சீகாழியிற்சென்று பரமசிவத்தைத் தரிசித்துப் பதிகமோதித் துதிசெய்து, திருஞானசம்பந்தசுவாமிகள் திருமாளிகையி லமர்ந்திருந்து சோழநாட்டுள்ள மற்றத்தலங்களுந் தரிசிக்கவேண்டுமென்று எழுந்தருளித் திருஞானசம்பந்தசுவாமிகளும் எழுந்தருளி வரத் திருக்கோலக்காவிற் சென்று பணிந்து பதிகமோதி, அங்கிருந்து தனித்து எழுந்தருளிமற்றுமுள்ளதலங்களைத்தரிசித்து, திருச்சத்தி முற்றத்தில் சென்றிறைஞ்சிப் பரமசிவத்தைப் பணிந்து- கூற்றுவன்வருமுன்- அடியேன்முடியில் சுவாமிகள் திருவடி சூட்டவேண்டுமென்று பதிகமோதினர், கயிலாயபதியானவர் திருநல்லூருக்கு வாவென்றருள அவ்வண்ணமே திருநல்லூரிற் சென்றருளி ஆலயத்திற் சாஷ்டாங்கமாகப்பணியும்போது சுவாமி திருவடி சூட்டத் தேவாரமோதித் தொழுது அவ்விடத்தினின்று மற்றையதலங்களைத் தரிசித்துக் கொண் டெழுந்தருளித் திங்களூரென்னுந் தலத்தைச்சார்ந்து அப்பூதி நாயனார் தம்மிடத்தில் வைத்திருக்கும்பேரன்பினுக்குமகிழ்ந்து அவரதுதிருமாளிகையிற்சென்றுகண்டு அவருடையவேண்டுதலினால் அங்குஅமுதுகொள்ளச்சம்மதித்தமையால் நாயனார்மனைவியார்அமுதமைத்துமூத்ததிருநாவுக்கரசென்னும்புத்திரனைவாழையிலைகொண்டுவரும்படியனுப்பஅவன்போனவிடத்தில்சர்ப்பந் தீண்டிற்று, அந்தப்பிள்ளை இலையைக் கொண்டுவந்து தாயினிடத்திற் சேர்த்து யாதொன்றுஞ் சொல்லாமல் உயிர்நீங்கினன், அவர்கள்பார்த்துவிஷந்தீண்டிற்றென்றுகுறிப்பினாலறிந்துகொண்டுஅவ்வுருவத்தைமறைத்துவிட்டு, திருநாவுக்கரசுசுவாமிகளுக்கு அமுதுபடைக்க முயற்சிசெய்யச்சுவாமிகளறிந்துகொண்டு,தேவாரமோதிஅந்தப்பிள்ளை பிழைக்கச்செய்து பின்புநாயனாருடன்அமுதுகொண்டு,அங்கிருந்துபுறப்பட்டுமற்றத்தலங்களைத்தரிசித்துப்பதிகமோதித்திருவாரூரிலெழுந்தருளிப்புற்றிடங்கொண்டாரைத்தொழுது பதிகமோதித் துதித்துத்திருப்புகலூருக்குஎழுந்தருளிவருகையில்அங்குவந்து வீற்றிருக்கும்திருஞானசம்பந்தசுவாமிகள் கேள்விப்பட்டு எதிர்கொண்டு வர இருவருங் கண்டு வணங்கி; திருப்புகலூரில்வந்து சேர்ந்து சுவாமியைத் தரிசித்துப் பதிக மோதிச் சாத்தி முருகநாயனார் திருமடத்தில் தங்கியிருந்து திருஞான சம்பந்த சுவாமிகள் திருவாரூருக்கு எழுந்தருளிவிட அப்பர்சுவாமிகள்மற்றத்தலங்களைத் தரிசித்துவந்துமறுபடி திருப்புகலூரில் முருகநாயனார் திருமடத்தில் வீற்றிருக்கத் திருஞான சம்பந்தசுவாமிகளும் அங்கு எழுந்தருளினர், அதற்குமேல்

அவ்விரண்டு சுவாமிகளும், திருவீழிமிழலையிற்சேர்ந்தருளிப்பரம சிவத்தைத்தரிசித்துப்பதிகமோதித்தொழுது இருக்கும் போது கால மழை வருஷியாமல் பஞ்சகாலம் அதிகரிக்கவே பரமசிவம் அடி யார்கள்பொருட்டுப் படிக்காசு கொடுத்தருள அதைக்கொண்டுசிவ னடியார்கள் மாறுமல் வருகின்றவர்கள் யாவர்க்கும் அமுது படை த்துக் கொண்டிருந்து, பின்பு திருமறைக்காடென்னுந் தலத்திற் சென்று வேதம்பூசித்துச்சாத்திவிட்டுப் போனபடியே யிருக்குந் திருக்கதவத் திறக்கும்வண்ணம் "பண்ணினேர்மொழியாளுமைபங் கரோ வென்னும்,, பதிகமோதி அதன் பின்பு சோழநாட்டிலும் நடுநாட்டிலு முள்ள ஸ்தலங்களையெல்லாந் தரிசித்துப் பதிகமோ திச் சாத்தி, தொண்டைநாட்டுக்கெழுந்தருளி அங்குள்ள காஞ்சீபு ர முதலாகிய தலங்களைத் தரிசித்துக் கொண்டு வருகின்றவர் திருக் காளத்திக் கெழுந்தருளிச் சுவாமியைத் தரிசிக்கும் போது ஸ்ரீகயி லாயகிரி தரிசனத் தோற்றமாக அங்கிருந்து மெழுந்தருளி காடு மலை நாடு முதலியவைகளைக்கடந்து சென்று ஸ்ரீமல்லிகார்ச்சுனமெ ன்னுந் தலத்திற்சேர்ந்து சுவாமியைத்தரிசித்துத் தேவாரமோதிச் சாத்தி விடைபெற்றுக்கொண்டு அப்புறம் வடக்கு நோக்கி யெழு ந்தருளுகின்றவர், தெலுங்குதேசம் கன்னடதேச முதலாகிய நாடு களையுங் கடந்து சென்று கங்கைக் கரையிற் சேர்ந்து காசியென்கி ற விசுவநாதனைத் தரிசித்துத் துதிசெய்து, அவ்விடத்தில் தம்மு டைய பரிசனங்களை யெல்லாம் நிறுத்தி விட்டு அப்புறந் தனியே இராவும் பகலு மாக நடந்து மலைவழி காட்டுவழி யெல்லாங் கடந் துபாலைவனத்திற்போம்போது அந்த நிலவெப்பத்தினல் கால் பர ட்டளவும் கை மணிக்கட்டளவுந் தேய அதற்குமேல் நடக்கமாட் டாமல் தவழ்ந்து சென்று அதுவுங்கூடாமல் மார்பினலுந்திச் செ ன்றும் புரண்டுசென்றும் அதற்குஞ் சத்தியில்லாமல் ஓய்ந்து பிர க்கினைதப்பி யிருக்கப்பரமசிவத் திருவுளமிரங்கி யிவரிவ்வுலகத்தி லி ருப்பவர்களுய்யும்பொருட்டுத் தலங்கள்தோறுஞ் சென்று இன்ன ந் திருப்பதிகமோத வேண்டு மென்னுங் கருணையினல், கயிலாயத் துக்கு வரும்படி கட்டளை யிடாமல் ஒரு பிராமணவடிவங்கொண்டு வந்து அப்பர்சுவாமிகள் தம்மைநோக்கும்படி சமீபத்திலிருந்து, நீரிவ்வாறுவருந்தி வந்ததென்னென, அப்போது பரம சிவத்தின் தரிசன விசேஷத்தால் அப்பர்சுவாமிகளுக்குக் கொஞ்சம் ஞாபக ம்வந்து, கயிலாயகிரிக்குச்சென்று தரிசனஞ் செய்ய வேண்டுமெ ன்கிற விருப்பத்தின லிவ்வாறு வந்தேனென்ன, சுவாமி யானவர் கயிலாயகிரி மனிதர்கள் சென்று தரிசிக்கக்கூடுவதோவென்ன, எவ் விதத்திலும் மாண்டுபோகிற வுடலிது ஆகையால் நான் கயிலாய தரிசனஞ் செய்தாலல்லது மீளேனென்று சொல்லினர், அந்தவுழு

திலை அறிந்த பரமசிவம் பிராமண வடிவ மறைந்து ஆகாயத்தில் ரிஷபவாகனத்துடன் தோன்றி நாவுக்கரசனே யெழுந்திருவென்று திருவாய் மலர்ந்தருளினவளவில் அப்பர்சுவாமிகள் திருமேனி முன்போல பழுதின்றி விளங்க வுணர்ச்சிபெற்று ஆண்டவனே அடியேனுக்குக் கயிலாய தரிசனங் கடாக்ஷிக்க வேண்டுமென்று துதிசெய்தனர், சுவாமி தாமெழுந்தருளியபோ துண்டாகிய தடாகத்தைக்காட்டி யிதில் முழுகித் திருவையாற்றில் வந்து கயிலாயதரிசனங் காணக்கடவையென்ன, அவ்வாறே அந்தத்தீர்த்தத்தில்முழுகித் திருவையாற்றி லொரு தடாகக் கரையிலேறிச் சுவாமி சந்நிதிக்குச் சென்று நந்திதேவர் முதலான பிரமத கணங்களும், முனிவர்களும் இந்திராதிதேவர்களும் வந்து நெருங்கியிருக்கவும் தேவதுந்துமி முழங்கவும் வேதங்கள் கோஷிக்கவும், பார்வதி சமேதராய்க்கயிலாயபதிவீற்றிருப்பதைக்கண்டு தரிசித்துப்பேரானந்தமடைந்து திருப்பதிகங்களோதிச் சாத்தினர், அதற்குமேல் பரமசிவத்தின் அருளினால் கயிலாயத்தோற்றமறைந்து பழையபடிஆலயமாயிருக்கக்கண்டு, மனவருத்தங்கொண்டுமற்றுமுள்ள தலங்களைத்தரிசிக்கவேண்டுமென்கிற அன்பினால் திருப்பூந் துருத்தி யென்னும் ஸ்தலத்துக்கு எழுந்தருளிப் பரமசிவத்தைத் தரிசித்துப் பதிக மோதித் தொழுது கைத்தொண்டுஞ்செய்து அங்கொரு திருமடமேற்படுத்தி அதில் வீற்றிருந்து காலங்கடோறும் சுவாமியைத்தரிசனஞ்செய்து கொண்டிருக்கையில் திருஞானசம்பந்தசுவாமிகள் மதுரைக்கெழுந்தருளிச் சமணரைவாதினால் வென்றுமறுபடி சோழநாட்டில் வரும்போது அப்பர்சுவாமிகளைக் காணும்விருப்பத்தினால் திருப்பூந்துருத்திக் கெழுந்தருள, அதனை அப்பர்சுவாமிகளறிந்து எதிர்சென்று ஒருவரும் அறியாத வண்ணந் திருக்கூட்டத்தினுள் சென்று திருஞான சம்பந்த சுவாமிகள் எழுந்தருளிவருகிற முத்துச் சிவிகையைத் தமது தோள்கொடுத்து தாங்கினர், அது திருஞானசம்பந்த சுவாமிகள் பார்க்காமையால் - அப்பர் எங்கிருக்கின்றனரென்ன- அ ப் ப ர் சு வ ா மி க ள் -அடியேன் தேவரீர் முத்துச்சிவிகையைத் தாங்கும்படியான வாழ்வு பெற்றிங்கிருக்கின்றேனென்ன, அந்தவார்த்தையைக் கேட்பதற்குமுன் திருஞானசம்பந்த சுவாமிகள் முத்துச் சிவிகையை விட்டு அதிவிரைவாக இழிந்து, அப்பர்சுவாமிகளைப் பணிய அதற்குமுன்னமே அப்பர்சுவாமிகளும் பணிந்தது கண்ட அடியார்களெல்லாரும் அவ்விரண்டுசுவாமிகளையும் வணங்கி மகிழ்ச்சியினால் ஆரவாரித்தார்கள்அதன்பின்பு திருஞானசம்பந்தசுவாமிகளும் அப்பர்சுவாமிகளும் ஆலயத்தி லெழுந்தருளிப் பரமசிவத்தைத் தரிசித்துத் திருமடத்தில்வந்து இருவரும் அமர்ந்திருக்க மதுரையில் நடந்த சேதிகளையெல்

லாம் திருக்கூட்டத்தார்சொல்ல ஆனந்தமடைந்தது மன்றி குலச்சி றைநாயனுராகிய மந்திரியார், மங்கையர்க்கரசியா ரிவர்க ளுடைய சிவபக்தியின் மிகுதியைத் திருஞானசம்பந்த சுவாமிகள் திருவாய் மலர்ந்தருள, அப்பர்சுவாமிகள் கேள்விப்பட்டுப் பரவசமடைந்து தாமு மதுரைக்கெழுந்தருளிச்சொக்கநாதசுவாமியையும் மீனுக்ஷிய ம்மையினையுந் தரிசித்துப் பதிகமோதிச்சாத்தி மந்திரியாரும் நின் றசீர் நெடுமாற னெனும் பாண்டிராசனும் வந்து வணங்க மகிழ் ந்து அவர்கருத்துக்கினிய வார்த்தைகள்சொல்லி அங்கிருந்தும்புறப் பட்டு மற்றத்தலங்களையுந் தரிசித்து, இராமேச்சுரத்துக் கெழுந்த ருளி ராமநாதரைத்தரிசித்துப் பதிகமோதிச் சாத்தி ச்சிலநா ளங்கிரு ந்து, மறுபடியுஞ் சோழநாட்டில் வந்து திருப்புகலூரிற்சேர்ந்து சுவாமியைத்தரிசித்து உழவாரப்பணியுஞ் செய்துகொண்டிருக்கும் நாளில், பரமசிவம் இவருடைய தன்மை யுலகத்தாருக்குத் தெரிவி க்கும் பொருட்டு உழவாரப் படையால் செதுக்கு மிடந்தோறும், பொன்னும் நவரத்தினங்களு முண்டாகச் செய்தருள, அவைகளை யோடுகள்போல மதித்துப் பொய்கையில் எறிந்துவிட, மேலு மி வரை மயக்கும்படி பரமசிவம், ரம்பாஸ்திரிகளை யனுப்ப அவர்க ள் வந்து தங்களால் கூடியமட்டில் மோகமுண்டாகும்படி லாவண் ஞ்செய்ய, அதுகண்டுஅப்பர்சுவாமிகள், வினைகளைகுறித்து“உம்மா லிக்கென்ன குறையுடையேனுன் என்னுந்„ திருத்தாண்டகமோத அந்தமாதர்க ளிவரை மயக்க நம்மா லாவதல்லவென்று போய்விட் டார்கள், அதற்குமேல் வாகீசமுனிவராகிய அப்பர்சுவாமிகள், பர மசிவத்தினுடைய திருவருள்கூடுகிற வரைக்கும், அந்த தலத்தினிட த்தில் பரமசிவத்தைத் தரிசித்துப் பதிகமோதிச் சாத்திக் கொண்டி ருந்து - பின்பொருநாள் - “ எண்ணுகேனென்சொல்லி யெண்ணு கேனே வென்னுந்„ திருத்தாண்டகமோதி - சிவானந்தவடிவமாய்ப் பரமசிவத்தின் திருவடிநீழலில் சேர்ந்தருளினர்.

அப்பர்சுவாமிகளுக்குத்திருநாவுக்கரசு சொல்லரசு வாக்கின் மன்னர் தாண்டகவேந்து எனப்பல திருநாமங்களுள இவைகளுக் குள் நாவுக்கரசு என்பது பரமசிவம் அருளிச்செய்தது, அதுகார ணமாகச்சொல்லரசு வாக்கின்மன்னவர் என்றுந் தாண்டகங்களைமி குதியாக ஓதினமையால் தாண்டகவேந்துதாண்டகச்சதிரார் என்று ஞ் சேக்கிழார்சுவாமிகளால் உண்டாகியதிருநாமம் அப்பரென்பது திருஞான சம்பந்த சுவாமிகளா லுண்டாகிய திருநாமம்.

திருநாவுக்கரசுசுவாமிகள்சரித்திரம் - முற்றிற்று.

இந்தப்புராணத்திலும் சுந்தரமூர்த்திசுவாமிகள் புராணத்திலு ம் விடப்பட்டிருக்கிற, சுவாமிபெயர் முதலானவைகள் திருஞானசு ம்பந்த சுவாமிகள் புராணத்தில்காணப்படும்.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# குலச்சிறைநாயனார்

## புராணம்.



பன்னுதொல்புகழ்ப்பாண்டிநன்னாட்டிடைச்
செந்நெலார்வயற்றீங்கரும்பின்னயற்
றுன்னுபூகப்புறம்பணைசூழ்ந்தது
மன்னுவண்மையினார்மணமேற்குடி. (௧)

அப்பதிக்குமுதல்வர்வன்றொண்டர்தா
மொப்பரும்பெருநம்பியென்றோதிய
செப்பருஞ்சீர்க்குலச்சிறையார்திண்மை
வைப்பினாற்றிருத்தொண்டின்வழாதவர். (௨)

காரணங்கண்ணுதற்கன்பரென்னவே
வாரமாகிமகிழ்ந்தவர்தாண்மிசை
யாருமன்பொடுவீழ்ந்தஞ்சலிமுகிழ்த்
தீரநன்மொழியெய்தவிசைத்துளார். (௩)

குறியினான்குகுலத்தினராயினு
நெறியினக்குலநீங்கினராயினும்
அறிவுசங்கரற்கன்பரெனப்பெறிற்
செறிவுறப்பணிந்தேத்தியசெய்கையார். (௪)

உலகர்கொள்ளுநலத்தினராயினு
மலகிறீமையராயினுமம்புலி
யிலகுசெஞ்சடையாரடியாரெனிற்
றலமுறப்பணிந்தேத்துந்தலைமையார். (௫)

பண்பின்மிக்கார்பலராயணையினும்
உண்பவேண்டியொருவரணையினும்
எண்பெருக்கியவன்பாலெதிர்கொண்டு
நண்புகூர்ந்தமுதூட்டுநலத்தினார். (௬)

பூதிகோவணஞ்சாதனத்தாற்பொலிந்
தாதிதேவர்தமஞ்செழுத்தாமவை
யோதுநாவணக்கத்தாலுளாப்பவர்
பாதநாளும்பரவியபண்பினர். (௭)

இன்னநல்லொழுக்கத்தினரீறில்சீர்த்
தென்னவன்னெடுமாறற்குச்சீர்திகழ்
மன்னுமந்திரிகட்குமேலாகியார்
ஒன்னலர்ச்செற்றுறுதிக்கணின்றுளார். (௮)

ஆயசெய்கையராயவராறணி
நாயனார்திருப்பாதநவின்றுளார்
பாயசீர்புனைபாண்டிமாதேவியார்
மேயதொண்டுக்குமெய்த்தொண்டராயினர். (௯)

புன்னயத்தருகந்தர்பொய்நீக்கவுந்
தென்னர்நாடுதிருநீறுபோற்றவு
மன்னுகாழியர்வள்ளலார்பொன்னடி
சென்னிசேர்த்திமகிழ்ந்தசிறப்பினர். (௰)

வாதிற்றோற்றவமணைவன்கழுத்
தீதுநீங்கிடவேற்றுவித்தார்திறம்
யாதுபோற்றினேன்மேலினியேத்துகேன்
வேதநீதிமிழலைக்குறும்பர்தாள். (௰௧)

குலச்சிறைநாயனார்புராணம் -முற்றிற்று.

ஆக-திருவிருத்தம்- ௩௲௱௰௫.

---

திருச்சிற்றம்பலம்.

பாண்டிநாட்டிலுள்ள மணமேற்குடியென்னும் க்ஷேத்திரத்தில் திருவவதாரஞ்செய்து குலச்சிறையாரென்னுந் திருநாமம்பெற்றுச் சிவநேசமிகுதியால் பரமசிவத்துக்கு அடியாரென்னும்ஒரு காரணத்தைப்பற்றிஅவர்களைக்கண்டவுடன் சாஷ்டாங்கமாகப்பணிந்து அன்புடன் உபசார வார்த்தை சொல்லுவதும், பிராமணகுல முதலிய நான்கு குலத்தினராயினும், அந்தநாலுகுலத்தவரல்லராயினும் உலகத்தாரெல்லாரும் ஏற்றுக்கொள்ளத்தகக நன்மையையுடையவராயினும், அளவில்லாத தீமையினை யுடையவராயினும், அவ

ர்கள் பரமசிவனடியார்களாயிருப்பார்களாகில் பூமியில்விழுந்துப ணிந்துதோத்திரஞ்செய்வதும், அன்றியும்-சிவனடியார்கள்பலபேர்க ள்வரினும் அல்லது ஒருவர்வந்தாலும், மிகுந்தஅன்புடன் அமுது படைப்பதும், விபூதி ருத்திராக்ஷந் தரித்துக்கொண்டு பஞ்சாக்ஷ ரசெபஞ்செய்கின்றவர்களைக் கண்டால், அவர்கள் பாதங்களை அன் புடன் பணிவது மாகிய அளவில்லாத அன்புமுள்ளவர், மேலும் பாண்டிய மகாராசாவின் மந்திரிகளுக்கெல்லா மேன்மையாகிய ம ந்திரித்தனமுமுள்ளவர், பாண்டிமாதேவியார் திருத்தொண்டுக்கு மெ ய்த்தொண்டராயிருப்பவர், இதுவுமல்லாமல்-சமணசமயம்ஒழிந்து பாண்டிநாட்டிலுள்ளவர்கள் யாவருஞ் சைவர்களாய் விபூதி தரிக்க வும், திருஞானசம்பந்தசுவாமிகளுடைய திருவருள்பெற்றவர்.





உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்

# பெருமிழலைக்
# குறும்பநாயனார்புராணம்.



சூகநெருங்குகுலைத்தெங்குபலவுபூகஞ்சூழ்வுடைத்தாய்
வீதிதோறுநீற்றினொளிவிரியமேவிவிளங்குபதி
நீதிவழுவாநெறியினராய்நிலவுங்குடியாலெடுநிலத்து
மீதுவிளங்குந்தொன்மையதுமிழலைநாட்டுப்பெருமிழலை. (௧)

அன்னதொன்மைத்திருப்பதிக்கணதிபர்மிழலைக்குறும்பனார்
சென்னிமதியம்வைத்தவர்தமடியார்க்கானசெய்பணிகள்
இன்னவண்ணமென்றவர்தாமுரையாமுன்னமெதிரேற்று
முன்னமுவந்துசெய்வாராய்முதிருமறிவின்பயன்கொள்வார் (௨)

தொண்டர்பலரும்வந்தீண்டியுண்ணத்தொலையாவமுதூட்டிக்
கொண்டுசெல்லவிருநிதியமுகந்துகொடுத்துக்குறைந்தடைவார்
வண்டுமருவுங்குழலுமையாள்கேள்வன்செய்யதாளென்னும்
புண்டரீகமகமலரில்வைத்துப்போற்றும்பொற்பினார் (௩)

இத்தன்மையராய்நிகழுநாளெல்லையில்லாத்திருத்தொண்டின்
மெய்த்தன்மையினையுலகறியவிதியால்வளங்கிமெய்யடியார்
சித்தநிலவுந்திருத்தொண்டத்தொகைபாடியநம்பியைப்பணிந்து
நித்தனருள்பெற்றவர்பாதநினைக்குநியமத்தலைநின்றார் (௪)

மையார்தடங்கட்பரவையார்மணவாளன்றன்மலர்க்கழல்கள்
கையாற்றொழுதுவாய்வாழ்த்திமனத்தானினைக்குங்கடப்பாட்டிற்
செய்யாள்கோனுநான்முகனுமறியாச்செம்பொற்றாளிணைக்கீழ்
உய்வான்சேரவுற்றநெறியிதுவேயென்றன்பினிலுய்த்தார் (௫)

நாளுநம்பியாரூரர்நாமநவின்றநலத்தாலே
யாளும்படியாலணிமாதிசித்தியானவணைந்ததற்பின்
மூளுங்காதலுடன்பெருகமுதல்வர்நாமத்தஞ்செழுத்துங்
கேளும்பொருளுமுணர்வுமாம்பரிசுவாய்ப்பக்கெழுமினார் (௬)

இன்னவாறேயிவரொழுகவேறுகொடிமேலுயர்த்தவர்தம்
பொன்னின்கழல்நண்மண்ணின்மேற்பொருந்தவந்துவழக்குரைத்து
மன்னுமோலையவைமுன்புகாட்டியாண்டவன்றொண்டர்
சென்னிமதிதோய்மாடமலிகொடுங்கோளூரைச்சேர்வுற்றார் (௭)

அஞ்சைக்களத்துநஞ்சுண்டவமுதைப்பரவியணைவுறுவார்
செஞ்சொற்றமிழ்மாலைகண்மொழியத்தேவர்பெருமானருளாலே
மஞ்சிற்றிகழும்வடகயிலைப்பொருப்பிலெய்தவரும்வாழ்வு
நெஞ்சிற்றெளியவிங்குணர்ந்தார்நீடுமிழலைக்குறும்பனார் (௮)

மண்ணிற்றிகழுந்திருநாவலூரில்வந்தவன்றொண்டர்
நண்ணற்கரியதிருக்கயிலைநாளையெய்தநான்பிரிந்து
கண்ணிற்கரியமணிகழிபவாழ்வார்போலவாழேனென்
றெண்ணிச்சிவன்றாளின்றேசென்றடைவன்யோகத்தாலென்பார் (௯)

நாலுகரணங்களுமொன்றாய்நல்லவறிவுமேற்கொண்டு
காலும்பிரமநாடிவழிக்கருத்துச்செலுத்தக்கபாலநடு
ஏலவேமுன்பயின்றநெறியெடுத்தமறைமூலந்திறப்ப
மூலமுதல்வர்திருப்பாதமடைவார்கயிலைமுன்னடைந்தார் (௰)

பயிலச்செறிந்தயோகத்தார்பரவைகேள்வன்பாதமுறக்
கயிலைப்பொருப்பரடியடைந்தமிழலைக்குறும்பர்கழல்வணங்கி
மயிலைப்புறங்கொண்மென்சாயன்மகளிர்கிளவியாழினொடுங்
குயிலைப்பொருவுங்காரைக்காலம்மைபெருமைகூறுவாம் (௰௧)

பெருமிழலைக்குறும்பநாயனார்புராணம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௩௭௱௨௰௬.

திருச்சிற்றம்பலம்.

மிழலைநாட்டில் விளங்கும் பெருமிழலை யென்னும் க்ஷேத்திரத்தில் திருவவதாரஞ்செய்து மிழலைக்குறும்பனென்னுந் திருநாமம்பெற்றுச் சிவனடியார்களைக் கண்டவுடனெதிர்சென்று வணங்கிக்குறிப்பறிந்து அவர்களுக்குப் பணிசெய்வதும் திருத்தொண்டர்கள் பலபேர்கள் வந்தாலும் அவர்களுக்கு இனிய வார்த்தையுடன் அமுதுபடைத்து, வேண்டிய பொருள் கொடுப்பதுமாகிய செய்கையிலிருக்கும்நாளில், சுந்தரமூர்த்திசுவாமிகளைப் பரமசிவந்தடுத்தாட்கொண்டு வன்றொண்டனென்னும் நாமம் அருளிச் செய்ததையறிந்து அவனையே மனதில் தியானித்திருந்த காரணத்தால் அட்டமாசித்திகளுங் கிடைத்திருந்து. சுந்தரமூர்த்தி சுவாமிகள் கயிலாயத்துக் கெழுந் தருளுகின்ற தினத்தை ஞானத்தால் அறிந்து நமது கடவுளாகிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஸ்ரீகயிலாயத்துக் கெழுந்தருளினபின்பு, கண்ணுண்மணிகழிந்து வாழ்வார்போல்யான் வாழ்வேனென்று சுந்தரமூர்த்தி சுவாமிகள் வெள்ளானையின்மேல் ஆரோகணித்துக்கொண்டு கயிலைக் கெழுந்தருளு நாளுக்குமுன்னாளில் - நிஷ்டையிலிருந்து - கபாலத்தின் மூலந்திறப்பப்பரமசிவத்தினுடைய திருவடி நீழலிற் சேர்ந்தனர்.

—(*)—



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# காரைக்காலம்மையார்

## புராணம்

மானமிகுதருமத்தின்வழிநின்றுவாய்மையினில்
ஊனமில்சீர்ப்பெருவணிகர்குடிதுவன்றியோங்குபதி
கூனல்வளைதிரைசுமந்துகொண்டேகிமண்டுகழிக்
கானல்மிசையுலவுவளம்பெருகுதிருக்காரைக்கால் (௧)

வங்கமலிகடற்காரைக்காலின்கண்வாழ்வணிகர்
தங்கள்குலத்தலைவனார்தனதத்தனார்தவத்தால்
அங்கவர்பாற்றிருமடந்தையவதரித்தாளெனவந்து
பொங்கியபேரழகுமிகப்புனிதவதியார்பிறந்தார். (௨)

வணிகர்பெருங்குலம்விளங்கவந்துபிறந்தருளியபின்
அணிகிளர்மெல்லடிதளர்வுற்றசையுநடைப்பருவத்தே
பணியணிவார்கழற்கடிமைபழகிவரும்பாங்குபெறத்
தணிவில்பெருமனக்காதறதும்பவருமொழிபயின்றார். (௩)

பல்பெருநற்கிளையுவப்பப்பயில்பருவச்சிறப்பெல்லாஞ்
செல்வமிகுதந்தையார்திருப்பெருகுஞ்செயல்புரிய
மல்குபெரும்பாராட்டின்வளர்கின்றார்விடையவர்பால்
அல்கியவன்புடனழகின்கொழுந்தெழுவதெனவளர்வார். (௪)

வண்டல்பயில்வனவெல்லாம்வளர்மதியம்புனைந்தசடை
அண்டர்பிரான்றிருவார்த்தையணையவருவனபயின்று
தொண்டர்வரிற்றொழுதுதாதியர்போற்றத்துணைமுலைகள்
கொண்டுநுசுப்பொதுங்குபதக்கொள்கையினிற்குறுகினார். (௫)

நல்லவெனவுறுப்புநூலவருரைக்குநலந்திரம்பி
மல்குபெருவனப்புமீக்கூரவருமாட்சியினால்
இல்லிகவாப்பருவத்திலிவர்கண்மரபினுக்கேற்குந்
தொல்குலத்துவணிகர்மகட்பேசுதற்குத்தொடங்குவார். (௬)

நீடியசீர்க்கடனாகைநிதிபதியென்றுலகின்கட்
பாடுபெறுபுகழ்வணிகன்பயந்தகுலமைந்தனுக்குத்
தேடவருந்திருமரபிற்சேயிழையைமகட்பேச
மாடமலிகாரைக்கால்வளநகரின்வரவிட்டார். (௭)

வந்தமுதறிவோர்கண்மணங்குறித்தமனைபுகுந்து
தந்தைபாற்றனதத்தன்றனைநோக்கிநீபயந்த
பைந்தொடியைநிதிபதிமைந்தன்பரமதத்தனுக்கு
முந்தைமரபினுக்கேற்குமுறைமைமணம்புரிகென்றார். (௮)

மற்றவனுமுறைமையினான்மணமிசைந்துசெலவிடச்சென்
றற்றவர்களுரைகேட்டநிதிபதியுமுயர்சிறப்புப்
பெற்றனன்போலுவந்துதனிப்பெருமகற்குத்திருமலியுஞ்
சுற்றமுடன்களிகூர்ந்துவதுவைவினைத்தொழில்பூண்டான். (௯)

மணமிசைந்தநாளோலைசெலவிட்டுமங்கலநாள்
அணையவதுவைத்தொழில்களானவெலாமமைவித்தே
யிணரலங்கன்மைந்தனையுமணவணியினெழில்விளக்கிப்
பணைமுரசமெழுந்தார்ப்பக்காரைக்காற்பதிபுகுந்தார். (௰)

அளிமிடைதார்த்தனதத்தனணிமாடத்துட்புகுந்து
தெளிதருநூல்விதிவழியேசெயன்முறைமைசெய்தமைத்துத்
தளிரடிமென்னகைமயிலைத்தாதவிழ்தார்க்காளைக்குக்
களிமகிழ்சுற்றம்போற்றக்கல்யாணஞ்செய்தார்கள் (௰௧)

மங்கலமாமணவினைகண்முடித்தியல்பின்வைகுநாட்
டங்கள்குடிக்கொருபுதல்வியாதலினாற்றனதத்தன்
பொங்கொலிநீர்நாகையினிற்போகாமேகணவனுடன்
அங்கணமர்ந்தினிதிருப்பவணிமாடமருங்கமைத்தான். (௰௨)

மகட்கொடையின்மகிழ்சிறக்கும்வரம்பிறனங்கொடுத்ததற்பி
னிகர்ப்பரியபெருஞ்சிறப்பினிதிபதிதன்குலமகனுந்
தகைப்பில்பெருங்காதலினாற்றங்குமனைவளம்பெருக்கி
மிகப்புரியுங்கொள்கையினின்மேம்படுதன்மேவினான். (௰௩)

ஆங்கவன்றனில்வாழ்க்கையருந்துணையாயமர்கின்ற
பூங்குழலாரவர்தாமும்பொருவிடையார்திருவடிக்கீழ்
ஓங்கியவன்புறுகாதலொழிவின்றிமிகப்பெருகப்
பாங்கில்வருமனையறத்தின்பண்புவழாமைப்பயில்வார். (௰௪)

நம்பரடியாரணைந்தாலல்லதிருவமுதளித்துஞ்
செம்பொன்னுநவமணியுஞ்செழுந்துகிலுமுதலான
தம்பரிவினால்வர்க்குத்தகுதியின்வேண்டுவகொடுத்தும்
உம்பர்பிரான்றிருவடிக்கீழுணர்வுமிகவொழுகுநாள். (௰௫)

பாங்குடையநெறியின்கட்பயில்பரமதத்தனுக்கு
மாங்கனிகளோரிரண்டுவந்தணைந்தார்சிலர்கொடுப்ப
ஆங்கவைதான்முன்வாங்கியவர்வேண்டுங்குறையளித்தே
யீங்கிவற்றையில்லத்துக்கொடுக்கவெனவியம்பினான். (௰௬)

கணவன்றான்வரவிடுத்தகனியிரண்டுங்கைக்கொண்டு
மணமலியுமலர்க்கூந்தன்மாதரார்வைத்ததற்பின்
பணவரவம்புனைந்தருளும்பரமனார்திருத்தொண்டர்
உணவின்மிகுவேட்கையினாலொருவர்மனையுட்புகுந்தார். (௰௭)

வேதங்கண்மொழிந்தபிரான்மெய்த்தொண்டர்நிலைகண்டு
நாதன்றனடியாரைப்பசிதீர்ப்பேனென நண்ணிப்
பாதங்கள்விளக்கநீர்முன்னளித்துப்பரிகலம்வைத்
தேதந்தீர்நல்விருந்தாவின்னடிசிலூட்டுவார் (௰அ)

கறியமுதங்குதவாதேதிருவமுதுகைகூட
வெறிமலர்மேற்றிருவனையார்விடையவன்றனடியாரே
பெறலரியவிருந்தானாற்பேறிதன்மேலில்லையெனும்
அறிவினராயவரமுதுசெய்வதனுக்காதரிப்பார். (௰௯)

இல்லாளன்வைக்கவெனத்தம்பக்கன்முன்னிருந்த
நல்லநறுமாங்கனிகளிரண்டினிலொன்றைக்கொண்டு
வல்விரைந்துவந்தணைந்துபடைத்துமனமகிழ்ச்சியினால்
அல்லறீர்ப்பவரடியார்தமையமுதுசெய்வித்தார். (உ௰)

மூப்புறுமத்தளர்வாலுமுதிர்ந்துமுடுகியவேட்கைத்
தீப்பசியினிளைப்பாலுமயர்ந்தணைந்ததிருத்தொண்டர்
வாய்ப்புறுமென்சுவையடிசின்மாங்கனியோடினிதருந்திப்
பூப்பயின்மென்குழன்மடவார்செயலுவந்துபோயினார். (உக)

மற்றவர்தாம்போயினபின்மனைப்பதியாகியவணிகன்
உற்றபெரும்பகலின்கணோங்கியபேரில்லெய்திப்
பொற்புறமுன்னீராடிப்புகுந்தடிசில்புரிந்தயிலக்
கற்புடையமடவாருங்கடப்பாட்டிலூட்டுவார். (உஉ)

இன்னடிசில்கறிகளுடனெய்துமுறையிட்டதற்பின்
மன்னியசீர்க்கணவன்றான்மனையிடைமுன்வைப்பித்த
நன்மதுரமாங்கனியிலிருந்ததனைநறுங்கூந்தல்
அன்னமனையார்தாமுன்கொடுவந்துகலத்தளித்தார். (உ௩)

மனைவியார்தாம்படைத்தமதுரமிகவாய்த்தகனி
தனைநுகர்ந்தவினியசுவையாராமைத்தார்வணிகன்
இனையதொருபழமின்னுமுளததனையிடுகவென
அனையதுதாங்கொண்டுவரவணைவார்போலங்ககன்றார். (உ௪)

அம்மருங்குநின்றயர்வாரருங்கனிக்கங்கென்செய்வார்
மெய்ம்மறந்துநினைந்துற்றவிடத்துதவும்விடையவர்தாள்
தம்மனங்கொண்டுணர்தலுமேயவரருளாற்றாழ்குழலார்
கைம்மருங்குவந்திருந்ததிமதுரக்கனியொன்று. (உ௫)

மற்றதனைக்கொடுவந்துமகிழ்ந்திடலுடயின்றகனி
உற்றசுவையமுதினுமேற்படவுளதாயிடவிதுதான்
முற்றருமாங்கனியன்றுமூவுலகிற்பெறற்கரிதாற்
பெற்றதுவேறெங்கென்றுபெய்வளையார்தமைக்கேட்டான். (உசு)

அவ்வுரைகேட்டலுமடவாரருளுடையாரளித்தருளுஞ்
செவ்வியபேரருள்விளம்புந்திறமன்றென்றுரைசெய்யார்
கைவருகற்புடைநெறியாற்கணவனுரைகரவாமை
மெய்வழியென்றெனவிளம்பல்விடமாட்டார்விதிர்ப்புறுவார் (உஎ)

செய்தபடிசொல்லுவதேகடனென்னுஞ்சீலத்தார்
மைதழையுங்கண்டர்சேவடிகண்மனத்துறவணங்கி
யெய்தவருங்கனியளித்தாரியாரென்னுங்கணவனுக்கு
மொய்தருபூங்குழன்மடவார்புகுந்தபடிதனைமொழிந்தார். (உஅ)

ஈசனருளெனக்கேட்டவில்லிறைவனதுதெளியான்
வாசமலர்த்திருவனையார்தமைநோக்கிமற்றிதுதான்
தேசுடையசடைப்பெருமான்றிருவருளேலின்னமுமோர்
ஆசில்கனியவனருளாலழைத்தளிப்பாயெனமொழிந்தான். (உகூ)

பாங்ககன்றுமனைவியார்பணியணிவார்தமைப்பரவி
யீங்கிதளித்தருளீரேலென்னுரைபொய்யாமென்ன
மாங்கனியொன்றருளால்வந்தெய்துதலுமற்றதனை
யாங்கவன்கைக்கொடுத்தலுமேயதிசயித்துவாங்கினான். (௩௦)

வேறு.

வணிகனுந்தன்கைபுக்கமாங்கனிதன்னைக்காணான்
றணிவரும்பயமேற்கொள்ளவுள்ளமுந்தடுமாறெய்தி
யணிகுழலவனைவேறோரணங்கெனக்கருதிநீங்குந்
துணிவுகொண்டெவர்க்குஞ்சொல்லான் றொடர்வின்றியொழுகுநா
[ளில் (௩௧)

விடுவதேயெண்ணமாகமேவியமுயற்சிசெய்வான்
படுதிரைப்பரவைமீதுபடர்கலங்கொண்டுபோகி
நெடுநிதிகொணர்வேனென்னநிரந்தபல்கிளைஞராகும்
வடுவில்சீர்வணிகமாக்கண்மரக்கலஞ்சமைப்பித்தார்கள் (௩௨)

கலஞ்சமைத்ததற்குவேண்டுங்கம்மியருடனேசெல்லும்
புலங்களில்விரும்புபண்டம்பொருந்துவநிரம்பவேற்றிச்
சலந்தருகடவுட்போற்றித்தலைமையாநாய்கன்றானு
நலந்தருநாளிலேறிநளிர்திரைக்கடன்மேற்போனான் (௩௩)

கடன்மிசைவங்கமோட்டிக்கருதியதேயந்தன்னில்
அடைவுறச்சென்றுசேர்ந்தங்களவில்பல்வளங்கண்முற்றி
யிடைசிலநாட்கணீங்கமீண்டுமக்கலத்திலேறிப்
படர்புனற்கன்னிநாட்டோர்பட்டினமருங்குசார்ந்தான் (௫௪)

அப்பதிதன்னிலேறியலகில்பல்பொருள்களாக்கும்
ஒப்பின்மாநிதியமெல்லாமொருவழிபெருகவுய்த்து
மெய்ப்புகழ்விளங்குமவ்வூர்விரும்பவோர்வணிகன்பெற்ற
செப்பருங்கன்னிதன்னைத்திருமலிவதுவைசெய்தான் (௫௫)

பெறலருந்திருவினானைப்பெருமணம்புணர்ந்துமுன்னை
யறலியனறுமென்கூந்தலணங்குறைதிறத்திலற்றம்
புறமொருவெளியுறாமற்பொதிந்தசிந்தனையினோடு
முறைமையின்வழாமைவைகிமுகமலர்ந்தொழுகுநாளில் (௫௬)

முருகலர்ச்சோலைமூதூரதின்முதல்வணிகரோடும்
இருநிதிக்கிழவனென்னவெய்தியதிருவின்மிக்குப்
பொருகடற்கலன்கள்போக்கும்புகழினான்மனைவிதன்பாற்
பெருகொளிவிளக்குப்போலோர்பெண்கொடியரிதிற்பெற்றான் ()

மடமகடன்னைப்பெற்றுமங்கலம்பேணித்தான்முன்
புடனுறைவஞ்சிநீத்தவொருபெருமனைவியாரைத்
தொடர்வறநினைந்துதெய்வத்தொழுகுலமென்றேகொண்டு
கடனமைத்தவர்தநாமங்காதல்செய்மகவையிட்டான் (௫௮)

இந்நிலையிவனிங்கெய்தியிருந்தனனிப்பாலீடுங்
கன்னிமாமதில்சூழ்மாடக்காரைக்கால்வணிகனான
தன்னிகர்கடந்தசெல்வத்தனதத்தன்மகளார்தாமு
மன்னியகற்பினோடுமனையறம்புரிந்துவைக (௫௯)

விளைவளம்பெருக்கவங்கமீதுபோம்பரமதத்தன்
வளர்புகழ்பாண்டிநாட்டோர்மாநகர்தன்னின்மன்னி
யளவின்மாநிதியமாக்கியமர்ந்தினிதிருந்தானென்று
கிளரொளிமணிக்கொம்பன்னார்கிளைஞர்தாங்கேட்டாரன்றே (௬௰)

அம்மொழிகேட்டபோதேயணங்கனார்சுற்றத்தாருந்
தம்முறுகிளைஞர்ப்போக்கியவனிலைதாமுங்கேட்டு
மம்மர்கொண்மனத்தராகிமற்றவனிருந்தபாங்கர்க்
கொம்மைவெம்முலையினாளைக்கொண்டுபோய்விடுவதென்பார் (௬௧)

மாமணிச்சிவிகைதன்னின்மடநடைமயிலன்னாரைத்
தாமரைத்தவிசில்வைகுந்தனித்திருவென்னவேற்றிக்
காமரு*கழனிவீழ்த்துக்காதல்செய்சுற்றத்தாருந்
தேமொழியவருஞ்சூழச்சேணிடைக்கழிந்துசென்றார். (௪௨)

சிலபகல்கடந்துசென்றுசெந்தமிழ்த்திருநாடெய்தி
மலர்புகழ்ப்பரமதத்தன்மாநகர்மருங்குவந்து
குலமுதன்மனைவியாரைக்கொண்டுவந்தணைந்ததன்மை
தொலைவில்சீர்க்கணவனார்க்குச்சொல்லிமுன்செல்லவிட்டார். (௪௩)

வந்தவரணைந்தமாற்றங்கேட்டலும்வணிகன்றானுஞ்
சிந்தையிலச்சமெய்திச்செழுமணம்பின்புசெய்த
பைந்தொடிதனையுங்கொண்டப்பயந்தபெண்மகவினோடு
முந்துறச்செல்வேனென்றுமொய்குழலவர்பால்வந்தான். (௪௪)

தானுமம்மனைவியோடுந்தளர்நடைமகவினோடு
மானிளம்பிணைபோனின்றமனைவியாரடியிற்றாழ்ந்தே
யானுமதருளால்வாழ்வேனிவ்விளங்குழவிதானும்
பான்மையாலுமதுநாமமென்றுமுன்பணிந்துவீழ்ந்தான். (௪௫)

கணவர்தாம்வணங்கக்கண்டகாமர்பூங்கொடியனாரும்
அணைவுறுஞ்சுற்றத்தார்பாலச்சமோடொதுங்கிநிற்ப
உணர்வுறுகிளைஞர்வெள்கியுன்றிருமனைவிதன்னை
மணமலிதாரினாய்நீவணங்குவதென்கொலென்றார். (௪௬)

மற்றவர்தம்மைநோக்கிமானிடமிவர்தாமல்லர்
நற்பெருந்தெய்வமாதனறிந்தகன்றபின்பு
பெற்றவிம்மகவுதன்னைப்பேரிட்டேனாதலாலே
பொற்பதம்பணிந்தேனீரும்போற்றுதல்செய்மினென்றான், (௪௭)

என்றபின்சுற்றத்தாருமிதுவென்கொலென்றுநின்றார்
மன்றலங்குழலினாரும்வணிகன்வாய்மாற்றங்கேளாக்
கொன்றைவார்சடையினார்தங்குரைகழல்போற்றிச்சிந்தை
யொன்றியநோக்கின்மிக்கவுணர்வுகொண்டுரைசெய்கின்றார். (௪௮)

ஈங்கிவன்குறித்தகொள்கையிதுவினியிவனுக்காகத்
தாங்கியவனப்புநின்றதசைப்பொதிகழித்திங்குன்பால்
ஆங்குநின்றார்கள்போற்றும்பேய்வடிவடியேனுக்குப்
பாங்குறவேண்டுமென்றுபரமர்தாள்பரவிநின்றார். (௪௯)

* கழனி - துறைச்சேலை.

ஆனவப்பொழுதுமன்றுளாடுவாரருளினாலே
மேனெறியுணர்வுகூரவேண்டிற்றேபெறுவார்மெய்யில்
ஊனடைவனப்பையெல்லாமுதறியெற்புடம்பேயாக
வானமுமண்ணுமெல்லாம்வணங்குபேய்வடிவமானார். (௫௰)

மலர்மழைபொழிந்ததெங்கும்வானதுந்துமியினாதம்
உலகெலாநிறைந்துவிம்மவும்பருமுனிவர்தாமுங்
குலவினர்கணங்களெல்லாங்குணலையிட்டனமுன்னின்ற
தொலைவில்பல்சுற்றத்தாருந்தொழுதஞ்சியகன்றுபோனார். (௫௧)

உற்பவித்தெழுந்தஞானத்தொருமையினுமைகோன்றன்னை
யற்புதத்திருவந்தாதியப்பொழுதருளிச்செய்வார்
பொற்புடைச்செய்யபாதப்புண்டரீகங்கள்போற்று
நற்கணத்தினிலொன்றானேனென்றுநயந்துபாடி. (௫௨)

[ அற்புதத்திருவந்தாதி. ]

திருச்சிற்றம்பலம்.

பிறந்துமொழிபயின்றபின்னெல்லாங்காதல்
சிறந்துநின்சேவடியேசேர்ந்தே - னிறந்திகழு
மைஞ்ஞான்றகண்டத்துவானோர்பெருமானே
யெஞ்ஞான்றுதீர்ப்ப திடர்.

உரையினிலிம்மாலையந்தாதிவெண்பா
கரைவினற்காரைக்காற்பேய்ச்சொற் - பரவுவார்
ஆராதவன்பினோடண்ணலைச்சென்றேத்துவர்
பேராதகாதல் பிறந்து. திருச்சிற்றம்பலம்.

ஆய்ந்தசீரிரட்டைமாலையந்தாதியெடுத்துப்பாடி
யேய்ந்தபேருணர்வுபொங்கவெயிலொருமூன்றுமுன்னாட்
காய்ந்தவரிருந்தவெள்ளிக்கைலைமால்வரையைநண்ண
வாய்ந்தபேரருண்முன்கூரவழிப்படும்வழியால்வந்தார். (௫௩)

[ திரு இரட்டைமணிமாலை. ]

திருச்சிற்றம்பலம்.

கட்டளைக்கலித்துறை.

கிளர்ந்துந்துவெந்துயர்வந்தடும்போதஞ்சிநெஞ்சமென்பாய்
தளர்ந்திங்கிருந்தறவிர்திகண்டாய்தளராதுவந்தி

வளர்ந்துந்துங்கையும்வானத்திடைவளர்கோட்டுவெள்ளை
யிளந்திங்களுமெருக்குமிருக்குஞ்சென்னியீசனுக்கே.

வெண்பா.

உத்தமராய்வாழ்வாருலந்தக்காலுற்றார்கள்
செத்தமரமடுக்கித்தீயாமுன் - உத்தமனாய்
நீளாழிநஞ்சுண்டநெய்யாடிதன்றிறமே
கேளாழிநெஞ்சே கிளர்ந்து. திருச்சிற்றம்பலம்.

---

கண்டவர்வியப்புற்றஞ்சிக்கையகன்றோடுவார்கள்
கொண்டதோர்வேடத்தன்மையுள்ளவாகூறக்கேட்டே
யண்டர்நாயகனுமென்னையறிவரோவறியாவாய்மை
யெண்டிசைமாக்களுக்கியாமெவ்வுருவாயெனென்பார் (௫௪)

வடதிசைத்தேசமெல்லாமனத்தினுங்கடுகச்சென்று
தொடையவிழிதழிமாலைச்சூலபாணியினார்மேவும்
படரொளிக்கைலைவெற்பிற்பாங்கணைந்தாங்குக்காலி
னடையினைத்தவிர்ந்துபார்மேற்றலையினானடந்துசென்றார். (௫௫)

தலையினானடந்துசென்றுசங்கரனிருந்தவெள்ளி
மலையின்மேலேறும்போதுமகிழ்ச்சியாலன்புபொங்கக்
கலையிளந்திங்கட்கண்ணிக்கண்ணுதலொருபாகத்துச்
சிலைநுதலிமயவல்லிதிருக்கணோக்குற்றதன்றே. (௫௬)

அம்பிகைதிருவுள்ளத்தினதிசயித்தருளித்தாழ்ந்து
தம்பெருமானைநோக்கித்தலையினானடந்திங்கேறும்
எம்பெருமானோற்பின்யாக்கையன்பென்னேயென்ன
நம்பெருமாட்டிக்கங்குநாயகனருளிச்செய்வான். (௫௭)

வருமிவணம்மைப்பேணுமம்மைகாணுமையேமற்றிப்
பெருமைசேர்வடிவும்வேண்டிப்பெற்றனளென்றுபின்னை
யருகவந்தடையநோக்கியம்மையேயென்னுஞ்செம்மை
யொருமொழிபுலகமெல்லாமுய்யவேயருளிச்செய்தார். (௫௮)

அங்கணனம்மையேயென்றருள்செயவப்பாவென்று
பங்கயச்செய்யபாதம்பணிந்துவீழ்ந்தெழுந்தார்தம்மைச்
சங்கவெண்குழையினாருந்தம்மைநேர்நோக்கநம்பால்
இங்குவேண்டுவதென்னென்னவிறைஞ்சிநின்றியம்புகின்றார். (௫௯)

இறவாதவின்பவன்புவேண்டிப்பின்வேண்டுகின்றார்
பிறவாமைவேண்டுமீண்டும்பிறப்புண்டேலுன்னையென்று
மறவாமைவேண்டுமின்னும்வேண்டுநான்மகிழ்ந்துபாடி
யறவாநீயாடும்போதுன்னடியின்கீழிருக்கவென்றார் (௬௰)

கூடுமாறருள்கொடுத்துக்குலவுதென்றிசையினின்று
நீடுவாழ்பழனமூதூர்நிலவியவாலங்காட்டில்
ஆடுமாநடமுநீகண்டானந்தஞ்சேர்ந்தெப்போதும்
பாடுவாய்நம்மையென்றான்பரவுவார்பற்றாய்நின்றான் (௬௧)

அப்பரிசருளப்பெற்றவம்மையுஞ்செம்மைவேத
மெய்ப்பொருளானார்தம்மைவிடைகொண்டுவணங்கிப்போந்து
செப்பரும்பெருமையன்பாற்றிகழ்திருவாலங்காடா
மப்பதிதலையினாலேநடந்துபுக்கடைந்தாரன்றே. (௬௨)

ஆலங்காடதனினண்டமுறநிமிர்ந்தாடுகின்ற
கோலங்காண்பொழுதுகொங்கைதிரங்கியென்றெடுத்துத்தங்கு
மூலங்காண்பரியார்தம்மைமூத்தநற்பதிகம்பாடி
ஞாலங்காதலித்துப்போற்றுநடம்போற்றிநண்ணுநாளில். (௬௩)

வேறு.

மட்டவிழ்கொன்றையினார்தந்திருக்கூத்துமுன்வணங்கும்
இட்டமிகுபெருங்காதலெழுந்தோங்கவியப்பெய்தி
யெட்டியிலவம்மீகையெனவெடுத்துத்திருப்பதிகங்
கொட்டமுழவங்குழகனாடுமெனப்பாடினார். (௬௪)

மடுத்தபுனல்வேணியினாரம்மையெனமதுரமொழி
கொடுத்தருளப்பெற்றாரைக்குலவியதாண்டவத்தினவர்
எடுத்தருளுஞ்சேவடிக்கீழென்றுமிருக்கின்றாரை
யடுத்தபெருஞ்சீர்பரவலாரளவாயினதம்மா. (௬௫)

வேறு.

ஆதியோடந்தமில்லானருணடமாடும்போது
கீதமுன்பாடுமம்மைகிளரொளிமலர்த்தாள்போற்றிச்
சீதநீர்வயல்சூழ்திங்களூரினப்பூதியாராம்
போதமாமுனிவர்செய்ததிருத்தொண்டுபுகலலுற்றேன். (௬௬)

காரைக்காலம்மையார்புராணம்-முற்றிற்று.

ஆ௲திருவிருத்தம்-௲௭௱௬௰௨.





௳

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## அம்மைமூத்ததிருப்பதிகம்.

(பண்நட்டபாஷை.)

கொங்கைதிரங்கிநரம்பெழுந்துகுண்டுகண்வெண்பற்குழிவயிற்றுப்
பங்கிசிவந்திருபற்கணீண்டுபரடுயர்நீள்கணைக்காலோர் பெண்பேய்
தங்கியலறியுலறுகாட்டிற்றாழ்சடையெட்டுத்திசைகள்வீசி
யங்கங்குளிர்ந்தனலாடுமெங்களப்பனிடந்திருவாலங்காடே. (௧)

கள்ளிக்கவட்டிடைக்காலைநீட்டிக் கடைக்கொள்ளிவாங்கிமசித்துமை
யை, விள்ளவெழுதிவெடுவெடென்னநக்குவெருண்டுவிலங்குகாட்டி
ற், றுள்ளித்துடித்துச்சுடுபிணத்தீச்சுட்டிடமுற்றுஞ்சுழிந்துபூழ்தி
யள்ளியவிக்கநின்றாடுமெங்களப்பனிடந்திருவாலங்காடே. (௨)

வாகைவிரிந்துவெண்ணெற் றொலிப்பமயங்கிருள்கூர்நடுநாளையாங்
கே, கூகையோடாண்டலைபாடவாந்தைகோடதன்மேற்குதித்தோடி
யீகைபடர்தொடர்கள்ளிநீழலீமமிடுசுடுகாட்டகத்தே [வீசி
யாகங்குளிர்ந்தனலாடுமெங்களப்பனிடந்திருவாலங்காடே. (௩)

குண்டிலோமக்குழிச்சோற்றைவாங்கிக்குறுநரிதின்னவதனைமுன்னே
கண்டிலோமென்றுகனன்றுபேய்கள்கையடித்தோடிடுகாடரங்கா
மண்டலநின்றங்குள்ளாளமிட்டுவாதித்துவீசியெடுத்தபாத
மண்டமுறநிமிர்ந்தாடுமெங்களப்பனிடந்திருவாலங்காடே. (௪)

விழுதுநிணத்தைவிழுங்கியிட்டுவெண்டலைமாலைவிரவிப்பூட்டிக்
கழுதுதன்பிள்ளையைக்காளியென்றுபேரிட்டுச் சீருடைத்தாய்வளர்த்
புழுதிதுடைத்துமுலைகொடுத்துப்போயினதாயைவரவுகாணா [துப்
தழுதுறங்கும்புறங்காட்டிலாடுமப்பனிடந்திருவாலங்காடே. (௫)

பட்டடிநெட்டுகிர்ப்பாறுகாற்பேய்பருந்தொடுகூகை பரண்டையா
ந்தை, குட்டியிடமுட்டைகூகைப்பேய்கள்குறுநரிசென்றிணங் கு
காட்டிற், பிட்டடித்துப் புறங்காட்டி விட்டபிணத்தினைப் போகப்
புரட்டியாங்கே, யட்டமேபாயநின்றாடுமெங்களப்பனிடந்திருவால
[ங்காடே. (௬)

சுழலுமழல்விழிக்கொள்ளிவாய்ப்பேய்சூழ்ந்து துணங்கையிட்டோ டியாடித், தழலுளெரியும்பிணத்தைவாங்கித்தான்றடி தின்றிணங்காடு காட்டிற், கழலொலியோசைசிலம்பொலிப்பக்காலுயர்வட்டணையிட் டுநட்ட, மழலுமிழ்ந்தோரிகதிக்கவாடுமப்பனிடந்திருவாலங்காடே.

நாடுநகருந்திரிந்துசென்று நன்னெறிநாடி நயந்தவரை
மூடிமுதுபிணத்திட்டமாடேமுன்னியபேய்க்கணஞ்சூழச்சூழக்
காடுங்கடலுமலையுமண்ணும்விண்ணுஞ்சுழலவனல்கையேந்தி
யாடுமமரர்புயங்கனெங்களப்பனிடந்திருவாலங்காடே. (அ)

துத்தங்கைக்கிளைவிளரிதாரமுழையிளியோசைபண்கெழுமப்பாடிச்
சச்சரிகொக்கரைதக்கையோடுதகுணிச்சந்துந்துமிதாளம்வீணை
மத்தளங்கரடிகைமுன்கைமென்றோற்றமருகங்குட முழாமொந்தை
வாசித், தத்தனமைவினோடாடுமெங்களப்பனிடந்திருவாலங்காடே.(

புந்திகலங்கிமதிமயங்கியிறந்தவரைப்புறங்காட்டிலிட்டுச்
சந்தியில்வைத்துக்கடமைசெய்துதக்கவரிட்டசெந்தீவிளக்கா
முந்தியமரர்முழவினோசைதிசைகதுவச்சிலம்பார்க்கவார்க்க
வந்தியின்மாநடமாடுமெங்களப்பனிடந்திருவாலங்காடே. (ய)

குப்பிணையில்லவன்பேய்கள்கூடியொன்றினையொன்றடித் தொக்கலி த்துப், பப்பிணையிட்டுப்பரண்டைபாடப்பாடிருந்தந்நரியாழமைப் ப, வப்பனையணிதிருவாலங்காட்டுளடிகளைச்செடிதலைக் காரைக்காற் பேய்,செப்பியசெந்தமிழ்பத்தும்வல்லார் சிவகதிசேர்ந்தின்பமெய் [துவாரே.(யக)

திருச்சிற்றம்பலம்.



தேவாரம்.

(பண் இந்தளம்.)

திருச்சிற்றம்பலம்.

கட்டியிலவதீகைசூரைகாரைபடர்ந்தெங்குஞ்
சுட்டசுடலைசூழ்ந்தகள்ளிசோர்ந்தகுடர்கவ்வப்
பட்டபிணங்கள்பரந்தகாட்டிற்பறைபோல்விழிகட்பேய்
கொட்டமுழவங்கூளிபாடக்குழகனாடுமே. (க)

நிணந்தானுருகிநிலந்தானனைப்பநெடும்பற்குழிகட்பேய்
துணங்கையெறிந்துசூழுநோக்கிச்சுடரநவித்தெங்குந்

கணங்கள்கூடிப்பிணங்கண்மாந்திக்களித்தமனத்தவா
யணங்குகாட்டிலனல்கையேந்தியழகனாடுமே. (௨)

புட்கள்பொதுத்தபுலால்வெண்டலையைப்புறமேநரிகவ்வ
வட்டென்றழைப்பவாந்தைவீசவருகேசிறுகூகை
யுட்கவிழிக்கவூமன்வெருட்டவோரிகதித்தெங்கும்
பிட்கநக்கம்பேணுமிறைவன்பெயரும்பெருங்காடே. (௩)

செத்தபிணத்தைத்தெளியாதொருபேய்சென்றுவிரல்சுட்டிக்
கத்தியுறுமிக்கனல்விட்டெறிந்துகடக்கப்பாய்ந்துபோய்ப்
பத்தல்வயிற்றைப்பதைக்கமோதிப்பலபேயிரிந்தோடப்
பித்தவேடங்கொண்டுநட்டம்பெருமானாடுமே. (௪)

முள்ளிதீந்துமுளரிகருகிமூளைசொரிந்துக்குக்
கள்ளிவற்றிவெள்ளில்பிறங்குகடுவெங்காட்டுள்ளே
புள்ளியுழைமான்றோலொன்றுடுத்துப்புலித்தோல்பியற்கிட்டுப்
பள்ளியிடமதுவேயாகப்பரமனாடுமே. (௫)

வாளைக்கிளரவளைவாளெயிற்றுவண்ணச்சிறுகூகை
மூளைத்தலையும்பிணமும்விழுங்கிமுரலுமுதுகாட்டிற்
றாளிப்பனையினிலைபோன்மயிர்க்கட்டழல்வாயழல்கட்பேய்
கூளிக்கணங்கள்குழமேலாடியம்பக்குழகனாடுமே. (௬)

நொந்திக்கிடந்தசுடலைதடவிநுகரும்புழுக்கின்றிச்
சிந்தித்திருந்தங்குறங்குசிறுபேய்சிரமப்படுகாட்டின்
முந்திமுழவம்விழவினோசைமுறைமைவழுவாமே
யந்திநிருத்தமனல்கையேந்தியழகனாடுமே. (௭)

வேய்களோங்கிவெண்முத்துதிரவெடிகொள்சுடலையுள்
ஓயுமுருவிலுலறுகூந்தலலறுபகுவாய்ப்
பேய்கள்கூடிப்பிணங்கண்டமாந்தியணங்கும்பெருங்காட்டில்
மாயனாடமலையான்மகளுமருண்டுநோக்குமே. (௮)

கடுவனுகளுங்கழைசூழ்பொதும்பிற்கழுகும்பேயுமா
யடுவெண்டலையுமீமப்புகையுமெழுந்தபெருங்காட்டிற்
கொடுவெண்மழுவும்பிறையுந்ததும்பக்கொள்ளென்றிசைபாடப்
படுவெண்டுடியும்பறையுங்கறங்கப்பரமனாடுமே. (௯)

தண்டைவயிற்றுக்குறியசிறியநெடியபிறங்கற்பேய்
விண்டுடர்ந்தவிருள்சூழ்மயானத்தெரிவாயெயிற்றுப்பேய்

கொண்டுகுழவிதடவிவெருட்டிக்கொள்ளென்றிலைசபாட்
டிண்டிமிளிர்ந்தசடைகடாழவிமலனாடுமே. (௰)

சூடுமதியஞ்சடைமேலுடையர்சுழல்வர்திருநட்டம்
ஆடுமரவமணையிலார்த்தவடிகளருளாலே
காடுமலிந்தகனல்வாயெயிற்றுக்காரைக்காற்பேய்தன்
பாடல்பத்தும்பாடியாடப்பாவநாசமே. (௰௧)

காரைக்காலம்மையார் அருளிச்செய்தபதிகம்
இரண்டும்-முற்றுப்பெற்றன.

திருச்சிற்றம்பலம்

சோழதேசத்தில் மிகுந்த வளப்பங்கொண்டிருக்குங் காரைக்
கால் என்னும் க்ஷேத்திரத்தில் வாழுஞ் சிவநேசச் செல்வராகிய த
னதத்த செட்டியார் தவத்தால் திரு வவ தாரஞ் செய்து, புனித வ
தியாரென்னுந் திருநாமம் பெற்றுப் பரம சிவனிடத்தில் மிகுந்த
அன்புள்ளவராய் வளர்ந்து மணப்பருவ மடைந்த காலத்தில், பிதா
வாகிய தனதத்தனார், நாகைப்பட்டணத்தில் மிகுந்த சம்பத்துடன்
வாழ்கின்ற நிதிபதி செட்டியார் குமாரனாகிய, பரமதத்த செட்டி
யாருக்கு வைதிகமுறை வழுவாமல் விவாகஞ்செய்வித்துக்கொடுக்
கக் கற்பு நெறியுள்ள அந்தமனைவியாருடன் இல்வாழ்க்கையி லிருக்
கும்பரமதத்தசெட்டியார், அன்பின் மிகுதியால் சிவனடியார்களுக்
கு அமுதுபடைத்து அவர்கள் வேண்டும்பொருளுங் கொடுத்துப்
பத்திசெய்துகொண்டிருக்கும்நாளி லொருநாள், தம்மைக்காணவந்
தவர்களிலொருவன் இரண்டுமாம்பழங் கொண்டுவந்துகொடுக்க அ
தைவாங்கித்தம்முடையமனைவியார்கையில்கொடுக்கும்படி அனுப்ப
அவர் அந்தப் பழத்தை வாங்கி வீட்டில் வைத்திருக்கும்போது,
ஒரு சிவனடியார் வரப்புனிதவதியாரென்னுங்காரைக்காலம்மையார்
கண்டுஅவர்மிகுந்தபசியுள்ளவராயிருக்கிறாரென்பதுதெரிந்துகொ
ண்டுஅன்பினால் அவருக்கு அமுதுபடைத்து அந்தச்சமயத்தில் ப
தார்த்தவகை யொன்றுஞ்சித்த மாகா திருந்ததினால் வந்தமாம்பழங்
களில்ஒரு பழத்தைச் சிவனடியாருக்குப் படைக்க அவரமுதுசெ
ய்து சென்றனர், பின்புசெட்டியார் வந்து ஸ்நானஞ்செய்து சிவ
பூசனை முதலான நித்தியகருமங்களை முடித்துக்கொண்டு அமுது
புசிக்கும்போது புனிதவதியார், அந்தஒருமாம்பழத்தைக்கொண்டு
வந்துபரிகலத்திற்படைத்தனர், செட்டியார்அப்பழத்தையுண்டுஅ
துமதுரமாயிருந்ததினால் மனைவியைநோக்கிஇன்னமொருபழமிரு
க்கின்றதே அதையுங்கொண்டு வந்து படைக்கவேண்டுமென்றவர்

தீனதயைக் கேட்டவளவில், கொண்டு வருகின்றவர் போல்உள்
ளேபோய், என்ன செய்யலா மென்று மனம் வருந்திப் பரம
சிவத்தைத் தியானித்துக் கொண்டிருக்க, சுவாமியி னுடையதிரு
வருளால், ஒருமாம்பழங் கையில்வந்திருந்தது அதைக்கண்டு மகி
ழ்ந்து கொண்டு வந்து கணவனாரது பரிகலத்திற் படைத்தனர்,
அவர் அக்கனியை உண்டு முன் பழத்தினும் அதிமதுரமா யிருந்
ததினால் இது முன்னைய தல்ல வேறா யிருக்கின்ற தாதலால் இது
வ தென்ன, பரமசிவத்தின் திருவருளால் வந்த தென்று சொல்
லக் கூடாதே யென்று சற்றுயோசித்துப் பின்னுங் கணவனாருக்கு
மறைத்துச் சொல்வதுங் கற்பு நிலைமைக்கு வழுவாமே யென்றும்
உண்மையைச் சொல்ல, கணவனார் நம்பாமல் அப்படியிருக்குமா
னால் இன்னமொரு பழங் கொண்டுவாவென்ன, இதற்கென்னசெய்
வதென்று முன்போல உள்ளேபோய்ப் பரமசிவத்தைத் தியானித்
தனர், அப்போதும் ஒரு பழந் தன்கையில் வந்திருக்க அதையுங்
கொண்டுவந்துகணவனார்கையிற்கொடுக்கஅவர்வாங்கிக்கொண்டவள
வில் அந்தப்பழம்மறைந்துபோய்விடப்பயந்து,அம்மையாரைத்தெ
ய்வமாக எண்ணிக்கொண்டு, இனியிவர்நமக்குப்பணிவிடைசெய்ய
நாமேற்றுக்கொள்ளுதல் முறைமையன்று, ஆதலாலிவ்விடம்விட்டு
நீங்க வேண்டு மென்று தன் மனதிலே நிச்சயித்துத்தான் தனியே
போய் வர்த்தகஞ்செய்து வருவதாக, ஒருகப்பல்செய்வித்துச் சர
க்குகளேற்றிக் கொண்டு தானெண்ணிய தேசத்திற்சென்று வியா
பாரஞ்செய்து திரவியத்தை விர்த்தியாக்கி, மறுபடி அந்தக்கப்ப
லிலேறிப் பாண்டி நாட்டி லிருக்கும் ஒரு பட்டினத்திற் சார்ந்து
அவ்விடத்தில் தங்கள் குலத்துக் கொத்ததாகிய ஒரு கன்னிகையை
விவாகஞ் செய்து கொண்டு ஒரு பெண் குழந்தையும் உண்டாக
அதற்குப் புனிதவதியாமென்று பெயரிட்டு அவ்விடத்திலேயே வா
ழ்ந்துகொண்டிருந்தார்.

இவரிங்கிவ்வா றிருக்குஞ் சேதிதனதத்த செட்டியார் கேள்வி
ப்பட்டுத்,தங்கள்சொந்தமனிதரைப்பரமதத்தசெட்டியாரிருக்கிறசே
தியைஅறிந்துபுத்திரியைச்சிவிகையிலேற்றிக் கொண்டுசிலநாள்கட
ந்துசென்றுசொல்லியனுப்பஅவர் இரண்டாவதுமனைவியையும் பு
த்திரியையும் அழைத்துக் கொண்டுவந்து புனிதவதியாரைப் பணி
யச்சொல்லித் தானும்பூமியில்வீழ்ந்து அவர்பாதத்தைப் பணிந்தா
ர், அதைக்கண்ட புனித வதியார்அஞ்சித் தன்சுற்றத்தார்பால் ஒது
ங்கி நின்றனர், அந்தச் சுற்றத்தார்பரமதத்த செட்டியாரை நோ
க்கி நீ யிவ்வாறு தகுதி யல்லாத காரியஞ் செய்த தென்னவென்ன
அவ ரவர்களை நோக்கிக் கேளுங்கள், உங்கள் புத்திரியாக நினை
க்கப் பட்டிருக்கிற இவர் மானிட ரல்லர் உண்மையான தெய்வமே

ன்று நானறிந்தபடியால், இவர்பணிவிடைசெய்யப்பெற்றுக் கொள்ளுதல் தகாதென்று பிரிந்துவந்துவிட்டேன், இங்கேவந்து நான் வேறேவிவாகஞ்செய்துகொண்ட இந்தப்பெண்குழந்தைக்கும்இவர் பெயரிட்டேன்ஆதலால்நீங்களுந் தொழலாமென்றான், இவர்சொன்னதைக் கேட்டசுற்றத்தாரிதுவென்ன அதிசயமென்று பிரமித்து நிற்க புனிதவதியார் பரமசிவத்தை உள்ளத்திற்சிந்தித்து- அத்தனே கணவன்பொருட்டுச்சுவந்தரிய மூள்ள இந்த மாமிசப் பொதியைத் தாங்கிக்கொண்டிருந்தேன்இனியிதனை யொழித்துப்பேய்வடிவம் அருள்செய்ய வேண்டுமென்று பிரார்த்தித்துப் பெற்றுக் கொண்டு அப்போதே அற்புதத் திருவந்தாதியும், இரட்டைமணி மாலையும் ஓதித்துதித்துக் கயிலாய தரிசனஞ் செய்யவேண்டுமென்கிற அன்புடன் சென்று சமீபித்துத் தலையால் நடந்து திரு மலையி லேறும்போது பார்வதி தேவியார் நோக்கிச்சுவாமீ-சதையெலாங்கழிந்து எலும்பு வடிவமொன்று வருவது யாதோவென்ன, கயிலாயபதியானவர் தேவியாரைநோக்கி, வருமிவள் நம்மைப் போற்றும் அம்மை,இந்தப்பேய்வடிவம்நம்மைப்பிரார்த்தித்துப்பெற்றுக்கொண்டனளென்றுசொல்லி, அம்மையே வாவென்ன அப்பா வென்று திருவடியில் தாழ்ந்து நிற்க உனக் கெது வேண்டு மென்று சுவாமி திருவாய் மலர்ந்தருளினர், அம்மையார்சுவாமியைநோக்கிஅடியேனுக்கு இறவாத பேரின்பமும் பிறவாத தன்மையும் அல்லது பிறந்தாலும் திருவடியைமறவாததன்மையும் வேண்டும் பின்னும்பாடலோதித் துதிக்கவும் எப்போதுந் திருக் கூத்து தரிசிக்கவுங் கிருபை செய்ய வேண்டுமென்று பிரார்த்தித்தனர்.

அப்படியானால் திருவாலங் காட்டிற் சென்று திருக்கூத்துத்தரிசித்துக் கொண்டிருவென் றருள்செய்ய அவ்வாறே திருவாலங்காட்டிற்குத்தலையால் நடந்து சென்று ஊர்த்த தாண்டவ மூர்த்தியைத்தரிசித்து, இரண்டு பதிகங்களோதிச் சுவாமி கிருபை கூர்ந்தருள் அவர் திருவடிக்கீழ் என்று மிருக்கின்றனர்.

இவர் இல்லறத்திலிருந்து சிவனடியார்களுக்குப்பத்திசெய்து முத்திபெற்றவர்.

அம்மையார்இயற்றமிழும்இசைத்தமிழும்வல்லவர்.





உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அப்பூதியடிகள் நாயனார் புராணம்.



தாண்டவம்புரியவல்லதம்பிரானாருக்கன்பர்
ஈண்டியபுகழின்பாலவெல்லையில்குணத்தின்மிக்கார்
ஆண்டசீரரசின்பாதமடைந்தவரறியாமுன்னே
காண்டகுகாதல்கூரக்கலந்தவன்பினராயுள்ளார். (௧)

களவுபொய்காமங்கோபமுதலியகுற்றங்காய்ந்தார்
வளமிகுமனையின்வாழ்க்கைநிலையினார்மனைப்பாலுள்ள
அளவைகணிறைகோல்மக்களாவொடுமேதிமற்றும்
உளவெலாமரசினாமஞ்சாற்றுமவ்வொழுக்கலாற்றார். (௨)

வடிவுதான்காணாராயுமன்னுசீர்வாக்கின்வேந்தர்
அடிமையுந்தம்பிரானாரருளுங்கேட்டவர்நாமத்தாற்
படிநிகழ்மடங்கள்தண்ணீர்ப்பந்தர்கண்முதலாயுள்ள
முடிவிலாவறங்கள்செய்துமுறைமையால்வாழுநாளில். (௩)

வேறு.

பொருப்பரையன்மடப்பிடியினுடன்புணருஞ் சிவக்களிற்றின்
திருப்பழனம்பணிந்துபணிசெய்திருநாவுக்கரசர்
ஒருப்படுகாதலிற்பிறவுமுடையவர்தம்பதிவணங்கும்
விருப்பினுடன்றிங்களூர்மருங்குவழிமேவுவார். (௪)

அளவில்சனஞ்செலவொழியாவழிக்கரையிலருளுடையார்
உளமனையதண்ணளித்தாயுறுவேனிற்பரிவகற்றிக்
குளநிறைந்தநீர்த்தடம்போற்குளிர்தூங்கும்பரப்பினதாய்
வளமருவுநிழற்றருதண்ணீர்ப்பந்தர்வந்தணைந்தார். (௫)

வந்தணைந்தவாகீசர்மந்தமாருதசீதப்
பந்தருடனமுதமாந்தண்ணீரும்பார்த்தருளிச்
சிந்தைவியப்புறவருவார்திருநாவுக்கரசெனும்பேர்
சந்தமுறவரைந்ததனையெம்மருங்குந்தாங்கண்டார். (௬)

இப்பந்தரிப்பெயரிட்டிங்கமைத்தாரியாரென்றார்க்
கப்பந்தரறிவார்களாண்டவரசெனும்பெயராற்
செப்பருஞ்சீரப்பூதியடிகளார்செய்தமைத்தார்
தப்பின்றியெங்குமுளசாலைகுளங்காவென்றார். (எ)

என்றுரைக்கவரசுகேட்டிதற்கென்னோகருத்தென்று
நின்றவரைநோக்கியவரெவ்விடத்தாரெனவினவத்
தான்றியநூன்மார்பருமித்தொல்பதியார்மனையின்கட்
சென்றனரிப்பொழுதுவுஞ்சேய்த்தன்றுநணித்தென்றார் (அ)

அங்ககன்றுமுனிவரும்போயப்பூதியடிகளார்
தங்குமனைக்கடைத்தலைமுன்சார்வாகவுள்ளிருந்த
இங்கணேர்மறைத்தலைவர்செழுங்கடையில்வந்தடைந்தார்
நங்கள்பிரான்றமரொருவரெனக்கேட்டுநண்ணினார். (கூ)

கடிதணைந்துவாகீசர்கழல்பணியமற்றவர்தம்
அடிபணியாமுன்பணியுமரசினையந்தணனார்
முடிவிறவஞ்செய்தேன்கொன்முன்பொழியுங்கருணைபுரி
வடிவுடையீரென்மனையில்வந்தருளிற்றென்னென்றார். (ய)

ஒருகுன்றவில்லாரைத்திருப்பழனத்துள்ளிறைஞ்சி
வருகின்றோம்வழிக்கரையினீர்வைத்தவாய்ந்தவளந்
தருகின்றநிழற்றண்ணீர்ப்பந்தருங்கண்டத்தகைமை
புரிகின்றவறம்பிறவுங்கேட்டணைந்தோமெனப்புகல்வார். (யக)

ஆறணிபுஞ்சடைமுடியாரடியார்க்குநீர்வைத்த
ஈறில்பெருந்தண்ணீர்ப்பந்தரினும்பேரெழுதாதே
வேறொருபேர்முன்னெழுதவேண்டியகாரணமென்கொல்
கூறுமெனவெதிர்மொழிந்தார்கோதின்மொழிக்கொற்றவனார். (யஉ)

நின்றமறையோர்கேளாநிலையழிந்தசிந்தையராய்
நன்றருளிச்செய்திலீர்நாணிலமண்பதகருடன்
ஒன்றியமன்னவன்சூட்சிதிருத்தொண்டினுறைப்பாலே
வென்றவர்தந்திருப்பேரோவேறொருபேரெனவெகுள்வார். (யங)

நம்மையுடையவர்கழற்கீழ்நயந்ததிருத்தொண்டாலே
யிம்மையிலும்பிழைப்பதெனவென்போல்வாருந்தெளியச்
செம்மைபுரிதிருநாவுக்கரசர்திருப்பேரெழுத
வெம்மைமொழியான்கேட்கவிளம்பினீரெனவிளம்பி. (யச)

பொங்குகடற்கன்மிதப்பிற்போந்தேறுமவர்பெருமை
யங்கணர்தம்புவனத்திலறியாதாரியாருளரோ
மங்கலமாந்திருவேடத்துடனின்றிவ்வகைமொழிந்தீர்
எங்குறைவீர்நீர்தாமாரியம்புமெனவியம்பினார். (௧௫)

திருமறையோரதுமொழியத்திருநாவுக்கரசரவர்
பெருமையறிந்துரைசெய்வார்பிறதுறையினின்றேற்ற
அருள்பெருகுசூலையினாலாட்கொள்ளவடைந்துய்ந்த
தெருளுமுணர்வில்லாதசிறுமையேன்யானென்றார். (௧௬)

அரசறியவுரைசெய்யவப்பூதியடிகடாங்
கரகமலமிசைக்குவியக்கண்ணருவிபொழிந்திழிய
உரைகுழறியுடம்பெல்லாமுரோமபுளகம்பொலியத்
தரையின்மிசைவிழுந்தவர்தஞ்சரணகமலம்பூண்டார். (௧௭)

மற்றவரையெதிர்வணங்கிவாகீசரெடுத்தருள
அற்றவர்களருநிதியம்பெற்றார்போலருமறையோர்
முற்றவுளங்களிகூரமுன்னின்றுகூத்தாடி
யுற்றவிருப்புடன்சூழவோடினார்பாடினார். (௧௮)

மூண்டபெருமகிழ்ச்சியினான்முன்செய்வதறியாதே
மீண்டமனையகத்தெய்தியில்லவர்க்குமக்களுக்கும்
ஆண்டவரசெழுந்தருளுமோகையுரைத்தார்வமுறப்
பூண்டபெருஞ்சுற்றமெலாங்கொடுமீளப்புறப்பட்டார். (௧௯)

மனைவியாருடன்மக்கண்மற்றுள்ளசுற்றத்தோர்
அனைவரையுங்கொண்டிறைஞ்சியாராதகாதலுடன்
முனைவரையுள்ளெழுந்தருளுவித்தவர்தாண்முன்விளக்கும்
புனைமலர்நீர்தங்கண்மேற்றெளித்துள்ளும்பூரித்தார் (௨௰)

ஆசனத்திற்பூசனைகளமர்வித்துவிருப்பினுடன்
வாசநிறைதிருநீற்றுக்காப்பேந்திமனந்தழைப்பத்
தேசமுய்யவந்தவரைத்திருவமுதுசெய்விக்கு
நேசமுறவிண்ணப்பஞ்செயவவருமதுநேர்ந்தார் (௨௧)

வேறு

செய்தவரிசைந்தபோதுதிருமனையாரைநோக்கி
யெய்தியபேறுநம்பாலிருந்தவாறென்னேயென்று
மைதிகழ்மிடற்றினான்றனருளினால்வந்ததென்றே
யுய்ந்தோமென்றுவந்துகொண்டுதிருவமுதாக்கலுற்றார் (௨௨)

தூயநற்கறிகளானவறுவகைச்சுவையாலாக்கி
யாயவின்னமுதுமாக்கியமுதுசெய்தருளத்தங்கள்
சேயவர்தம்மின்மூத்ததிருநாவுக்கரசைவாழை
மேயபொற்குருத்துக்கொண்டுவாவெனவிரைந்துவிட்டார் (௨௩)

நல்லதாய்தந்தையேவநானிதுசெயப்பெற்றேனென்
றொல்லையிலணைந்துதோட்டத்துட்புக்குப்பெரியவாழை
மல்லலங்குருத்தையீரும்பொழுதினில்வாளராவொன்
றல்லலுற்றழுங்கிவீழவங்கையிற்றீண்டிற்றன்றே (௨௪)

கையினிற்கவர்ந்துசுற்றிக்கண்ணெரிகாந்துகின்ற
பையரவுதறிவீழ்த்துப்பதைப்புடன்பாந்தள்பற்றும்
வெய்யவேகத்தால்வீழாமுன்னம்வேகத்தாலெய்திக்
கொய்தவிக்குருத்தைச்சென்றுகொடுப்பனென்றோடிவந்தான். (௨௫)

பொருந்தியவிடவேகத்திற்போதுவான்வேகமுந்த
வருந்தியேயணையும்போழ்துமாசணங்கவர்ந்தசார்க்கும்
அருந்தவரமுதுசெய்யத்தாழ்க்கயானறையேனென்று
திருந்தியகருத்தினோடுஞ்செழுமனைசென்றுபுக்கான் (௨௬)

எரிவிடமுறைமையேயேறித்தலைக்கொண்டவேழாம்வேகந்
தெரிவுறவெயிறுங்கண்ணுமேனியுங்கருகித்தீந்து
விரியுரைகுழறியாவிவிடக்கொண்டுமயங்கிவீழ்வான்
பரிகலக்குருத்தைத்தாயார்பால்வைத்துப்படிமேல்வீழ்ந்தான், (௨௭)

தளர்ந்துவீழ்மகனைக்கண்டுதாயருந்தந்தையாரும்
உளம்பதைத்துற்றுநோக்கியுதிரஞ்சோர்வடிவுமேனி
விளங்கியகுறியுங்கண்டுவிடத்தினால்வீந்தானென்று
துளங்குதலின்றித்தொண்டரமுதுசெய்வதற்குச்சூழ்வார் (௨௮)

பெறலரும்புதல்வன்றன்னைப்பாயினுட்பெய்துமூடிப்
புறமணைமுன்றிற்பாங்கோர்புடையினின்மறைத்துவைத்தே
யறவிதுதெரியாவண்ணமமுதுசெய்விப்போமென்று
விறலுடைத்தொண்டனார்பால்விருப்பொடுவிரைந்துவந்தார் (௨௯)

கடிதுவந்தமுதுசெய்யக்காலந்தாழ்க்கின்றதென்றே
யடிசிலுங்கறியுமெல்லாமமைத்துறவணையவைத்துப்
படியில்சீர்த்தொண்டர்முன்புபணிந்தெழுந்தமுதுசெய்தெங்
குடிமுழுதுய்யக்கொள்வீரென்றவர்கூறக்கேட்டு (௩௰)

அருந்தவரெழுந்துசெய்யவடியிணைவிளக்கிவேறோர்
திருந்துமாசனத்திலேற்றிப்பரிகலந்திருத்துமுன்னர்
இருந்துவெண்ணீறுசாத்தியில்லுடையிருவருக்கும்
பொருந்தியநீறுநல்கிப்புதல்வர்க்குமளிக்கும்போழ்தில் (௫௧)

ஆதிநான்மறைநூல்வாய்மையப்பூதியாரைநோக்கிக்
காதலாலிவர்க்குமுத்தசேயையுங்காட்டுமென்ன
மேதகுபூதிசாத்தவென்றலும்விளைந்ததன்மை
யாதுமொன்றுரையாரிப்போதிங்கவனுதவானென்றார். (௫௨)

அவ்வுரைகேட்டபோதேயங்கணரருளாலன்பர்
செவ்வியதிருவுள்ளத்தோர்தடுமாற்றஞ்சேரநோக்கி
யிவ்வுரைபொறாதென்னுள்ளமென்செய்தானிதற்கொன்றுண்டால்
மெய்விரித்துரையுமென்னவிளம்புவார்விதிர்ப்புற்றஞ்சி. (௫௩)

பெரியவரமுதுசெய்யும்பேறிதுபிழைக்கவென்னோ
வருவதென்றுரையாரோனுமாதவர்வினவவாய்மை
தெரிவுறவுரைக்கவேண்டுஞ்சீலத்தாற்சிந்தைநொந்து
பரிவொடுவணங்கிமைந்தர்க்குற்றதுபகர்ந்தாரன்றே. (௫௪)

நாவினுக்கரசர்கேளாநன்றுநீர்மொழிந்தவண்ணம்
இயாவரித்தன்மைசெய்தாரொன்றுமுன்னெழுந்துசென்றே
யாவிதீர்சவத்தைநோக்கியண்ணலாரருளும்வண்ணம்
பாவிசைப்பதிகம்பாடிப்பணிவிடம்பாற்றுவித்தார். (௫௫)

தீவிடநீங்கவுய்ந்ததிருமறையவர்தஞ்சேயு
மேவியவுறக்கநீங்கிவிரைந்தெழுவானைப்போன்று
சேவுகைத்தவராட்கொண்டதிருநாவுக்கரசர்செய்ய
பூவடிவணங்கக்கண்டுபுனிதநீறளித்தாரன்றே. (௫௬)

பிறிவுறுமாவிபெற்றபிள்ளையைக்காண்பார்தொண்டி
னெறியினைப்போற்றிவாழ்ந்தார்நின்றவப்பயந்தார்தாங்கள்
அறிவரும்பெருமையன்பரமுதுசெய்தருளுதற்குச்
சிறிதிடையூறுசெய்தானிவனென்றுசிந்தைநொந்தார். (௫௭)

ஆங்கவர்வாட்டந்தன்னையறிந்துசொல்லரசர்கூட
ஒங்கியமனையிலெய்தியமுதுசெய்தருளவுற்ற
பாங்கினிலிருப்பமுந்நூல்பயின்மணிமார்பர்தாமுந்
தாங்கியமகிழ்ச்சியோடுந்தகுவனசமைத்துச்சார்வார். (௫௮)

புகழ்ந்தகோமயத்தினீராற்பூமியைப்பொலியநீவித்
திகழ்ந்தவான்சுதையும்போக்கிச்சிறப்புடைத்தீபமேற்றி
நிகழ்ந்தவக்கதலிநீண்டகுருத்தினைவிரித்துநீரான்
மகிழ்ந்துடன்விளக்கியீர்வாய்வலம்பெறமரபின்வைத்தார். (௩௯)

திருந்தியவாசநன்னீரளித்திடத்திருக்கைநீவும்
பெருந்தவமறையோர்தம்மைப்பிள்ளைகளுடனேநோக்கி
யரும்புதல்வர்களுநீருமமுதுசெய்வீரிங்கென்ன
விரும்பியவுள்ளத்தோடுமேலவரேவல்செய்வார். (௪௰)

மைந்தருமறையோர்தாமுமருங்கிருந்தமுதுசெய்யச்
சிந்தைமிக்கில்லமாதர்திருவமுதெடுத்துநல்கக்
கொந்தவிழ்கொன்றைவேணிக்கூத்தனாரடியாரோடும்
அந்தமிழாளியாரங்கமுதுசெய்தருளினாரே. (௪௧)

மாதவமறையோர்செல்வமனையிடையமுதுசெய்து
காதலனவளித்துப்பன்னாள்கலந்துடனிருந்தபின்னை
மேதகுநாவின்மன்னர்விளங்கியபழனமூதூர்
நாதர்தம்பாதஞ்சேர்ந்துநற்றமிழ்ப்பதிகஞ்செய்வார். (௪௨)

* அப்பூதியடிகளார்தமடிமையைச்சிறப்பித்தான்ற
மெய்ப்பூதியணிந்தார்தம்மைவிரும்புசொன்மாலைவேய்ந்த
இப்பூதிபெற்றநல்லோரெல்லையிலன்பாலென்றுஞ்
செப்பூதியங்கைக்கொண்டார்திருநாவுக்கரசர்பாதம். (௪௩)

இவ்வகையரசினுமமேத்தியெப்பொருளுநாளும்
அவ்வருந்தவர்பொற்றாளேயெனவுணர்ந்தடைவார்செல்லுஞ்
செவ்வியநெறியதாகத்திருத்தில்லைமன்றுளாடு
நவ்வியங்கண்ணாள்பங்கர்நற்கழனண்ணினாரே. (௪௪)

மான்மறிக்கையர்பொற்றாள்வாகீசரடைவாற்பெற்ற
மேன்மையப்பூதியாராம்வேதியர்பாதம்போற்றிக்
கான்மலர்க்கமலவாவிக்கழனிசூழ்சாத்தமங்கை
நான்மறைநீலநக்கர்திருத்தொழினவில்லுற்றேன். (௪௫)

அப்பூதியடிகள்நாயனார்புராணம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-கூ௲௩௱௩௰.

---

* அப்பூதியடிகளைச்சிறப்பித்ததேவாரம்
உ௱உ௰கூ - வது - பக்கத்தி லிருக்கின்றது.

திருச்சிற்றம்பலம்

---

சோழவளநாட்டிலுள்ள திங்களூரில்வாழும் பிராமணகுல
த்தில் திருவவதாரஞ் செய்து அப்பூதிநாயனாரென்னுந் திருநாமம்
பெற்று மிகுந்த சிவநேச முடையவராய் வைதிகநெறி வழுவாமலி
ருப்பவர் - திருநாவுக்கரசு சுவாமிகளுக்குப் பரமசிவஞ்சூலைநோய்
கொடுத்தருளி ஆட்கொண்ட திருவருளின் பெருமையைக் கேட்ட
மாத்திரத்தில் - அந்தச் சுவாமிகளிடத்தில் அன்பு வைத்துத் தம்மு
டைய புத்திரர்களுக்கு மூத்ததிருநாவுக்கரசு இளையதிருநாவுக்கரசு
என்று பெயரிட்டது மல்லாமல் - தண்ணீர்ப்பந்தர்கள் தடாகங்கள்
டபங்களாகிய இவைகளையுந் திருநாவுக்கரசு சுவாமிகள் பெயரால்
அமைத்து வாழும்நாளில் - திருநாவுக்கரசுசுவாமிகள் திருப்பழன
மென்னுந் தலத்துக் கெழுந்தருளிப் பரமசிவத்தைத்தரிசித்துப் பதி
மோதித் துதிசெய்து மற்றத் தலங்களையுந் தரிசிக்கும் பொருட்டு
திங்களூர் வழியாக எழுந்தருளும்போது மத்தியில் அப்பூதிநாய
னார் அமைத்திருப்பதுகளைக்கண்டு அங்கிருந்தவர்களால் அறிந்து
கொண்டு நாயனார் திருமாளிகைக்குச் சென்றவளவில் - யாரோஒரு
ர் சிவனடியார் வந்திருக்கிறாரென்று கேள்விப்பட்டு வந்து வண
ங்கி உபசார வார்த்தைகள் சொல்லத் திருநாவுக்கரசு சுவாமிகள் அ
வரைநோக்கி நீர் அமைத்திருக்கிற தருமங்களுக்கு வேறொருவர்
பெயரிட் டிருப்பதென்னவென் றருள்செய்த வார்த்தையை நாய
னார் கேட்டவளவில் மனவருத்தங்கொண்டு பரமசிவஞ் சூலைநோய்
கொடுத்து ஆட்கொண்ட சுவாமிகள்பெயரை - சிவசின்னந் தாங்கியி
ருக்கும் நீர் வேறொருவர் பெயரென்றீரே நீர்தான்யாரோவென்ன,

அப்பர்சுவாமிகள் நாயனாருடைய நிலைமையைஅறிந்து பரம
சிவத்தினா லாட்கொள்ளப்பட்ட சிறியேன் நான்தானென்றபோது
நாயனார் மக்கள் மனைவி முதலிய சுற்றத்தாரை யுள்ளிருந்து அழை
த்துக்கொண்டு வந்து அப்பர்சுவாமிகளை வணங்கிக் கொள்ளச்சொ
ல்லி - உள்ளே அழைத்துக் கொண்டுபோய் ஆசனங்கொடுத்துச்சக
ல உபசாரங்களுஞ் செய்து - யாவருஞ் சாஷ்டாங்க மாகச் சேவித்
துக் கொண்டு திருவமுது கொள்ள வேண்டுமென்று பிரார்த்திக்க
சுவாமிகள் சம்மதத்தின்மேல் நாயனாருடைய மனைவியார்அறுவகை
ச்சுவையுடன் திருவமுது அமைவித்து - தம்முடைய புத்திரனாகிய
மூத்த திருநாவுக்கரசினை வாழை யிலைகொண்டு வரும்படி அனுப்
பினார் - அப்படியே அந்தப் பிள்ளைபோய் வாழைக் குருத் தரியும்
போது - அதிலிருந்த ஒரு சர்ப்பமானது தீண்டிற்று - தீண்டின

வுடன் - ஓ ஓ - சுவாமிகள் திருவமுது கொள்ளுதற்கின்றி யிடையூறு நேரிட்டதே யென்று விஷமேறுதற்குமுன் அதிவிரைவாகச் சென்று வாழைக்குருத்தைத் தாயார் கையில் கொடுத்துவிட்டு உயிர் நீங்கினன் - அவ்வாறு நீங்கினவளவில் குறியினால் விஷந் தீண்டிற்றென்று தாய் தந்தையர் அறிந்துகொண்டு - திருநாவுக்கரசு சுவாமிகள் திருவமுது கொள்வதற்கு இடையூறு நேரிடுமேயென்று மனம்வருந்தி உயிர் நீங்கினவுடலைப் பாயிற்சுருட்டி ஒரு அறைவீட்டு மூலையில்மறைத்துவிட்டு வந்து - சுவாமிகள் திருவமுது கொள்ளும்படி சர்வ சித்தமுஞ்செய்தனர்.

அமுது கொள்ள அமைந்த திருநாவுக்கரசு சுவாமிகள் அவர்களுக்கு விபூதி கொடுத்துப் புத்திரர்களுக்கும் விபூதி கொடுக்க-மூத்த திருநாவுக்கரசு எங்கேயென்ன அவனிப்போது உதவானென்றனர்-அவர்களப்படி சொல்லும் போது பரமசிவனுடைய திருவருளால் அவர்கள் மனத்தடுமாற்றை யறிந்துகொண்டு உண்மையைச் சொல்லுங்களென்ன இனி மறைக்க லாகாதென்று விளைந்தகாரியங்களைச் சொல்லக்கேட்டு - இவ்வாறு செய்யத்தக்கவர்கள் யாவரென்று அதிசயித்துச் சவத்தினிடத்திற்போய்ப் பார்த்துப் பரம சிவத்தைத் தியானித்து "ஒன்றுகொலா மெண்ணும்" பதிகம் ஓதிச் சாத்தினவளவில் அந்தப்புத்திரன் நித்திரை தெளிந்தெழுந் திருப்பவன்போலெழுந் திருந்து திருநாவுக்கரசு சுவாமிகள் திருவடிகளை வணங்கிடக் கண்டு விபூதி யளித்தனர் - தாய் தந்தையர்கள் புத்திரன் பிழைத்ததற்கு மகிழ்ச்சி யடையாமல் - இவனால் சுவாமிகள் திருவமுது செய்வதற்கின்றித் தாமத பட்டதே யென மனம் வருந்தினர்கள் - சுவாமிகள் அதனைநோக்கி- நாம் அமுது கொண்டாலே யிவர்களுக்கு மகிழ்ச்சி யுண்டாமென்று திருவமுது செய்யுமிடத்திற் சென்று வீற்றிருக்க - அப்பூதி நாயனார் மகிழ்ந்து அமுது படைக்குமிடத்தைக் கோமயத்துடன் கொசலங் கலந்து மெழுகிக் கோலமிட்டுத் தீப மேற்றிவைத்து முன் புத்திரன் கொண்டுவந்த வாழையிலைக் குருத்தை யலம்பி அரிந்தபக்கம் வலப்பாகமா யிருக்கும்படி போட்டுச் சுவாமிகளுக்கு வாசநீர் கொடுப்பதற்காகத் தம்முடைய கையைச் சுத்தி செய்து கொள்ளுகிறதை நோக்கி உம்முடைய புத்திரர்களும் நீரும் நம்முடனிருந்து அமுதுகொள்ள வேண்டுமென்று சொல்ல அவ்வாறேநாயனாரிருந்தனர் - அவருடைய மனைவியார் அவர்களுக்கும் பரிகலந் திருத்தி யமைத்து முறைமைப்படி அமுதுபடைத்தனர்.

திருநாவுக்கரசு சுவாமிகள் சிவனடியார்களுடன் அமுதுசெய்தருளிச் சிலநாளங்கு வீற்றிருந்து பின்பு திருப்பழனமென்னுந்

தலத்துக்கெழுந்தருளிச் சுவாமியைத் தரிசித்துத் திருப்பதிக மோதி அப்பதிகத்தின் ஒருதேவாரத்தில் அப்பூதிநாயனார் அடிமைத்திறத்தை யெடுத்துச் சொல்லிப் பரமசிவத்தைத் துதித்து அங்கிருந்து மற்றைய தலங்களுக்குஞ் சென்று தரிசிக்கும்படி யெழுந்தருளினர் இப்பால் நாயனார் திருநாவுக்கரசு சுவாமிகள் பாதங்களையே தியானித்துக் கொண்டிருந்து சிவபதம் பெற்றனர்.

இவரு மில்லறத்திலிருந்து குருவருளால் முத்திபெற்றவர்.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# நீலநக்கநாயனார்புராணம்.



பூத்தபங்கயப்பொகுட்டின்மேற்பொருகயலுகளுங்
காய்த்தசெந்நெலின்காடுசூழ்காவிரிநாட்டுச்
சாத்தமங்கையென்றுலகெலாநிகழ்வுறுந்தகைத்தால்
வாய்த்தமங்கலமறையவர்முதற்பதிவனப்பு. (௧)

நன்மைசாலுமப்பதியிடைநறுநுதன்மடவார்
மென்மலர்த்தடம்படியமற்றவருடன்விரவி
யன்னமுன்றுறையாடுவபாடுவசாமம்
பன்மறைக்கிடையுடன்பயிற்றுவபலபூவை. (௨)

ஆய்ந்தமெய்ப்பொருணீறெனவளர்க்குமக்காப்பில்
ஏய்ந்தமூன்றுதீவளர்த்துளாரிருபிறப்பாளர்
நீந்துநல்லறநீர்மையின்வளர்க்குமத்தீயை
வாய்ந்தகற்புடனொன்கெனவளர்ப்பர்கண்மடவார். (௩)

சீலமுய்த்தவத்திருமறையோர்செழுமூதூர்
ஞாலமிக்கநான்மறைக்குலம்விளக்கியநலத்தார்
ஆலம்வைத்தகண்டத்தவர்தொண்டராமன்பர்
நீலநக்கரென்பவர்நிகழ்ந்துளாரானார். (௪)

வேதவுள்ளுறையாவனவிரிபுனல்வேணி
நாதர்தம்மையுமவரடியாரையுநயந்து
பாதமர்ச்சனைபுரிவதும்பணிவதுமென்றே
காதலாலவையிரண்டுமேசெய்கருத்துடையார். (௫)

மெய்த்தவாகமவிதிவழிவேதகாரணரை
நித்தல்பூசனைபுரிந்தெழுநியமமுஞ்செய்தே
யத்தர்தன்பருக்கமுதுசெய்விப்பதுமுதலா
இத்திறத்தனபணிகளுமேற்றெதிர்செய்வார். (௬)

ஆயசெய்கையிலமருநாளாதிரைநாளின்
மேயபூசனைநியதியைவிதியினான்முடித்துத்
தூயதொண்டனார்தொல்லைநீடயவந்தியமர்ந்த
நாயனாரையுமர்ச்சனைபுரிந்திடநயந்தார். (௭)

உறையுளாகியமனைநின்றுமொருமையன்புற்ற
முறைமையால்வருபூசைக்குமுற்றவேண்டுவன
குறைவறக்கொண்டுமனைவியார்தம்மொடுங்கூட
இறைவர்கோயில்வந்தெய்தினரொல்லையிறவத்தோர். (௮)

அணையவந்துபுக்கயவந்திமேவியவமுதின்
றுணைமலர்க்கழறொழுதுபூசனைசெயத்தொடங்கி
யிணையநின்றங்குவேண்டுவமனைவியாரேந்த
உணர்வுமிக்கவருயர்ந்தவர்ச்சனைமுறையுய்த்தார். (௯)

நீடுபூசனைநிரம்பியுமன்பினானிரப்பார்
மாடுசூழ்புடைவலங்கொண்டுவணங்கிமுன்வழுத்தித்
தேடுமாமறைப்பொருளினைத்தெளிவுறநோக்கி
நாடுமஞ்செழுத்துணர்வுறவிருந்துமுன்னவின்றார். (௰)

தொலைவில்செய்தவத்தொண்டனார்சுருதியேமுதலாங்
கலையினுண்மையாமெழுத்தஞ்சுங்கணிக்கின்றகாலை
நிலையினின்றுமுன்வழுவிடநீண்டபொன்மேருச்
சிலையினார்திருமேனிமேல்விழுந்ததோர்சிலம்பி. (௰௧)

விழுந்தபோதிலங்கயனின்றமனைவியார்விரைவுற்
றெழுந்தவச்சமோடிளங்குழவியில்விழுஞ்சிலம்பி
யொழிந்துநீங்கிடவூதிமுன்றுமிப்பவர்போலப்
பொழிந்தவன்பினாலூதிமேற்றுமிந்தனர்போக. (௰௨)

பதைத்தசெய்கையான்மனைவியார்முற்செயப்பந்தஞ்
சிதைக்குமாதவத்திருமறையவர்கண்டுதங்கண்
புதைத்துமற்றிதுசெய்ததென்பொறியிலாயென்னச்
சுதைச்சிலம்பிமேல்விழவூதித்துமிந்தனனென்றார். (௰௩)

மனைவியார்செய்தவன்பினைமனத்தினிற்கொள்ளார்
புனையுநூன்மணிமார்பர்தம்பூசனைத்திறத்தில்
இனையசெய்கையிங்கநுசிதமாமெனவெண்ணு
நினைவினாலவர்தம்மைவிட்டகன்றிடநீப்பார். (௰௪)

மின்னெடுஞ்சடைவிமலர்மேல்விழுந்தநூற்சிலம்பி
தன்னைமேவொருபரிசுறற்றவிர்ப்பதுதவிர
முன்னணைந்துவந்தூதிவாய்நீர்ப்படமுயன்று
புன்னையானினித்துறந்தனனிங்கெனவுரைத்தார். (௰௫)

மற்றவேலையிற்கதிரவன்மலைமிசைமறைந்தான்
உற்றவேவலின்மனைவியாரொருவழிநீங்க
முற்றவேண்டுவபழுதுதீர்பூசனைமுடித்துக்
கற்றைவேணியர்தொண்டருங்கடிமனைபுகுந்தார். (௰௬)

அஞ்சுமுள்ளமோடவர்மருங்கணைவுறமாட்டார்
நஞ்சமுண்டவர்கோயிலினங்கையாரிருந்தார்
செஞ்சொனான்மறைத்திருநீலநக்கர்தாமிரவு
பஞ்சின்மெல்லணைப்பள்ளியிற்பள்ளிகொள்கின்றார். (௰௭)

பள்ளிகொள்பொழுதயவந்திப்பரமர்தாங்கனவில்
வெள்ளநீர்ச்சடையொடுநின்றமேனியைக்காட்டி
யுள்ளம்வைத்தெம்மையூதிமுன்றுமிந்தபாலொழியக்
கொள்ளுமிப்புறஞ்சிலம்பியின்கொப்புளென்றருள. (௰௮)

கண்டவப்பெருங்கனவினைநனவெனக்கருதிக்
கொண்டவச்சமோடஞ்சலிகுவித்துடன்விழித்துத்
தொண்டனார்தொழுதாடினார்பாடினார்துதித்தார்
அண்டநாயகர்கருணையேபோற்றிநின்றழுதார் (௰௯)

போதுபோயிருள்புலர்ந்திடக்கோயிலுட்புகுந்தார்
ஆதிநாயகரைவந்தியமர்ந்தவங்கணர்தம்
பாதமூலங்கள்பணிந்துவீழ்ந்தெழுந்துமுன்பரவி
மாதராரையுங்கொண்டுதம்மனையின்மீண்டணைந்தார். (௨௰)

பின்புமுன்னையிற்பெருகியமகிழ்ச்சிவந்தெய்த
இன்புறுந்திறத்தெல்லையில்பூசனையியற்றி
யன்புமேம்படுமடியவர்மிகவணைவார்க்கு
முன்புபோலவர்வேண்டுவவிருப்புடன்முடிப்பார். (௨௧)

அன்னதன்மையிலமர்ந்தினிதொழுகுமந்நாளின்
மன்னுபூந்தராய்வருமறைப்பிள்ளையார்பெருமை
பன்னிவையகம்போற்றிடமற்றவர்பாதம்
சென்னிவைத்துடன்சேர்வுறும்விருப்பினிற்சிறந்தார். (௨௨)

பண்புமேம்படுதில்லைமையார்பயிலுமப்பருவ
மண்பெருந்தவப்பயன்பெறமருவுமப்பதிகள்
விண்பிறங்குநீர்வேணியார்தமைத்தொழவணைவான்
சண்பைமன்னருஞ்சாத்தமங்கையில்வந்துசார்ந்தார். (௨௩)

நீடுசீர்த்திருநீலகண்டப்பெரும்பாணர்
தோடுலாங்குழல்விறலியாருடன்வரத்தொண்டர்
கூடுமப்பெருங்குழாத்தொடும்புகலியர்பெருமான்
மாடுவந்தமைகேட்டுளமகிழ்நீலநக்கர். (௨௪)

கேட்டவப்பொழுதேபெருமகிழ்ச்சியிற்கிளர்ந்து
தோட்டலங்கலுங்கொடிகளும்புனைந்துதோரணங்க
ணாட்டிநீணடைக்காவணமிட்டுநற்சுற்றத்
தீட்டமுங்கொடுதாமுமுன்பெதிர்கொளவெழுந்தார். (௨௫)

சென்றுபிள்ளையாரெழுந்தருளுந்திருக்கூட்டம்
ஒன்றியங்கெதிர்கொண்டுதங்களிப்பினாலொருவா
றன்றியாடியும்பாடியுந்தொழுதெழுந்தணைவார்
பொன்றயங்குநீண்மனையிடையுடன்கொண்டுபுக்கார். (௨௬)

பிள்ளையாரெழுந்தருளியபெருமைக்குத்தக்க
வெள்ளமாகியவடியவர்கூட்டமும்விரும்ப
உள்ளமாதரவோங்கிடவோங்குசீர்க்காழி
வள்ளலாரைத்தம்மனையிடையமுதுசெய்வித்தார். (௨௭)

அமுதுசெய்தபின்பகலவன்கருங்கடலணையக்
குமுதவாவியிற்குளிர்மதிக்கதிரணைபோதில்
இமயமங்கைதன்றிருமுலையமுதுண்டாரிரவு
தமதுசீர்மனைத்தங்கிடவேண்டுவசமைத்தார். (௨௮)

சீலமெய்த்திருத்தொண்டரோடமுதுசெய்தருளி
ஞாலமிக்கநாயகியுடனம்பர்நண்ணுங்
காலமுற்பெறவமுதவரசழைத்திடக்கடிது
நீலநக்கனார்வந்தடிபணிந்துமுன்னின்றார். (௨௯)

நின்றவன்பரைநீலகண்டப்பெரும்பாணர்
இன்றுதங்கவோரிடங்கொடுத்தருளுமென்ன
நன்றுமின்புற்றுநடுமனைவேதியின்பாங்கர்ச்
சென்றுமற்றவர்க்கிடங்கொடுத்தார்திருமறையோர். (௩௰)

ஆங்குவேதியிலறாதசெந்தீவலஞ்சுழிவுற்
றோங்கிமுன்னையிலொருபடித்தன்றியேயொளிரத்
தாங்குநூலவர்மகிழ்வுறச்சகோடயாழ்த்தலைவர்
பாங்குபாணியாருடனருளாற்பள்ளிகொண்டார். (௩௧)

கங்குலிற்பள்ளிகொண்டபின்கவுணியர்க்கிறைவர்
அங்குநின்றெழுந்தருளுவாரயவந்தியமர்ந்த
திங்கள்சூடியைநீலநக்கரைச்சிறப்பித்தே
பொங்குசெந்தமிழ்த்திருப்பதிகத்தொடைபுனைந்தார் (௩௨)

பதிகநாண்மலர்கொண்டுதம்பிரான்கழல்பரவி
யதிகநண்பினைநீலநக்கருக்களித்தருளி
யெதிர்தொழும்பதிகளிலெழுந்தருளினன்றும்
புதியசெந்தமிழ்ப்பழமறைமொழிந்தபூசுரனார். (௩௩)

பிள்ளையாரெழுந்தருளவத்தொண்டர்தாம்பின்பு
தள்ளுமன்புடன்கேண்மையுந்தப்பிலவெனினும்
வள்ளலார்திருவருளினைவலியமாட்டாமை
யுள்ளமங்குடன்போக்கிமீண்டொருவகையிருந்தார். (௩௪)

மேவுநாளிலவ்வேதியர்முன்புபோல்விரும்புந்
தாவில்பூசனைமுதற்செய்கைதலைத்தலைசிறப்பச்
சேவினமேலவர்மைந்தராந்திருமறைச்சிறுவர்
பூவடித்தலம்பொருந்தியவுணர்வொடும்பயின்றார், (௩௫)

சண்பையாளியார்தாமிருந்தருளுமெய்ப்பதியு
நண்புமேம்படநாளிடைச்செல்விட்டுநண்ணி
வண்பெரும்புகழவருடன்பயின்றுவந்தணைந்தார்
திண்பெருந்தொண்டராகியதிருநீலநக்கர்; (௩௬)

[அக]

பெருகுகாதலிற்பன்னெடுநாண்முறைபிறங்க
வருபெருந்தவமறையவர்வாழிசீகாழி
யொருவர்தந்திருக்கல்லியாணத்தினினுடனே
திருமணத்திறஞ்சேவித்துநம்பர்தாள்சேர்ந்தார். (௫௭)

தருதொழிற்றிருமறையவர்சாத்தமங்கையினில்
வருமுதற்பெருந்திருநீலநக்கர்தாள்வணங்கி
யிருபிறப்புடையந்தணரேறுயர்த்தவர்பால்
ஒருமையுய்த்துணர்நமிநந்தியார்தொழிலுரைப்பாம். (௫௮)

நீலநக்கநாயனார்புராணம் - முற்றிற்று.

ஆ-திருவிருத்தம் - ௩௮௱௭௰௫.

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிற் திருச்சாத்த மங்கை யென்னும் பெயருட ன் விளங்கும் க்ஷேத்திரத்துப் பிராமண குல சிரேஷ்டராகிய திரு நீலநக்கநாயனார் வேதப்பொருளாகிய பரமசிவத்துக்குப் பத்தி செ ய்வதுமன்றிச்சிவனடியார்களைக் கண்டவுடன் அவர்களுடையபாதங் களைப்பணிவதும் அவர்களுக்குத் திருவமுது படைப்பதுமே நியம மாகக்கொண்டிருப்பவர்-திருவாதிரைநக்ஷத்திர தினத்திலாத்துமா ர்த்தபூசைசெய்துஅயவந்தியென்னும் ஆலயத்தில்வீற்றிருக்குஞ்சிவ லிங்கப்பெருமானையும் அருச்சிக்க வேண்டுமென்றுஉண்டாகியஅன் பினால்அதற்குவேண்டியஉபகரணங்களையெல்லாமெடுப்பித்துக்கொ ண்டுதம்முடைய மனைவியாருடன் சென்று பூசைக்குரியமித்தபொ ருள்களை மனைவியாரெடுத்துக் கொடுக்க ஆகமவிதிப்படி பூசித்து ப் பரம சிவத்தைத் தியானித்துப் பஞ்சாக்ஷரஞ் செபித்துக்கொண் டிருந்தனர்- அவர் அவ்வாறிருக்க - ஒரு சிலந்திப் பூச்சியானது நழு வித் சிவலிங்கப் பெருமான் திருமேனியில் விழுந்தது - அதைக்க ண்ட அவருடைய பத்தினியார் அஞ்சி - குழந்தைகளின்மேல் வி ழும்போதில் ஊதித் துமிப்பவர் போல் - அந்தச் சிலந்திப் பூச்சி யைப் பூறித் துமிந்தனர் - அதைக் கண்ட நாயனார் - மனம் பதைத் துக் கண்ணை மூடிக்கொண்டு அறிவில்லாதவளே யெனிப்படி அனு சிதமான காரியஞ் செய்தனையென்ன - சுவாமி திருமேனிமேல்சில ந்தி விழுந்தமையா லது நீங்கும் பொருட்டு அடியேன் செய்தகா ரியமென்றனர் - அவ்வாறுயின் வேறொரு காரியத்தினால் அதனைப் போக்கிவிடாமல் இவ்வாறு வாய் நீரினால் போக்கி அநுசிதமான கா ரியஞ் செய்தனை யென்று - அம்மனைவியாருள்ளன்பினையறியாமல்- தானுன்னை நீக்கிவிட்டேனென்றனர் - அதனைக்கேட்டபத்தினியார்

அவர்கட்டளையை மறுத்திருப்பதனுக்கஞ்சி யொருபுறத்திலொது ங்கி விட்டனர்.

அதற்குமேல் நாயனார்-அநுசிதம்நேரிட்டதுதீரும்படி பிராய ச்சித்த பூசனை செய்து பொழுதும் போனதினால் தம்முடைய திரு மாளிகைக்குச் சென்றனர் - அவருடைய பத்தினியார் கணவனாரு டைய கட்டளையை மீறி வரமாட்டாமல் - ஆலயத்தி லொருபுறத்தி லிருந்தனர் - அவ ரங்கப்படி யிருக்க - நாயனார் சயனத்தில் நித்தி ரை கொள்ளும்போது பரமசிவம் அவர்கனவி லெழுந்தருளித் தம் முடைய திருமேனியைக் காட்டி யுன்மனைவி ஊதி யுமி நீர் துப்பி ன பாதியன்றி மற்றப் பாதியில் சிலம்பித் கொப்பிளங்கள் கொண் டிருப்பதைப் பார்த்தனையாவென்று மறைந்தனர் - அவ்வாறு சொ ப்பனங்கண்ட நாயனார் நித்திரை நீங்கி யெழுந்து பயங்கொண்டு சுவாமியைத் தொழுது துதிசெய்து பொழுது விடிவதற்குமுன் ஆலயத்திற் சென்று பரமசிவத்தைத் தொழுது போற்றி செய்து- அங்குவந்துதம்மைவணங்கின பத்தினியாரை அழைத்துக் கொண்டு திருமாளிகையில் வந்துசேர்ந்து அன்றுமுதல் மிகுந்தஅன்பினால்சி வார்ச்சனையுடன் அடியார்கள் பூசனையுஞ் செய்து கொண்டிருக்கு ம் நாளில் - திருஞான சம்பந்த சுவாமிகள் சிவதலங்கள் தரிசனஞ் செய்து கொண்டு - திரு நீலகண்ட யாழ்ப்பாணரும் அவருடைய பத்தினியாகிய விறலியாரும் - அடியார் திருக்கூட்டமுஞ் சூழ்ந்து வரத் திருச்சாத்த மங்கைக்குச் சமீபமாக எழுந்தருளிவருவதை யறி ந்து நகரலங்காரஞ் செய்வித்து - எதிர்கொண்டு அழைத்துக்கொ ண்டுவந்துதம்மாளிகையிற்சேர்ந்து ஆசனங்கொடுத்துப் பலஉபசா ரஞ்செய்து திருக்கூட்டத்தார் யாவருக்கும் அமுதுசெய்வித்தனர்.

அவ்வாறிருக்கப்பகற்பொழுதுநீங்கினதுகண்டு-நாயனாரைநோ க்கித்திருநீலகண்டயாழ்ப்பாணர்க்குஇடங்கொடுக்கவேண்டுமென்று திருஞானசம்பந்தசுவாமிகள் திருவாய்மலர்ந்தருளினதையுட்கொண் டுதம்முடையதிருமாளிகையினுள்ளிருக்கும்நித்தியாகுதிவேதிகைஅ றையிலிடங்கொடுத்தனர் - அந்தஇடத்தில்யாழ்ப்பாணர்மனைவியாரு டன் சயனித்துக்கொண் டிருந்தனர் - பொழுதுவிடிந்தபின் - திரு ஞானசம்பந்தசுவாமிகள் மற்றையதலங்களுந் தரிசிக்கதிருக்கூட்டத் துடன்எழுந்தருள- நீலநக்கநாயனார் - விடைபெற்றுக்கொண்டு வந் திருந்துபின்பு திருஞானசம்பந்தசுவாமிகள் திருக்கல்யாணமகோச் சவத்துக்குச்சென்று தரிசித்துப்பெருமகிழ்ச்சியடைந்து சிவபதஞ் சேர்ந்தனர்.

இந்தநாயனார் இல்லறத்திலிருந்து சிவலிங்கத்தால் முத்திபெற்றவர்.

——*——





சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# நமிநந்தியடிகள்நாயனார்

## புராணம்.



வையம்புரக்குந்தனிச்செங்கோல்வளவர்பொன்னித்திருநாட்டுச்
செய்யகமலத்தடம்பணையுஞ்செழுநீர்த்தடமும்புடையுடைத்தாய்ப்
பொய்தீர்வாய்மையருமறைநூல்புரிந்தசீலப்புகழதனால்
எய்தும்பெருமையெண்டிசையுமேறுமேமப்பேறூரால். (௧)

மாலைபயிலுந்தோரணங்கண்மருங்குபயிலுமணிமறுகு
வேலைபயிலும்புனல்பருகுமேகம்பயிலுமாடங்கள்
சோலைபயிலுங்குளிர்ந்தவிருள்சுரும்புபயிலுமரும்பூகங்
காலைபயிலும்வேதவொலிகழுநீர்பயிலுஞ்செழுநீர்ச்செய். (௨)

பணையில்விளைந்தவெண்ணெல்லின்பரப்புமீதுபடச்செய்ய
துணைமென்கமலமிடையிடையேசுடர்விட்டெழுந்துதோன்றுவன
புணர்மென்புரிநூலவர்வேள்விக்களத்திற்புனைந்தவேதிகைமேன்
மணல்வெண்பரப்பினிடையிடையேவளர்த்தசெந்தீமானுமால். (௩)

பெருமைவிளங்குமப்பதியிற்பேணுநீற்றுச்சைவநெறி
யொருமைநெறிவாழந்தணர்தமோங்குகுலத்தினுள்வந்தார்
இருமையுலகுமீசர்கழலிறைஞ்சியேத்தப்பெற்றதவத்
தருமைபுரிவர்நமிநந்தியடிகளென்பாராயினார். (௪)

வாய்மைமறைநூற்சீலத்தால்வளர்க்குஞ்செந்தீயெனத்தகுவார்
தூய்மைத்திருநீற்றடைவேமெய்ப்பொருளென்றறியுந்துணிவினார்
சாமகண்டர்செய்யகழல்வழிபட்டொழுகுந்தன்மைநிலை
யாமவிரவும்பகலுமுணர்வொழியாவின்பமெய்தினார். (௫)

அவ்வூர்நின்றுந்திருவாரூரணையவடைவாரடியார்மேல்
வெவ்வூறகற்றும்பெருமான்றன்விரைசூழ்மலர்த்தாள்பணிவுறுவ
தெவ்வூதியமுமெனக்கொள்ளுமெண்ணமுடையார்பலநாளுந்
தெவ்வூரெரித்தவரிச்சிலையார்திருப்பாதங்கள்வணங்கினார். (௬)

செம்பொற்புற்றின்மாணிக்கச்செழுஞ்சோதியைநேர்தொழுஞ்சீலந்
தம்பற்றாகநினைந்தணைந்துதாழ்ந்துபணிந்துவாழ்ந்துபோந்
தம்பொற்புரிசைத்திருமுன்றிலணைவார்பாங்கோரரனெறியி
னெம்பர்க்கிடமாங்கோயிலினுட்புக்குவணங்கநண்ணினார். (௭)

நண்ணிப்பிறைஞ்சியன்பினையப்புற்றெழுந்தகாதலுடன்
அண்ணலாரைப்பணிந்தெழுவாரடுத்தநிலைமைக்குறிப்பினாற்
பண்ணுந்தொண்டின்பாங்குபலபயின்றுபரவிவிரவுவா
ரெண்ணிறீபமேற்றுவதற்கெடுத்தகருத்தினிசைந்தெழுவார். (௮)

எழுந்தபொழுதுபகற்பொழுதங்கிறங்குமாலையெய்துதலுஞ்
செழுந்தண்பதியினிடையப்பாற்செல்லிற்செல்லும்பொழுதென்ன
ஒழிந்தங்கணைந்தோர்மனையில்விளக்குறுநெய்வேண்டியுள்புகலும்
அழிந்தநிலைமையமணர்மனையாயிற்றங்கணவருரைப்பார். (௯)

கையில்விளங்குகனலுடையார்தமக்குவிளக்குமிகைகாணு
நெய்யிங்கில்லைவிளக்கெரிப்பீராகினீரைமுகந்தெரித்தல்
செய்யுமென்றுதிருத்தொண்டர்க்குரைத்தார்தெளியாதொருபொருளே
பொய்யுமெய்யுமாமென்னும்பொருண்மேற்கொள்ளும்புரைநெறியார். (௰)

அருகர்மதியாதுரைத்தவுரையாற்றாராகியப்பொழுதே
பெருகமனத்தில்வருத்தமுடன்பெயர்ந்துபோந்துபிறையணிந்த
முருகுவிரியுமலர்க்கொன்றைமுடியார்கோயின்முன்னெய்தி
யுருகுமன்பர்பணிந்துவிழவொருவாக்கெழுந்ததுயர்விசும்பில். (௰௧)

வந்தகவலைமாற்றுமினிமாறாவிளக்குப்பணிமாற
இந்தமருங்கிற்குளத்துநீர்முகந்துகொடுவந்தேற்றுகென
அந்திமதியமணிந்தபிரானருளொன்றெழுந்தமொழிகேளாச்
சிந்தைமகிழ்ந்துநமிநந்தியடிகள்செய்வதறிந்திலரால். (௰௨)

சென்னிமிசைநீர்தரித்தபிரானருளோசிந்தைசெய்தெழுவார்
நன்னீர்ப்பொய்கைநடுப்புக்குநாதர்நாமநவின்றேத்தி
யந்நீர்முகந்துகொண்டேறியப்பர்கோயிலடைந்தகலுண்
முந்நீருலகமதிசயிப்பமுறுக்குந்திரிமேனீர்வார்த்தார். (௰௩)

சோதிவிளக்கொன்றேற்றுதலுஞ்சுடர்விட்டெழுந்ததுநோக்கி
யாதிமுதல்வரரனெறியார்கோயிலடையவிளக்கேற்றி
யேதநினைந்தவருகந்தரெதிரேமுதிருங்களிப்பினுட
னாதரருளாற்றிருவிளக்குநீராலெரித்தார்நாடறிய. (௰௪)

நிறையும்பரிசுதிருவிளக்குவிட்டுமளவுநின்றெரியக்
குறையுந்தகளிகளுக்கெல்லாங்கொள்ளவேண்டுநீர்வார்த்து
மறையின்பொருளையருச்சித்துமனையினியநிவழுவாமல்
உறையும்பதியினவ்விரவேயணைவார்பணிவுற்றிருப்பட்டார். (௰௫)

இரவுசென்றுதம்பதியிலெய்திமனைப்புக்கென்றும்போல்
விரவியநியமத்தொழின்முறையேவிமலர்தம்மையர்ச்சித்துப்
பரவிப்பழுதுசெய்தருளிப்பள்ளிகொண்டுபுலர்காலை
யரவமணிவார்பூசையமைத்தாரூர்நகரின்மீண்டணைந்தார். (௰௬)

வந்துவணங்கியரனெறியார்மகிழுங்கோயில்வலங்கொண்டு
சிந்தைமகிழப்பணிந்தெழுந்துபுறம்புமுள்ளுந்திருப்பணிகள்
முந்திமுயன்றபடியெல்லாமுறையேசெய்துமறையவனார்
அந்திபடைத்தவரியவிளக்கெங்குமேற்றியடிபணிந்தார். (௰௭)

பண்டுபோலப்பலநாளும்பயிலும்பணிசெய்தவரொழுகத்
தண்டியடிகளாலமணர்கலக்கம்விளைக்கச்சார்விலமண்
குண்டரழியவேழுலகுங்குலவும்பெருமைநிலவியதால்
அண்டர்பெருமான்றொண்டர்கழலமரர்பணியுமணியாரூர். (௰௮)

நாதமறைதேர்நமிநந்தியடிகளார்நற்றொண்டாகப்
பூதநாதர்புற்றிடங்கொள்புனிதர்க்கமுதுபடிமுதலா
நீதிவளவன்றான்வேண்டிநிபந்தம்பலவுமரியணையின்
மீதுதிகழவிருந்தமைத்தான்வேதாகமநூல்விதிவிளங்க. (௰௯)

வென்றிவிடையார்மதிச்சடையார்வீதிவிடங்கப்பெருமாள்தாம்
என்றுந்திருவாரூராளுமியல்பின்முறைமைத்திருவிளையாட்
டொன்றுஞ்செயலும்பங்குனியுத்திரமாந்திருநாளுயர்சிறப்பு
நின்றுவிண்ணப்பஞ்செய்தபடிசெய்தருளும்நாம்பெற்றார். (௨௰)

இன்னபரிசுதிருப்பணிகள்பலவுஞ்செய்தேயேழுலகு
மன்னும்பெருமைத்திருவாரூர்மன்னரடியார்வழிநிற்பார்
அன்னவண்ணந்திருவிளையாட்டாடியருளவெந்நாளு
நன்மைபெருகநமிநந்தியடிகடொழுதார்நாமுய்ய. (௨௧)

தேவர்பெருமானெழுச்சிதிருமணலூர்க்கொருநாளெழுந்தருளா
யாவரொன்றுடன்சேவித்தெல்லாக்குலத்திலுள்ளோரு
மேவவன்பர்தாமுமுடன்சேவித்தணைந்துவிண்ணவர்தங்
காவலாளரோலக்கமங்கேகண்டுகளிப்புற்றார். (௨௨)

பொழுதணைவுறச்சேவித்துப்புனிதர்மீண்டுங்கோயில்புக்குத்
தொழுதுதம்மூர்மருங்கணைந்துதூயமனையுட்புகுதாதே
யெழுதுமிருள்சேரிரவுபுறங்கடையிற்றுயிலவில்லத்து
முழுதுந்தருமம்புரிமனையார்வந்துபுகுதமொழிகின்றார். (௨௩)

இங்கண்முடியார்பூசனைகண்முடித்துச்செய்யுங்கடன்முறையால்
அங்கிதனைவேட்டமுதுசெய்துபள்ளிகொள்வீரானவருக்குத்
தங்கள்பெருமான்திருமணலூர்க்கெழுச்சிசேவித்துடனண்ண
எங்குமெலலாரும்போதவிழிவுதொடக்கிற்றெனையென்று. (௨௪)

ஆதலாலேகுளித்தடுத்ததூய்மைசெய்தேயகம்புகுந்து
வேதநாதர்பூசனைகடொடங்கவேண்டுமதற்குநீ
சீதநன்னீர்முதலானகொண்டிங்கணைவாயெனச்செப்பக்
காதன்மனையார்தாமுமவைகொணருமதற்குக்கடிதணைந்தார். (௨௫)

ஆயபொழுதுதம்பெருமானருளாலேயோமேனியின்மேல்
புமசைவினபர்வாலாவறியாமிறையுந்தாழாதே
மேயவுறக்கம்வந்தணையவிண்ணோர்பெருமான்கழனி[illegible]
தூயவன்பர்துயில்கொண்டார்துயிலும்பொழுது[illegible] (௨௬)

மேன்மைவிளங்குந்திருவாரூர்வீதிவிடங்கப்பெருமான்தா
மானவன்பர்பூசனைக்குவருவார்போலவந்தருளி
ஞானமறையோராரூரிற்பிறந்தாரெல்லாநங்கணங்க
ளானபரிசுகாண்பாயென்றருளிச்செய்தங்கெதிரகன்றார். (௨௭)

பூதிதேவரெழுந்தருளவுணர்ந்தாரிரவர்ச்சனைசெய்யா
தேதநினைந்தேனெனவஞ்சியெழுந்தபடியேவழிபட்டு
மாதரார்க்கும்புகுந்தபடிமொழிந்துவிடியல்வினாவோடு
நாதனூர்த்திருவாரூர்புகுதவெதிரந்நகர்காண்பார். (௨௮)

தெய்வப்பெருமாள்திருவாரூர்பிறந்துவாழ்வாரெல்லாரு
மைவைத்தனையகண்டரவர்வடிவேயாகிப்பெருகொளியால்
மாய்வைத்தமர்ந்தமேனியராம்பரிசுகண்டுமுடிகுவித்த
கைவைத்தஞ்சியவனிமிசைவிழுந்துபணிந்துகளிசிறந்தார். (௨௯)

படிவமாற்றிப்பழம்படியேநிகழ்வுங்கண்டுபரமர்பால்
அடியேன்பிழையைப்பொறுத்தருளவேண்டுமென்[illegible]ருளார்
முடியுந்திருவாரூரகத்துப்புகுந்துவாழ்வார்குவலயத்து [ற்
நடித்துப்பெருகுந்திருத்தொண்டுநிகழச்செய்துநிலவுவார். (௩௰)

ன்று அசரீரி வாக்குண்டாக - அப்படியே நீர் வார்த்துத் தீபமேற்றித் திருமாளிகைக்குப் போம்போது குறைவாயிருந்த தீபங்களுக்கெல்லாம் நீர்விட்டுச் சுவாமியினிடத்தில் விடைபெற்றுக்கொண்டுபோய்மறுநாளுஞ் சென்று இரவிற்படி தீபமேற்றி அரனெறியப்பரையும் வீதிவிடங்கப் பெருமானையுந் தரிசித்து அதுவே நியமமாகத் தொண்டு செய்பவர்.

வீதிவிடங்கப் பெருமானாகிய தியாகராசசுவாமியார் - திருமணலிக்கெழுந்தருளி யுச்சவங்கொண்டருளுவதைத் தரிசித்துத் தம்முடைய திருமாளிகைக்குவந்து வெளிப்புறத்திலிருக்க அவர் மனைவியார் நண்டு உள்ளேவந்து சுவாமி பூசைசெய்து அமுதுகொள்ளலாமேயென்ன உச்சவ தரிசனத்துக்குப்போனவிடத்தில்-இன்னொன்றுதீண்டிப்பரிசப்பட்டிருக்குமே யாதலால் ஸ்நானஞ்செய்யவேண்டுமென்னப்பத்தினியார் அவ்வாறேயமைக்க எத்தனித்தனர்- இப்படியிருக்க நாயனாருக்குக் கொஞ்சம் நித்திரைமயக்கமுண்டான போது வீதிவிடங்கப்பெருமான் அவர்கனவிலெழுந்தருளி அன்பனே திருவாரூரிற்பிறந்தார்கள்யாவருஞ்சிவகணங்கள்நாளை நீ காணலாமென்றருள்செய்யவிழித்துணர்ந்துதாம்நினைத்ததைக்குறித்துஅஞ்சிக் கிரகத்துக்குட்போய்ச்சுவாமிபூசைசெய்து அமுதுகொண்டுசயனித்திருந்துமறுநாள்திருவாரூருக்குச்சென்றுஅங்குள்ளார்யாவருஞ்சிவகணங்களாயத்தோன்றத் தரிசித்துச் சாஷ்டாங்கமாக விழுந்து பணிந்து ஆனந்தமடைந்து அவர்களெல்லாரும் பழையபடி யிருப்பதைப்பூங்கண்டு முன்னம் அடியேன் எண்ணியதுபுழுதீதலால் ஐயனே கூஷமித்தருள் செய்யவேண்டுமென்று வீதிவிடங்கப் பெருமானைத் துதிசெய்து - அன்றுமுதல் அந்தக்ஷேத்திரத்தின் கண்ணே வாழ்ந்துகொண்டிருந்து தம்முடைய தொண்டு வழுவாமல் நடத்திச் சிவபதஞ்சேர்ந்தனர்.

இந்நாயனார் இவ்விதத்திலிருந்து சிவலிங்கத்தான்முத்திபெற்றனர்.

நான்காவது - திருநின்ற சருக்கம் - முற்றிற்று.

# முதற் காண்டம்

## முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

